ஸ்ரீ :

# முதலாயிரம்

## நாலாயிர திவ்யப் பிரபந்தம்

ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை முழுமையாகத் தழுவியது.

தெளிவுரை :

ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன், எம் ஏ,பி.டி.,பி.எச்டி.,

வெளியீடு :

ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ்

பதிப்பகத்தார் & விற்பனையாளர்

144, ஆழ்வார்பேட்டைதெரு,

ஆழ்வார்பேட்டை, சென்னை - 600018

 4335524

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூல் | : | முதலாயிரம் - நாலாயிர திவ்யப் பிரபந்தம் |
| பொருள் | : | சமயம் |
| ஆசிரியர்பெயர் | : | தெளிவுரை : ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன், பேராசிரியர், முன்னாள் தமிழ்த்துறைத்தலைவர், வைணவக் கல்லுரி சென்னை. |
| பதிப்பு ஆண்டு | : | 2000 |
| பதிப்பு | : | ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ் (பதிப்பகத்தார் & விற்பனையாளர்) |
| உரிமை | : | பதிப்பகத்தாருக்கே. |
| மொழி | : | தமிழ் |
| நூலின் அளவு | : | கிரௌன் |
| தாள் | : | மேப்லித்தோ |
| அச்சு எழுத்து | : | 11 பாயிண்ட் |
| மொத்தப்பக்கம் | : | 368 (23 பாரம்) |
| விலை | : | ரூ. /- |
| கணிப்பொறி அச்சு | : | ஈசுவர் லேசர், சென்னை - 18 |
| அச்சிட்டோர் | : | மிர்ரா பிரிண்டர்ஸ், சென்னை - 18 |

# இம் மலர் பற்றி...

அடியேன் அடியேனுடைய விருப்புக்கு உட்பட்டவன் அல்ல. இறைவன் கொண்டு செல்லும் வழியில் பொம்மை போல அடியேன் செல்ல வேண்டும். இறைவன் அடியேனைச் செய்யவைக்கும் வேலைகளைப் பொம்மை போலச் செய்ய வேண்டும். இறைவன் அடியேனை புனிதமான நாலாயிர திவ்ய பிரபந்தத்திற்கு எளிமையான தெளிவுரை வெளியிட கட்டளையிட்டான். பிரபந்தங்களாகிய மலர்த் தோட்டம் அமைத்தவர்கள் பெருமைமிகு ஆழ்வார்கள். மலர்களின் மணத்தை உலகம் முழுவதும் பரப்பியவர்கள் வியாக்கியானங்கள் எழுதிய பெரியவாச்சான் பிள்ளை போன்றவர்கள். நூலை நாங்கள் தெளிவான உரை வெளியிடுவதும் அன்னையின் அருளால்தான். எங்களின் இந்த மலருக்கு இதழ்களாக இருந்த குழுவினருக்கும் பெயரினை வெளிப்படுத்தாது உதவிய இதழ்களுக்கும் எங்கள் நன்றி.

தெய்வத் தொண்டில்
**பாலன்.**

# ஆசி உரை

உண்டியே உடையே உகந்து ஓடும் இம்
மண்டலத்தொடும் கூடுவது இல்லை யான்
அண்டவாணன் அரங்கன் வன்பேய்முலை
உண்ட வாயன் தன் உன்மத்தன் காண்மினே.

- திவ்யப் பிரபந்தம் - 671.

ஆழ்வார்கள் காலந்தொட்டு இன்று வரை மனிதப்பிறவி எடுத்தும் உண்டிக்கும் உடைக்குமே மனிதன் அலைகின்றான். அரங்கனை எண்ணாமல் அலைந்தவர்கள் பேரின்பம் கண்டதுமில்லை. அவர்தம் பெயரும் செயலும் நிலைத்து நின்றதும் இல்லை. மறந்து விட்ட சில மாந்தர்களுக்கு நினைவு படுத்தவே இந்த நாலாயிர திவ்யப் பிரபந்தத்திற்கு தெளிவுரையைக் கொண்டு வருகின்றோம். நம்மவர் பலருக்கு மனமது செம்மையாக இல்லை என்பதால் மந்தரம் ஓத வேண்டியிருக்கின்றது. பிரபந்தம் படித்தவர்களுக்கு மனம் செம்மையாகும். தமிழில் உள்ள பாடல்களுக்கு பலர் வியாக்கியானம், கருத்துரை, எளிய உரை எனப் பலபெயரிட்டு படைத்துள்ளனர். படிக்கும் போது புரிந்த கருத்துக்கள் நூலினை மூடியதும் மறந்து விடாது இருக்கத் தெளிவுரை ஒன்று கொணரவேண்டும் என "வராகி" பாலன் கூறினார்கள்.

அனைத்துப் பாடல்களுக்கும் உரை இருக்க வேண்டும். நாராயணன் பெயரினை உரையாசிரியர் மெய்யாக ஓதுபவராக இருக்க வேண்டும். இதற்கு ஆசிரியராக இருப்பவர் பேராசிரியராக இருக்க வேண்டும். ஆழ்வார்களின் அருள்கிட்டியவராக இருக்க வேண்டும். வேதங்கள் பல இருப்பினும் எளிமையாக 'ஓம் நமோ நாராயணா' எனக் கூறினால்போதும் என்ற இராமானுஜர் போல எளிய முறையில், தெளிவான முறையில் உரை செய்தல் வேண்டும் எனக் குழுவினர் கூறினர். அரங்கன் பெயரினை ஓதவே இம்மனித வாழ்வு என எண்ணி வாழும் ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசனைத் தெளிவுரை தீட்டக் குழு தீர்மானித்தது. அவர்களும் தெளிவுரையை அனைத்துப் பாடல்களுக்கும் செம்மையாக ஆக்கி நமக்கு அளித்துள்ளார்கள். மூன்று அடிக்கு உட்பட்ட நாம் திருமகள் நாதனின் அருளினை பெற வேண்டும் என்ற நல்லெண்ணம் கொண்டவர் திரு. 'வராகி' பாலன் அவர்கள்.

"என்ன நோன்பு நோற்றாள் கொலோ
இவனைப் பெற்ற வயிறுடையாள்"

என அனைவரும் வாழ்த்தும்படி அவர்கள் நாலாயிரம் பாடல்களையும் அவற்றினுக்குரிய தெளிவுரையையும் நான்கு பாகங்களில் வெளியிடுகின்றார்கள். உயர்ந்த தாளில் கணிப்பொறியின் உதவியால் அழகிய அச்சில் நூல்வடிவில் அதிக பொருட்செலவில் இவைகளைக் கொண்டு வருகின்றார்கள். இந்தப் புத்தகங்கள் ஒவ்வொரு திருமாளிகையிலும், திருக்கோயில்களிலும் அலங்கரிக்க வேண்டியவை. இந்த நூல்கள் இருக்கும் இடங்களில் கண்டிப்பாக இலட்சுமி கடாட்சமும் இருக்கும். திரு. 'வராகி' பாலன் அவர்களும் ஸ்ரீ உ.வே. டாக்டர் மதி. சீனிவாசன் அவர்களும் மற்றும் பதிப்புக் குழுவினரும் இதுபோல நற்காரியங்கள் செய்ய பல காலம் நோய்நொடி இன்றி வாழ வேண்டும் என பெரிய பெருமாளையும் பெரிய பிராட்டியரையும் வேண்டி வணங்குகின்றேன்.

என். கிருஷ்ணசுவாமி ரெட்டியார்
முன்னாள் நீதியரசர், சென்னை.

# அடியேன் விண்ணப்பம்

ஆழ்வார்கள் ஸ்ரீமந் நாராயணனையே பரம்பொருளாக வழிபட்டார்கள். அவனைப் பற்றிய அனுபவ வெளியீடே அருளிச் செயல் பாசுரங்கள். எம்பெருமானின் கல்யாண குணங்களே இவற்றின் பாடுபொருள்கள் ஆவன. ஆழ்வார் பாசுரங்களில் காணக்கிடக்கும் மையக் கருத்துகளாவன :- "உலகத்து அறிவற்ற பொருள்களையும் அறிவுள்ள ஆத்மாக்களையும் எம்பெருமானே படைத்துக் காத்துத் தன்னுள்ளே ஒன்றுபடுத்திக் கொள்கிறான். ஆத்மா பகவானுக்குச் சிறப்புச் செய்யும் அடிமைப் பொருள்; தன் முனைப்பும் பங்குணர்வும் இல்லாத கைங்கர்யமே அதன் புருஷார்த்தம்." பகவத் பக்தி, பாகவ பக்தி, ஆசார்ய பக்தி ஆகிய மூன்றினையும் பற்றி ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள். இவர்கள், திவ்விய தேசப் பெருமான்களின் திருமேனி அழகிலே தம்மை இழந்து அர்ச்சையையே வியந்து பேசுவர். 'முதலாயிரம்' நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் முதல் பகுதியாக உள்ளது. இதில் 947 பாசுரங்கள் உள்ளன.

பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு பொங்கும் பரிவாலே புறப்பட்ட மங்களா சாசனம் ஆகும். அவருடைய திருமொழியில் ஆழ்வார் கண்ணனின் மேன்மைகளைத் தாயான நிலையில் அனுபவிக்கிறார். ஆண்டாளின் திருப்பாவை வேதம் அனைத்துக்கும் வித்தாக, கைங்கர்யத்தை வலியுறுத்தும் நோன்புப் பாடலாக மிளிர்கிறது. நாச்சியார் திருமொழியில் ஆண்டாளின் ஆண்டாளின் தெய்வக் காதல் பள்ளமடையாய்ப் பாய்கிறது. குலசேகரர் தம் திருமொழியில், தாம் அரங்கன், திருவேங்கடவன் ஆகியோரிடத்தே கொண்ட அடிமைத் திறம் பற்றிப் பாடியதுடன், கண்ணன் இராமனிடத்தே ஈடுபடுகிறார். திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தம் வேத வேதாந்தக் கருத்துக்களை உள்ளடக்கி, நாராயணனின் பரத்துவத்தை நிறுவுகிறது. திருப்பாணாழ்வார், அரங்கனின் அர்ச்சைத் திருமேனி அழகில் ஈடுபடுகிறார். தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் 'திருமாலை' தொண்டின் மேன்மையையும் திருநாமப் பெருமையையும் வெளிப்படுத்துகிறது. மதுரகவி ஆழ்வார் ஆசார்ய பக்தியைத் தலைக் கட்டுகிறார்.

எம்பெருமான் திருவருளால், முதலாயிரம் பாசுரங்களின் தெளிவுரையை எழுதும் பேறு அடியேனுக்குக் கிடைத்தது. ஆசை பற்றியே இப் பணியை மேற்கொண்டேன். முற்ற முழுக்கவும் வியாக்கியானச் சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளையின் உரையையே, அடியேன் அறிந்த தமிழ் வடிவில் அமைக்க முயன்றேன். இவ்வாறு அடியேனைத் தெளிவுரை எழுதச் செய்து பணிகொண்ட வராகி பதிப்பகத்தாருக்கு என்றும் நன்றி உடையேன். நூல் முழுவதையும் கணிப்பொறி இயக்க முறையில் அச்சிட்டு, நல்ல தரமான தாளில், அழகிய வடிவில் வெளியிட்டுள்ளதைப் பாராட்டுகிறேன். ஆர்வலர்கள் இந்நூலை வாங்கிப் படித்துப் பயன் பெற வேண்டுகிறேன்.

அன்பன் அடியேன்

**மதி. ஸ்ரீநிவாசன்**

# முதலாயிரம்

## உள்ளுரை




நூல் கிடைக்குமிடம் :

ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ்
144, ஆழ்வார்பேட்டை தெரு,
ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.

# நாலாயிர திவ்வியப் பிரபந்தம்

## முதலாயிரம்

### பெரியாழ்வார் திருமொழித் தனியன்கள்

### நாதமுனிகள் அருளிச் செய்தது

1. குருமுகம் அநதீத்ய ப்ராஹ வேதான் அசேஷான்
நரபதி பரிக்ல்ப்தம் சுல்கம் ஆதாது காம:
ச்வசுரம் அமர வந்த்யம் ரங்க நாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜ குலதிலகம்தம் விஷ்ணு சித்தம் நமாமி.

### பாண்டிய பட்டர் அருளிச் செய்தவை

2. மின்னார் தடமதிள் சூழ் வில்லிபுத்தூர் என்றொருகால்
சொன்னார் கழற்கமலம் சூடினோம் - முன்னாள்
கிழியறுத்தான் என்றுரைத்தோம்: கீழ்மை யினிற் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

3. பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று
ஈண்டிய சங்கம் எடுத்தூத - வேண்டிய
வேதங்கள் ஓதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.



ஸ்ரீ:

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

## முதலாயிரம்

### பெரியாழ்வார் திருமொழித் தனியன்கள்

ஸ்ரீவிஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வார், குருவைச் சார்ந்து பயிலும் கல்விப்பயன் பெறாதவர். எனினும் ஸ்ரீவல்லபதேவன் என்னும் அரசன் ஏற்படுத்திய பொற்கிழியைப் பெற விரும்பினார். இறைவன் திருவருளால், வேதங்களை ஒன்றும் விடாமல் எடுத்துரைத்து, நாராயண பரத்துவத்தை நிறுவினார். அரங்கநாதனுக்கு நேரே மாமனார் ஆனார்; அவர் அமரர்களால் வணங்கப் பெற்றவர். அந்தணர் குலதிலகமான அந்த விஷ்ணுசித்தரை நான் வணங்குகிறேன். 1

நெறி நின்ற நெஞ்சமே; உன்னால் யாம் பயன் பெற்றோம். 'ஒளி வீசும் மதிள்கள் சூழ்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர்' என்று ஒரு தடவை கூறுபவர்களுடைய திருவடித் தாமரைகளை நம் தலை மேல் அணிவோம். 'முன்னாளில் பாண்டியன் பரிசிலாக வைத்திருந்த பொற்கிழியை அறுத்து எடுத்துக் கொண்ட பெரியாழ்வார்' என்று திருநாமம் கூறி மகிழ்வோம். 'வில்லிபுத்தூர்' என்றும் 'பெரியாழ்வார்' என்றும் திருநாமங்களைக் கூறுவதால், நாம், கீழான நரகவாயில் அடையும் பாவத்தை அறுத்துவிட்டோம். 2

"பரத்துவத்தை நிறுவி நம்மைத் தெளிவிக்கப் பட்டர்பிரான் வந்தான்" என்று பாண்டிய அரசன் புகழ்ந்து கொண்டாடினான். அவையில் பலரும், கூட்டமான சங்குகளை முழக்கி வரவேற்றனர். அந்தணர்கள் தலைவரான பெரியாழ்வார், தமக்கு சாதகமான வேத வாக்கியங்களை ஓதி, ஸ்ரீமன் நாராயணனே முழு முதல் தத்துவம் என்பதை நிறுவினார். அதனால் பரிசிலாகத் தொங்க விடப்பட்ட பொற்கிழியை அறுத்து எடுத்துக் கொண்டார். இத்தகைய பெருமை படைத்த பெரியாழ்வாரின் பாதங்களே நமக்கு அடைக்கலம் ஆகும். 3

Should not be a monologue
Should be a dialogue

ஸ்ரீ:

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

## பெரியாழ்வார் திருமொழி

### திருப்பல்லாண்டு

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்,
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு. 1

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு;
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு ;
வடிவார்சோதி வலத்துறையும் சுடர்
ஆழியும் பல்லாண்டு;
படைபோர் புக்கு முழங்கும்அப் பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே. 2

வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து
மண்ணும் மணமும் கொண்மின்;
கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள்
குழுவினில் புகுதலொட்டோம்;
ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்
இராக்கதர் வாழ் இலங்கை
பாழாளாகப் படை பொருதானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. 3

ஏடுநிலத்தில் இடுவதன் முன்னம் வந்து
எங்கள் குழாம் புகுந்து
கூடு மனமுடையீர்கள்! வரம்பொழி
வந்து ஒல்லைக் கூடுமினோ;
நாடும் நகரமும் நன்கறிய நமோ
நாராயணாய வென்று
பாடுமனமுடைப் பத்தருள்ளீர்! வந்து
பல்லாண்டு கூறுமினே. 4



ஸ்ரீ:

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

## பெரியாழ்வார் திருமொழி

### திருப்பல்லாண்டு – உரை

முஷ்டிகன், சாணூரன் ஆகிய மல்லர்களைக் கொன்று உன் திருத்தோள்களின் பலத்தை நிறுவிய பகவானே! உனக்கு மங்களம் உண்டாகட்டும். உன் சிவந்த திருவடியின் அழகுக்குப் பல்லாண்டு. மனிதக் கணக்கின் படியான பல்லாண்டுகளும் பல பிரமன்களுடைய பல நூறாயிரம் வருடங்களும் நீ குறைவில்லாத பாதுகாப்புடன் வாழ்க! 1

அடியோங்களுக்கும் உனக்கும் உள்ள பிரிவில்லாத தொடர்பு ஆயிரம் ஆண்டுகள் நிலைக்கட்டும். உன் வலத் திருமார்பில் வாழ்கின்ற மஹாலஷ்மி உன்னுடன் நித்தியமாகக் கூடி இருக்க வேண்டும். பகவானே! உன் வலக்கரத்தில் விளங்கும் ஒளி கூடிய சக்கரம் பல்லாண்டுகள் நிலைக்கட்டும். யுத்தத்தில் புகுந்து முழங்கும் உன் பாஞ்சசன்னிய ஆயுதமும் பல்லாண்டு நிலைக்கட்டும். 2

கைங்கர்யமே உறுதிப்பொருள் என்னும் நோக்கம் உடையவர்கள் ஆகில், நீங்கள் திருமுளைத் திருநாளில் புழுதி மண் சுமக்க வாருங்கள். சோற்று வாழ்விற்காகப் பிறர்க்கு அடிமைப் பட்டிருப்பீர்களாயின், எங்கள் கூட்டத்திலே சேர அனுமதியோம். நாங்கள் மூவேழு தலை முறைகளிலும் எவ்விதக் குற்றமும் இன்றி உள்ளோம். இலங்கையையும் அங்கே வாழ்ந்த அரக்கர்களையும் அழித்த எம்பிரானுக்கு, இன்று நாங்கள் திருப்பல்லாண்டு பாடுகிறோம். 3

சுடுகாட்டில் உங்கள் உடம்புகளைச் சேர்ப்பதற்கு முன்னே எங்களுடன் சேர்ந்து விடுங்கள். கைவல்ய இன்ப எல்லையை விட்டுவிட்டு, விரைவாக எங்களுடன் கூடுங்கள். நாட்டு மக்களும் நகர அறிஞர்களும் நன்றாக அறியும்படி எட்டெழுத்து மந்திரமாகிய நமோ நாராயணாவை, வாய்விட்டுப் பாடுவீர்கள் ஆகில், எங்களுடன் கலந்து எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுங்கள். 4

அண்டக் குலத்துக் கதிபதியாகி
அசுரர் இராக்கதரை
இண்டைக் குலத்தை எடுத்துக் களைந்த
இருடீகேசன் தனக்குத்,
தொண்டக் குலத்தில் உள்ளீர்! வந்தடி தொழுது
ஆயிர நாமம் சொல்லிப்
பண்டைக் குலத்தைத் தவிர்ந்து பல்லாண்டு பல்
லாயிரத்தாண்டு என்மினே. 5

எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன்
ஏழ்படிகால் தொடங்கி
வந்து வழிவழி ஆட்செய்கின்றோம்; திரு
வோணத் திருவிழவில்
அந்தியம் போதில் அரியுரு வாகி
அரியை அழித்தவனைப்
பந்தனை தீரப் பல்லாண்டு பல்லாயிரத்
தாண் டென்று பாடுதுமே. 6

தீயிற் பொலிகின்ற செஞ்சுடர் ஆழி
திகழ் திருச்சக்கரத்தின்
கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று
குடிகுடி ஆட்செய்கின்றோம்,
மாயப் பொருபடை வாணனை ஆயிரந்
தோளும் பொழி குருதி
பாயச் சுழற்றிய ஆழி வல்லானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. 7

நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும்
அத்தாணிச் சேவகமும்
கை அடைக்காயும் கழுத்துக்குப் பூணொடு
காதுக்குக் குண்டலமும்
மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்தென்னை
வெள்ளுயிர் ஆக்கவல்ல
பையுடை நாகப்பகைக் கொடியானுக்குப்
பல்லாண்டு கூறுவனே. 8

உடுத்துக் களைந்த நின் பீதகஆடை
யுடுத்துக் கலத்ததுண்டு
தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன
சூடுமித் தொண்டர்களோம்
விடுத்த திசைக்கருமம் திருத்தித் திரு
வோணத் திருவிழாவில்
படுத்த பைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே. 9





உலகங்களின் கூட்டங்களுக்குத் தலைவனாய், அவற்றை நியமிக்கும் பகவான், புதர்கள் போல் நெருங்கிய அசுரர், அரக்கர்களை வேரோடு அழித்தான். இந்திரியங்களுக்குத் தலைவனாய் இருக்கும் இருடீகேசனுக்கு அடிமை செய்யும் குலத்திலே நீங்கள் இருப்பீர்களாயின் எங்கள் கூட்டத்திலே சேருங்கள். இறைவன் திருவடிகளை, தொழுது வாயார அவன் ஆயிரம் திருநாமங்களையும் கூறுங்கள். பயனை எதிர்பார்த்த பழைய வாழ்க்கையை விட்டு நீங்கிய, நீங்கள், குலப்பெருமையை விட்டுவிட்டு இறைவனுக்குப் பல்லாண்டு பாடுங்கள். 5

நாங்களும் எங்கள் தகப்பன்மார்களும், பாட்டனார்களும், முப்பாட்டனார்களும், அவர்கள் தந்தைகளும், பாட்டன்களும் என்று இப்படி ஏழு தலைமுறைகள் தொடங்கி முறையாக அடிமை செய்கிறோம். உங்களுடன் சேர்ந்து திருவோணத் திருவிழாவில் பகவானுக்குத் திருப்பல்லாண்டு பாடுவோம். அந்தி நேரத்தில் நரசிம்ம வடிவம் கொண்டு இரணியனை அழித்தவனுக்குக் களைப்புத் தீரும்படியாக மங்களாசாசனம் செய்வோம். 6

நெருப்பு, சூரியன் ஆகியவற்றை விடவும் சிவந்து விளங்கும் திருச்சக்கரப் பொறியாலே நாங்கள் அடையாளம் இட்டுக் கொண்டுள்ளோம்; தலைமுறை தலைமுறையாய்த் திருமால் அடிமை செய்கிறோம். வஞ்சனையாகப் போர் செய்த பாணாசுரனின் ஆயிரம் தோள்களை வெட்டி இரத்தத்தில் வீழ்த்திய பெருமை உடையவன் திருவாழி ஆழ்வான் ஆவான். அத்திருச்சக்கரத்தை ஏந்திய வல்லவனுக்குத் திருப்பல்லாண்டு பாடுவோம். 7

இறைவன், படங்களை உடைய பாம்புக்குப் பகைவனான கருடனைத் தன்கொடியாகக் கொண்டான். அவன் அடியேனுக்கு நெய்ச் சோற்றையும் பிரிவற்றதொண்டு செய்யும் வாய்ப்பையும், வெற்றிலை பாக்கையும், கழுத்தாரமும் காதிற்குக் குண்டலத்தையும், உடம்பிலே பூசிக் கொள்ளச் சந்தனத்தையும் தந்து ஆட்கொண்டான். அடியேனை, தூய சத்துவ குணமுடையாய் மாற்றிவிட்டான். அந்த அருளாளனுக்கு நான் திருப்பல்லாண்டு பாடுகிறேன். 8

இறைவனே! நீ திருவரையில் உடுத்திக் களைந்த பீதாம்பரத்தை நாங்கள் உடுத்திக் கொள்வோம். நீ உண்ட பாத்திரத்தில் மீதமுள்ளதை உண்போம்; நீ சூடிக்களைந்த திருத்துழாய் மாலைகளைச் சூடிக் கொள்வோம். தொண்டர்களான நாங்கள், திருவோணத் திருவிழாவில், பல திசைகளிலும் ஏவப்பட்ட தொண்டுகளை நன்றாகச் செய்வோம். படங்களை உடைய ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்டவனே உனக்குப் பல்லாண்டு பாடுவோம். 9

எந்நாள் எம்பெருமான் உன்தனக்கு அடி
யோமென்று எழுத்துப்பட்ட
அந்நாளே அடியோங்கள் அடிக்குடில்
வீடுபெற்று உய்ந்தது காண்
செந்நாள் தோற்றித் திரு மதுரையுள்
சிலை குனித்து ஐந்தலைய
பைந்நாகத் தலை பாய்ந்தவனே! உன்னைப்
பல்லாண்டு கூறுதுமே. 10

அல்வழக்கு ஒன்றுமில்லா அணி கோட்டியர்
கோன் அபிமானதுங்கன்
செல்வனைப் போல, திருமாலே! நானும்
உனக்குப் பழவடியேன்;
நல்வகையால் நமோ நாராயணா வென்று
நாமம் பல பரவி,
பல்வகையாலும் பவித்திரனே! உன்னைப்
பல்லாண்டு கூறுவனே. 11

பல்லாண்டென்று பவித்திரனைப் பர
மேட்டியைச் சார்ங்கம் என்னும்
வில்லாண்டான் தன்னை வில்லிபுத்தூர் விட்டு
சித்தன் விரும்பிய சொல்
நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோ
நாராயணாய வென்று
பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்து
ஏத்துவர் பல்லாண்டே. 12

## கண்ணன் திருஅவதாரச் சிறப்பு

வண்ண மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்
கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்,
எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிடக்
கண்ணன் முற்றம் கலந்து அளறு ஆயிற்றே. 13

ஓடுவார், விழுவார், உகந்து ஆலிப்பார்,
நாடுவார், நம்பிரான் எங்குத்தான் என்பார்;
பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே. 14

பேணிச் சீர் உடைப்பிள்ளை பிறந்தினில்
காணத் தாம் புகுவார், புக்குப் போதுவார்;
ஆண் ஒப்பார் இவன் நேர் இல்லை காண், திரு
வோணத்தான் உலகு ஆளும் என்பார்களே. 15





அடியோங்கள் தலைவனே! உனக்கு அடிமைப்பட்டோலை எழுதிய அந்த நல்ல நாளிலே, எங்கள் இல்லத்தில் யாவரும் உனக்கு அடிமைப்பட்டு உய்வடைந்தார்கள். கைவல்யத்திலிருந்து மீண்டு கைங்கர்யத்தையே உறுதிப் பொருளாகப் பெற்றார்கள். திருவோண நன்னாளிலே அவதாரம் செய்த நீ வட மதுரை சென்று வில்லை முறித்தாயே! ஐந்து தலைகளைப் பெற்ற காளிங்க நாகத்தின் தலைமீது ஆடினாயே! உனக்குத் திருப்பல்லாண்டு பாடுகிறோம். 10

திருமகள் கேள்வனே! திருக்கோட்டியூர்த் தலைவராய் விளங்கும் 'செல்வ நம்பி' தவறான வழக்குகள் எதுவுமில்லாதவர். பகவான் அடிமைத்திறத்தில் அபிமானம் மேம்பட்டவர். அவரைப் போலவே அடியேனும் பழங்காலத் தொட்டு உன் அடியவன் ஆவேன். பலவகைகளிலும் தூய்மையானவனே! அடியேன் 'நமோ நாராயணாய' என்னும் திருமந்திரத்துடன் உன் பல திருநாமங்களையும் உச்சரித்துப் பல்லாண்டு பாடுவேன். 11

எம்பெருமான் தூய இயல்பினனாய் ஸ்ரீவைகுண்டத்திலே எழுந்தருளி உள்ளான். சார்ங்கம் என்னும் வில்லை ஆளும் வன்மை உடையவன். ஸ்ரீவில்லிபுத்தூரிலே தோன்றிய விஷ்ணுசித்தர் ஆசையுடன் இத்திருப்பல்லாண்டைப் பாடினார். இதனால் மகிழ்பவர்கள் 'நமோ நாராயணாய' என்னும் திருமந்திரத்தைக் கூறித் துதிப்பார்கள் பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனைக் கணக்கற்ற பல்லாண்டுகள் சுற்றி இருந்து, திருப்பல்லாண்டு பாடுவார்கள். 12

## கண்ணன் திருஅவதாரச் சிறப்பு

அழகிய மாடங்கள் சூழ்ந்த திருக்கோட்டியூர்க் கேசவனே கண்ணனாக அவதரித்தான். அவன் பிறந்ததும் ஆய்க்குடி மக்கள் எண்ணெயையும் மஞ்சள் பொடியையும் ஒருவர்க்கொருவர் எதிராகத் தூவினர். இதனால் நந்தகோபன் மாளிகை முற்றம் எண்ணெய் - மஞ்சள் சேறாக ஆயிற்று. 13

ஆய்க்குடி மக்கள் மகிழ்ச்சியால் ஓடுவார்கள்; பின் வழுக்கி விழுவார்கள்; ஆர்ப்பரிப்பார்கள். 'நம் தலைவன் கண்ணன் எங்கே' என்று தேடுவார்கள். பறைகள் கொட்ட ஆடுவார்கள். இவ்வாறு கொண்டாட்டம் மிகுந்தது. 14

சீர்மைக்குணம் உடைய பிள்ளை, கண்ணனைக் காண உள்ளே புகுவார்கள்; கண்டோர் வெளியே போவார்கள்; "ஆண்மையிலே இவனை ஒத்தவர் யாருமிலர்; திருவோணத்தான் ஆன பகவான். உலகங்களை ஆள்வான்" என்று பேசுவார்கள். 15

உறியை முற்றத்து உருட்டி நின்று ஆடுவார்,
நறுநெய் பால் தயிர் நன்றாகத் தூவுவார்,
செறி மென் கூந்தல் அவிழத் திளைத்து எங்கும்
அறிவு அழிந்தனர் ஆய்ப்பாடி ஆயரே. 16

கொண்ட தாள்உறி கோலக் கொடுமழுத்
தண்டினர், பறியோலைச் சயனத்தர்,
விண்ட முல்லையரும்பு அன்ன பல்லினர்,
அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாடினார். 17

கையும் காலும் நிமிர்த்துக் கடார நீர்
பைய ஆட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நா வழித்தாளுக்கு அங்காந்திட,
வையம் ஏழும் கண்டாள பிள்ளை வாயுளே. 18

வாயுள் வையகம் கண்ட மடநல்லார்
ஆயர் புத்திரன் அல்லன், அருந்தெய்வம்;
பாய சீர் உடைப் பண்பு உடைப் பாலகன்
மாயன் என்று மகிழ்ந்தனர் மாதரே. 19

பத்து நாளும் கடந்த இரண்டாம் நாள்,
எத் திசையும் சயமரம் கோடித்து,
மத்த மா மலை தாங்கிய மைந்தனை
உத்தானம் செய்து உகந்தனர் ஆயரே. 20

கிடக்கில், தொட்டில் கிழிய உதைத்திடும்;
எடுத்துக் கொள்ளில், மருங்கை இறுத்திடும்;
ஒடுக்கிப் புல்கில், உதரத்தே பாய்ந்திடும்;
மிடுக்கு இலாமையால் நான் மெலிந்தேன், நங்காய் 21

செந்நெல் ஆர் வயல் சூழ் திருக்கோட்டியூர்
மன்னு நாரணன் நம்பி பிறந்தமை
மின்னு நூல் விட்டுசித்தன் விரித்த இப்
பன்னு பாடல் வல்லார்க்கு இல்லை பாவமே. 22





இடையர்கள் பால் தயிர் நிறைந்த உறிகளை முற்றத்திலே உருட்டி ஆடுவார்கள். வாசனை மிகுந்த நெய்யையும் தயிரையும் நன்றாகத் தானம் செய்வார். செறிந்த மெத்தென்ற மயிர்முடி அவிழும்படி ஆய்ச்சிகள் ஆடுவார்கள். அறிவை மறந்து, அவர்கள் உணர்ச்சி மிகுந்து மகிழ்ச்சியில் மூழ்கி ஆடினார்கள். 16

முல்லை அரும்பு போன்ற பற்களை உடைய ஆயர்கள், கூர்மையான கோடரிகளையும் தடிகளையும் உடையவர்கள். நெருக்கமாகப் பின்னப்பட்ட உறிகளையும் தாழை மடல்களால் பின்னப்பட்ட பாய்களையும் கொண்டவர்கள். இவர்கள் பொங்கும் சிரிப்புடன் நெருங்கி நெய் வீசி விளையாடினார்கள். 17

யசோதைத் தாய், பெரிய பாத்திரத்தில் பொறுக்குமளவு சூடான தண்ணீரைக் கொண்டு பசுமஞ்சள் தேய்த்துக் குழந்தையை நீராட்டினாள். கண்ணனின் நாக்கை வழித்த பொழுது அவன் வாய்க்குள்ளே ஏழு உலகங்களையும் கண்டாள். 18

கண்ணன் வாயினுள்ளே உலகங்களைப் பார்த்த ஆய்ப் பெண்கள் ஆச்சரியம் அடைந்தனர். “இப்பிள்ளை ஆய்க்குலப் பிள்ளை அல்லன்; பெறுவதற்குரிய பெருந்தெய்வம்” என்றனர். “கல்யாண குணங்கள் உடைய நீர்மைச் சிறப்புடையவன். இம்மாயவன்” என்று கொண்டாடி மகிழ்ந்தார்கள். 19

குழந்தை பிறந்து பத்து நாள்கள் கழிந்தன; பன்னிரண்டாம் நாளும் வந்தது. அன்று திசைகளெல்லாம் தோரணங்கள் கட்டி அலங்கரித்தனர். குழந்தை கண்ணனை இடையர்கள் தங்கள் கைத் தலங்களிலே வைத்துத் தூக்கி மகிழ்ந்தார்கள். இக்கண்ணன்தான், பிற்காலத்தில் கோவர்த்தன மலையைத் தூக்கி நின்று தன் வலிமையைக் காட்டியவன்! 20

நங்கைமார்களே! குழந்தை தொட்டில் கிழியும்படி உதைக்கிறான். இடுப்பில் எடுத்தால், இடுப்பே ஒடியும்படி எகிறுகிறான். மார்போடு அணைத்துக் கொண்டால், திருவடிகளால் மார்பில் பாய்கிறான். இக் குழந்தையின் குறும்புகளைப் பொறுக்கும் சக்தி இல்லாததால் நான் இளைத்தேன். (உடம்பால் செய்யும் சேஷ்டைகளைப் பொறுக்கும் சக்தி குழந்தைக்கு இல்லையே என்று நான் வருந்தி இளைத்தேன்) 21

செந்நெல் வயல்கள் சூழ்ந்திருக்கோட்டியூர் நம்பி, திருக்குணங்கள் நிறைந்த கண்ணனாக அவதரித்ததை பூணூல் அணிந்த விஷ்ணுசித்தர் இப்பாசுரங்களில் அருளினார். இப்பத்துப் பாசுரங்களையும் கற்க வல்லவர்களுக்கு எவ்விதமான பாவமும் இல்லை. 22

## கண்ணன் திருமேனி அழகு (அடிமுதல் முடிவரை)

சீதக் கடலுள் அமுது அன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்து உண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே.
பவள வாயீர்! வந்து காணீரே ! 23

முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்
தத்திப் பதித்துத் தலைப்பெய்தாற்போல், எங்கும்
பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள்
ஒத்திட்டு இருந்தவா காணீரே.
ஒண்ணுதலீர்! வந்து காணீரே! 24

பணைத்தோள் இள ஆய்ச்சி பால் பாய்ந்து கொங்கை
அணைத்து ஆர உண்டு கிடந்த இப் பிள்ளை
இணைக்காலில் வெள்ளித் தளை நின்று இலங்கும்
கணைக்கால் இருந்தவா காணீரே.
காரிகையீர்! வந்து காணீரே ! 25

உழந்தாள் நறுநெய் ஓரோர் தடா உண்ண,
இழந்தாள் எரிவினால் ஈர்த்து, எழில் மத்தின்
பழந் தாம்பால் ஓச்ச, பயத்தால் தவழ்ந்தான்
முழந்தாள், இருந்தவா காணீரே,
முகில்முலையீர்! வந்து காணீரே! 26

பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்து உண்டிட்டு
உறங்குவான் போலே கிடந்த இப் பிள்ளை
மறம் கொள் இரணியன் மார்வை முன் கீண்டான்
குறங்குகளை வந்து காணீரே,
குவிமுலையீர்! வந்து காணீரே! 27

மத்தக் களிற்று வசுதேவர் தம்முடைச்
சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில்
அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்
முத்தம் இருந்தவா காணீரே,
முகிழ்நகையீர்! வந்து காணீரே! 28





## கண்ணன் திருமேனி அழகு – (அடிமுதல் முடிவரை)

*பவளநிற உதடுகளை உடைய பெண்களே! குளிர்ந்த திருப்பாற் கடலின் உள்ளார்ந்த அமுதாக வெளிவந்த திருமகளை ஒத்தவள் தேவகி. இவள் தான்பெற்ற கண்ணனை மலர் சூடிய கூந்தலை உடைய யசோதை இடத்தே வளர விட்டாள். அக்குழந்தை தன் திருவடித் தாமரைகளை கைகளால் வாயிலே வைத்துச் சுவைக்கும் அழகைப் பாருங்கள்! பாருங்கள்!* 23

*அழகான நெற்றியை உடைய பெண்களே! கண்ணன் பாதங்களில் உள்ள பத்து விரல்களும், முத்துக்களையும் மணிகளையும் , வயிரத்தையும், தங்கத்தையும் மாறி மாறிப் பதித்துச் சேர்த்தாற் போல் உள்ளன. மணி போலும் நிறமுடைய கண்ணனின் விரலழகைப் பாருங்கள்.* 24

*அழகிய பெண்களே! மூங்கிலை ஒத்த தோள்களை உடைய யசோதையின் பால் சொரியும் மார்புகளுடன் அணைத்தவாறு கண்ணன் வயிறாரப் பாலருந்திக் கிடக்கிறான். இக்குழந்தையின் இரு கணைக் கால்களிலும் வெள்ளித் தண்டைகள ஒளியுடன் விளங்குவதைக் காணுங்கள்.* 25

*முகிழ்த்த மார்புகளை உடைய பெண்களே! யசோதை சிரமப்பட்டுச் சேர்த்த மணம் மிக்க நெய்யைக் கண்ணன் ஒவ்வொரு பானையிலிருந்து எடுத்துண்டான். அவனை இழந்ததாக நினைத்த தாய், வயிற்றெரிச்சலுடன் அவனை இழுத்து மத்தில் சுற்றிய பழங்கயிற்றால் அடிப்பதாக ஓங்கினாள். பயத்தால் தவழ்ந்த அவன் முழங்கால் அழகைப் பாருங்கள்.* 26

*குவி முலையீர்! இறைவன் முற்காலத்தில் பிரகலாதனிடத்தே வெறுப்புக் கொண்ட இரணியனின் மார்பைப் பிளந்து கொன்றான். அக்கண்ணனே பூதனைப் பேயின் மார்புகளைச் சுவைத்து உண்டான். உறங்குவது போலக் கிடக்கும் இப்பிள்ளையின் திருத்தொடைகளில் இரணிய வதச் சுவடு தெரிவதைப் பாருங்கள்.* 27

*புன்முறுவலுடைய பெண்களே! ஸ்ரீ வசுதேவர் மதங்கொண்ட ஆண்யானைப் படைபெற்றவர்; அவர் இதயம் விட்டுப் பிரியாத தேவகியின் வயிற்றில் ஹஸ்த நட்சத்திரத்தின் பத்தாவது நாளிலே அச்சுதனான கண்ணன் பிறந்தான். நீங்கள் வந்து குழந்தையின் தண்ணத்தைக் காணுங்கள்.* 28

இருங்கை மதகளிறு ஈர்க்கின்றவனைப்
பருங்கிப் பறித்துக் கொண்டு ஓடும் பரமன்தன்
நெருங்கு பவளமும் நேர்நாணும் முத்தும்
மருங்கும் இருந்தவா காணீரே,
வாணுதலீர்! வந்து காணீரே! 29

வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து
தந்தக் களிறு போல் தானே விளையாடும்
நந்தன் மதலைக்கு நன்றும் அழகிய
உந்தி இருந்தவா காணீரே,
ஒளியிழையீர்! வந்து காணீரே! 30

அதிரும் கடல்நிற வண்ணனை ஆய்ச்சி
மதுர முலை ஊட்டி வஞ்சித்து வைத்துப்
பதறப் படாமே பழந் தாம்பால் ஆர்த்த
உதரம் இருந்தவா காணீரே,
ஒளிவளையீர்! வந்து காணீரே! 31

பெருமா உரலிற் பிணிப்புண்டு இருந்து அங்கு
இருமா மருதம் இறுத்த இப் பிள்ளை
குருமா மணிப்பூண் குலாவித் திகழும்
திருமார்வு இருந்தவா காணீரே,
சேயிழையீர்! வந்து காணீரே! 32

நாள்கள் ஓர் நாலைந்து திங்கள் அளவிலே,
தாளை நிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்
வாள் கொள் வளைஎயிற்று ஆருயிர் வவ்வினான்
தோள்கள் இருந்தவா காணீரே.
சுரிகுழலீர்! வந்து காணீரே! 33

மைத் தடங்கண்ணி யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல நிறத்துச் சிறுப்பிள்ளை
நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய
கைத்தலங்கள் வந்து காணீரே,
கனங்குழையீர்! வந்து காணீரே! 34





ஒளி வீசும் நெற்றி உடைய பெண்களே! பெரிய துதிக்கையுடன் மதங் கொண்ட குவலயாபீடம் என்னும் யானையைப் பரமன் கண்ணன் தன் வசப்படுத்திக் கொன்று, அதன் கொம்புகளை முறித்தெடுத்து ஓடினான். அவன் இடையில் கட்டப்பட்ட நேரிய அரை நாணுடன் நெருங்கிய பவளவடமும் முத்ாரமும் உள்ள அழகைக் காணுங்கள். 29

ஒளி வீசும் அணிகலன்களுடைய பெண்களே! கண்ணன் தன்னுடன் விளையாட வந்த சிறுவர்களின் நடுவே வலிமையுடன் கொம்புடைய யானைக் குட்டி போலே தன் தலைமையை நிலை நிறுத்துகிறான். நந்தகோபன் புதல்வனான இக்கண்ணனின் கொப்பூழின் அழகைப் பாருங்கள். 30

ஒளி மிகுந்த வளையங்கள் அணிந்துள்ள பெண்களே! ஒலிக்கின்ற கடலின் நீல நிறக் கண்ணனை யசோதை இனிய பாலூட்டி வளர்க்கிற பொழுது அடங்காததாலே, பழங்கயிற்றால் கட்டினாள். அக்கயிற்றுத் தழும்பு காண்கின்ற வயிற்றின் அழகைப் பாருங்கள். 31

செவ்விய ஆபரணங்களை உடைய பெண்களே! பெரிய உரலுடன் கட்டப்பட்டிருந்த கண்ணன் அதனை இழுத்துக் கொண்டு தவழ்ந்து போய், இரண்டு பெரிய மருத மரங்களை முறித்தான். அவன் மார்பில் அசையும் கௌத்துபாபரணத்தையும், மார்பழகையும் வந்து பாருங்கள். 32

சுருண்ட கூந்தலை உடைய பெண்களே! கண்ணன் பிறந்து நான்கைந்து மாதங்களிலே சகடாசுரனைத் தன் காலால் உதைத்து வதைத்தான். வளைந்த பற்களைப் பெற்ற பூதனையின் அரியஉயிரைப் பால் அருந்துவது போலக் குடித்தான். இக்கண்ணனின் தோள்கள் இருந்தபடியை வந்து பாருங்கள். 33

பொற்குழைகளை அணிந்துள்ள பெண்களே! கறுத்து அகன்ற கண்களை உடைய யசோதை வளர்க்கின்ற இச்சிறிய பிள்ளை, தன் கரங்களில் கூர்மையான சக்கரத்தையும் சங்கையும் பெற்றிருக்கிறான். உயர்ந்த வயலில் விளங்கும் கரு நெய்தல் பூப்போன்ற நிறமுடைய இவன் கைத்தலங்களின் அழகைப் பாருங்கள். 34

வண்டு அமர் பூங்குழல் ஆய்ச்சி மகனாகக்
கொண்டு வளர்க்கின்ற கோவலக் குட்டற்கு
அண்டமும் நாடும் அடங்க விழுங்கிய
கண்டம் இருந்தவா காணீரே,
காரிகையீர்! வந்து காணீரே! 35

எம்தொண்டை வாய்ச்சிங்கம் வா என்று எடுத்துக்கொண்டு
அந்தொண்டை வாய் அமுது ஆதரித்து ஆய்ச்சியர்
தம்தொண்டை வாயால் தருக்கிப் பருகும் இச்
செந்தொண்டை வாய் வந்து காணீரே,
சேயிழையீர்! வந்து காணீரே! 36

நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்து நீராட்டும் இந்நம்பிக்கு
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா காணீரே,
மொய்குழலீர்! வந்து காணீரே ! 37

விண்கொள் அமரர்கள் வேதனை தீர முன்
மண்கொள் வசுதேவர்தம் மகனாய் வந்து
திண்கொள் அசுரரைத் தேய வளர்கின்றான்
கண்கள் இருந்தவா காணீரே !
கனவளையீர்! வந்து காணீரே ! 38

பருவம் நிரம்பாமே பாரெல்லாம் உய்யத்
திருவின் வடிவு ஒக்கும் தேவகி பெற்ற
உருவு கரிய ஒளி மணிவண்ணன்
புருவம் இருந்தவா காணீரே,
பூண்முலையீர்! வந்து காணீரே! 39

மண்ணும் மலையும் கடலும் உலகு ஏழும்
உண்ணுந் திறத்து மகிழ்ந்து உண்ணும் பிள்ளைக்கு
வண்ணம் எழில்கொள் மகரக்குழை இவை
திண்ணம் இருந்தவா காணீரே,
சேயிழையீர்! வந்து காணீரே! 40





அழகிய பெண்களே! தன் கூந்தலிலே வண்டுகள் படிகின்ற பூக்களைச் சூடியுள்ள யசோதை கண்ணனைத் தன்மகனாக வளர்க்கிறாள். அண்டங்களையும் அவற்றின் உள்ளே நாடுகளையும் ஒக்க விழுங்கிய அவ்வாயர் குமரனின் திருக்கழுத்தின் அழகைப் பாருங்கள். 35

செவ்விய அணிகலன்களுடைய பெண்களே! இடைப் பெண்கள் குழந்தை கண்ணனை எடுத்துக் கொண்டு, 'தொண்டைப் பழம் போன்ற சிவந்த உதடுடைய என் சிங்கக் குட்டியே!' என்று கொஞ்சுகிறார்கள். தங்களுடைய கொவ்வைப் பழ உதடுகளைக் குழந்தையின் உதட்டுடன் சேர்த்துப் பருகுகிறார்கள். இப்படிச் சிவந்த உதட்டழகைப் பாருங்கள். 36

செறிந்த கூந்தலை உடைய பெண்களே! யசோதைத்தாய் கண்ணனின் திருமேனி மென்மைக்கு ஏற்றபடி மெதுவான மஞ்சள் விழுதைத் தேய்த்து நீராட்டுகையில், நாக்கை வழிக்கிறாள். நம்பியான கண்ணனின் வாக்கும் திருக்கண்களும், திருஉதடும் புன்முறுவலும் மூக்கும் இருந்த படியைப் பாருங்கள். 37

பொன் வளையல்கள் அணிந்த பெண்களே! விண்ணுலகத்து இந்திரன் முதலில் தேவர்களின் துன்பங்கள் தீர்வதற்காக எம்பெருமான் இம்மண்ணுலகில் வசுதேவர் மகனாக அவதாரம் செய்தான். வலிமை கொண்ட அசுரர்கள் தேய்ந்து அழிவதற்காகவே வளர்கின்ற கண்ணனின் திருக்கண்களின் அழகைப் பாருங்கள். 38

ஆபரணம் பூண்ட மார்பகங்களை உடைய பெண்களே! வயது முதிர்வதற்கு முன்பேயே அசுரர்களை அழிக்கும் வலிமையுடன் கண்ணன் வளர்கின்றான். திருமகளை ஒத்த தேவகி, இக்குமரனை உலகம் உய்வதற்காகப் பெற்றாள். ஒளி விடும் மணி போன்ற கண்ணனின் புருவங்களைப் பாருங்கள். 39

செவ்விய ஆபரணங்கள் அணிந்துள்ள பெண்களே! கண்ணனை, சாமானியமாக எண்ணாதீர். பூமியையும் மலைகளையும் கடல்களையும் ஏழுலகங்களையும் தன் வயிற்றில் வைத்துக் காப்பாற்றிய பகவானே, இங்குப் பாலனாக வந்துள்ளான். அழகிய நிறத்துடன் கூடிய இக்குழந்தையின் இருமகர குண்டலங்களையும் அவற்றின் திண்மையையும் பாருங்கள். 40

முற்றிலும் தூதையும் முன் கைமேல் பூவையும்
சிற்றில் இழைத்துத் திரிதரு வோர்களைப்
பற்றிப் பறித்துக் கொண்டு ஓடும் பரமன்தன்
நெற்றி இருந்தவா காணீரே,
நேரிழையீர்!வந்து காணீரே! 41

அழகிய பைம்பொன்னின் கோல் அங்கைக் கொண்டு
கழல்கள் சதங்கை கலந்து எங்கும் ஆர்ப்ப
மழ கன்றினங்கள் மறித்துத் திரிவான்
குழல்கள் இருந்தவா காணீரே,
குவிமுலையீர்! வந்து காணீரே! 42

சுருப்பார் குழலி யசோதை முன் சொன்ன
திருப் பாதகேசத்தைத் தென்புதுவைப் பட்டன்
விருப்பால் உரைத்த இருபதோடு ஒன்றும்
உரைப்பார் போய் வைகுந்தத்து ஒன்றுவர்தாமே. 43

## தாலாட்டுதல் – (தாலப் பருவம்)

மாணிக்கம் கட்டி வயிரம் இடை கட்டி
ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறுத்தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்;
மாணிக் குறளனே! தாலேலோ!
வையம் அளந்தானே! தாலேலோ! 44

உடையார் கனமணியோடு ஒண் மாதுளம்பூ
இடை விரவிக் கோத்த எழிற் தெழ்கினோடு
விடை ஏறு காபாலி ஈசன் விடுதந்தான்;
உடையாய்! அழேல் அழேல் தாலேலோ!
உலகம் அளந்தானே! தாலேலோ! 45

என்தம்பிரானார் எழிற்திருமார்வர்க்கு
சந்தம் அழகிய தாமரைத் தாளற்கு,
இந்திரன்தானும் எழில் உடைக் கிண்கிணி
தந்து உவனாய் நின்றான். தாலேலோ!
தாமரைக் கண்ணனே! தாலேலோ! 46





*நேரிழையீர்!சிறுபெண்கள் மண்ணிலே சிறுவீடு கட்டி விளையாடுகிற பொழுது கண்ணன் அவர்களுடைய சிறுகளகு, பானை ஆகியவற்றையும் அவர்கள் முன்கைமேல் விளையாடும் மைனாப் பறவைகளையும் கைகளைப் பிடித்துப் பறித்துக் கொண்டு ஓடுகிறான். பரமனான இக்கண்ணனின் நெற்றி அழகைப் பாருங்கள்.* 41

*குவிந்த மார்புகளை உடைய பெண்களே! பசும் பொற்கோலைக் கண்ணன் தன் கையில் ஏந்திக் கொண்டு இளமையான கன்றுக் குட்டிகளின் கூட்டங்களை மடக்கித் திரிகிறான். அவன் திருவடிகளில் உள்ள வீரக்கழல்களும் சதங்கைகளும் எங்கும் ஒலிக்கின்றன. இக்கண்ணனின் சுருண்ட இருண்ட குழல் அழகைப் பாருங்கள்.* 42

*வண்டுகள் தங்கும் மலர் சூடிய கூந்தலை உடைய யசோதை கண்ணன் அழகை அடி முதல் முடிவரை அனுபவித்துப் பேசினாள். அப்பாராட்டை ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த அந்தணப் புலவர் பட்டர்பிரான் இந்த இருபத்தொரு பாசுரங்களில் விருப்பமுடன் விவரித்தார். இவற்றைக் கற்பவர்கள் ஸ்ரீவைகுண்டம் அடையும் பேறு பெற்று அங்கும் பகவானைப் பிரியாமல் பல்லாண்டு பாடுவார்கள்.* 43

## தாலாட்டுதல் – தாலப் பருவம்

*கண்ணனே! மாணிக்கத்தைக் கட்டி, வயிரத்தைப் பதித்து மாற்றுயர்ந்த தங்கத்தாலே செய்யப்பட்ட சிறிய தொட்டிலை, பிரமன் உனக்கென்றே தந்துள்ளான். மாணவப் பருவத்துடன் வாமனனாக வந்து, திரிவிக்கிரமனாக உலகங்களை அளந்தவனே! தாலேலோ.* 44

*உன் திருவரைக்கு ஏற்றதாக, மாதுளம்பூக் கோவை அரை வடத்தை, காளை வாகனமுடைய காபாலி ஈசன் தந்திருக்கிறான். பொன்மணிகள் இடையே கோக்கப்பட்டதாய், இடைச் சுரிகையும் இதனுடன் சேர்ந்துள்ளது. எல்லாவற்றையும் பெற்றுள்ளவனே; உலகங்களை அளந்தவனே! அழாதே அப்பா! அழாதே! தாலேலோ.* 45

*என்னுடைய தலைவனே! அழகான திருமார்பையும் தாமரை போன்ற திருவடிகளையும் உடைய உனக்கு தேவேந்திரன் 'கிண்கிணி' என்னும் அழகான அணிகலனைக் கொடுத்து மகிழ்ச்சி பெறுகிறான். தாமரைக் கண்கள் கொண்ட கண்ணனே! தாலேலோ.* 46

சங்கின் வலம்புரியும் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச் சரிவளையும் நாணும் அரைத்தொடரும்
அங்கண் விசும்பில் அமரர்கள் போத்தந்தார்,
செங்கண் கருமுகிலே! தாலேலோ!
தேவகி சிங்கமே! தாலேலோ! 47

எழில் ஆர் திருமார்வுக்கு ஏற்கும் இவை என்று
அழகிய ஐம்படையும் ஆரமும் கொண்டு
வழு இல் கொடையான் வயிச்சிரவணன்
தொழுது உவனாய் நின்றான்; தாலேலோ!
தூமணி வண்ணனே! தாலேலோ! 48

ஓதக் கடலின் ஒளிமுத்தின் ஆரமும்
சாதிப் பவளமும் சந்தச் சரிவளையும்
மா தக்க என்று வருணன் விடுதந்தான்,
சோதிச் சுடர் முடியாய்; தாலேலோ!
சுந்தரத் தோளனே! தாலேலோ! 49

கான்ஆர் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்
வான்ஆர் செழுஞ்சோலைக் கற்பகத்தின் வாசிகையும்
தேன்ஆர் மலர்மேல் திருமங்கை போத்தந்தாள்,
கோனே! அழேல், அழேல் தாலேலோ!
குடந்தைக் கிடந்தானே! தாலேலோ! 50

கச்சொடு பொற்சுரிகை காம்பு கனகவளை
உச்சி மணிச்சுட்டி ஒண்தாள் நிரைப் பொற்பூ
அச்சுதனுக்கு என்று அவனியாள் போத்தந்தாள்,
நச்சுமுலை உண்டாய் தாலேலோ!
நாராயணா! அழேல், தாலேலோ! 51

மெய் திமிரும் நானப் பொடியொடு மஞ்சளும்
செய்ய தடங்கண்ணுக்கு அஞ்சனமும் சிந்துரமும்
வெய்ய கலைப்பாகி கொண்டு உவளாய் நின்றாள்,
ஐயா! அழேல் அழேல், தாலேலோ!
அரங்கத்து அணையானே! தாலேலோ! 52





வலம்புரிச் சங்கு, திருவடிக் கேற்ற சதங்கை, அழகிய கரங்களுக்கேற்ற முன்கை வளையல்கள், தோள் வளைகள், தங்கமாலை, அரைநாண் ஆகியவற்றை அகன்ற மேல் உலகில் வாழும் தேவர்கள் கொடுத்துள்ளார்கள். சிவந்த கண்ணுடைய கருமேகம் போன்றவனே! தாலேலோ! தேவகியின் பிள்ளையாய்ப் பிறந்த சிங்கக் குட்டியே! தாலேலோ. 47

அழகு மேலோங்கும் உன் மார்பிற்குப் பொருந்தும் அழகான ஐம்படை ஆபரணத்தையும் முத்து வடத்தையும் குற்றமற்ற கொடையாளி குபேரன் கொண்டு வந்து தொழுதபடி நின்றான். தூய நீலமணி போன்ற நிறமுடைய கண்ணனே! தாலேலோ. 48

அலை கடலில் உண்டான ஒளியுள்ள முத்துக்களால் கோக்கப்பட்ட மாலையையும் ஜாதிப் பவளத்தால் ஆன வடத்தையும் முன்கை வளைகள், தோள் வளைகளையும் வருணதேவன், விலையில் சிறந்தவை என்று கருதிக் கொடுத்துள்ளான். கிரீடத்தையும் அழகிய தோள்களையும் உடையவனே! தாலேலோ. 49

தேன் நிறைந்த பூவில் வாழும் மஹாலக்ஷ்மி, மணம் மிகுந்த திருத்துழாயாலே கைவேலை தோன்றத்தொடுக்கப்பட்ட மாலையையும் கற்பகப் பூக்களாலான திருநெற்றி மாலையையும் கொடுத்துள்ளாள். நெற்றி மாலை ஆகாயம் நிறையும்படி சோலை போன்றுள்ளது. திருக்குடந்தையில் கண் வளரும் அரசனே! நீ அழாதே! அழாதே! தாலேலோ. 50

பூமிப்பிராட்டி அச்சுதனாகிய உனக்கென்றே, அரைக்கச்சு, ஒளி கூடிய உடைவாள், சிறிய கீற்றுக்களையுடைய சேலை, தங்கத் தோள்வளை, மணிபதித்த நெற்றிச் சுற்றி, தண்டுடன் கூடிய பொன்பூ ஆகியவற்றைக் கொடுத்துள்ளாள். பூதனையின் நஞ்சு மார்பைச் சுவைத்த நாராயணா! நீ அழாதே! அழாதே! தாலோலோ. 51

ஆண்மானை வாகனமாகப் பெற்ற காளிதேவி உன் திருமேனியின் மென்மைக்கு ஏற்ற மணப்பொடி, சிவந்த கண்களுக் கேற்ற கருப்புமை, சிந்தூரப்பொடி ஆகியவற்றை மகிழ்ச்சியுடன் கொண்டு வந்துள்ளாள். திருவரங்கத்தில் பள்ளி கொண்டருளும் பரமனே! நீ அழாதே! அழாதே! தாலேலோ. 52

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலை உண்ட
அஞ்சன வண்ணனை ஆய்ச்சி தாலாட்டிய
செஞ்சொல் மறையவர் சேர் புதுவைப் பட்டன் சொல்
எஞ்சாமை வல்லவர்க்கு இல்லை இடர்தானே. 53

## சந்திரனைக் கூப்பிடுதல் – (அம்புலிப் பருவம்)

தன்முகத்துச் சுட்டி தூங்கத் தூங்கத்
தவழ்ந்து போய்ப்
பொன்முகக் கிண்கிணி ஆர்ப்பப் புழுதி
அளைகின்றான்;
என்மகன் கோவிந்தன் கூத்தினை இள
மா மதீ!
நின்முகம் கண்ணுள ஆகில், நீ இங்கே
நோக்கிப் போ. 54

என் சிறுக்குட்டன் எனக்கு ஓர் இன்னமுது
எம்பிரான்
தன் சிறுக்கைகளால் காட்டிக் காட்டி
அழைக்கின்றான்;
அஞ்சன வண்ணனோடு ஆடல்ஆட
உறுதியேல்,
மஞ்சில் மறையாதே, மா மதீ! மகிழ்ந்து
ஓடி வா. 55

சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி
பரந்து எங்கும்
எத்தனை செய்யிலும் என்மகன் முகம்
நேரொவ்வாய்;
வித்தகன் வேங்கட வாணன் உன்னை
விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே, அம்புலீ! கடிது
ஓடி வா. 56

சக்கரக் கையன் தடங்கண்ணால் மலர
விழித்து
ஒக்கலைமேல் இருந்து உன்னையே சுட்டிக்
காட்டும், காண்;
தக்கது அறிதியேல், சந்திரா! சலம்
செய்யாதே;
மக்கட் பெறாத மலடன் அல்லையேல்,
வா, கண்டாய். 57





வஞ்சனையாக வந்த பூதனைப் பேயின் முலைப்பால் அருந்திய, கருமை நிறம் கொண்ட கண்ணனை, யசோதை, தாலாட்டியதாகப் பெரியாழ்வார் பாடி உள்ளார். செஞ்சொல் வேதத்தை ஓதுபவர்கள் வாழ்கிற ஸ்ரீவில்லிபுத்தூரிலே தோன்றிய பட்டர்பிரான் பாடியுள்ள இப்பாசுரங்களைக் குறைவில்லாமல் பயில வல்லவர்களுக்கு ஒரு பொழுதும் துன்பம் இல்லை. 53

## சந்திரனைக் கூப்பிடுதல் – (அம்புலிப் பருவம்)

என் மகன் கோவிந்தன் தெருப்புழுதியை அளையத்தவழ்ந்து போகிற பொழுது, திருமுகத்துச் சுட்டி அங்குமிங்கும் அசைய, திருவடிக் கிண்கிணிகள் ஒலிக்கின்றன. இளமை பொருந்திய சந்திரனே! உன் முகத்தில் கண்கள் இருந்தால், இப்பிள்ளையின் அழகிய கூத்தைக் காண்பாய். 54

என்னுடைய இந்தக் குட்டிப்பையன் எனக்கு ஒப்பற்ற அமுதம் போன்று இனியவன்; அவன் தன்னுடைய சிறிய கைகளால் பலகாலும் உன்னையே சுட்டிச்சுட்டி அழைக்கிறான். உயர்ந்த சந்திரனே! கருமையான வடிவுடைய இப்பிள்ளையுடன் நீ விளையாட விரும்பினால், மகிழ்ச்சியுடன் ஓடி வா. 55

சந்திரனே! நீ உன் ஒளியால் நான்கு புறங்களிலும் பரந்து வீசுகிறாய்; என்றாலும் என் குழந்தை கண்ணனின் திருமுக மண்டலத்துக்கு ஒரு பொழுதும் ஒப்பாக மாட்டாய். திருவேங்கட மலையில் எழுந்தருளியுள்ள அவன் உன்னை விரும்பிச் சுட்டி அழைக்கிற கைத்தலங்கள் நோவாதபடி மிகவும் வேகமாக ஓடிவா. 56

சந்திரனே! தன் கையிலே சக்கரம் ஏந்திய இவன், அகன்ற கண்களால் உன்னையே மலரமலரப் பார்க்கிறான். என் இடுப்பில் அமர்ந்தபடி, இக்குழந்தை உன்னைச் சுட்டிக் காட்டுகிறான். தக்கது இது என்று அறிந்தாயாகில், நீ கபடம் காட்டாமல் வெறுப்பின்றி உடனே வா. நீ என்ன பிள்ளை பெறாத மலடனா? இல்லையே! ஆகில் உடனே வா. 57

அழகிய வாயில் அமுத ஊறல்
தெளிவுறா
மழலை முற்றாத இளஞ்சொல்லால் உன்னைக்
கூவுகின்றான்;
குழகன் சிரீதரன் கூவக் கூவ நீ
போதியேல்,
புழையில ஆகாதே நின்செவி, புகர்
மா மதீ! 58

தண்டொடு சக்கரம் சார்ங்கம் ஏந்தும்
தடக்கையன்
கண் துயில்கொள்ளக் கருதிக் கொட்டாவி
கொள்கின்றான்;
உண்ட முலைப்பால் அறா கண்டாய் உறங்
காவிடில்,
விண்தனில் மன்னிய மா மதீ! விரைந்து
ஓடி வா. 59

பாலகன் என்று பரிபவம் செய்யேல்,
பண்டு ஒரு நாள்
ஆலின் இலை வளர்ந்த சிறுக்கன்
அவன் இவன்;
மேல் எழப் பாய்ந்து பிடித்துக் கொள்ளும்
வெகுளுமேல்,
மாலை மதியாதே, மா மதீ! மகிழ்ந்து
ஓடி வா. 60

சிறியன் என்று என் இளஞ் சிங்கத்தை இகழ்-
மேல் கண்டாய்,
சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச்
சென்று கேள்;
சிறுமைப் பிழை கொள்ளில் நீயும் உன் தேவைக்கு
உரியை காண்;
நிறைமதீ! நெடுமால் விரைந்து உன்னைக்
கூவுகின்றான். 61

தாழியில் வெண்ணெய் தடங்கை ஆர
விழுங்கிய
பேழை வயிற்று எம்பிரான் கண்டாய், உன்னைக்
கூவுகின்றான்;
ஆழிகொண்டு உன்னை எறியும், ஐயுறவு
இல்லை காண்,
வாழ உறுதியேல், மா மதீ! மகிழ்ந்து
ஓடி வா. 62





*சந்திரனே! அழகான வாயில் அமுதம் போல் உமிழ்நீர் வழியக் கண்ணன் தெளிவில்லாத மழலைச் சொற்களாலே, உன்னை அழைக்கிறான். எல்லோருடனும் கூடி மகிழ்கிறவனும், பெரிய பிராட்டியாரைத் தன் திருமார்பில் கொண்டவனும் ஆகிய இவன் உன்னைப் பலகாலும் அழைத்துப் பேசுவதைக் கேள். உன் காதுகளில் துளைகள் இல்லையா? இவன் பேச்சை நீ கேட்காவிட்டால், உன் ஒளிக்கும் பெருமைக்கும் பொருத்த மாகுமோ?* 58

*கௌமோதகி என்னும் கதையுடனும், சக்கரத்துடனும் சார்ங்கம் என்னும் வில்லுடனும் விளங்கும் கண்ணன், தூங்குவதாக எண்ணிக் கொட்டாவி விடுகின்றான். ஆகாயத்தில் பொருந்துகிற சந்திரனே! இவன் தூங்காவிட்டால் தான் அருந்திய தாய்ப்பால் செரிக்காது. ஆகவே, நீ இவன் தூங்குவதற்காக விரைவில் ஓடி வா.* 59

*பெரிய சந்திரனே!'மிகச் சிறிய குழந்தைதானே' என்று நீ இவனை அலட்சியம் செய்யாதே; பிரளய காலத்தில் இவன்தான், குழந்தை வடிவில் ஆலந்தளிரில் பள்ளி கொண்டு திருக்கண் வளர்ந்தவன். இவன் கோபம் கொண்டால், மேலே குதித்து உன்னைப் பிடித்துக் கொள்வான். ஆதலால் மஹாபுருஷனான இத்திருமாலைச் சிறியவன் என்று அலட்சியம் செய்யாமல் மகிழ்ச்சியுடன் உடனே ஓடிவா.* 60

*நிறைந்த சந்திரனே! சிங்கக் குட்டி போல் இருக்கும் இந்தப் பிள்ளையைச் சிறியவன் என்று அவமதிக்காதே. இவனுடைய குழந்தைப் பருவத்தை நீ அறிய வேண்டுமாகில், மகாபலிச் சக்கரவர்த்தியிடம் சென்று கேட்க வேண்டும். இவனைச் சிறியவனாக எண்ணும் உன் பிழையை நீ உணர்ந்தால், இவனிடத்தே அடிமை செய்யும் உரிமையைப் பெறுவாய். யாவர்க்கும் தலைவனான இவன், அதிக ஆவலுடன் உன்னை அழைக்கிறான்.* 61

*மாமதீ! பானையிலே சேர்த்த வெண்ணெய்யைத் தன் கைகளில் நிறைய அள்ளி உண்ட பருத்தவயிற்றை உடைய கண்ணன் எங்கள் குலப் பெருமான் ஆவான். உன்னை இவன் அழைத்தும் நீ வராவிட்டால், தன் சக்கரத்தை ஏவி உன் தலையை அறுத்து விடுவான். இதில் ஐயம் இல்லை. வாழ நீ விரும்பினால், கண்ணனிடத்தே அன்பு கொண்டு உடனே ஓடிவா.* 62

மைத்தடங் கண்ணி யசோதை தன்மகனுக்கு இவை
ஒத்தன சொல்லி உரைத்த மாற்றம் ஒளிபுத்தூர்
வித்தகன் விட்டுசித்தன் விரித்த தமிழ் இவை
எத்தனையும் சொல்ல வல்லவர்க்கு இடர் இல்லையே. 63

### முகம் அசைத்து ஆடுதல் – (செங்கீரைப் பருவம்)

உய்ய உலகு படைத்து உண்ட மணிவயிறா!
ஊழிதொறு ஊழி பல ஆலின் இலையதன்மேல்
பைய உயோகு - துயில் கொண்ட பரம்பரனே!
பங்கய நீள்நயனத்து அஞ்சன மேனியனே!
செய்யவள் நின் அகலம் சேமம் எனக் கருதி;
செல்வு பொலி மகரக் காது திகழ்ந்து இலக,
ஐய! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 64

கோளரியின் உருவங் கொண்டு அவுணன் உடலம்
குருதி குழம்பி எழ,கூர்உகிரால் குடைவாய்
மீள அவன்மகனை மெய்ம்மை கொளக் கருதி;
மேலை அமரர்பதி மிக்கு வெகுண்டு வரக்
காள நன் மேகமவை கல்லொடு கால் பொழியக்
கருதி வரை குடையாக் காலிகள் காப்பவனே!
ஆள! எனக்கு ஒரு கால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 65

நம்முடை நாயகனே! நான்மறையின் பொருளே!
நாவியுள் நற்கமல நான்முகனுக்கு ஒருகால்
தம்மனை ஆனவனே! தரணி தலமுழுதும்
தாரகையின் உலகும் தடவி அதன் புறமும்
விம்ம வளர்ந்தவனே! வேழமும் ஏழ் விடையும்
விரவிய வேலைதனுள் வென்று வருபவனே!
அம்ம! எனக்கு ஒரு கால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 66

வானவர்தாம் மகிழ, வன் சகடம் உருள,
வஞ்ச முலைப்பேயின் நஞ்சம் அது உண்டவனே!
கானக வல் விளவின் காய் உதிரக் கருதிக்
கன்றுஅது கொண்டு எறியும் கருநிற என்கன்றே!
தேனுகனும் முரனும் திண்திறல் வெந்நரகன்
என்பவர் தாம் மடியச் செரு அதிரச் செல்லும்
ஆனை; எனக்கு ஒரு கால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 67





கறுத்தகன்ற கண்களை உடைய யசோதை தன் மகனுக்காகச் சந்திரனை அழைத்ததை வில்லிபுத்தூர் வித்தகர் பெரியாழ்வார் இப்பாசுரங்களாக அருளினார். இத்தமிழ்ப் பாசுரங்கள் பத்தினையும் ஏதாவது ஒரு முறையில் சொல்ல வல்லவர்களுக்குத் துன்பம் வராது. 63

### முகம் அசைத்து ஆடுதல் – (செங்கீரைப் பருவம்)

ஆத்மாக்கள் உய்வுக்காக உலகுகளை உண்டாக்கி, விழுங்கிய வயிற்றோனே! ஒவ்வொரு கல்ப காலத்திலும் ஆலிலையில் யோக நித்திரை செய்யும் பரம்பரனே! தாமரைக் கண்களையும் மைநிற மேனியையும் உடையவனே! திருமகள் தங்கும் உன் மார்பு காவல் உற, செல்வம் விளங்கும் மகர குண்டலக் காதுகள் ஒளிவிட, நீ எனக்கு ஒரு தடவை செங்கீரை ஆடு. ஐயனே! ஆயர்கள் போர்க் காளையே நீ ஆடு. 64

இரணியன் புதல்வனை மெய்யன் எனக் காட்ட நரசிம்மமாகத் தோன்றி அவ்வசுரன் உடலை நகங்களால் கிழித்து இரத்தம் குமுறக் கொன்றாயே! தேவேந்திரன் சினந்து மேகங்களை ஏவிக் கல் மழை பெய்யச் செய்த பொழுது, நீ மலையைக் குடையாக்கிப் பசுக்களைக் காத்தாயே! ஆயர்கள் போர்க்காளையே! செங்கீரை ஆடுக. 65

நம் தலைவா! நால்வேதப் பொருளே! உன் கொப்பூழ்த் தாமரையில் பிறந்த நான்முகனுக்குத் தாய் ஆனவா! பூமி முழுவதும் நட்சத்திரம் நிலவும் ஆகாயம் வரை கால்களைப் பரப்பி வளர்ந்த திரிவிக்கிரமனே! குவலயாபீட யானையையும் ஏழுகாளைகளையும் மோதி வென்ற தலைவா! ஆயர்கள் போர்க்காளையே! செங்கீரை ஆடு. 66

தேவர்கள் மகிழ, வலிய சகடாசுரன் உருண்டு மாள, வஞ்சனைப் பூதனையின் மார்பு நஞ்சை அமுதாகக் குடித்தவனே! காட்டிலே வலிய விளாமரத்தின் காய்களை உதிரச் செய்யக் கன்றுக் குட்டியை எறிந்து அவ்வசுரர்களைக் கொன்றாய்; என்றாலும் எங்களுக்கோ நீ கன்றுதான். தேனுகன்,முரன், நரகன் எனும் அசுரர்களை அழித்த போர் யானையே! ஆயர்கள் போர்க் காளையே! நீ எனக்காகச் செங்கீரை ஆடு. 67

மத்து அளவுந் தயிரும் வார்குழல் நன்மடவார்
வைத்தன நெய் களவால் வாரி விழுங்கி ஒருங்கு
ஒத்த இணைமருதம் உன்னிய வந்தவரை
ஊரு கரத்தினொடும் உந்திய வெந்திறலோய்!
முத்தின் இளமுறுவல் முற்ற வருவதன்முன்
முன்ன முகத்து அணிஆர் மொய்குழல்கள் அலைய,
அத்த! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 68

காய மலர்நிறவா! கருமுகில் போல் உருவா!
கானக மா மடுவிற் காளியன் உச்சியிலே
தூய நடம் பயிலும் சுந்தர! என்சிறுவா!
துங்க மதக்கரியின் கொம்பு பறித்தவனே!
ஆயம் அறிந்து பொருவான் எதிர்வந்த மல்லை
அந்தரம் இன்றி, அழித்து ஆடிய தாளிணையாய்!
ஆய! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 69

துப்பு உடை ஆயர்கள்தம் சொல் வழுவாது ஒருகால்
தூய கருங்குழல் நல் தோகைமயில் அனைய
நப்பினைதன் திறமா நல் விடை ஏழ் அவிய
நல்ல திறல் உடைய நாதனும் ஆனவனே!
தப்பின பிள்ளைகளைத் தனமிகு சோதிபுகத்
தனிஒரு தேர் கடவித் தாயொடு கூட்டியஎன்
அப்ப! எனக்கு ஒருகால், ஆடுக செங்கீரை,
ஆயர்கள் போரேறே! ஆடுக, ஆடுகவே. 70

உன்னையும் ஒக்கலையிற் கொண்டு தம்இல் மருவி
உன்னொடு தங்கள் கருத்து ஆயின செய்து வரும்
கன்னியரும் மகிழ, கண்டவர் கண்குளிர,
கற்றவர் தெற்றிவர, பெற்ற எனக்கு அருளி
மன்னு குறுங்குடியாய்! வெள்ளறையாய்! மதில்சூழ்
சோலைமலைக்கு அரசே! கண்ணபுரத்து அமுதே!
என் அவலம் களைவாய்! ஆடுக, செங்கீரை.
ஏழ்உலகும் உடையாய்! ஆடுக, ஆடுகவே. 71

பாலொடு நெய் தயிர் ஒண் சாந்தொடு சண்பகமும்
பங்கயம் நல்ல கருப்பூரமும் நாறி வர,
கோல நறும்பவளச் செந்துவர் வாயினிடைக்
கோமள வெள்ளிமுளை போல் சிலபல் இலக,
நீலநிறத்து அழகார் ஐம்படையின் நடுவே
நின் கனிவாய் அமுதம் இற்று முறிந்து விழ,
ஏலும் மறைப்பொருளே! ஆடுக செங்கீரை,
ஏழ்உலகும் உடையாய்! ஆடுக, ஆடுகவே. 72





*நீண்ட கூந்தலும் மடப்பகுணமும் உடைய நல்ல இடைச்சிகள் மத்தாலே கடைந்த தயிரையும் நெய்யையும் உன் கைகளாலே வாரி உண்டாய். இணை மருத மரங்களாய் நின்ற அசுரர்களைக் கொன்றவனே! உன் முத்துப் பற்களின் புன் முறுவல் தோன்றும் முன்னேயே, முன்முக மயிர் தாழ்ந்து விழ நீ ஒரு தடவை செங்கீரை ஆட வேண்டும். ஆயர்கள் போர்க்காளையே! ஆடுக!* **68**

*காயாம்பூ நிறத்தவனே! நீல மேக உருவத்தாய்! காட்டில் பெரிய மடுவில் காளிங்கன் தலையிலே நடனம் செய்த அழகனே! என் மகனே! மதம் மிகுந்த குவலயாபீட யானையின் கொம்புகளைப் பறித்தவனே! மற்போர் வகை தெரிந்து வந்த மல்லர்களை உனக்கு ஆபத்தின்றி அழித்துக் கூத்தாடிய ஆயனே! ஆயர்கள் போர்க்காளையே! செங்கீரை ஆடு.* **69**

*கறுத்த கூந்தலை உடைய மயில் போன்ற நப்பின்னையைப் பெற, மிடுக்குடைய இடையர்கள் சொல் தவறாமல் ஏழு காளைகளை அழித்த வல்லவனே! ஒளி மயமான பரம பதத்துக்கே உன் தேரைச் செலுத்தி, கை தப்பிப்போன வைதிகன் பிள்ளைகளை மீட்டுத் தாயுடன் கூட்டிய என் அப்பனே! இடையர்கள் போர்க்காளையே! செங்கீரை ஆடு.* **70**

*திருக்குறுங்குடி, திருவெள்ளறைத் தலங்களிலே எழுந்தருளியவனே! மதின் சூழ்ந்த திருமாலிருஞ் சோலை அரசனே! திருக்கண்ணபுரத்தில் அமுதாக உள்ளவனே; என் துன்பத்தை நீக்குபவனே! கன்னியர்கள் உன்னை இடுப்பில் தூக்கிக் கொஞ்சவும் காண்பவர்கள் கண்குளிரவும், கற்றவர்கள் பிள்ளைக் கவி பாடவும், உன்னை மகனாகப் பெற்றேன். ஏழுலகங்களுக்கும் தலைவனே! செங்கீரை ஆடுக! ஆடுக!* **71**

*ஆடிவரும் உன் அசைவிலே, பால், தயிர், நெய் வாசனையும் சந்தனம், செண்பகப் பூ, தாமரை, கற்பூரம் இவற்றின் மணமும் கலந்து வீசுகின்றன. உன் பவள வாயினுள்ளே வெள்ளி முளைத்தது போல, சில முத்துப் பற்கள் விளங்குகின்றன. நீல நிற மார்பில் ஐம்படைகள் நடுவே, கனி போன்ற உன் வாய்ச்சொல் உமிழ்நீர் அமுதமாக இற்று விழுகிறது. வேதப்பொருளே!ஏழுலக நாயகனே! நீ செங்கீரை ஆடி அருள வேண்டும்.* **72**

செங்கமலக் கழலில் சிற்றிதழ் போல் விரலிற்
சேர் திகழ் ஆழிகளும் கிண்கிணியும், அரையிற்
தங்கிய பொன்வடமும் தாள நன் மாதுளையின்
பூவொடு பொன்மணியும், மோதிரமும் கிறியும்
மங்கல ஐம்படையும் தோள்வளையும் குழையும்
மகரமும் வாளிகளும் சுட்டியும் ஒத்து இலக,
எங்கள் குடிக்கு அரசே! ஆடுக செங்கீரை,
ஏழ்உலகும் உடையாய்! ஆடுக, ஆடுகவே. 73

அன்னமும் மீன் உருவும் ஆளரியும் குறளும்
ஆமையும் ஆனவனே! ஆயர்கள் நாயகனே!
என்அவலம் களைவாய்! ஆடுக செங்கீரை
ஏழ் உலகும் உடையாய்! ஆடுக, ஆடுக என்று
அன்னநடை மடவாள் அசோதை உகந்த பரிசு
ஆன புகழ்ப் புதுவைப் பட்டன் உரைத்த தமிழ்
இன்னிசை மாலைகள் இப் பத்தும் வல்லார் உலகில்
எண்திசையும் புகழ் மிக்கு இன்பம் அது எய்துவரே. 74

கைகொட்டி விளையாடுதல் – (சப்பாணிப் பருவம்)

மாணிக்கக் கிண்கிணி ஆர்ப்ப, மருங்கின் மேல்
ஆணிப் பொன்னாற் செய்த ஆய்பொன் உடை மணி
பேணி, பவளவாய் முத்து இலங்க, பண்டு
தாணி கொண்ட கைகளால் சப்பாணி,
சுருங்குழற் குட்டனே! சப்பாணி. 75

பொன்-அரைநாணொடு மாணிக்கக் கிண்கிணி
தன் அரை ஆட, தனிச் சுட்டி தாழ்ந்து ஆட,
என் அரை மேல்நின்று இழிந்து உங்கள் ஆயர்தம்
மன் அரைமேல் கொட்டாய் சப்பாணி,
மாயவனே! கொட்டாய் சப்பாணி. 76

பல்மணி முத்து இன்பவளம் பதித்தன்ன
என்மணிவண்ணன் இலங்கு பொன் தோட்டின் மேல்
நின்மணிவாய் முத்து இலங்க, நின் அம்மைதன்
அம்மணி மேல் கொட்டாய் சப்பாணி,
ஆழியங் கையனே! சப்பாணி. 77

தூ நிலாமுற்றத்தே போந்து விளையாட
வான் நிலா அம்புலீ! சந்திரா! வா என்று
நீ நிலா, நின் புகழாநின்ற ஆயர்தம்
கோ நிலாவு, கொட்டாய் சப்பாணி,
குடந்தைக் கிடந்தானே! சப்பாணி. 78





உன் பாதம் செந்தாமரைப் பூப்போன்றது. அதிலுள்ள விரல்களோ பூவின் உள்ளிதழ் போன்றவை; அவ்விரல்களில் உள்ள மோதிரங்களும் சதங்கையும், அரை நாணும், பொன் மாதுளம் பூக்கோவையும், கைவிரல் மோதிரமும், பவள வடமும் ஐம்படை ஆரமும் தோள் வளைகளும், காதுக்குண்டலங்களும், வாளிகளும் நெற்றிச் சுட்டியும் அழகுடன் விளங்குகின்றன. எங்கள் குடிக்கு அரசே; நீ செங்கீரை ஆடு. 73

“அன்னம், மீன், நரசிம்மன், வாமனன், ஆமை ஆக அவதரித்தவனே! என் இடர் நீக்கிய ஆயர் தலைவா! நீ செங்கீரை ஆடு” என்று அன்ன நடை யசோதை விரும்பி வேண்டியதைப் புதுவைப் பட்டர் பிரான் இன்தமிழ்ப் பாசுரங்களில் அருளினார். இப்பத்தையும் ஓதவல்லவர், உலகில் எண்திசைகளிலும் புகழும் இன்பமும் பெறுவார்கள். 74

கைகொட்டி விளையாடுதல் – (சப்பாணிப் பருவம்)

ஆணிப்பொன்னால் ஆன குறையில்லா அரைவடம் கட்டிய உன் இடுப்பில் மாணிக்கச் சதங்கை ஒலிக்கிறது. பவள வாயில் முத்துப் பற்கள் ஒளி விடுகின்றன. கறுத்த குழலுடைய பிள்ளையே! மாவலி இடத்தே பூமியை வாங்கிய உன் கைகளால் சப்பாணி கொட்டு. 75

மாயவனே! உன் இடையில் பொன் அரை நாணின் மாணிக்கச் சதங்கை ஒலி எழுப்ப, ஒப்பற்ற நெற்றிச் சுட்டி தாழ்ந்தசைய, என் மடியினின்றும் இறங்கி உன் தந்தையான ஆயர் அரசர் நந்தகோபர் மடியில் ஏறி அமர்ந்து சப்பாணி கொட்டு. 76

என் மணிவண்ணா! உன் காதில் தங்கக் குண்டலங்கள் மாணிக்கம் முதலிய நவரத்தினங்களும் முத்துக்களும் பவளமும் அழுத்தப்பட்டவை. அவற்றின் ஒளிக்கும் மேலாக உன் வாயிலுள்ள முத்துப் பற்கள் பிரகாசிக்கின்றன. சக்கரத்தை ஏந்தியவனே! உனது தாயாகிய எனது மடியில் உட்கார்ந்து சப்பாணி கொட்டு. 77

“ஆகாயத்தில் உலாவும் அம்புலிச் சந்திரனே! நிலா முற்றத்தில் விளையாட வா” என்று அழைத்து உன் குறும்புகளைப் பாராட்டும், இடையர் தலைவரான நந்தகோபர் மகிழும்படி சப்பாணி கொட்டு. திருக்குடந்தையில் கண் வளர்ந்தருள்பவனே! நிதானமாய்ச் சப்பாணி கொட்டு. 78

புட்டியிற் சேறும் புழுதியும் கொண்டுவந்து
அட்டி அமுக்கி அகம் புக்கு, அறியாமே,
சட்டித் தயிரும் தடாவினில் வெண்ணெயும் உண்
பட்டிக் கன்றே! கொட்டாய் சப்பாணி,
பற்பநாபா! கொட்டாய் சப்பாணி. 79

தாரித்து நூற்றுவர் தந்தை சொல் கொள்ளாது
போர் உய்த்து வந்து புகுந்தவர் மண் ஆளப்
பாரித்த மன்னர் படப் பஞ்சவர்க்கு அன்று
தேர் உய்த்த கைகளால் சப்பாணி,
தேவகி சிங்கமே! சப்பாணி. 80

பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை
இரந்திட்ட கைம்மேல் எறிதிரை மோதக்
கரந்திட்டு நின்ற கடலைக் கலங்கச்
சரந் தொட்ட கைகளால் சப்பாணி,
சார்ங்க விற் கையனே! சப்பாணி. 81

குரக்கு இனத்தாலே குரைகடல்தன்னை
நெருக்கி அணை கட்டி நீள்நீர் இலங்கை
அரக்கர் அவிய அடு கணையாலே
நெருக்கிய கைகளால் சப்பாணி,
நேமியங் கையனே! சப்பாணி. 82

அளந்து இட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே
வளர்ந்திட்டு வாள் உகிர்ச் சிங்க உருவாய்
உளந் தொட்டு, இரணியன் ஒண்மார்வு அகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி,
பேய் முலை உண்டானே! சப்பாணி. 83

அடைந்திட்டு அமரர்கள் ஆழ்கடல்தன்னை
மிடைந்திட்டு, மந்தரம் மத்தாக நாட்டி
வடம் சுற்றி, வாசுகி வன்கயிறு ஆகக்
கடைந்திட்ட கைகளால் சப்பாணி,
கார்முகில் வண்ணனே! சப்பாணி. 84

ஆட்கொள்ளத் தோன்றிய ஆயர்தம் கோவினை
நாட்கமழ் பூம்பொழில் வில்லிபுத்தூர்ப் பட்டன்
வேட்கையால் சொன்ன சப்பாணி ஈரைந்தும்
வேட்கையினால் சொல்லுவார் வினை போமே. 85





*பட்டி மேயும் கன்றேபோல் திருட்டு வாழ்வில் திரிபவனே! உன் அரையில் சேற்றையும் புழுதியையும் பூசிக் கொண்டு வந்து என்னை அமுக்கி என் மேலும் பூசுகிறாய். ஒளிந்தபடி வீட்டுக்குள் புகுந்து சட்டித்தயிரையும் தாழி வெண்ணெயையும் விழுங்குகிறாய். பற்பநாபா! நீ சப்பாணி கொட்டாய்.* 79

*பூமி முழுவதும் தாமே ஆள ஆசை கொண்ட நூறு பேரும் உலகத் தந்தையான உன்சொல் கேளாமல் போர் செய்யவும், அவர்களை மாளச் செய்தாய். பஞ்ச பாண்டவர்க்குத் தேரோட்டிய உன் கைகளால் சப்பாணி கொட்டு. தேவகி சிங்கமே சப்பாணி கொட்டு.* 80

*ஸ்ரீ சார்ங்கம் என்னும் வில்லைக் கையில் தாங்கியவனே! ஆழ்ந்தகன்ற கடலிடத்தே நீ சரணாகதி செய்தும் கடலரசன் தன் முகம் காட்டாமல் அலைத்திவலைகளை உன் கைகள் மேல் வீசவும் அவன் கலங்கும்படி அம்புகளை ஏவின கைகளால் சப்பாணி கொட்டு.* 81

*சக்கரக்கையனே! குரங்குக் கூட்டத்தாலே, ஒலிகடலின் நடுவே நெருக்கி அணைகட்டி, கடல்சூழ்ந்த இலங்கை சென்று அரக்கரழிய, அம்புகளால் நெருக்கிப் போர் செய்தாய். அத்திருக்கரங்களால் இப்போது சப்பாணி கொட்டு.* 82

*தானே அளந்து நட்ட தூணை இரணியன் சீறி உதைத்ததும் கத்தி போன்ற நகங்களுடன் நரசிம்மமாய் நீ பெரிய உருவம் எடுத்தாய். அவன் இதயத்தைச் சோதித்தபின் அகன்ற மார்பைக் கிழித்த கைகளால் சப்பாணி கொட்டு. பூதனையின் உயிரை மார்பின் ஊடே உண்டவனே! சப்பாணி கொட்டு.* 83

*அடைக்கலம் புகுந்த தேவர்களுக்காக, ஆழமான பாற்கடலில் மந்தர மலையை மத்தாக நிறுத்தி வாசுகிப் பாம்பைக் கயிறாகச் சுற்றிக் கடைந்து அமுதம் எடுத்த கைகளால் சப்பாணி கொட்டு. கரிய மேக நிறத்தானே! சப்பாணி கொட்டு.* 84

*எல்லோரையும் ஆட்கொள்ள ஆயர் தலைவனாய்த் தோன்றியவனை வாசனைப் பூஞ்சோலைகள் உள்ள வில்லிபுத்தூர் பட்டர்பிரான், சப்பாணி கொட்ட அழைத்த இப்பத்துப் பாசுரங்களை விருப்பமுடன் சொல்பவர்களின் துன்பங்கள் தொலையும்.* 85

## தளர்ந்து நடத்தல் – (தளர்நடைப் பருவம்)

தொடர் சங்கிலிகை சலார் - பிலார் என்னத்
  தூங்கு பொன்மணி ஒலிப்பப்
படு மும்மதப் புனல் சோர வாரணம்
  பைய நின்று ஊர்வது போல்,
உடன் கூடிக் கிண்கிணி ஆரவாரிப்ப
  உடை மணி பறை கறங்க
தடந் தாளிணை கொண்டு சார்ங்கபாணி
  தளர்நடை நடவானோ! 86

செக்கரிடை நுனிக்கொம்பில் தோன்றும்
  சிறுபிறை முளைப் போல
நக்க செந் துவர்வாய்த் திண்ணை மீதே
  நளிர் வெண்பல் முளை இலக,
அக்குவடம் உடுத்து ஆமைத்தாலி
  பூண்ட அனந்தசயனன்
தக்க மா மணிவண்ணன் வாசுதேவன்
  தளர்நடை நடவானோ! 87

மின்னுக் கொடியும் ஓர் வெண் திங்களும்
  சூழ் பரிவேடமுமாய்ப்
பின்னல் துலங்கும் அரசிலையும்
  பீதகச் சிற்றாடையொடும்,
மின்னில் பொலிந்த ஓர் கார்முகில் போலக்
  கழுத்தினிற் காறையொடும்,
தன்னில் பொலிந்த இருடிகேசன்
  தளர்நடை நடவானோ! 88

கன்னற் குடம் திறந்தால் ஒத்து ஊறிக்
  கணகண சிரித்து உவந்து
முன் வந்து நின்று முத்தம் தரும் என்
  முகில்வண்ணன் திருமார்வன்
தன்னைப் பெற்றேற்குத் தன்வாய் அமுதம்
  தந்து என்னைத் தளிர்ப்பிக்கின்றான்;
தன் எற்று மாற்றலர் தலைகள் மீதே
  தளர்நடை நடவானோ! 89





## தளர்ந்து நடத்தல் – (தளர்நடைப் பருவம்)

*ஓர் யானை மூன்று வகை மதங்களைப் பெருக விட்டுக் கொண்டு தன் காலில் இட்ட சங்கிலி 'சலார் பிலார்' என ஒலிக்கவும் பொன் கயிற்றில் தொங்குகிற மணி ஒலி உண்டாக்கவும் மெள்ள நடப்பது போலக் கண்ணன் நடவானோ? திருவடிச் சதங்கைகள் உரசி ஓசை எழுப்ப, அரையில் கட்டிய மணி ஒலிக்கத் தன் இணைத்திருவடிகளால் ஸ்ரீசார்ங்கபாணி நடவானோ?* 86

*கண்ணன் தன் சிவந்த மேட்டு வாயில், வெண்மையான முத்துப் பற்கள் தோன்றச் சிரிப்பது, செவ்வானத்தின் நடுவே நுனிக் கிளையில் பிறைச் சந்திரன் முளைத்துத் தோன்றுவது போல் உள்ளது. சங்குமணி வடத்தைத் தன் திருவரையிலே அணிந்துள்ளான்; கழுத்தில் ஆமைத்தாலி விளங்குகிறது; ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட நீல நிறத்தவனான வசுதேவர் திருமகன் தளர்நடை நடவானோ!* 87

*கண்ணன் திருவரையில் அணிந்துள்ள பொன் பின்னலும் அரசிலைக் கோவையும் பொன் நிறச் சிற்றாடையும் மின்னல் கொடியோடு சேர்ந்த வெண்மையான சந்திர மண்டலமும் அதைச் சூழ்ந்த ஒளிவட்டமும் போல அழகாயுள்ளன. கழுத்தில் அணிந்துள்ள 'காறை' என்னும் ஆபரணம், மேகத்தின் நடுவே ஒளி விடும் மின்னல் போல் உள்ளது. தன்னளவிலேயே ஒளி மிகுந்தவனாய்க் காண்பவர்களுடைய புலன்களைக் கவருகிற இருடீகேசன் தளர்நடை நடவானோ?* 88

*கணகணவென்று சிரித்து மகிழ்ந்தபடி என் முன்னே நின்று முத்தம் கொடுக்கும் கண்ணன் வாயிலிருந்து உமிழ்நீர் ஓடி வழிகிறது. இதனைப் பார்த்தால் கருப்பஞ் சாற்றுக் குடத்தின் ஓட்டை திறந்து அதன் வழியே ஓடும் சாறு போல உள்ளது. திருமகளை மார்பிலே உடைய மேகவண்ணனைப் பிள்ளையாகப் பெற்ற எனக்குத் தன் வாயமுதம் தந்து என்னைத் தழையச் செய்கிறான். தன்னை எதிர்க்கும் பகைவர்களுடைய தலைகள் மேல் இவன் தளர் நடவானோ?* 89

முன்நல் ஓர்வெள்ளிப் பெருமலைக் குட்டன்
மொடுமொடு விரைந்து ஓடப்
பின்னைத் தொடர்ந்தது ஓர் கருமலைக் குட்டன்
பெயர்ந்து அடியிடுவது போல்,
பன்னி உலகம் பரவி ஓவாப் புகழ்ப்
பலதேவன் என்னும்
தன்நம்பி ஓடப் பின் கூடச் செல்வான்
தளர்நடை நடவானோ! 90

ஒருகாலிற் சங்கு ஒரு காலிற் சக்கரம்
உள்ளடி பொறித்து அமைந்த
இரு காலுங் கொண்டு, அங்கு அங்கு எழுதினாற்போல்,
இலச்சினை படநடந்து,
பெருகாநின்ற இன்ப - வெள்ளத்தின்மேல்
பின்னையும் பெய்து பெய்து,
கரு கார்க் கடல்வண்ணன் காமர் தாதை
தளர்நடை நடவானோ! 91

படர் பங்கய மலர்வாய் நெகிழப்
பனி படு சிறுதுளி போல்
இடங் கொண்ட செவ்வாய் ஊறி ஊறி
இற்று இற்று வீழநின்று,
கடுஞ் சேக் கழுத்தின் மணிக்குரல் போல்
உடை மணி கணகணென,
தடந் தாளிணை கொண்டு சார்ங்கபாணி
தளர்நடை நடவானோ! 92

பக்கம் கருஞ் சிறுப்பாறை மீதே
அருவிகள் பகர்ந்தனைய
அக்குவடம் இழிந்து ஏறித் தாழ,
அணி அல்குல் புடை பெயர,
மக்கள் உலகினிற் பெய்து அறியா
மணிக் குழவி உருவின்
தக்க மா மணிவண்ணன் வாசுதேவன்
தளர்நடை நடவானோ! 93

வெண் புழுதி மேற் பெய்துகொண்டு அளைந்தது ஓர்
வேழத்தின் கருங்கன்று போல்
தெண் புழுதியாடி, திரிவிக்கிரமன்
சிறு புகர்பட வியர்த்து
ஒண் போது அலர்கமலச் சிறுக்கால் உறைத்து
ஒன்றும் நோவாமே
தண் போது கொண்ட தவிசின் மீதே
தளர்நடை நடவானோ! 94





உலகத்துயர்ந்தவர்கள் பாராட்டுகளுக்கும் எல்லை காண இயலாப் புகழுடைய பல தேவன் முன்னே ஓட, அவனைப் பிடிக்கக் கண்ணன் ஓடுகிறான். இவர்களின் ஓட்டம், மொடு மொடு வென்று முன்னே ஓடும் வெள்ளி மலைக் குட்டியைத் தொடர்ந்து கறுத்தமலைக் குட்டி ஓடுவது போல உள்ளது. இக்கண்ணன் தளர்நடை நடவானோ? 90

மன்மதனின் தந்தையான கடல் நிறக்கண்ணனின் ஓர் உள்ளங்காலில் சங்கும் இன்னோர் உள்ளங்காலில் சக்கரமும் ரேகைகளாகப் பொறித்தமைந்துள்ளன. இவ்விரு அடிகளாலும் அங்குமிங்கும் எழுதினாற் போல் படும்படி தளர்நடை நடவானோ? மகிழ்ச்சி வெள்ளம் பெருகும்படி பின்னும் தளர்நடை நடவானோ? 91

மலர்ந்த தாமரைப் பூவிலிருந்து குளிர்ந்த தேன் துளித்து விழுவது போலக் கண்ணனின் அகன்று சிவந்த வாயிலிருந்து உமிழ் நீர் ஊறி ஊறி முறிந்து விழுகிறது. அவன் அரையில் சாத்தியுள்ள மணி கணகணவென்று ஒலிப்பது, முரட்டுக்காளையின் கழுத்தில் உள்ள மணி ஓசை போல் கேட்கிறது. சார்ங்கபாணி தன் இணைத் திருவடிகளால் தளர் நடை நடவானோ? 92

கரிய மலைத் தாழ்வரையின் மேல் ஒளி வீச அருவிகள் விழுவது போல், கண்ணன் அரையில் அணிந்துள்ள சங்கு மணி வடம் தாழ்ந்துயர்ந்து தொங்கவும், தன் அழகான இடை, பக்கங்களில் அசைய நடக்கிறான். உலகக் குழந்தைகளுக் கெல்லாம் அப்பாற்பட்ட பேரழகுடைய நீலமணி நிற வாசுதேவன் தளர்நடை நடவானோ? 93

திரிவிக்கிரமனான கண்ணன், வெள்ளைப் புழுதியை மேலே பூசிக் கொண்டு அளைந்த கறுத்த யானைக்குட்டி போல் உள்ளான். அவன் உடம்பில் பூசிக் கொண்ட புழுதி, வியர்வைத் துளிகளால் நனைந்து கருமை கலந்த பொன்மை நிறத்துடன் தோன்றுகிறது. காலத்தே பூக்கும் தாமரை போன்ற தன் திருவடிகள் மிதித்த இடத்தில் ஒன்றும் நோகாதபடி, குளிர்ந்த பூக்கள் தூவியமெத்தையின் மேல் தளர்நடை நடவானோ? 94

திரை நீர்ச் சந்திர மண்டலம் போல்ச்
செங்கண்மால் கேசவன்தன்
திரு நீர் முகத்துத் துலங்கு சுட்டி
திகழ்ந்து எங்கும் புடைபெயர,
பெரு நீர்த் திரை எழு கங்கையிலும்
பெரியதோர் தீர்த்த பலம்
தரு நீர்ச் சிறுச்சண்ணம் துள்ளம் சோரத்
தளர்நடை நடவானோ! 95

ஆயர் குலத்தினில் வந்து தோன்றிய
அஞ்சன வண்ணன் தன்னைத்
தாயர் மகிழ ஒன்னார் தளரத்
தளர்நடை நடந்ததனை
வேயர் புகழ் விட்டுசித்தன் சீரால்
விரித்தன உரைக்கவல்லார்
மாயன் மணிவண்ணன் தாள் பணியும்
மக்களைப் பெறுவர்களே. 96

## அணைக்க அழைத்தல் – (அச்சோப் பருவம்)

பொன் இயல் கிண்கிணி சுட்டி புறங் கட்டித்
தன் இயல் ஓசை சலன் சலன் என்றிட
மின் இயல் மேகம் விரைந்து எதிர் வந்தாற்போல்
என் இடைக்கு ஓட்டரா, அச்சோ! அச்சோ!
எம்பெருமான் வாராய், அச்சோ! அச்சோ! 97

செங்கமலப் பூவில் தேன் உண்ணும் வண்டே போல்
பங்கிகள் வந்து உன் பவளவாய் மொய்ப்ப,
சங்கு வில் வாள் தண்டு சக்கரம் ஏந்திய
அங்கைகளாலே வந்து அச்சோ! அச்சோ!
ஆரத் தழுவாய் வந்து, அச்சோ! அச்சோ! 98

பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கைசெய்து,
நஞ்சு உமிழ் நாகம் கிடந்த நற் பொய்கை புக்கு,
அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டு அருள்செய்த
அஞ்சனவண்ணனே! அச்சோ!அச்சோ!
ஆயர் பெருமானே! அச்சோ! அச்சோ! 99

நாறிய சாந்தம் நமக்கு இறை நல்கு என்னத்
தேறி அவளும் திருவுடம்பிற் பூச,
ஊறிய கூனினை உள்ளே ஒடுங்க அன்று
ஏற உருவினாய்! அச்சோ! அச்சோ!
எம்பெருமான்! வாராய், அச்சோ! அச்சோ! 100





*அலைகடலில் தோன்றும் சந்திர மண்டலம் போல் சிவந்த கண்களை உடைய கேசவனின் திருமுகத்தில் விளங்கும் நெற்றிச்சுட்டி இரு புறமும் அசைந்தாடும். புண்ணியம் மிகுந்ததாய் அலை வீசுகிற கங்கையைக் காட்டிலும் ஒப்பற்ற புனித தீர்த்த பலத்தைக் கொண்ட சிறு நீரைச் சண்ணம் துளிதுளியாகச் சொட்டத் தளர் நடை நடவானோ?* 95

*இடைக்குலத்தில் தோன்றிய மைநிறக் கண்ணன் தாய்மார் மகிழவும் பகைவர்கள் ஒடுங்கவும் தளர் நடை நடந்தான். அந்நடையினை வேயர் குலம் புகழத்தக்க பெரியாழ்வார் சீர்மையுடன் விவரித்ததை ஓதுபவர்கள் மணிவண்ணன் திருவடிகளில் தொண்டு பூணும் மக்களைப் பெறுவர்.* 96

## அணைக்க அழைத்தல் – (அச்சோப் பருவம்)

*கண்ணா! தங்க அரைச் சதங்கை, பாதச் சதங்கை, நெற்றிச் சுட்டி ஆகியவற்றை அணிந்து, சதங்கை ஒலி 'சலன் சலன்' எனக் கேட்க மின்னலுடன் மேகம் முழங்கி வருவது போல ஓடி வந்து என்னை அணைத்துக்கொள். எம்பெருமானே! வந்து அணைத்துக்கொள்.* 97

*சுருண்ட உன் தலைமயிர் பவளவாய் உதட்டின் மீது விழுவது, செந்தாமரைப் பூவின் வண்டுகள் தேன்குடிக்க மொய்ப்பது போல் உள்ளது. சங்கு, வில், வாள், தண்டு, சக்கரம் ஆகியன ஏந்திய அழகிய கைகளாலே என்னை ஆரத்தழுவுவாய்; வந்து அணைத்துக்கொள்.* 98

*பாரதப்போரிலே பஞ்ச பாண்டவர்க்குத் தூதனாக உதவியவா! கொடிய பொய்கையிலே குதித்து, நஞ்சைக் கக்கிய காளியன் படத்தின் மேல் ஆடி, அடக்கி அருள் செய்த மை நிறக் கண்ணனே; இடைக்குல அரசே! வந்தென்னை அணைத்துக்கொள்.* 99

*"நமக்கு மணம் வீசும் சந்தனம் சிறிது தருவாயாக" என்று நீ கூனியிடத்தே கேட்ட பொழுது, அவளும் மனம் தேறி அதை உன் திருவுடம்பில் பூசவும் அவள் முதுகில் நிலவிய கூனலை ஒடுங்கச் செய்து கைகளால் நிமிர்த்தாயே! எங்கள் குல அரசே! வந்தென்னை அணைத்துக்கொள்.* 100

கழல் மன்னர் சூழக் கதிர் போல் விளங்கி
எழலுற்று மீண்டே இருந்து உன்னை நோக்கும்
கழலை பெரிது உடைத் துச்சோதனனை
அழல விழித்தானே! அச்சோ! அச்சோ!
ஆழி அங் கையனே! அச்சோ! அச்சோ! 101

போர் ஒக்கப் பண்ணி இப் பூமிப்பொறை தீர்ப்பான்
தேர் ஒக்க ஊர்ந்தாய் செழுந்தார் விசயற்காய்;
கார் ஒக்கு மேனிக் கரும் பெருங் கண்ணனே!
ஆரத் தழுவாய் வந்து, அச்சோ! அச்சோ!
ஆயர்கள் போரேறே! அச்சோ! அச்சோ! 102

மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில்
தக்கது இது அன்று என்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய
சக்கரக் கையனே! அச்சோ! அச்சோ!
சங்கம் இடத்தானே! அச்சோ! அச்சோ! 103

என்ன இது மாயம்? என் அப்பன் அறிந்திலன்;
முன்னைய வண்ணமே கொண்டு அளவாய் என்ன,
மன்னு நமுசியை வானில் சுழற்றிய
மின்னு முடியனே! அச்சோ! அச்சோ!
வேங்கடவாணனே! அச்சோ! அச்சோ! 104

கண்ட கடலும் மலையும் உலகு ஏழும்
முண்டத்துக்கு ஆற்றா, முகில்வண்ணா! ஓ! என்று
இண்டைச் சடைமுடி ஈசன் இரக்கொள்ள,
மண்டை நிறைத்தானே! அச்சோ! அச்சோ!
மார்வில் மறுவனே! அச்சோ! அச்சோ! 105

துன்னிய பேரிருள் சூழ்ந்து உலகை மூட
மன்னிய நான்மறை முற்றும் மறைந்திடப்
பின் இவ் உலகினில் பேரிருள் நீங்க அன்று
அன்னமது ஆனானே! அச்சோ! அச்சோ!
அருமறை தந்தானே! அச்சோ! அச்சோ! 106





திருச்சக்கரத்தைக் கையில் ஏந்தியவனே; வீரக் கழல் அணிந்த அரசர்கள் சூழ, சூரியன் போலிருந்த துரியோதனன் உன்னைக் கண்டதும் எழுந்திருக்கத் தொடங்கி, அதனை மறைத்து, உட்கார்ந்து, உன்னைக் கொல்லத் திட்டமிட்டபடி பார்த்தான். அப்பொழுது உன் கோபம் தெரியும்படி நெருப்பாகப் பார்த்தவனே! என்னை அணைத்துக்கொள். 101

பூமிப் பாரத்தைப் போக்கப் பாரதப் போர் நடக்கச் செய்தாயே! தும்பை மாலை அணிந்த அர்ச்சுனனுக்கு உதவியாகத் தேர் ஓட்டிப் பகைவர்களுக்குச் சமமாக நடத்தினாய். மேகநிற மேனியையும் கருத்த அகன்ற கண்களை உடையவனே! ஆர என்னைத் தழுவுவாய். ஆயர்கள் போர்க்காளையே என்னை அணைத்துக்கொள். 102

மிகவும் புகழ் படைத்த மாவலியின் வேள்வியில் நீ யாசித்த பொழுது, சுக்கிரன், 'இவனுக்கு பூமிதானம் செய்வது தகுதி அற்றது' என்று தடுத்தான். அப்பொழுது அவன் கண்ணை, உன் விரல் தருப்பை நுனியாலே கிளறிக் குருடாக்கினாய். சக்கரக் கையனே! சங்கினை இடது கரத்தில் உடையவனே! நீ என்னை அணைத்துக்கொள். 103

வாமனனே! உன் கையில் மாவலியின் தான நீர் விழுந்ததும் கால்களைப் பெரிதாக்கி வளர்ந்தாய்! உடனே மாவலியின் மகன் நமுசி, "என் தந்தை உன் மாயச்செயலை அறியவில்லை. ஆகவே முன்பு நீ வந்த வடிவிலேயே அளப்பாய்" என்றான். உடனே அந்த நமுசியை ஆகாயத்திலே சுழற்றி எறிந்தாயே! திருமுடி சூடிய திருவேங்கட வாணனே! என்னை அணைத்துக்கொள். 104

நெருங்கிய சடைமுடிச்சிவன், 'காணப்படும் கடல்களும் மலைகளும் ஏழுலகங்களும் என்கை மண்டை ஓட்டுக்குப் போதா; நீல மேக வண்ணா!' என்று யாசித்தான். அப்பொழுது அம் மண்டை ஓட்டை நிறைத்தவனே! திருமார்பில் ஸ்ரீவத்ஸமறு உடையவனே! என்னை அணைத்துக்கொள். 105

நான்கு வேதங்களும் மறைந்து, அறியாமை இருள் மண்டிய காலத்தில், உலகத்தின் பேரிருள் நீங்கும்படி அன்ன வடிவில் தோன்றி, வேதங்களை மீட்டுக் கொடுத்தவனே! நீ என்னை அணைத்துக்கொள். 106

நச்சுவார் முன் நிற்கும் நாராயணன்தன்னை
அச்சோ வருக என்று ஆய்ச்சி உரைத்தன
மச்சு அணி மாடப் புதுவைக்கோன் பட்டன் சொல்
நிச்சலும் பாடுவார் நீள் விசும்பு ஆள்வரே. 107

## புறம் புல்கல்

வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க -
மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தே போல்
சொட்டுச் சொட்டு என்னத் துளிக்கத் துளிக்க என்
குட்டன் வந்து என்னைப் புறம்புல்குவான்,
கோவிந்தன் என்னைப் புறம்புல்குவான். 108

கிண்கிணி கட்டிக் கிறி கட்டிக் கையினில்
கங்கணம் இட்டுக் கழுத்தில் தொடர் கட்டித்
தன் கணத்தாலே சதிரா நடந்து வந்து
என் கண்ணன் என்னைப் புறம்புல்குவான்.
எம்பிரான் என்னைப் புறம்புல்குவான். 109

கத்தக் கதித்துக் கிடந்த பெருஞ்செல்வம்
ஒத்துப் பொருந்திக்கொண்டு உண்ணாது மண் ஆள்வான்
கொத்துத் தலைவன் குடிகெடத் தோன்றிய
அத்தன் வந்து என்னைப் புறம்புல்குவான்,
ஆயர்கள் ஏறு என் புறம்புல்குவான். 110

நாந்தகம் ஏந்திய நம்பி! சரண் என்று
தாழ்ந்த தனஞ்சயற்கு ஆகி, தரணியில்
வேந்தர்கள் உட்க விசயன் மணித் திண்தேர்
ஊர்ந்தவன் என்னைப் புறம்புல்குவான்,
உம்பர்கோன் என்னைப் புறம்புல்குவான். 111

வெண்கலப் பத்திரம் கட்டி விளையாடிக்
கண் பல பெய்த கருந்தழைக் காவின் கீழ்ப்
பண் பல பாடிப் பல்லாண்டு இசைப்ப, பண்டு
மண் பல கொண்டான் புறம்புல்குவான்,
வாமனன் என்னைப் புறம்புல்குவான். 112





*தன்னைக் காண விரும்புவர் முன்னே நிற்கும் ஸ்ரீமந் நாராயணனை "அணைத்துக்கொள்ள வருக" என்று யசோதைத்தாய் அழைத்துக் கூறியவற்றைப் புதுவையர் கோன் பட்டர்பிரான் பாசுரங்களில் அருளினார். இவற்றை எப்பொழுதும் பாடுபவர்கள் பரமபதத்தை ஆள்வார்கள்.* **107**

## புறம் புல்கல்

*இரு நீலரத்தின வட்டின் நடுவே வளர்கின்ற மாணிக்க மொட்டின் நுனியில் அரும்பும் முத்துக்கள் போல், சிறுநீர் சொட்டுச் சொட்டெனத் துளிக்கவும் குழந்தையான கண்ணன் தானாகவே வந்து என் முதுகைத் தழுவியவாறு நிற்கிறான். கோவிந்தனான அவன் என்னைப் புறத்தே அணைத்துக் கொள்கிறான்.* **108**

*திருவரையில் சதங்கையும், முன்கையிலே பவளவடமும், தோளிலே வளையும், கழுத்திலே கண்டிகை மாலையும் கூடிய அணிகலன்களுடன் கண்ணன் அழகாக நடந்து வந்து என் முதுகைக் கட்டிக் கொள்கிறான். எம்பிரான் என்னைப் புறத்தே தழுவிக் கொள்கிறான்.* **109**

*கௌரவர்களுக்குத் தலைவனான துரியோதனன், பாண்டவர்களுடன் மனம் ஒத்து வாழாமல், கொழுத்துக் கிடந்த பெருஞ்செல்வமான பூமியைத் தான் மட்டும் ஆளவிரும்பினான். அவன் குலம் கெடத் தோன்றிய கண்ணன் வந்து என்னைப் புறத்தே தழுவுகிறான். இடைக்குலத் தலைவனானவன் என் முதுகை அணைத்துக் கொள்கிறான்.* **110**

*"நாந்தக வாளேந்திய நம்பியே! உனக்கு நான் அடைக்கலம்" என்று சரணம் புகுந்த அர்ச்சுனனுக்காக, பாரிலுள்ள அரசர்கள் நெஞ்சு கலங்க, திடமான தேரோட்டியவன் என்னைப் புறத்தே தழுவுகிறான். தேவர்கள் தலைவன் முதுகை அணைத்துக் கொள்கிறான்.* **111**

*பல்லாண்டு பாடுவார் பண்ணிசைக்கக் கண்ணன் தன் திரு அரையில் வெண்கல இலைகட்டித் திருமுடியில் மயிற் பீலி சூடித்தழைகள் கவிந்த சோலை நிழலிலே விளையாடுவான். பண்டு மாவலியிடத்தே சென்று பூமியைக் காலால் அளப்பதற்கு முன் வாமனனாக நின்ற இக்கண்ணன் என்புறத்தைத் தழுவுகிறான்.* **112**

சத்திரம் ஏந்தித் தனி ஒரு மாணியாய்
உத்தர வேதியில் நின்ற ஒருவனைக்
கத்திரியர் காணக் காணி முற்றும் கொண்ட
பத்திராகாரன் புறம்புல்குவான்,
பார் அளந்தான் என் புறம்புல்குவான். 113

பொத்த உரலைக் கவிழ்த்து, அதன்மேல் ஏறி,
தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்
மெத்தத் திருவயிறு ஆர விழுங்கிய
அத்தன் வந்து என்னைப் புறம்புல்குவான்,
ஆழியான் என்னைப் புறம்புல்குவான். 114

மூத்தவை காண முது மணற்குன்று ஏறிக்
கூத்து உவந்து ஆடிக் குழலால் இசை பாடி
வாய்த்த மறையோர் வணங்க இமையவர்
ஏத்த வந்து, என்னைப் புறம்புல்குவான்,
எம்பிரான் என்னைப் புறம்புல்குவான். 115

கற்பகக் காவு கருதிய காதலிக்கு
இப்பொழுது ஈவன் என்று இந்திரன் காவினில்
நிற்பன செய்து நிலாத் திகழ் முற்றத்துள்
உய்த்தவன் என்னைப் புறம்புல்குவான்,
உம்பர்கோன் என்னைப் புறம்புல்குவான். 116

ஆய்ச்சி அன்று ஆழிப் பிரான் புறம்புல்கிய
வேய்த் தடந்தோளி சொல் விட்டுசித்தன் மகிழ்ந்து
ஈத்த தமிழ்இவை ஈரைந்தும் வல்லவர்
வாய்த்த நன்மக்களைப் பெற்று மகிழ்வரே. 117

### பூச்சிகாட்டி விளையாடுதல்

மெச்சு ஊது சங்கம் இடத்தான் நல் வேய் ஊதி
பொய்ச் சூதிற் தோற்ற பொறைஉடை மன்னர்க்காய்,
பத்து ஊர் பெறாது அன்று பாரதம் கைசெய்த
அத்தூதன் அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 118





குடையைப் பிடித்தவனாய், உதவியின்றிப் பிரமசாரி வடிவில் வந்த பகவான் மாவலியின் வேள்விச் சாலையில் அரசர்கள் காணும்படி பூமி முழுவதையும் நீர் ஏற்று வாங்கிக் கொண்டான். அழகிய உருவமைந்த உலகளந்த பெருமான் என் முதுகைத் தழுவுகிறான். **113**

அடியில் ஓட்டையான உரலை உறியின் கீழே கவிழ்த்துக் கண்ணன் அதன் மேலேறிப் பானையிலே இருந்த இனிய திரட்டுப் பாலையும் வெண்ணெய்யையும் வயிறரா உண்டான். சக்கராயுதம் தாங்கிய என் தலைவன் என் முதுகைத் தழுவுகிறான். **114**

மணற்குன்றிலே ஏறி நின்று மூத்த ஆயர்கள் காணும் படி கண்ணன் புல்லாங்குழல் இசை வாசித்து மகிழ்ச்சியுடன் நடனம் ஆடுவான். அவனடி பணியும் தேவர்களும் வைதிக முனிவர்களும் வாழ்த்தும் படி கூத்தாடிய எம்பிரான் என் புறத்தே தழுவுகிறான். **115**

கண்ணனின் அன்பு மனைவியான சத்தியபாமை இந்திரன் சோலையிலிருந்த கற்பகமரத்தைப் பெற ஆசைப்பட்டாள். "இப்பொழுதே நான் அதைக் கொண்டு தருவேன்" என்ற கண்ணன் அதனைக் கொண்டு வந்து அவள் அகத்து நிலாமுற்றத்திலே நட்டான். நித்திய சூரிகள் தலைவனான இவன், என் முதுகுப்புறத்தை அணைக்கிறான். **116**

மூங்கிலை ஒத்த அகன்ற தோளுடைய யசோதைத்தாய், சக்கரத்தை ஏந்திய கண்ணன், தன் முதுகுடன் அணைத்தபடியைக் கூறியதாகப் பெரியாழ்வார் மகிழ்ந்து அருளிய தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் ஓத வல்லவர்கள் வாய்த்த நல்ல மக்களைப் பெற்று மகிழ்வர். **117**

### பூச்சிகாட்டி விளையாடுதல்

யாவரும் மெச்சும்படி ஊதுகிற சங்கை இடக்கையில் ஏந்திய கண்ணன், புல்லாங் குழலையும் இனிமையாக ஊதுவான். சூதில் தோற்ற, பொறுமையுடைய பாண்டவர்கள், பத்து ஊர்கள் கூடப் பெறாத அக்காலத்தில் துணைசெய்யத் தூதுவனாகச் சென்று, பின் பாரதயுத்தத்தைக் கண்ணன் முடிப்பித்தான். அவன் அப்பூச்சி காட்டுகிறான். அம்மனே! (ஆஹாஹா!) அப்பூச்சி காட்டுகிறான். **118**

மலை புரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும்
பலர் குலைய நூற்றுவரும் பட்டழிய, பார்த்தன்
சிலை வளையத் திண்தேர்மேல் முன்நின்ற செங்கண்
அலவலை வந்து அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 119

காயும் நீர் புக்குக் கடம்பு ஏறி காளியன்
தீய பணத்திற் சிலம்பு ஆர்க்கப் பாய்ந்து ஆடி
வேயின் குழல் ஊதி வித்தகனாய் நின்ற
ஆயன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 120

இருட்டில் பிறந்து போய், ஏழை வல் ஆயர்
மருட்டைத் தவிர்ப்பித்து, வன் கஞ்சன் மாளப்
புரட்டி, அந்நாள் எங்கள் பூம்பட்டுக் கொண்ட
அரட்டன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 121

சேப்பூண்ட சாடு சிதறித் திருடி நெய்க்கு
ஆப்பூண்டு, நந்தன் மனைவி கடை தாம்பால்
சோப்பூண்டு; துள்ளித் துடிக்கத் துடிக்க அன்று
ஆப்பூண்டான் அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 122

செப்பு இள மென்முலைத் தேவகி நங்கைக்குச்
சொப்படத் தோன்றி, தொறுப்பாடியோம் வைத்த
துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய
அப்பன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 123

தத்துக் கொண்டாள் கொலோ? தானே பெற்றாள் கொலோ?
சித்தம் அனையாள் அசோதை இளஞ் சிங்கம்
கொத்துஆர் கருங்குழற் கோபால கோளரி
அத்தன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 124





*மலை போன்ற தோள்களை உடைய அரசர்களும் பெரிய தேர் வீரர்களும் மற்றவர்களும் நடுங்கும் படியாகவும், கௌரவர் நூறு பேரும் அழியும் படியாகவும் அர்ச்சுனனின் வில் வளையும் படியாகவும் கண்ணன் தேரோட்டினான். தன்னால் உண்டான வெற்றியை அர்ச்சுனன் மீதேற்றிப் புகழும் செங்கண்ணன் அப்பூச்சி காட்டுகிறான்.* 119

*கொதிக்கும் நீர் மடுவில் புகுந்து அருகே நின்ற கடம்ப மரத்தின் மீதேறிப் பின், காளிய நாகத்தின் கொடிய படத்திலே திருவடிச் சதங்கைகள் ஒலி எழுப்பும்படி குதித்து ஆடிப் புல்லாங்குழல் ஊதிய வித்தகப்பிள்ளையான இடையன் கண்ணன் அப்பூச்சி காட்டுகிறான். அம்மனே! அப்பூச்சி காட்டுகிறான்.* 120

*இருட்டில் அவதரித்த கண்ணன் ஆய்ப்பாடி சென்று ஆயர் குழப்பத்தைப் போக்கி வலிய கம்சனைப் புரட்டித் தள்ளிக் கொன்றான். நீராடுகையில் எங்கள் பூம்பட்டாடைகளை வாரிப் போன தீம்பன் கண்ணன், அம்மனே! அப்பூச்சி காட்டுகிறான்.* 121

*காளைகள் பூட்டப்பட்ட வண்டியை உதைத்தான்; நெய் திருடியதால் இடைச்சிகளால் கட்டப்பட்டான். நந்தகோபன் மனைவி யசோதை கடைகிற கயிற்றால் அடித்த பொழுது துள்ளித்துடித்துக் கட்டுப்பட்ட கண்ணன் அப்பூச்சி காட்டுகிறான் அம்மனே! அப்பூச்சி காட்டுகிறான்.* 122

*செப்புப் போன்ற மென்மையான முலைகளை உடைய தேவகிக்கு மகனாகத் தோன்றிய கண்ணன் ஆய்ப்பாடியில் நாங்கள் சேர்த்து வைத்த நெய்யையும் பாலையும் தயிரையும் உண்டு அப்பூச்சி காட்டுகிறான். ஆஹாஹா! அந்த அப்பன் தன் கண்பொத்திக் காட்டுகிறான்.* 123

*யசோதை கண்ணனை வளர்ப்புப் பிள்ளையாகத் தத்து எடுத்துக் கொண்டாளோ? அல்லது தானே பெற்றாளோ? தீமை செய்தாலும் கண்ணன் கருத்துக்கு ஒத்தே நடக்கும் யசோதையின் இளஞ்சிங்கமானவன் பூச்சூடிய கருத்த தலைமயிர் உடையவன். ஆயர்களின இச்சிங்கம் அப்பூச்சி காட்டுகிறான்.* 124

கொங்கை வன் கூனிசொற் கொண்டு, குவலயத்
துங்கக் கரியும் பரியும் இராச்சியமும்
எங்கும் பரதற்கு அருளி, வன்கான் அடை
அங்கண்ணன் அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 125

பதக முதலைவாய்ப் பட்ட களிறு
கதறிக் கைகூப்பி என் கண்ணா! கண்ணா! என்ன
உதவப் புள் ஊர்ந்து அங்கு உறுதுயர் தீர்த்த
அதகன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான்;
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான். 126

வல்லாள் இலங்கை மலங்கச் சரந் துரந்த
வில்லாளனை விட்டுசித்தன் விரித்த
சொல் ஆர்ந்த அப்பூச்சிப் பாடல் இவை பத்தும்
வல்லார் போய் வைகுந்தம் மன்னி இருப்பரே. 127

## தாய்ப்பால் அருந்த அழைத்தல்

அரவு அணையாய்! ஆயர் ஏறே!
அம்மம் உண்ணத் துயிலெழாயே!
இரவும் உண்ணாது உறங்கி நீ போய்,
இன்றும் உச்சி கொண்டதாலோ;
வரவுங் காணேன்; வயிறு அசைந்தாய்;
வன முலைகள் சோர்ந்து பாயத்
திரு உடைய வாய்மடுத்துத்
திளைத்து உதைத்துப் பருகிடாயே. 128

வைத்த நெய்யும் காய்ந்த பாலும்
வடி தயிரும் நறு வெண்ணெயும்
இத்தனையும் பெற்றறியேன்
எம்பிரான் நீ பிறந்த பின்னை;
எத்தனையும் செய்யப் பெற்றாய்;
ஏதும் செய்யேன், கதம் படாதே;
முத்து அனைய முறுவல் செய்து
மூக்கு உறிஞ்சி முலை உணாயே. 129





முலை எழுந்தாற் போல் முதுகிலே புடைத்த கூனலை உடைய மந்தரையின் சொற்படி, இராமன், உலகில் உயர்ந்த யானைகளையும் குதிரைகளையும் அரசையும் மற்றும் எல்லாவற்றையும் பரதனுக்குக் கொடுத்து வன்மையான காட்டை அடைந்தான். அழகிய கண்களை உடைய அவன் இப்போது கண்பொத்திக் காட்டுகிறான். 125

கொடுமையான முதலையின் வாயில் அகப்பட்ட கஜேந்திரன் கதறியவாறு கை கூப்பிக்கொண்டு, ‘என் கண்ணா! கண்ணா!’ என்றழைக்கவும், உடனேயே உதவுவதற்காக, இறைவன் கருடன் மீதேறி நீர்த்துறை வந்து, யானையின் துன்பத்தை நீக்கினான். அப்படிப்பட்ட மிடுக்கை உடையவன் வந்து அப்பூச்சி காட்டுகிறான். 126

வன்மை உடையவர்கள் வாழ்ந்த இலங்கையைக் கலங்கும்படி அம்புகளை விட்டு வில் ஆண்ட பகவானைப் பெரியாழ்வார், அப்பூச்சி காட்டுமாறு அருளிச்செய்த இப்பத்துப் பாசுரங்களைப் பயில வல்லவர் உலகைக் கடந்து போய் ஸ்ரீவைகுண்டத்திலே பொருந்துவார்கள். 127

## தாய்ப்பால் அருந்த அழைத்தல்

ஆதிசேடனைப் படுக்கையாய்ப் பெற்றவனே! ஆயர் தலைவா! திருமுலைப்பால் அருந்தத் தூங்கி எழுந்து வா. நீ நேற்று இரவு உண்ணாமல் உறங்கிவிட்டாய். இன்றோ நடுப்பகல் ஆகியும் நீ வரவில்லை; வயிறோ தளர்ந்தது. மார்பிலிருந்து பால் வடிய, உன் அழகான வாய் வைத்துத் திளைத்துக் கால்களால் என் உடம்பில் உதைத்துப் பருகிட வேண்டும். 128

எம்பிரானே! நீ குழந்தையாகப் பிறந்தபிறகு, நான் உருக்கி வைத்த நெய்யும், காய்ச்சின பாலும் தோய்த்த தயிரும் மணம் வீசும் வெண்ணெய்யும் ஆகிய இவற்றைப் பெற்றறியேன். உன் விருப்பப்படி எதையும் செய்கிறாய். நானோ உன்னை எதுவும் செய்யவில்லை. சினம் கொள்ளாதே. முத்துப் போன்ற பற்களால் சிரித்தபடி, உன் மூக்கை உறிஞ்சிக் கொண்டு முலைப்பால் குடிக்க வேண்டும். 129

தந்தம் மக்கள் அழுது சென்றால்
தாய்மார் ஆவார் தரிக்ககில்லார்;
வந்து நின்மேல் பூசல் செய்ய
வாழ வல்ல வாசுதேவா!
உந்தையார் உன்திறத்தர் அல்லர்;
உன்னை நான் ஒன்று உரப்பமாட்டேன்;
நந்தகோபன் அணி சிறுவா!
நான் சுரந்த முலை உணாயே. 130

கஞ்சன்தன்னால் புணர்க்கப்பட்ட
கள்ளச் சகடு கலக்கு அழிய,
பஞ்சி அன்ன மெல்லடியால்
பாய்ந்த போது நொந்திடும் என்று
அஞ்சினேன் காண்; அமரர் கோவே!
ஆயர் கூட்டத்து அளவன்றாலோ!
கஞ்சனை உன் வஞ்சனையால்
வலைப்படுத்தாய்! முலை உணாயே. 131

தீய புந்திக் கஞ்சன் உன்மேல்
சினம் உடையன் சோர்வு பார்த்து
மாயந்தன்னால் வலைப்படுக்கில்,
வாழகில்லேன், வாசுதேவா!
தாயர் வாய்ச்சொல் கருமம் கண்டாய்,
சாற்றிச் சொன்னேன், போக வேண்டா;
ஆயர் பாடிக்கு அணிவிளக்கே!
அமர்ந்து வந்து என் முலை உணாயே. 132

மின் அனைய நுண் இடையார்
விரி குழல்மேல் நுழைந்த வண்டு
இன் இசைக்கும் வில்லிபுத்தூர்
இனிது அமர்ந்தாய்! உன்னைக் கண்டார்
என்ன நோன்பு நோற்றாள் கொலோ
இவனைப் பெற்ற வயிறு உடையாள்
என்னும் வார்த்தை எய்துவித்த
இருடிகேசா! முலை உணாயே. 133

பெண்டிர் வாழ்வார் நின் ஒப்பாரைப்
பெறுதும் என்னும் ஆசையாலே
கண்டவர்கள் போக்கு ஒழிந்தார்;
கண்ணிணையால் கலக்க நோக்கி
வண்டு உலாம் பூங்குழலினார் உன்
வாயமுதம் உண்ண வேண்டிக்
கொண்டு போவான் வந்து நின்றார்;
கோவிந்தா! நீ முலை உணாயே. 134





*தத்தம் குழந்தைகள் அழுது சென்றால், அவர்களுடைய தாய்மார்கள் பொறுக்க மாட்டார்கள் வாசுதேவா! ஊரார்கள் உன்மேல் பிணங்கிச் சண்டையிடுவதையே தங்கள் வாழ்க்கையாக இருக்கிறார்கள். உன் தந்தையோ உன் குறும்புகளைப் பார்க்கவே மாட்டார்; மிகவும் குறும்பு செய்யும் உன்னையோ என்னால் அடக்க முடியவில்லை. நந்த குமாரனே! அழகிய பிள்ளையே, என் முலைப்பாலைக் குடிக்க வேண்டும்.* 130

*தேவர்கள் தலைவனே! உன்னைக் கொல்லக் கஞ்சனால் அனுப்பப்பட்ட வஞ்சனையான சகடாசுரனை அழிக்க, அவன் ஒளிந்த வண்டியை மூட்டுவாய்கள் குலைந்து போகும்படி, உன் பஞ்சு போன்ற திருவடிகளால் உதைத்தாய். அப்போது உன் நோவுக்கு நான் பயப் பட்டேன். எல்லா இடையர்கள் பயத்தை விடவும் என் பயம் மிகவும் அதிகம். ஐயோ! வஞ்சனை செய்த கஞ்சனை, நீ உன் வஞ்சனையாலே தப்பிக்க முடியாதபடி, அகப்படுத்திக் கொன்றாய். இப்போது முலைப்பால் அருந்தவா.* 131

*வாசுதேவா! தீய புத்தியுடைய கம்சன் உன்மேல் கோபம் உடையவனாய்க் கொல்லப்பார்க்கிறான். நீ உதவியின்றித் தனியே போகும் காலத்தை எதிர்பார்த்து வஞ்சனையாக உன்னைப் பிடித்து விட்டால், நான் வாழமாட்டேன். தாய்மார் வார்த்தைகளைக் குழந்தைகள் கேட்பது முக்கியமான செயல் அன்றோ! நீ விளையாட எங்கும் தனியாய்ப் போகாதே என்பதை வெளிப்படையாகவே கூறுகிறேன். ஆய்ப்பாடிக்கு அணி விளக்குப் போன்றவனே! அமர்ந்து முலைப்பால் அருந்து.* 132

*மின்னல் போன்ற நுட்பமான இடையையும் வண்டுகள் உட்கார்ந்து இனிய ரீங்காரம் செய்யும் பரந்த கூந்தலையும் உடைய பெண்கள் வாழும் ஸ்ரீவில்லிபுத்தூரிலே இனிதாக எழுந்தருளியவனே! உன்னைக் காண்பவர்கள் "இவனைப் பெற்ற வயிறுடையவள் என்ன நோன்பு நோற்றாளோ?" என்று புகழ்வதைக் கேட்கும்படி செய்தாய். இருடிகேசா! பால், அருந்தவா.* 133

*உன்னைப் பார்க்கும் பெண்கள், உன்னைப் போலவே குழந்தை பெற வேண்டும் என்னும் ஆசையாலே, நகராமல் பார்த்தபடியே நிற்பார்கள். வண்டுகள் உலாவும் பூச்சூடிய கூந்தலை உடைய பெண்கள், உனைப் பார்த்தவாறு, உன் வாயமுதம் பருக வேண்டி உன்னை எடுத்துப் போக வந்து நிற்பர். கோவிந்தனே! முலைப்பால் அருந்த வா.* 134

இரு மலை போல் எதிர்ந்த மல்லர்
இருவர் அங்கம் எரிசெய்தாய்! உன்
திரு மலிந்து திகழு மார்வு
தேக்க வந்து என் அல்குல் ஏறி
ஒரு முலையை வாய்மடுத்து
ஒரு முலையை நெருடிக் கொண்டு
இரு முலையும் முறை முறையாய்
ஏங்கி ஏங்கி இருந்து உணாயே. 135

அங் கமலப் போதகத்தில்
அணி கொள் முத்தம் சிந்தினாற்போல்
செங் கமல முகம் வியர்ப்ப,
தீமைசெய்து இம் முற்றத்தூடே
அங்கம் எல்லாம் புழுதியாக
அளையை வேண்டா; அம்ம! விம்ம
அங்கு அமரர்க்கு அமுது அளித்த
அமரர் கோவே! முலை உணாயே. 136

ஓட ஓடக் கிண்கிணிகள்
ஒலிக்கும் ஓசைப் பாணியாலே
பாடிப் பாடி வருகின்றாயைப்
பற்பநாபன் என்று இருந்தேன்;
ஆடி ஆடி அசைந்து அசைந்திட்டு
அதனுக்கு ஏற்ற கூத்தை ஆடி
ஓடி ஓடிப் போய்விடாதே,
உத்தமா! நீ முலை உணாயே. 137

வார் அணிந்த கொங்கை ஆய்ச்சி
மாதவா! உண் என்ற மாற்றம்
நீர் அணிந்த குவளை வாசம்
நிகழ நாறும் வில்லிபுத்தூர்ப்
பார் அணிந்த தொல் புகழான்
பட்டர்பிரான் பாடல் வல்லார்
சீர் அணிந்த செங்கண்மால் மேல்
சென்ற சிந்தை பெறுவர் தாமே. 138

காது குத்துதல் – (பன்னிரு நாமப்பாடல்)

போய்ப்பாடு உடைய நின் தந்தையும் தாழ்த்தான்,
பொரு திறல் கஞ்சன் கடியன்,
காப்பாரும் இல்லை, கடல்வண்ணா! உன்னை ;
தனியே போய் எங்கும் திரிதி;
பேய்ப்பால் முலை உண்ட பித்தனே! கேசவ-
நம்பீ! உன்னைக் காது குத்த
ஆய்ப் பாலர் பெண்டுகள் எல்லாரும் வந்தார்;
அடைக்காய் திருத்தி நான் வைத்தேன். 139





இரண்டு மலைகள் போல் எதிர்த்து வந்த சாணூரன். முஷ்டிகன் ஆகிய இரு மல்லர்களின் உடம்புகள் அச்சத்தாலே எரிந்து விழும்படி செய்தவனே! நீ என் மடியிலே ஏறி அமர்ந்து, அழகு நிரம்பிய உன் மார்பில் முலைப்பால் பரந்து விழும்படி, ஒரு முலையிலே வாய் வைத்து, மற்றொன்றைத் திருக்கையால் நெருடிக் கொண்டு, மாறி மாறிப் பால் அருந்துவாயாக! இடை இடையே இளைப்பாறியும் பருகுவாயாக. 135

முன்னொரு காலத்தில் பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்த தேவராஜனே! அழகிய தாமரைப் பூவில் முத்துக்கள் சிதறினாற் போல், உன் தாமரை முகத்தில் வியர்வை அரும்ப, இந்த முற்றத்தில் குறும்புகள் செய்தவாறு உடம்பு முழுவதும் புழுதி ஆகும்படி, மண்ணில் அளையாதே. அம்ம! முலைப்பால் அருந்த வா. 136

நீ வேகமாக ஓடி ஓடி வருகிறபொழுது, உன் பாதச் சதங்கைகள் ஓசையைப் பாட்டாகக் கொண்டு அப்பாட்டுக்குத் தகுதியாக கம்பீரத்துடன் அசைந்து ஆடி ஆடி வருகிறாய. இதைக்கண்டு நான், 'இவனன்றோ பத்மநாபன்' என்று மகிழ்கிறேன். ஆகையாலே, ஓடி ஓடிப்போகாமல், முலைப்பால் அருந்த வா. 137

கச்சணிந்த மார்பை உடைய ஆய்ச்சி யசோதை, 'மாதவா! முலைப்பால் அருந்தவா!' என்று அழைத்ததை, செங்கழுநீர்ப்பூ மணம் பரவும் நீர் நிலை பொருந்திய ஸ்ரீவில்லிபுத்தூர் பிரான் பாடினார். உலகெங்கும் பரவிய புகழுடைய அப்பெரியாழ்வார் அருளிய பாசுரங்களை ஓதவல்லவர் சீர்மை நிறைந்த சிவந்த கண்ணுடைய திருமாலிடம் தம் மனத்தைச் செலுத்தப் பெறுவர். 138

காது குத்துதல் – (பன்னிரு நாமப்பாடல்)

கடலின் நிறம் கொண்டவனே! பரிவுடைய உன் தந்தை பசுமேய்க்கப் போய்த் திரும்பி வரத்தாமதித்தான். வலிமையுடைய கம்சனோ மிகவும் கொடியவன். உன்னைக் காப்பாற்றுபவர் இங்கே இல்லை. நீயோ தனியே எங்கும் போய்த் திரிகிறாய். பேய்ச்சி பூதனையின் முலைப்பாலை உண்ட பேயனே! கேசவ நம்பி!! ஆய்ப்பாடிப் பாலர்களும் இடைப்பெண்களும் உன் காது குத்துவதற்கு வந்திருக்கிறார்கள். அதற்காக வெற்றிலைப் பாக்கைத் தயாராக வைத்துள்ளேன். 139

வண்ணப் பவளம் மருங்கினிற் சாத்தி
மலர்ப்பாதக் கிண்கிணி ஆர்ப்ப,
நண்ணித் தொழும் அவர் சிந்தை பிரியாத
நாராயணா! இங்கே வாராய்;
எண்ணற்கு அரிய பிரானே! திரியை
எரியாமே காதுக்கு இடுவன்;
கண்ணுக்கு நன்றும் அழகும் உடைய
கனகக் கடிப்பும் இவையா! 140

வையம் எல்லாம் பெறும் வார்கடல் வாழும்
மகரக்குழை கொண்டுவைத்தேன்;
வெய்யவே காதில் திரியை இடுவன், நீ
வேண்டியதெல்லாம் தருவன்;
உய்ய இவ் ஆயர் குலத்தினில் தோன்றிய
ஒண்சுடர் ஆயர்கொழுந்தே!
மையன்மை செய்து இள ஆய்ச்சியர் உள்ளத்து,
மாதவனே! இங்கே வாராய். 141

வண நன்று உடைய வயிரக் கடிப்பு இட்டு
வார்காது தாழப் பெருக்கிக்
குண நன்று உடையார் இக் கோபால பிள்ளைகள்
கோவிந்தா! நீ சொல்லுக் கொள்ளாய்;
இணை நன்று அழகிய இக் கடிப்பு இட்டால்
இனிய பலாப்பழம் தந்து
சுண நன்று அணி முலை உண்ணத் தருவன் நான்
சோத்தம், பிரான்! இங்கே வாராய். 142

சோத்தம், பிரான்! என்று இரந்தாலும் கொள்ளாய்;
சுரிகுழலாரொடு நீ போய்க்
கோத்துக் குரவை பிணைந்து இங்கு வந்தால்,
குணங்கொண்டு இடுவனோ? நம்பீ!
பேர்த்தும் பெரியன அப்பம் தருவன்,
பிரானே! திரியிட ஒட்டில்;
வேய்த் தடந்தோளார் விரும்பு கருங்குழல்
விட்டுவே! நீ இங்கே வாராய். 143

விண்ணெல்லாம் கேட்க அழுதிட்டாய், உன்வாயில்
விரும்பி அதனை நான் நோக்கி
மண்ணெல்லாம் கண்டு என் மனத்துள்ளே அஞ்சி
மதுசூதனே என்று இருந்தேன்;
புண் ஏதும் இல்லை, உன்காது மறியும்;
பொறுத்து இறைப் போது இரு, நம்பீ!
கண்ணா! என் கார்முகிலே! கடல்வண்ணா!
காவலனே! முலை உணாயே. 144





உன்னை வழிபடுபவர்கள் மனதிலிருந்து நீங்காத ஸ்ரீமந் நாராயணனே! அழகிய நிறமுடைய பவள வடத்தை அரையில் அணிந்தவாறு தாமரைப் பூப்போன்ற பாதச் சதங்கை ஓசை எழுப்ப இங்கே வா. எண்ணங்களுக்கு அப்பாற்பட்ட பிரானே! இந்தத் தங்கக் காதணிகள் அழகானவை. எரிச்சல் ஏற்படாதவாறு உன் காதுக்குத் திரியை இடுவேன். அருகே வந்து பார். 140

இடைக்குலம் உய்வடையத் தோன்றிய ஒளிச்சுடரே! ஆயக்கொழுந்தே! உலகில் பெருவிலை பெறும் மகர குண்டலங்களைக் கொண்டு வந்திருக்கிறேன்; உன் காதுகளில் திரியை இடும் பொழுது சிறிது தான் தினவு உண்டாகும். ஆதலால் நீ விரும்பிய தின்பண்டங்களைத் தருவேன். இடைப்பெண்களை மயங்கச் செய்யும் அழகுடைய மாதவனே! நீ இங்கே வா. 141

கோவிந்தா! நல்ல குணமுடைய இடைக்குலப் பிள்ளைகள் தங்கள் காதுகளில் அழகிய வைரகுண்டலங்களை அணிந்து கொண்டு காதுகளைப் பெருக்கி வளர்த்துள்ளனர். அவர்களுடன் நீ சேர விரும்பினால், என்சொல்லைக் கேட்டு இணையான இக்காதணிகளை உன் காதில் போட்டுக் கொள். இனிய பலாப்பழத்தைத் தருவதோடு முலைப்பால் அருந்தவும் கொடுப்பேன். உன்னைத் தொழுகிறேன். இங்கே வா. 142

மூங்கிலை ஒத்த தோள்களை உடைய பெண்கள், விரும்புகிற கறுத்த மயிர்க்கற்றை உடைய விஷ்ணுவே! உன்னைத் தொழுது வேண்டினாலும் நீ ஏற்றுக் கொள்ளவில்லை. நம்பீ! சுருண்ட கூந்தலை உடைய பெண்களுடன் நீ குரவைக் கூத்தாடி வந்தால், அதை நான் குணமாக ஏற்றுக் கொள்ளேன். பெருமானே! உன் காதில் திரியை இடவிட்டாயாகில் பெரிய அப்பங்களைத் தருவேன். நீ இங்கே வா. 143

மண்ணைத் தின்ற உன்னை நான் அடித்த பொழுது ஆகாயம் கேட்கும்படி அழுதாய். உன் வாயை நான் உற்றுப் பார்த்த பொழுது உலகத்தை எல்லாம் கண்டு அஞ்சினேன். நீதான் மதுசூதனன் என்று அறிந்து கொண்டேன். உன் காதில் புண் உண்டாகாமல் காதுத் தண்டை இடுகிறேன். கண்ணா! கொஞ்சம் பொறுத்துக் கொள். மேக வண்ணா! என் காவலனே! நீ முலைப்பால் அருந்துவாய். 144

முலை ஏதும் வேண்டேன் என்று ஓடி நின்காதிற்
    கடிப்பைப் பறித்து எறிந்திட்டு
மலையை எடுத்து மகிழ்ந்து கல்மாரி
    காத்துப் பசுநிரை மேய்த்தாய்;
சிலை ஒன்று இறுத்தாய்; திரிவிக்கிரமா!
    திரு ஆயர்பாடிப் பிரானே!
தலை நிலாப் போதே உன்காதைப் பெருக்காதே
    விட்டிட்டேன், குற்றமே அன்றே? 145

என் குற்றமே என்று சொல்லவும் வேண்டா காண்,
    என்னை நான் மண் உண்டேனாக
அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்தும்
    அனைவர்க்கும் காட்டிற்றிலையே?
வன் புற்று அரவின் பகைக் கொடி வாமன
    நம்பீ! உன்காதுகள் தூரும்;
துன்புற்றன எல்லாம் தீர்ப்பாய், பிரானே!
    திரியிட்டுச் சொல்லுகேன் மெய்யே. 146

மெய் என்று சொல்லுவார் சொல்லைக் கருதித்
    தொடுப்புண்டாய் வெண்ணெயை என்று
கையைப் பிடித்துக் கரை உரலோடு எனனைக்
    காணவே கட்டிற்றிலையே?
செய்தன சொல்லிச் சிரித்து அங்கு இருக்கில்,
    சிரீதரா! உன்காது தூரும்;
கையில் திரியை இடுகிடாய். இந்நின்ற
    காரிகையார் சிரியாமே. 147

காரிகையார்க்கும் உனக்கும் இழுக்கு உற்று என்
    காதுகள் வீங்கி எரியில்?
தாரியா தாகில் தலை நொந்திடும் என்று
    விட்டிட்டேன், குற்றமே அன்றே?
சேரியிற் பிள்ளைகள் எல்லாரும் காது
    பெருக்கித் திரியவும் காண்டி;
ஏர் விடை செற்று இளங்கன்று எறிந்திட்ட
    இருடிகேசா! என்தன் கண்ணே! 148

கண்ணைக் குளிரக் கலந்து எங்கும் நோக்கிக்
    கடிகமழ் பூங்குழலார்கள்
எண்ணத்துள் என்றும் இருந்து தித்திக்கும்
    பெருமானே! எங்கள் அமுதே!
உண்ணக் கனிகள் தருவன், கடிப்பு ஒன்றும்
    நோவாமே காதுக்கு இடுவன்;
பண்ணைக் கிழியச் சகடம் உதைத்திட்ட
    பற்பநாபா! இங்கே வாராய். 149





'முலைப்பாலும் மற்றெதுவும் வேண்டாம்' என்று ஓடியவாறு உன் காதணியைப் பிடுங்கிப் போட்டு விட்டாய். திரிவிக்கிரமனே! மலையைக் குடையாக எடுத்துக் கல் மழையினின்று ஆய்க்குலத்தைக் காத்தாய்; பசுமேய்த்தாய். இராமனான நீ பணைய வில்லை முறித்தாய். ஆய்ப்பாடிப் பிரானே! உன் தலைநில்லாத குழந்தைப் பருவத்தேயே காதைப் பெருக்காது விட்டது என் குற்றம் அன்றோ! 145

கண்ணன் யசோதையிடம், "என்னுடைய குற்றமென்று நீ சொல்ல வேண்டாம். நான் மண் தின்றதாக எண்ணி அன்புடன் என் வாயைப் பார்த்துப் பிடித்தடித்து எல்லோருக்கும் காட்ட வில்லையோ?' என்று கேட்டான். யசோதை, " புற்றிலுள்ள பாம்பின் பகையான கருடனைக் கொடியாக உடைய வாமன நம்பீ! துன்பம் போக்கும் பிரானே! உன் காதுகள் தூர்ந்து போகாமல் காதில் திரியை இடுவேன்" என்றாள். 146

மறுபடியும் கண்ணன் தாயிடம் "கூறுவார் வார்த்தையை உண்மை என்றெண்ணி, வெண்ணெய் திருடியதாக, என் கையைப் பிடித்து உரல் விளிம்புடன் யாவரும் காணக் கட்டினாயே!' என்றான். யசோதை, "சிரீதரா! நான் செய்ததைக்கூறிச் சிரித்துக் கொண்டிருந்தால் உன் காதுகள் துந்துவிடும். பெண்கள் 'கூழைக்காது' என்று சிரிப்பதற்கு முன், என்கையிலுள்ள திரியை உன்காது பெருகும் படி இட்டுக் கொள்"என்றாள். 147

அதற்குக் கண்ணன், " என் காதுகள் வீங்கி எரிந்தால் சிரிக்கிற அப்பெண்களுக்கு உனக்கும் வந்த சேதம் என்ன?" என்று கேட்டான். யசோதை, "இளம் பருவத்தே காதில் திரியிட்டால் உன் தலை நோகுமே என்று விட்டது என் குற்றம்தான். அரிட்ட நேமி என்னும் காளையையும் கன்றாக வந்த வத்சாசுரனையும் கொன்ற கண்ணனே! இருடீகேசா! ஆய்க்குலச் சிறுவர்கள் யாவரும் காது பெருக்கித் திரிவதைப் பார்" என்றாள். 148

மணம் வீசும் மலர் சூடிய கூந்தல் பெண்கள், கண் குளிரக் கலந்து பார்க்கவும் அவர்கள் மனத்தில் என்றும் இனியவனாய், இருக்கும் பெருமானே! எங்கள் அமுதே! சகடாசுரனை வதம் செய்த பத்ம நாபா! நீ அமுது செய்யப் பழங்களைத் தருவேன். நோவு தெரியாத படி உன்காதுகளுக்கு அணி இடுகிறேன். இசைந்து இங்கே வா. 149

வா என்று சொல்லி என் கையைப் பிடித்து
வலியவே காதிற் கடிப்பை
நோவத் திரிக்கில், உனக்கு இங்கு இழுக்குற்று என்?
காதுகள் நொந்திடும், கில்லேன்;
நாவற் பழம் கொண்டுவைத்தேன், இவை காணாய்;
நம்பீ! முன் வஞ்ச மகளைச்
சாவப் பால் உண்டு சகடு இறப் பாய்ந்திட்ட
தாமோதரா! இங்கே வாராய். 150

வார் காது தாழப் பெருக்கி அமைத்து
மகரக்குழை இட வேண்டிச்
சீரால் அசோதை திருமாலைச் சொன்ன சொல்
சிந்தையுள் நின்று திகழப்
பார் ஆர் தொல் புகழான் புதுவை மன்னன்
பன்னிரு நாமத்தால் சொன்ன
ஆராத அந்தாதிப் பன்னிரண்டும் வல்லார்
அச்சுதனுக்கு அடியாரே. 151

## நீராட அழைத்தல்

வெண்ணெய் அளைந்த குணுங்கும்
விளையாடு புழுதியும் கொண்டு
திண்ணென இவ் இரா உன்னைத்
தேய்த்துக் கிடக்க நான் ஒட்டேன்;
எண்ணெய் புளிப்பழம் கொண்டு இங்கு
எத்தனை போதும் இருந்தேன்;
நண்ணல் அரிய பிரானே!
நாரணா! நீராட வாராய். 152

கன்றுகள் ஓடச் செவியில்
கட்டெறும்பு பிடித்து இட்டால்,
தென்றிக் கெடும் ஆகில் வெண்ணெய்
திரட்டி விழுங்குமா காண்பன்;
நின்ற மராமரம் சாய்த்தாய்!
நீ பிறந்த திருவோணம்
இன்று நீ நீராட வேண்டும்,
எம்பிரான்! ஓடாதே வாராய். 153





*யசோதையிடம் கண்ணன், "வாவென்று என் கையைப் பிடித்துக் கட்டாயமாக என் காதில் கடுக்கனை, வலி உண்டாகும்படி திரிகி இடுவதால் உனக்கு என்ன ஆகிறது? காது வலிக்கும்; வரமாட்டேன்" என்று கூறினான். யசோதை, "நம்பீ! இங்கே உனக்கு நாவற்பழங்களை கொண்டு வைத்துள்ளேன். பார். வஞ்சப்பேய்ச்சி பூதனையைப் பால் அருந்திக் கொன்றவனே! சகடாசுரனை வதைத்த தாமோதரனே! இங்கே வா" என்றாள்.* **150**

*கண்ணன் காதுகளைப் பெருக்கி மகர குண்டலங்களை இட, யசோதைத் தாய், அன்புடன் விரும்பி அழைத்தாள். உலகிற் புகழ் உடைய வில்லிபுத்தூர்ப் பெரியாழ்வார், யசோதை கூறி அழைத்ததைத் தம் சிந்தையுள் நிறுத்தி, பன்னிரண்டு திருநாமங்களுடன், அருளிய இப்பன்னிரு பாசுரங்களையும் ஓதுபவர்கள் அச்சுதனுக்கு அடியவர் ஆவார்கள்.* **151**

## நீராட அழைத்தல்

*வெண்ணெய்யை அளைந்ததால் உண்டான முடை நாற்றத்தையும், விளையாடியதால் ஏற்பட்ட புழுதியையும் உன் உடம்பில் ஏற்றுக் கொண்டு தினவால் தேய்த்தபடி இன்றிரவில் படுக்கையில் நீ கிடக்க நான் சம்மதிக்கமாட்டேன். தேய்த்துக் கொள்ள எண்ணெயையும் பூசிக்குளிக்கப் புளியம்பழக் காப்பையும் கையில் கொண்டு இங்கே நெடுநேரமும் காத்திருக்கிறேன். கிட்ட ஒண்ணாத பிரானே! நாராயணா! நீ நீராடுவதற்கு வரவேண்டும்.* **152**

*கன்றுகள் பயந்து ஓடும்படி அவற்றின் காதுகளில் நீ கட்டெறும்பைப் பிடித்து இட்டால், அவைகள் சிதறி ஓடிப் போய்விடும். பிறகு பால் கிடைக்காமற் போய், அதனால் வெண்ணெய்யும் கிடைக்காமல், நீ அதைத் திரட்டி உண்ண இயலாமல் ஆகிவிடும். நீ வெண்ணெய் விழுங்குவதை நான் காண மாட்டேன். நெருங்கி நின்ற ஏழு மாமரங்களை முறித்தவனே! நீ பிறந்த திருவோண நன்னாள் இன்றே ஆதலால், நீ நீராட வரவேண்டும். எம்பிரானே! என்னை ஏமாற்றாமல் வாராய்.* **153**

பேய்ச்சி முலை உண்ணக் கண்டு
பின்னையும் நில்லாது என்நெஞ்சம்,
ஆய்ச்சியர் எல்லாரும் கூடி
அழைக்கவும் நான் முலை தந்தேன்;
காய்ச்சின நீரொடு நெல்லி
கடாரத்தில் பூரித்து வைத்தேன்;
வாய்த்த புகழ் மணிவண்ணா!
மஞ்சனம் ஆட நீ வாராய். 154

கஞ்சன் புணர்ப்பினில் வந்த
கடிய சகடம் உதைத்து
வஞ்சகப் பேய்மகள் துஞ்ச
வாய் முலை வைத்த பிரானே!
மஞ்சளும் செங்கழுநீரின்
வாசிகையும் நாறுசாந்தும்
அஞ்சனமும் கொண்டு வைத்தேன்;
அழகனே! நீராட வாராய். 155

அப்பம் கலந்த சிற்றுண்டி
அக்காரம் பாலிற் கலந்து
சொப்பட நான் சுட்டு வைத்தேன்,
தின்னல் உறுதியேல்; நம்பி!
செப்பு இள மென்முலையார்கள்
சிறுபுறம் பேசிச் சிரிப்பர்;
சொப்பட நீராட வேண்டும்,
சோத்தம், பிரான்! இங்கே வாராய். 156

எண்ணெய்க் குடத்தை உருட்டி
இளம்பிள்ளை கிள்ளி எழுப்பிக்
கண்ணைப் புரட்டி விழித்துக்
கழகண்டு செய்யும் பிரானே!
உண்ணக் கனிகள் தருவன்;
ஒலிகடல் ஓதநீர் போலே
வண்ணம் அழகிய நம்பீ!
மஞ்சனம் ஆட நீ வாராய். 157

கறந்த நற்பாலும் தயிரும்
கடைந்து உறிமேல் வைத்த வெண்ணெய்
பிறந்ததுவே முதலாகப்
பெற்றறியேன், எம்பிரானே!
சிறந்த நற்றாய் அலர் தூற்றும்
என்பதனால் பிறர் முன்னே
மறந்தும் உரையாட மாட்டேன்!
மஞ்சனம் ஆட நீ வாராய். 158





பேய்ச்சியான பூதனையின் முலைப்பாலை அருந்தி அவளை நீ இறந்து போகச் செய்ததைக் கண்டும் நான் அஞ்சவில்லை. இடைச்சிகள் ஒன்று கூடி, உனக்குப் பால் தராதபடி என்னை அழைத்தும், அன்பு மேலீட்டால், அஞ்சாமல் முலைப்பால் தந்தேன். நெல்லிமர இலைகளைப் போட்டுக் காய்ச்சின நீரை அகன்ற பாத்திரத்திலே நிறைத்து வைத்திருக்கிறேன். நிறைந்த புகழுடைய மணிவண்ணா! நீராட வாராய். 154

கம்சனுடைய ஆணைப்படி வந்த சகடாசுரனை உதைத்துக் கொன்றாய்; வஞ்சனையுடன் வந்த பேய்ப்பெண் பூதனை மாளும்படி அவள் முலைப்பால் அருந்திய பிரானே! மஞ்சள் விழுதையும், செங்கழு நீர்மாலையையும், மணம் நிறைந்த சந்தனக் கலவையையும், கண்ணுக்கு இட்டுக் கொள்ளும் மையையும் உனக்காகக் கொண்டு வைத்துள்ளேன். அழகனே! நீ நீராட வருவாய். 155

நம்பி! நீ நீராடதாதிருந்தால், செப்புப்போன்ற இளைய மார்புகளை உடைய பெண்கள் மறைவாக உன்னைப் பற்றிக் குறை பேசிச் சிரிப்பார்கள். அப்பத்துடன் சிற்றுண்டியைப் பாலிலே கருப்புக்கட்டியைக் கலந்து பிசைந்து நன்றாகச் சுட்டு வைத்திருக்கிறேன். நீ அதனைத் தின்ன விரும்பினால் நன்றாக நீராட வேண்டும். பிரானே! உன்னைத் தொழுகிறேன். பெண்கள் கேலிக்கு ஆளாகாமல் இங்கே வா. 156

நம்பி! நீ எண்ணெய்க் குடத்தை உருட்டுகிறாய்; தூங்கும் குழந்தையைக் கிள்ளி எழுப்புகிறாய்; கண்ணைப் புரட்டி விழித்துப் பொறுக்க முடியாத குறும்புகள் செய்கிறாய். எம்பிரானே! நீ உண்பதற்குப் பழங்கள் தருவேன். ஒலிக்கும் கடல் அலையின் நிறம் உடைய கண்ணா! நீ நீராட வருவாய். 157

எம்பிரானே! நீ பிறந்த நாள் முதலாக, கறந்த நல்ல பாலையும் தயிரையும், கடைந்து உறிமேல் வைக்கப்பட்ட வெண்ணெயையும் நான் பெற்றதே இல்லை. "அன்புக்குரிய நல்ல தாய், தான் பெற்ற குழந்தையைக் குற்றம் கூறிப் பழிக்கிறாளே!" என்று உலகோர் சொல்லாதபடி, அயலார் முன்னே மறந்தும் கூட உனக்குக் குறை உண்டாகும்படி பேசமாட்டேன். நீ திருமஞ்சனம் ஆட வாராய். 158

கன்றினை வால் ஓலை கட்டி
கனிகள் உதிர எறிந்து,
பின் தொடர்ந்து ஓடி ஓர் பாம்பைப்
பிடித்துக்கொண்டு ஆட்டினாய் போலும்;
நின்திறத்தேன் அல்லேன், நம்பீ!
நீ பிறந்த திரு நன்னாள்,
நன்று நீ நீராட வேண்டும்;
நாரணா! ஓடாதே வாராய். 159

பூணித் தொழுவினிற் புக்குப்
புழுதி அளைந்த பொன்மேனி
காணப் பெரிதும் உகப்பன்,
ஆகிலும் கண்டார் பழிப்பர்;
நாண் இத்தனையும் இலாதாய்!
நப்பின்னை காணிற் சிரிக்கும்;
மாணிக்கமே! என் மணியே!
மஞ்சனம் ஆட நீ வாராய். 160

கார் மலி மேனி நிறத்துக் கண்ணபிரானை உகந்து
வார் மலி கொங்கை யசோதை மஞ்சனம் ஆட்டிய ஆற்றைப்
பார் மலி தொல் புதுவைக் கோன் பட்டர்பிரான் சொன்ன பாடல்
சீர் மலி செந்தமிழ் வல்லார் தீவினை யாதும் இலரே. 161

கண்ணன் கேசத்தை வாருவதற்குக் காக்கையை வா என்பது.

பின்னை மணாளனை, பேரிற் கிடந்தானை,
முன்னை அமரர் முதற் தனி வித்தினை,
என்னையும் எங்கள் குடி முழுது ஆட்கொண்ட
மன்னனை, வந்து குழல்வாராய், அக்காக்காய்!
மாதவன்தன் குழல்வாராய், அக்காக்காய்! 162

பேயின் முலை உண்ட பிள்ளை இவன், முன்னம்
மாயச் சகடும் மருதும் இறுத்தவன்,
காயாமலர் வண்ணன்; கண்ணன் கருங்குழல்
தூய்து ஆக வந்து குழல்வாராய், அக்காக்காய்!
தூமணி வண்ணன் குழல்வாராய், அக்காக்காய்! 163

திண்ணக் கலத்தில் திரை உறிமேல் வைத்த
வெண்ணெய் விழுங்கி விரைய உறங்கிடும்
அண்ணல்: அமரர் பெருமானை, ஆயர்தம்
கண்ணனை வந்து குழல்வாராய், அக்காக்காய்!
கார்முகில் வண்ணன் குழல்வாராய், அக்காக்காய்! 164





பசுமேய்க்கும் இடத்தில் ஒரு கன்றுக்குட்டியின் வாலில் ஓலையைக் கட்டினாய். விளாமரத்தின் மீது கன்றுக் குட்டியை வீசிப் பழங்களை உதிரச் செய்வது போலே அசுரர்களைக் கொன்றாய், பாம்பான காளியனைப் பிடித்து ஆட்டினாய். நம்பி! உன் குணங்கள் ஒன்றும் அறியேன். இன்று நீ பிறந்த திருநாள் ஆகையால் நன்றாக நீராட வருவாய். நாராயணனே! ஓடாமல் வா. 159

பசுத் தொழுவத்தில் புகுந்து புழுதி அளைந்த உன் அழகுடம்பைக் காண நாம் மிகவும் மகிழ்கிறேன். ஆயினும் உன்னைப் பார்ப்பவர் பழிப்பார்கள். எத்தனையும் வெட்கமில்லாதவனே! உன் புழுதி உடம்பை நப்பின்னை பார்த்தால் சிரிப்பாள். மாணிக்கம் போன்ற மணியே! நீராட வா. 160

மார்புக் கச்சணிந்த யசோதைத் தாய் மேக நிறக் கண்ணபிரானை உகந்து நீராட்டினபடியை, உலகிற் புகழுடைய புதுவைநகர் வாசி பெரியாழ்வார் செந்தமிழ்ப் பாசுரங்களில் பாடியுள்ளார். இவற்றை ஓதவல்லவர்கள் தீவினை ஒன்றும் இல்லாதவர்கள். 161

கண்ணன் கேசத்தை வாருவதற்குக் காக்கையை வா என்பது.

என்னையும் எங்கள் குலத்தையும் ஆட்கொண்ட மன்னன் நப்பின்னைப் பிராட்டியின் நாயகன்; 'திருப்பேர்'த் தலத்தில் பள்ளி கொண்டவன்; நித்திய சூரிகளின் தலைவன். ஒப்பற்ற முதல் தனி வித்தான மூலகாரணன். காக்கையே! இந்த மாதவனின் தலைமயிர்த் தொகுதியை வாருவதற்கு அருகே வரவேண்டும். 162

பூதனைப் பேயின் முலைப்பால் அருந்திய இப்பிள்ளை மாயச் சகடத்தையும் மருதமரங்களையும் முறித்தவன். அக்காக்கையே! காயாம்பூ நிறமுடைய இக்கண்ணனின் குழலை வாருவாய்; மணிவண்ணன் குழலை வாருவாய். 163

கண்ணன் திண்மையான பானையில் கயிற்று உறியில் வைத்திருந்த வெண்ணெயை விழுங்கி விட்டு, ஓடிவந்து தூங்குபவன் போல் கிடந்தான். நித்திய சூரிகள் தலைவனான இறைவனே ஆயர் குலக்கண்ணன் ஆவான். காக்கையே! நீல நிறப்பிள்ளையின் குழலை நீ, வார வேண்டும். 164

பள்ளத்தில் மேயும் பறவை உருக் கொண்டு
கள்ள அசுரன் வருவானைத் தான் கண்டு,
புள்இது என்று பொதுக்கோ வாய் கீண்டிட்ட
பிள்ளையை வந்து குழல்வாராய், அக்காக்காய்!
பேய் முலை உண்டான் குழல்வாராய், அக்காக்காய்! 165

கற்றினம் மேய்த்துக் கனிக்கு ஒரு கன்றினைப்
பற்றி எறிந்த பரமன் திருமுடி,
உற்றன பேசி நீ ஓடித் திரியாதே,
அற்றைக்கும் வந்து குழல்வாராய், அக்காக்காய்
ஆழியான்தன் குழல்வாராய், அக்காக்காய்! 166

கிழக்கிற் குடி மன்னர் கேடு இலாதாரை
அழிப்பான் நினைந்திட்டு அவ் ஆழி அதனால்
விழிக்கும் அளவிலே வேர் அறுத்தானைக்
குழற்கு அணி ஆகக் குழல்வாராய்! அக்காக்காய்!
கோவிந்தன் தன் குழல்வாராய், அக்காக்காய்! 167

பிண்டத் திரளையும் பேய்க்கு இட்ட நீர்ச் சோறும்
உண்டற்கு வேண்டி நீ ஓடித் திரியாதே,
அண்டத்து அமரர் பெருமான் அழகு அமர்
வண்டு ஒத்து இருண்ட குழல்வாராய், அக்காக்காய்!
மாயவன்தன் குழல்வாராய், அக்காக்காய்! 168

உந்தி எழுந்த உருவ மலர்தன்னில்
சந்தச் சதுமுகன்தன்னைப் படைத்தவன்
கொந்தக் குழலைக் குறந்து புளி அட்டித்
தந்தத்தின் சீப்பால் குழல்வாராய், அக்காக்காய்!
தாமோதரன் தன் குழல்வாராய், அக்காக்காய்! 169

மன்னன்தன் தேவிமார் கண்டு மகிழ்வு எய்த
முன்இவ் உலகினை முற்றும் அளந்தவன்
பொன்னின் முடியினைப் பூஅணைமேல் வைத்துப்
பின்னே இருந்து குழல்வாராய், அக்காக்காய்!
பேர்ஆயிரத்தான் குழல்வாராய், அக்காக்காய்! 170

கண்டார் பழியாமே அக்காக்காய் கார்வண்ணன்
வண்டு ஆர் குழல்வார வா என்ற ஆய்ச்சி சொல்
விண் தோய் மதில் வில்லிபுத்தூர்க் கோன் பட்டன் சொல்
கொண்டாடிப் பாடக் குறுகா வினை தாமே. 171





தண்ணீர்ப் பள்ளத்தில் இரை தேடும் கொக்கின் வடிவத்தில் மறைந்து நின்ற அசுரனைக் கண்ணன், பறவை என்று சாதாரண மாகவே எண்ணிச் சடக்கென அதன் வாயைக் கிழித்துக் கொன்றான். இப்பிள்ளையின் குழல் வாருவதற்கு அக்காக்காய் வருக. பூதனையின் முலை உண்டவனுடைய குழலைக் காக்கையே வாருவாய். 165

கன்றுக் கூட்டங்களை மேய்த்த கண்ணன், அசுரன் மறைந்த ஒரு கன்றைத் தூக்கி எடுத்து, வேறொரு அசுரன் ஒளிந்த விளாமரப் பழத்தை உதிர்ப்பதற்காக, அதன் மேல் வீசி எறிந்து இருவரையும் கொன்றான். அக்காக்காய், உனக்கேற்றபடி பேசிப் பறந்து திரியாமல் இப்பரமனின் குழலை நாள்தோறும் வாருவாய். சக்கரத்தை ஏந்தியவனுடைய குழலை வாருவாய். 166

ஒரு குறையுமில்லாத இந்திராதிகளை அழிக்க எண்ணிய கீழ்த்திசை மன்னர்களான நரகாசுரன் முதலியோரை நொடி அளவிலே வேர் அற்றுப்போகும்படி அழித்த கண்ணனின் குழலை வாரி அலங்காரம் செய்யக் காக்கையே வருக. கோவிந்தனின் குளிர்ந்த தலைமயிரை வாருவாய். 167

காக்கையே! இறந்த முன்னோர்களுக்கு இடுகின்ற உணவுப் பிண்டத்தையும் பேய்க்கு இடும் நீர்ச் சோற்றையும் உண்ண வேண்டி ஓடித் திரியாதே! நித்திய சூரிகள் தலைவனான பெருமானின் அழகு பொருந்திய தலை மயிரை வாருவாய். மாயவனுடைய வண்டுபோல இருண்ட குழலை நீ வாருவாய். 168

கொப்பூழ்த் தாமரையில் நான்முகனைப் படைத்தவனுடைய நெருங்கித்திரண்ட குழலைப் புனுகு வார்த்துத்தடவித் தந்தச்சீப்பால் வாருவாய். காக்கையே! தாமோதரனுடைய குழலை வாருவாய். 169

அக்காக்காய்! மாவலி அரசனின் மனைவியர் மகிழும் படி முன்னே இவ்வுலகத்தை அளந்தவனுடைய அழகிய திருமுடியைப் பூப்போன்ற மெத்தையிலே வைத்து, நீ பின்புறத்திலே நின்று மயிர்த் தொகுதியை வாருவாய். ஆயிரம் திரு நாமம் உடைவனுடைய குழலை வாருவாய் .170

“அக்காக்காய்! கண்டவர்கள் பழியாதபடி நீல நிறக்கண்ணனின் வண்டுபடிந்த குழலை வாருவதற்கு வா” என்று யசோதை அழைத்த படியை, மதிள் சூழ்ந்த வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான் பாசுரங்களில் அருளினார். இதைக் கொண்டாடிப் பாடுபவரை வினைகள், அணுகாமல் மறையும். 171

## காக்கையைக் கோல்கொண்டு வா எனல்

வேலிக் கோல் வெட்டி விளையாடு வில் ஏற்றி
தாலிக் கொழுந்தைத் தடங்கழுத்திற் பூண்டு
பீலித் தழையைப் பிணைத்துப் பிறகிட்டு,
காலிப் பின் போவாற்கு ஓர் கோல் கொண்டு வா,
கடல்நிற வண்ணற்கு ஓர்கோல் கொண்டு வா. 172

கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்
எங்கும் திரிந்து விளையாடும் என்மகன்
சங்கம் பிடிக்கும் தடக்கைக்குத் தக்க நல்
அங்கம் உடையது ஓர் கோல் கொண்டு வா,
அரக்கு வழித்தது ஓர் கோல் கொண்டு வா. 173

கறுத்திட்டு எதிர்நின்ற கஞ்சனைக் கொன்றான்,
பொறுத்திட்டு எதிர்வந்த புள்ளின் வாய் கீண்டான்;
நெறித்த குழல்களை நீங்க முன் ஓடிச்
சிறுக்கன்று மேய்ப்பாற்கு ஓர் கோல் கொண்டு வா,
தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டு வா. 174

ஒன்றே உரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான்
துன்று முடியான் துரியோதனன் பக்கல்,
சென்று அங்குப் பாரதம் கையெறிந்தானுக்குக்
கன்றுகள் மேய்ப்பது ஓர் கோல் கொண்டு வா,
கடல்நிற வண்ணற்கு ஓர் கோல் கொண்டு வா. 175

சீர் ஒன்று தூதாய்த் துரியோதனன் பக்கல்
ஊர் ஒன்று வேண்டிப் பெறாத உரோடத்தால்,
பார் ஒன்றிப் பாரதம் கைசெய்து பார்த்தற்குத்
தேர் ஒன்றை ஊர்ந்தாற்கு ஓர் கோல் கொண்டு வா,
தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டு வா. 176

ஆலத்து இலையான், அரவின் அணை மேலான்,
நீலக் கடலுள் நெடுங்காலம் கண்வளர்ந்தான்;
பாலப் பிராயத்தே பார்த்தற்கு அருள்செய்த
கோலப் பிரானுக்கு ஓர் கோல் கொண்டு வா,
குடந்தைக் கிடந்தாற்கு ஓர் கோல் கொண்டு வா. 177





## காக்கையைக் கோல்கொண்டு வா எனல்

வேலியில், உள்ள கோலை வெட்டி விளையாட்டு வில்லாகச் செய்து நாணை ஏற்றிக்கொண்டு ஆமைத் தாலியை அகன்ற கழுத்தில் அணிந்து, மயில்தோகைகளை முதுகிலே தொங்கவிட்டுக் கொண்டு கன்றுகளின் பின்னே மேய்க்கப்போகும் கண்ணனுக்குக் கோல் கொண்டு வா. காக்கையே! கடல் நிறவண்ணனுக்கு ஓர் கோல் கொண்டு வா. 172

பூ மணம் வீசும் திருக்குடந்தையிலும் திருக்கோட்டியூரிலும் திருப்பேர் நகரிலும் எல்லா இடங்களிலும் திரிந்து விளையாடும் என் பிள்ளை, தன் கையில் பாஞ்சசன்னியச் சங்கை பிடித்துக் கொண்டிருக் கிறான். அக்கைக்குத் தகுதியாக நல்ல வடிவுடைய ஓர் கோலைக் கொண்டு வா. அரக்குப் பூசப்பட்ட கோலைக் கொண்டு வா. 173

கண்ணன் தன்னைச் சினந்து எதிர்த்து நின்ற கம்சனைக் கொன்றான்; கொல்வதற்காக எதிரிட்டு வந்த பறவை உருவில் இருந்த பகாசுரனை வாயைக் கிழித்து வதைத்தான். கன்றுகளுக்கு முன்னே ஓடி சின்னஞ்சிறிய கன்றுகளை மேய்க்கும் அவன் குழல்கள் மயிர் சுருள் முன்னே தொங்கும். அந்தத் தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டு வா. 174

கண்ணன் தன் அடியார்களைக் கைவிடாத கொள்கையாகிய ஒன்றையே கூறுவான். அடைக்கலம் கொடுப்பதில் நழுவாத ஒரு சொல்லே உடையவன். அவன் பாண்டவர்களுக்காக, ரத்னக் கிரீடம் அணிந்த துரியோதனன் இடத்தே தூதுவனாகச் சென்று பாரதப் போர்க்குக் கைதட்டினான். கடல் நிறக் கண்ணன், கன்றுகளை மேய்க்கத் தக்க ஓர் கோல் கொண்டு வா. 175

அடியார்களுக்கு ஆட்படும் குணம் ஒன்றே கொண்ட கண்ணன், பாண்டவர்க்காகத் துரியோதனனிடத்தே தூது சென்றான். 'ஓர் ஊரை யாகிலும் கொடு' என்று தாழ்ந்து கேட்டுப் பெறாத படியால், மானமிக்க சினம் கொண்டு, பாரதப்போரிலே அர்ச்சுனனுக்குத் துணையாக, ஒப்பற்ற தேர் ஓட்டி ஆனான். அத் தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டு வா. 176

ஆதி சேஷனைப் படுக்கையாகக் கொண்ட இறைவன், உலகம் நீரில் அமிழ்ந்த காலத்தில், நீலக்கடல் மீது, ஆலந்தளிர் ஒன்றில், உலகங்களை வயிற்றில் அடக்கியவனாய்க் கண் வளர்ந்தான். கண்ணனான அப்பிரான், இளம் பருவத்தில் அர்ஜுனனுக்கு அருள் செய்தான். திருக்குடந்தையில் பள்ளிக்கொண்டுள்ள அப்பிரானுக்கு ஓர் கோல் கொண்டு வா. 177

பொன்திகழ் சித்திரகூடப் பொருப்பினில்
உற்ற வடிவில் ஒரு கண்ணும் கொண்ட அக்
கற்றைக் குழலன் கடியன் விரைந்து உன்னை
மற்றைக் கண் கொள்ளாமே கோல் கொண்டு வா,
மணிவண்ண நம்பிக்கு ஓர் கோல் கொண்டு வா. 178

மின்னிடைச் சீதை பொருட்டா, இலங்கையர்
மன்னன் மணிமுடி பத்தும் உடன் வீழத்
தன் நிகர் ஒன்று இல்லாச் சிலை கால் வளைத்து இட்ட
மின்னு முடியற்கு ஓர் கோல் கொண்டு வா,
வேலை அடைத்தாற்கு ஓர் கோல் கொண்டு வா. 179

தென் இலங்கை மன்னன் சிரம் தோள் துணிசெய்து
மின் இலங்கும் பூண் விபீடண நம்பிக்கு
என் இலங்கும் நாமத்து அளவும் அரசு என்ற
மின் அலங்காரற்கு ஓர் கோல் கொண்டு வா,
வேங்கட வாணற்கு ஓர் கோல் கொண்டு வா. 180

அக்காக்காய் நம்பிக்குக் கோல் கொண்டு வா என்று
மிக்காள் உரைத்த சொல் வில்லிபுத்தூர்ப் பட்டன்
ஒக்க உரைத்த தமிழ் பத்தும் வல்லவர்
மக்களைப் பெற்று மகிழ்வர் இவ் வையத்தே. 181

## கண்ணனைப் பூச்சூட அழைத்தல்

ஆனிரை மேய்க்க நீ போதி,
அருமருந்து ஆவது அறியாய்
கானகம் எல்லாம் திரிந்து உன்
கரிய திருமேனி வாட:
பானையிற் பாலைப் பருகிப்
பற்றாதார் எல்லாம் சிரிப்ப,
தேனில் இனிய பிரானே!
செண்பகப் பூச் சூட்ட வாராய். 182

கரு உடை மேகங்கள் கண்டால்
உன்னைக் கண்டால் ஒக்கும்; கண்கள்
உரு உடையாய்! உலகு ஏழும்
உண்டாக வந்து பிறந்தாய்!
திரு உடையாள் மணவாளா!
திருவரங்கத்தே கிடந்தாய்!
மருவி மணம் கமழ்கின்ற
மல்லிகைப் பூச் சூட்ட வாராய். 183





காக்கையே! அழகான சித்திர கூடமலையில் சீதாப்பிராட்டியின் திருமேனி அழகில் பதிந்த உன் இரு கண்களில் ஒன்றினை, இராமபிரான் பறித்தான். கற்றைக் குழலுடைய அவன் குற்றம் கண்டால் தண்டிக்கும் கடுமையன். உன் மற்றொரு கண் பறிபோகாதபடி விரைவில், நீல நிற நம்பிக்குக் கோல் கொண்டு வா. 178

இராமபிரான் மின்னல் இடையாளான சீதையை மீட்க, இலங்கை அரசன் இராவணனின் மணிக் கிரீடங்கள் பொருந்திய பத்துத் தலைகளையும் ஒரே காலத்தில், ஒப்பற்ற தன் வில்லை வளைத்து அம்பு செலுத்திக் கொன்றான். ஒளிவிடும் கிரீடம் அணிந்த அப்பிரானுக்குச் கோல் கொண்டு வா. கடலின் மேல் அணைகட்டிய அவனுக்குக் கோல்கொண்டு வா. 179

இராமபிரான் தென்னிலங்கை அரசனான இராவணனின் தலைகளையும் தோள்களையும் வெட்டித்தள்ளி வதைத்தான். ஒளி கூடிய ஆபரணம் அணிந்த விபீஷண நம்பியிடம், "என் பெயர் உள்ளளவும் உனக்கு அரசு நிலைக்கும்" என்றருளினான். ஒளி விளங்கும் மாலை அணிந்த திருவேங்கட வாணனுக்குக் கோல் கொண்டுவா. 180

நம்பியான கண்ணனுக்குக் கன்று மேய்க்கக் கோல் கொண்டு வா என்று காக்கையை தாய்மை மிக்க யசோதை அழைத்தாள். அச்சொற்களை வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் தாய்ப் பேச்சாக தமிழில் இப்பத்துப்பாசுரங்களாகப் பாடினார். இவற்றைக் கற்கவல்லவர்கள் பக்தி மிகுந்த மக்களைப் பெற்று மண்ணில் மகிழ்ச்சியுடன் வாழ்வர். 181

## கண்ணனைப் பூச்சூட அழைத்தல்

தேனைவிடவும் இனிய பிரானே! பானையில் வைத்துள்ள பச்சைப் பாலைக் குடிப்பதால் உன்னை விரும்பாதவர் சிரிக்கிறார்கள். நீயோ அரிய மருந்தாயிருப்பதை அறியாமல் உன் கரிய திருமேனி வெய்யிலில் வாடும்படி பசுக்கூட்டத்தை மேய்க்கப் போகிறாய். அவ்வாறு போகாமல் செண்பகப்பூவை நான் உனக்குச் சூட்டும் படி வந்தருள வேண்டும். 182

கருத்த மேகங்களைக் கண்டால். உன்னைப் பார்த்தது போலவே உள்ள கண்ணழகுடையவனே! ஏழு உலகங்களும் உய்வடைய ஆய்ப்பாடியிலே வந்து பிறந்தாய் திருமகள் கேள்வனே! திருவரங்கத்தில் பள்ளிக்கொண்டவனே! மணம் மிகுந்து வீசும் மல்லிகைப் பூவைச் சூட்டிக் கொள்ள வா. 183

மச்சொடு மாளிகை ஏறி
மாதர்கள்தம் இடம் புக்கு,
கச்சொடு பட்டைக் கிழித்து,
காம்பு துகில் அவை கீறி,
நிச்சலும் தீமைகள் செய்வாய்!
நீள் திருவேங்கடத்து எந்தாய்!
பச்சைத் தமனகத்தோடு
பாதிரிப் பூச் சூட்ட வாராய். 184

தெருவின்கண் நின்று இள ஆய்ச்சி
மார்களைத் தீமை செய்யாதே.
மருவும் தமனகமும் சீர்
மாலை மணம் கமழ்கின்ற;
புருவம் கருங்குழல் நெற்றி
பொலிந்த முகிற்கன்று போலே
உருவம் அழகிய நம்பீ!
உகந்து இவை சூட்ட நீ வாராய். 185

புள்ளினை வாய் பிளந்திட்டாய்!
பொரு கரியின் கொம்பு ஒசித்தாய்!
கள்ள அரக்கியை மூக்கொடு
காவலனைத் தலை கொண்டாய்!
அள்ளி நீ வெண்ணெய் விழுங்க
அஞ்சாது அடியேன் அடித்தேன்;
தெள்ளிய நீரில் எழுந்த
செங்கழுநீர் சூட்ட வாராய். 186

எருதுகளோடு பொருதி,
ஏதும் உலோபாய் காண், நம்பீ!
கருதிய தீமைகள் செய்து
கஞ்சனைக் கால்கொடு பாய்ந்தாய்;
தெருவின்கண் தீமைகள் செய்து
சிக்கென மல்லர்களோடு
பொருது வருகின்ற பொன்னே!
புன்னைப் பூச் சூட்ட நீ வாராய். 187

குடங்கள் எடுத்து ஏற விட்டுக்
கூத்தாட வல்ல எம் கோவே!
மடம் கொள் மதிமுகத்தாரை
மால்செய்ய வல்ல என் மைந்தா!
இடந்திட்டு இரணியன் நெஞ்சை
இரு பிளவு ஆக முன் கீண்டாய்!
குடந்தைக் கிடந்த எம் கோவே!
குருக்கத்திப் பூச் சூட்ட வாராய். 188





*என் தலவனான கண்ணனே! நீ பெண்கள் தங்கி இருக்கின்ற மச்சில்களிலும் மாளிகைகளிலும் ஏறிச்சென்று புகுந்து, அவர்கள் மார்புக் கச்சுடன் பட்டாடைகளையும் நல்ல கரைப் புடவைகளையும் கிழித்துத் தினமும் தீமைகள் செய்கிறாய். உயர்ந்த திருவேங்கட மலையில் எழுந்தருளி உள்ளவா! பசுமை குறையாத தமனகத்துடன் பாதிரிப் பூவையும் சூட வா.* 184

*ஒப்பற்ற புருவங்களும் இருண்ட தலைமயிரும் இடையே விளங்கும் நெற்றியும் உடைய மேகக்கன்று போலே அழகிய வடிவுடைய நம்பியே! நீ தெருவில் நின்று கொண்டு இளைய இடைப்பெண்களிடத்தே குறும்புகள் செய்யவேண்டாம். மணம் வீசும் மருக்கொழுந்துடன் தமனகமும் கலந்து கட்டின மாலைகளை நான் விருப்புடன் சூட்டும்படி நீ வர வேண்டும்.* 185

*கண்ணா! பகாசுரப் பறவையின் வாயைக் கிழித்தாய். உன்னைத் தாக்கிய குவலயா பீட யானையின் தந்தத்தை முறித்தாய். வஞ்சகத் துடன் வந்த சூர்ப்பணகை என்னும் அரக்கியின் மூக்கை அறுத்து, அரக்கர் அரசன் இராவணனின் தலைகளையும் வெட்டினாய். நீ வெண்ணெய்யை அள்ளி விழுங்கவும், நான் அஞ்சாமல் உன்னை அடித்தேன். நான் செய்ததைப் பொறுத்து, தெளிந்த தண்ணீரில் மலர்ந்துள்ள செங்கழுநீர்ப்பூ சூட்டிக் கொள்ள வா.* 186

*நம்பி! நப்பின்னையைப் பெறுவதற்காக, உடல், உயிர் மேல் ஆசை அற்றவனாய் காளைகளுடன் போரிட்டாய். தீமையை எண்ணிய கம்சன் மீது பாய்ந்து கால்களால் உதைத்துக் கொன்றாய். வழியில் தெருவில் பல தீரச்செயல்கள் செய்து மல்லர்களுடன் போர் செய்து அவர்களை அழித்தாய். பொன் போன்ற வடிவுடைய கண்ணனே! புன்னைப் பூச்சூட்டிக் கொள்ள வா.* 187

*பல குடங்களைக் கைகளில் தூக்கி வானில் வீசி எறிந்து குடக்கூத்து ஆடுவதில் வல்லவனான எங்கள் தலைவனே! மடப்ப குணமுடைய, சந்திரனைப் போன்ற முகங்களை உடைய பெண்களை மயக்க வல்ல என் மைந்தனே! முன்பு, இரணியனுடைய மார்பை உன் நகங்களாலே கிழித்து இரண்டு பகுதிகளாகப்போட்டுக் கொன்றவனே! திருக்குடந்தையில் பள்ளி கொண்டுள்ள என் அரசே! நீ குருக்கத்திப் பூச் சூட்டிக்கொள்ள வரவேண்டும்.* 188

சீமாலிகன் அவனோடு
தோழமை கொள்ளவும் வல்லாய்!
சாமாறு அவனை நீ எண்ணிச்
சக்கரத்தால் தலை கொண்டாய்;
ஆமாறு அறியும் பிரானே!
அணி அரங்கத்தே கிடந்தாய்!
ஏமாற்றம் என்னைத் தவிர்த்தாய்!
இருவாட்சிப் பூச் சூட்ட வாராய். 189

அண்டத்து அமரர்கள் சூழ
அத்தாணியுள் அங்கு இருந்தாய்!
தொண்டர்கள் நெஞ்சில் உறைவாய்!
தூமலராள் மணவாளா!
உண்டிட்டு உலகினை ஏழும்
ஓர் ஆலிலையில் துயில் கொண்டாய்!
கண்டு நான் உன்னை உகக்கக்
கருமுகைப் பூச் சூட்ட வாராய். 190

செண்பக மல்லிகையோடு
செங்கழுநீர் இருவாட்சி
எண் பகர் பூவும் கொணர்ந்தேன்,
இன்று இவை சூட்ட வா என்று
மண் பகர் கொண்டானை ஆய்ச்சி
மகிழ்ந்து உரை செய்த இம் மாலை
பண் பகர் வில்லிபுத்தூர்க் கோன்
பட்டர்பிரான் சொன்ன பத்தே. 191

## திருவந்திக் காப்பிட அழைத்தல்

இந்திரனோடு பிரமன்
ஈசன் இமையவர் எல்லாம்
மந்திர மா மலர் கொண்டு
மறைந்து உவராய் வந்து நின்றார்;
சந்திரன் மாளிகை சேரும்
சதுரர்கள் வெள்ளறை நின்றாய்!
அந்தியம் போது இது ஆகும்,
அழகனே! காப்பிட வாராய். 192



4 மு-ஆ



*கண்ணா! ஸ்ரீமாலிகன் என்னும் அசுரர் தலைவனுடன் நட்புக் கொண்டது போல நடித்து அவன் அழியத் தகுந்த வழிகளை நீ சிந்தனை செய்து உன் சக்கராயுதத்தாலே அவன் தலையை அறுத்துப் போட்டாய். பகைவர்களை அழிப்பதிலும் அடியார்களைக் காப்பதிலும் மேல் வருவனவற்றை அறிந்த பிரானே! அழகிய திருவரங்கத்தில் பள்ளி கொண்டவா! என் வருத்தத்தைப் போக்கியவனே! நீ இருவாட்சிப் பூவைச் சூட்டிக்கொள்ள வரவேண்டும்.* **189**

*பரமபதத்தில் நித்திய சூரிகள் நடுவே வீற்றிருப்பவனே! எல்லோர் இதயங்களிலும் நித்திய வாசம் செய்பவனே! தாமரைச் செல்வியின் நாயகனே! ஏழு உலகுகள் அழியாதபடி, அவற்றை உன் வயிற்றில் மறைத்து, ஓர் ஆலந்தளிரில் பள்ளி கொண்டவனே! என் மகிழ்ச்சிக்காக நீ கருமுகைப் பூவைச் சூடிக் கொள்ள வருவாய்.* **190**

*தனக்கே உரியதான பூமியை, மாவலிச்சக்கரவர்த்தி இடத்தே நீர் ஏற்றுத்தானமாகப் பெற்ற உலகளந்த மூர்த்தியை, யசோதைத்தாய், பூச்சூட்டிக் கொள்ள அழைத்தாள். "சண்பகம், மல்லிகை, செங்கழுநீர், இருவாட்சி, என்று பல திறத்த பூக்களைத் தேடிக்கொண்டு வந்தேன்; சூட்டிக்கொள்ளவா" என்று கூறிய மகிழ்ச்சிப் பேச்சை வில்லிபுத்தூர்க்கோன் பட்டர் பிரான் இசை நிறைந்த சொல் மாலையாக அருளினார். இப்பத்தின் சுவையே இவற்றுக்குப் பலன் ஆகும்.* **191**

## திருவந்திக் காப்பிட அழைத்தல்

*சந்திரன் வந்து தங்குமளவு உயர்ந்த மாளிகைகளும் பரிவு மீதூறப் பல்லாண்டு பாட வல்லவர்களும் உள்ள திருவெள்ளறைத் திவ்விய தேசத்திலே நின்ற பெருமானே! இந்திரன், பிரமன், சிவன், தேவர்கள் எல்லோரும் மந்திரங்கள் கூறி, மலர்கள் கொண்டு உன்னை வழிபடப் பிறர்கண்களுக்கு புலனாகாதபடி மகிழ்ச்சியுடன் வந்துள்ளனர். அழகனே! இந்த நேரமோ மாலைப் பொழுதாகும். உன் அழகு கண்ணெச்சில் படாதபடி காப்புச் செய்ய, நீ வந்தருள வேண்டும்.* **192**

கன்றுகள் இல்லம் புகுந்து
கதறுகின்ற பசு எல்லாம்;
நின்றொழிந்தேன் உன்னைக் கூவி,
நேசமேல் ஒன்றும் இலாதாய்!
மன்றில் நில்லேல், அந்திப் போது;
மதிள் திருவெள்ளறை நின்றாய்!
நன்று கண்டாய் என்தன் சொல்லு;
நான் உன்னைக் காப்பிட வாராய். 193

செப்பு ஓது மென்முலையார்கள்
சிறுசோறும் இல்லும் சிதைத்திட்டு
அப்போது நான் உரப்பப் போய்
அடிசிலும் உண்டிலை, ஆள்வாய்!
முப் போதும் வானவர் ஏத்தும்
முனிவர்கள் வெள்ளறை நின்றாய்!
இப்போது நான் ஒன்றும் செய்யேன்,
எம்பிரான்! காப்பிட வாராய். 194

கண்ணில் மணல்கொடு தூவிக்
காலினால் பாய்ந்தனை என்று என்று
எண் அரும் பிள்ளைகள் வந்திட்டு
இவர் ஆல்? முறைப்படுகின்றார்;
கண்ணனே! வெள்ளறை நின்றாய்
கண்டாரோடே தீமை செய்வாய்!
வண்ணமே வேலையது ஒப்பாய்!
வள்ளலே! காப்பிட வாராய். 195

பல்லாயிரவர் இவ் ஊரில்
பிள்ளைகள் தீமைகள் செய்வார்,
எல்லாம் உன்மேல் அன்றிப் போகாது;
எம்பிரான்! நீ இங்கே வாராய்;
நல்லார்கள் வெள்ளறை நின்றாய்!
ஞானச் சுடரே! உன்மேனி
சொல் ஆர வாழ்த்தி நின்று ஏத்திச்
சொப்படக் காப்பிட வாராய். 196

கஞ்சன் கறுக்கொண்டு நின்மேல்
கரு நிறச் செம் மயிர்ப் பேயை
வஞ்சிப்பதற்கு விடுத்தான்
என்பது ஓர் வார்த்தையும் உண்டு;
மஞ்சு தவழ் மணி மாட
மதிள் திருவெள்ளறை நின்றாய்!
அஞ்சுவன் நீ அங்கு நிற்க,
அழகனே! காப்பிட வாராய். 197





கண்ணா! அந்திக் காப்பிட உன்னை அழைப்பதில் நான் ஈடுபட்டுள்ளதால், கன்றுகளைக் குடிக்கவிட்டுப் பால் கறப்பார் இல்லாமல், பசுக்கள் முலைக்கடுப்பில் கதறுகின்றன. என்னிடத்தில் உனக்கு அன்பு உண்டா? இல்லையா! மாலைவேளையில் நான்கு சந்துகள் கூடும் இடத்தே நிற்காதே. தாயான என் சொல்லைத் தட்டாதே. உன் நன்மையே நான் காண்பேன். மதிள் சூழ்ந்த திருவெள்ளறையில் உள்ள பெருமானே! உனக்குக் காப்பிட, வருவாய். 193

காலை, பகல், மாலைப் பொழுதுகளில் தேவர்களும் முனிவர்களும் வழிபடும்படி திருவெள்ளறைத் திருப்பதியில், எழுந்தருளிய எம்பிரானே! என் ஆண்டவனே! செப்புப் போன்ற மென்மையான முலையையுடைய பெண்கள் மணல் வீடு கட்டிச் சிறுசோறு சமைத்து விளையாடுகிற பொழுது, அங்குச்சென்று, நீ அழித்ததும், நான் உன்னைச் சினந்து பேசினேன். அதனால் ஓடிப்போய் நீ உண்ணவில்லை. இப்போது நான் ஒன்றும் செய்ய மாட்டேன். உனக்கு நான் காப்பிட நீ வரவேண்டும். 194

கண்ணா! திருவெள்ளறையில் எழுந்தருளியவா! கடலின் நிறமுடைய வள்ளலே! குறும்புகள் செய்கிறாயே! எண்ணற்ற சிறுமியர்கள் என்னிடம் வந்து, "கண்ணன் எங்கள் கண்களில் மணல்தூவிப்பின் காலால் உதைத்தான்" என்று முறையிடுகிறார்கள். ஆதலால் இனி, அவர்களிடம் போகாதே. நான் உனக்கு அந்திக்காப்பிட நீ வரவேண்டும். 195

சான்றோர்கள் வாழும் திருவெள்ளறைத்திருப்பதியில் உள்ள ஞான ஒளியே! இடைச்சேரியில் குறும்புகள் செய்யும் பல்லாயிரம் சிறுவர்கள் இருக்கிறார்கள். அவர்களுடன் நீ சேர்ந்தால், அவர்கள் செய்யும் தீமைகள் உன்மேல் உண்டாகும்; ஆதலால் அவர்களுடன் சேராமல் இங்கே என்னிடம் வா. மனம் நிறையப் பல்லாண்டு பாடி, உனக்கு நான் நன்றாகக் காப்பிட வேண்டும். அதற்காக வா. 196

மேகங்கள் உலாவும் மணி பதித்தமாடங்களும் மதிளும் உள்ள திருவெள்ளறைத் திருப்பதியில் எழுந்தருளியவனே! உன்மேல் கோபம் கொண்ட கம்சன், சிவந்த மயிருடைய கரிய பூதனைப் பேயை உன்னைக் கொல்ல அனுப்பினான் என்கிற வரலாறு நீ பிறந்த பொழுதே கேட்டதாகும். ஆதலால் நீ வெளியே நின்றால் நான் பயப்படுகிறேன். அழகா! உனக்குச் காப்பிடவேண்டும். ஆகவே வருவாய். 197

கள்ளச் சகடும் மருதும்
கலக்கு அழிய உதைசெய்த
பிள்ளையரசே! நீ பேயைப்
பிடித்து முலை உண்ட பின்னை
உள்ளவாறு ஒன்றும் அறியேன்;
ஒளியுடை வெள்ளறை நின்றாய்!
பள்ளிகொள் போது இது ஆகும்;
பரமனே! காப்பிட வாராய். 198

இன்பம் அதனை உயர்த்தாய்!
இமையவர்க்கு என்றும் அரியாய்!
கும்பக் களிறு அட்ட கோவே!
கொடுங் கஞ்சன் நெஞ்சினிற் கூற்றே!
செம்பொன் மதில் வெள்ளறையாய்!
செல்வத்தினால் வளர் பிள்ளாய்!
கம்பக் கபாலி காண் அங்கு;
கடிது ஓடிக் காப்பிட வாராய். 199

இருக்கொடு நீர் சங்கிற் கொண்டிட்டு
எழில் மறையோர் வந்து நின்றார்;
தருக்கேல், நம்பி! சந்தி நின்று,
தாய் சொல்லுக் கொள்ளாய் சில நாள்;
திருக்காப்பு நான் உன்னைச் சாத்த,
தேசு உடை வெள்ளறை நின்றாய்!
உருக் காட்டும் அந்தி விளக்கு இன்று
ஒளி கொள்ள ஏற்றுகேன் வாராய். 200

போது அமர் செல்வக்கொழுந்து புணர் திருவெள்ளறையானை
மாதர்க்கு உயர்ந்த அசோதை மகன்தன்னைக் காப்பிட்ட மாற்றம்
வேதப் பயன் கொள்ள வல்ல விட்டுசித்தன் சொன்ன மாலை
பாதப் பயன் கொள்ள வல்ல பத்தர் உள்ளார் வினை போமே. 201

## கண்ணன் பிள்ளை விளையாட்டை முறையிடுதல்

வெண்ணெய் விழுங்கி வெறுங் கலத்தை
வெற்பிடை இட்டு அதன் ஓசை கேட்கும்;
கண்ணபிரான் கற்ற கல்வி தன்னைக்
காக்ககில்லோம், உன்மகனைக் காவாய்;
புண்ணிற் புளிப் பெய்தால் ஒக்கும் தீமை
புரை புரையால் இவை செய்ய வல்ல
அண்ணற் கண்ணான் ஓர் மகனைப் பெற்ற
அசோதை நங்காய்! உன்மகனைக் கூவாய். 202





அழகான திருவெள்ளறையில் உள்ள பரம்பொருளே! வஞ்சனான சகடாசுரனையும் மருத மரங்களில் மறைந்த அசுரர்களையும் மூட்டு வாய்கள் ஒடிய உதைத்தழித்த பிள்ளை அரசே! நீ பூதனைப் பேயின் முலை உண்ட பிறகு உள்ளபடி ஒன்றும் அறிய முடியவில்லை. இப்பொழுதோ நீ உறங்குகிற பொழுதாகி விட்டது. ஆகவே உனக்கு நான் காப்பிட நீ வரவேண்டும். 198

நீர்மைக்குணத்தால் என் மகிழ்ச்சியை உயர்த்தியவனே! தேவர்களால் எந்நாளும் அறிய முடியாத மேன்மையனே! மத்தகம் ஓங்கிய குவலயாபீடம் யானையைக் கொன்ற அரசே! கொடிய கம்சன் மனதில் யமனாக நின்றவா! செம்பொன் மதின் சூழ்ந்த திருவெள் ளறையில் இருப்பவனே! செல்வச் செருக்குடைய பிள்ளையே! அந்திப் பொழுதில் அங்கே பயமுறுத்தும் துர்க்கைத் தேவதை நடமாடுகிறாள். ஆகவே நான் உனக்குக் காப்பிட நீ விரைந்து வா. 199

ஒளியுடைய திருவெள்ளறையில் நின்றருளும் நம்பி! இன்னும் சில நாள்களாவது நீ தாய் சொல் கேட்டு நடக்க வேண்டும். இருக்கு வேதம் ஓதியபடி அந்தணர்கள் புனிதநீரைச் சங்கிலே எடுத்து உனக்குக் காப்பிட வந்துள்ளனர். ஆதலால் நாற் சந்தியிலே நின்று நீ செருக்குக் கொள்ளாதே. திருக்காப்பு இடுவதற்காக உன் உருக்காட்டும் அந்தி விளக்கை இப்போது ஒளி வீச ஏற்றுகிறேன். அதைப் பார்க்க வா. 200

தாமரையில் அமரும் திருமகளைப் பிரியாத திருவெள்ளறைப் பெருமானைப் பெண்களில் சிறந்த யசோதை, தன் மகனாகக் கொண்டு காப்பிட்டாள். வேதப்பயன் தேர்ந்த பெரியாழ்வார் இக்காப்பிடுதல் பற்றிப் பாடியவற்றில் பின்னடியில் சொன்ன பயனைக் கொள்பவரின் பக்திக்குப் பகையான வினைகள் தன்னடையே போய் விடும். 201

## கண்ணன் பிள்ளை விளையாட்டை முறையிடுதல்

"புண்ணில் புளியை விட்டால்போலத் தீமைகளைக் கண்ணன் வீடுதோறும் செய்கிறான். அண்ணன் பல ராமனுக்கும் இவனுக்கும் ஒப்பில்லை. இவன் வெண்ணெய்யை விழுங்கி விட்டுப் பானையைக் கல்லிலே உடைக்கும் ஒலி கேட்கிறது. இந்த மகனைப் பெற்ற யசோதை நங்கையே! எங்களால் அவன் கற்ற குறும்பைக் காக்க இயலாததால், உன் பிள்ளையை அழைத்துக்கொள்." என்று ஆய்ச்சிகள் முறையிட்டனர். 202

வருக, வருக, வருக இங்கே,
வாமன நம்பீ! வருக இங்கே.
கரிய குழல் செய்ய வாய் முகத்து எம்
காகுத்த நம்பீ! வருக இங்கே.
அரியன் இவன் எனக்கு இன்று, நங்காய்!
அஞ்சனவண்ணா! அசலகத்தார்
பரிபவம் பேசத் தரிக்ககில்லேன்;
பாவியேனுக்கு இங்கே போதராயே. 203

திரு உடைப் பிள்ளைதான் தீயவாறு
தேக்கம் ஒன்றும் இலன், தேசு உடையன்,
உருக வைத்த குடத்தோடு வெண்ணெய்
உறிஞ்சி உடைத்திட்டுப் போந்து நின்றான்;
அருகு இருந்தார் தம்மை அநியாயம்
செய்வதுதான் வழக்கோ? அசோதாய்!
வருக என்று உன்மகனைதன்னைக் கூவாய்,
வாழ ஒட்டான் மதுசூதனனே. 204

கொண்டல்வண்ணா! இங்கே போதராயே
கோயிற் பிள்ளாய்! இங்கே போதராயே.
தெண் திரை சூழ் திருப்பேர்க் கிடந்த
திருநாரணா! இங்கே போதராயே
உண்டு வந்தேன் அம்மம் என்று சொல்லி
ஓடி அகம் புக, ஆய்ச்சிதானும்
கண்டு எதிரே சென்று எடுத்துக்கொள்ளக்
கண்ணபிரான் கற்ற கல்வி தானே! 205

பாலைக் கறந்து அடுப்பு ஏற வைத்துப்
பல்வளையாள் என்மகள் இருப்ப,
மேலை அகத்தே நெருப்பு வேண்டிச்
சென்று இறைப்பொழுது அங்கே பேசி நின்றேன்
சாளக்கிராமம் உடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்;
ஆலைக் கரும்பின் மொழி அனைய
அசோதை நங்காய்! உன்மகனைக் கூவாய். 206

போதர் கண்டாய்; இங்கே போதர் கண்டாய்;
போதரேன் என்னாதே போதர் கண்டாய்.
ஏதேனும் சொல்லி அசலகத்தார்
ஏதேனும் பேச நான் கேட்கமாட்டேன்;
கோதுகலம் உடைக் குட்டனேயோ!
குன்று எடுத்தாய்! குடம் ஆடு கூத்தா!
வேதப் பொருளே! என் வேங்கடவா!
வித்தகனே! இங்கே போதராயே. 207





யசோதை கண்ணனிடம், "கரிய குழலையும் செவ்வாயையும் உடைய காகுத்தா! வாமன நம்பி! இங்கே வா" என்றழைத்தாள். அயல் வீட்டுப் பெண்ணிடம், "நங்கையே இப்பிள்ளை இப்போது என் கைவசம் அல்லன்" என்றாள். கண்ணனை நோக்கி, "மை நிறத்தோனே! அயல் வீட்டார் உன்னைக் குறை கூறப் பொறுக்க மாட்டேன். பாவியேன் கவலை தீர்க்க இங்கே வா" என்றாள். 203

வேறு சில பெண்கள் வந்து, "யசோதாய்! உன் செல்லப் பிள்ளை செய்யும் தீம்புகளில் சிறிதேனும் குறையவில்லை; மேலும் அதையே அவன் தன் புகழாக எண்ணுகிறான். தாழி வெண்ணெய்யை உறிஞ்சி விட்டுப் பானையை உடைத்தான். அண்டை வீட்டாரான எங்களுக்கு மதுசூதனன் அநியாயம் செய்கிறான். எங்களை வாழ விடாதது என்ன நியாயம்? உன் மகனை நீ அழைத்து அடக்கு." என்றனர். 204

மேக வண்ணனே வா! திருவரங்கத்துப் பிள்ளையே வா! அலை வீசும் நீர் சூழ்ந்த திருப்பேர் நகரிலே பள்ளி கொண்ட நாராயணா வா!" என்று யசோதை அழைத்தாள். கண்ணன், "நான் அம்மம் உண்டாயிற்று" என்று கூறிக் கொண்டே வீட்டுக்குள் புகவும், அவளும் எதிரே வந்து, தன் இடுப்பில் எடுத்துக்கொண்டாள். இப்படிச் செய்யக் கண்ணன் பயின்ற கல்விதான் என்னே! 205

"ஆலைக் கரும்பின் இனிய பேச்சுடைய யசோதாய்! பல வளைகளணிந்த என் மகள், கறந்த பாலை மிடாவிலே விட்டு அடுப்பில் ஏற்றி வைத்துக் காவலாயிருக்க, நான் மேலவீட்டிலே நெருப்பு வாங்கச் சென்று நொடிப் பொழுதே பேச்சில் கழித்தேன். அதற்குள் உன் மகன் வந்து மிடாவைச் சாய்த்துப் பாலைக் குடித்துப் போனான். சாளக்கிராம நம்பியான அவனை அழைத்துக் கொள்" என்றாள் ஒருத்தி. 206

யசோதை கண்ணனிடம், "குதூகலம் உடைய பிள்ளையே! மலையைத் தூக்கியவனே! குடக்கூத்து ஆடிய வேதப்பொருளே! திருவேங்கட மலை வித்தகா! 'வரமாட்டேன்' என்று கூறாமல் இங்கே விரைந்து வா. என்னால் அயலார் கூறும் குறைகளைப் பொறுக்க முடியவில்லை. ஆதலால் நீ இங்கே வா." என்றாள். 207

செந்நெல் அரிசி சிறுபருப்புச்
செய்த அக்காரம் நறுநெய் பாலால்
பன்னிரண்டு திருவோணம் அட்டேன்;
பண்டும் இப் பிள்ளை பரிசு அறிவன்;
இன்னம் உகப்பன் நான் என்று சொல்லி
எல்லாம் விழுங்கிட்டுப் போந்து நின்றான்;
உன்மகன் தன்னை, அசோதை நங்காய்!
கூவிக் கொள்ளாய், இவையும் சிலவே! 208

கேசவனே! இங்கே போதராயே
கில்லேன் என்னாது இங்கே போதராயே
நேசம் இலாதார் அகத்து இருந்து
நீ விளையாடாதே, போதராயே
தூசனம் சொல்லும் தொழுத்தைமாரும்
தொண்டரும் நின்ற இடத்தில் நின்று
தாய்சொல்லுக் கொள்வது தன்மம் கண்டாய்,
தாமோதரா! இங்கே போதராயே. 209

கன்னல் இலட்டுவத்தோடு சீடை
காரெள்ளின் உண்டை கலத்தில் இட்டு
என் அகம் என்று நான் வைத்துப் போந்தேன்;
இவன் புக்கு அவற்றைப் பெறுத்திப் போந்தான்
பின்னும் அகம் புக்கு உறியை நோக்கிப்
பிறங்குஒளி வெண்ணெயும் சோதிக்கின்றான்;
உன்மகன் தன்னை, அசோதை நங்காய்!
கூவிக் கொள்ளாய், இவையும் சிலவே! 210

சொல்லில் அரசிப் படுதி, நங்காய்!
சூழல் உடையன் உன்பிள்ளை தானே;
இல்லம் புகுந்து என்மகளைக் கூவிக்
கையில் வளையைக் கழற்றிக்கொண்டு,
கொல்லையில் நின்றும் கொணர்ந்து விற்ற
அங்கு ஒருத்திக்கு அவ் வளை கொடுத்து,
நல்லன நாவற் பழங்கள் கொண்டு,
நான் அல்லேன் என்று சிரிக்கின்றானே! 211

வண்டு களித்து இரைக்கும் பொழில் சூழ்
வருபுனற்காவிரித் தென்னரங்கன்
பண்டு அவன் செய்த கிரீடை எல்லாம்
பட்டர்பிரான் விட்டுசித்தன் பாடல்
கொண்டு இவை பாடிக் குனிக்க வல்லார்
கோவிந்தன்தன் அடியார்கள்ஆகி
எண் திசைக்கும் விளக்காகி நிற்பார்
இணையடி என்தலை மேலனவே. 212





"அசோதை நங்கையே! நான் பன்னிரண்டு திருவோண நோன்புகளின் முடிவில், செந்நெல்லரிசி, சிறு பருப்பு, வெல்லக்கட்டி, நெய், பால் இவற்றால் சமைத்தவற்றைக் கண்ணன் தின்று விட்டான். 'இன்னமும் இவற்றை விரும்புகிறேன்' என்று கூறுகிறான். முன்பே இவன் தன்மையை நான் அறிவேன். உன் மகனை அழைத்துக் கொள். நீ பிள்ளை வளர்க்கும் முறை இது தானோ?" என்றோர் பெண் முறையிட்டாள். 208

"கேசவா! இங்கேவா. உன்னிடத்தே நட்பில்லாதவர் வீட்டில் விளையாடாதே. உன்னைக் குறை கூறும் இடைச்சிகளின் வேலைக்காரி களும், பணியாளரும் நிற்குமிடத்திலிருந்து இங்கே வா. 'வரமாட்டேன்' என்று கூறாதே. தாய் சொல் கொள்வதே தருமம் அப்பா! தாமோதரா! இங்கே வா." என்று யசோதை கண்ணனிடம் கூறினாள். 209

"அசோதை நங்காய்! நான் வெல்லப்பாகில் செய்த லட்டுடன் சீடை, கருத்த எள்ளுண்டை இவற்றைக் கலத்தில் வைத்துவிட்டு 'என் வீட்டில் யார் புகுவார்?' என்றெண்ணி வெளியே வந்தேன். உன் பிள்ளை அங்கே போய்ப் பணியாரங்களை எனக்கு விட்டு வைக்காமல் தானே தின்றுவிட்டான். பின்னும் அகத்தில் உள்ள உறியில் ஒளி கூடிய வெண்ணெய் உண்டோ என்று தேடுகிறான். உன் பிள்ளையை அழைத்துக்கொள். இப்படியா பிள்ளையை வளர்ப்பது?" என்றாள் வேறோர் பெண். 210

"நங்காய்! கண்ணன் தீம்புகளைச் சொன்னால் நீ கோபிக்கிறாய். உன் வஞ்சகப் பிள்ளை என் வீடு புகுந்து என் பெண் பெயர் சொல்லி அழைத்து அவள் கைவளையைக் கழற்றிக் கொண்டான். கொல்லையிலிருந்து தெருவில் வந்து. நாவல் பழம் விற்பவளிடந்தே வளையைக் கொடுத்து நாவற்பழம் வாங்கிக் கொண்டான். 'ஏனடா இது?' என்று கேட்கவும் அவன், 'நான் வளை கொடுக்கவில்லை' என்று கூறிச்சிரிக்கிறான்." இவ்வாறு மற்றோர் பெண் முறையிட்டாள். 211

மகிழ்ந்து பாடும் வண்டுகள் தங்கும் சோலைகளாலும் காவிரி நதியாலும் திருவரங்கம் சூழப்பட்டது. அங்கெழுந்தருளிய அரங்கன். கண்ணனாகச் செய்த திருவிளையாடல்களைப் பட்டர்பிரான் பாடினார். இவற்றைப் பாடி ஆடும் கோவிந்தன் அடியார்கள் திசை எட்டும் தீபம் ஆவார்கள். அன்னார் திருவடிகளை அடியேன் தலைமேல் சூடுவேன். 212

## ஆய்ச்சிகள் கண்ணன் தீம்புகளைக் கூறுதல்

ஆற்றில் இருந்து விளையாடுவோங்களைச்
சேற்றில் எறிந்து, வளை துகில் கைக்கொண்டு,
காற்றிற் கடியனாய் ஓடி அகம் புக்கு
மாற்றமும் தாரானால், இன்று முற்றும்;
வளைத் திறம் பேசானால், இன்று முற்றும். 213

குண்டலம் தாழ, குழல் தாழ, நாண் தாழ,
எண் திசையோரும் இறைஞ்சித் தொழுது ஏத்த,
வண்டு அமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு,
விண் தோய் மரத்தானால், இன்று முற்றும்;
வேண்டவும் தாரானால், இன்று முற்றும். 214

தடம் படு தாமரைப் பொய்கை கலக்கி
விடம் படு நாகத்தை வால் பற்றி ஈர்த்து,
படம் படு பைந்தலை மேல் எழப் பாய்ந்திட்டு,
உடம்பை அசைத்தானால், இன்று முற்றும்;
உச்சியில் நின்றானால், இன்று முற்றும். 215

தேனுகன் ஆவி செகுத்துப் பனங்கனி
தான் எறிந்திட்ட தடம் பெருந்தோளினால்
வானவர் கோன் விட வந்த மழை தடுத்து,
ஆனிரை காத்தானால், இன்று முற்றும்;
அவை உய்யக் கொண்டானால், இன்று முற்றும். 216

ஆய்ச்சியர் சேரி அளை தயிர் பால் உண்டு,
பேர்த்து அவர் கண்டு பிடிக்கப் பிடியுண்டு,
வேய்த் தடந்தோளினார் வெண்ணெய் கொள் மாட்டாது அங்கு
ஆப்புண்டு இருந்தானால், இன்று முற்றும்;
அடியுண்டு அழுதானால், இன்று முற்றும். 217

தள்ளித் தளர் நடை யிட்டு இளம் பிள்ளையாய்,
உள்ளத்தின் உள்ளே அவளை உற நோக்கிக்
கள்ளத்தினால் வந்த பேய்ச்சி முலை உயிர்
துள்ளச் சுவைத்தானால், இன்று முற்றும்;
துவக்கு அற உண்டானால், இன்று முற்றும். 218





## ஆய்ச்சிகள் கண்ணன் தீம்புகளைக் கூறுதல்

*ஆற்றங்கரை மணலில் விளையாடும் எங்கள் மேல் கண்ணன் சேற்றை வீசி எறிந்தான். எங்கள் வளைகளையும் சேலைகளையும் வாரி எடுத்துக் கொண்டு காற்றை விட வேகமாக ஓடி, வீட்டினுள் நுழைந்தான். அவனை அழைத்தும் வளையைத் தருவதாகப் பதில் பேசவில்லை. ஆகவே நாங்கள் இன்று முடிந்து போவோம்.* **213**

*காதுக் குண்டலங்கள், குழல், கழுத்தாரம் ஆகியவை தாழ்ந்தசைய திக்கெட்டிலுமுள்ள தேவர் முனிவர் முதலியோர் வணங்கித் துதிக்கக் கண்ணன் வானளாவிய குருந்த மரத்திலேறி எங்கள் சேலைகளைக் கவர்ந்து வைத்துள்ளான். வண்டு தங்கும் பூச் சூடிய கூந்தலை உடைய பெண்களாகிய நாங்கள் வேண்டியும் அவன் சேலைகளைத் தராததால், இன்று முடிந்து போவோம்.* **214**

*அகன்ற தாமரைப் பொய்கையிலே, கண்ணன் குதித்துக் கலக்கி, நஞ்சுமிழ்ந்த காளிய நாகத்தை வாலைப் பற்றி இழுத்துப் படம் அகன்ற அதன் தலைமேல் தன் உடம்பசைய, அவன் சரணம் புகுமளவும் ஆடினான். அந்தக் கண்ணனால் இன்று முடிந்தோம்.* **215**

*பனைமரத்தில் மறைந்த அசுரன் மாள, அதன் பழங்கள் வீழ, கழுதை உருக்கொண்ட தேனுகாசுரனைச் சுழற்றி வீசிக் கொன்றான். தேவேந்திரன் ஆணையால் பெய்த மழையினின்று காப்பாற்ற மலையைக் குடையாக ஏந்திப் பசுக்களைக் காத்தான். ஆநிரைகளை உய்யக் கொண்ட கண்ணனால் நாங்கள் இன்று முடிவோம்.* **216**

*இடைச் சேரிப் பெண்கள் மத்தால் கடைந்த தயிரையும் பாலையும் கண்ணன் உண்டான். மற்றும் ஒரு தடவை அவன் வெண்ணெய்யைத் திருடும் பொழுது மூங்கிலை ஒத்த தோள்களை உடைய ஆய்ச்சிகள் கண்டு கைகளால் பிடித்தடித்தனர். திரும்பவும் திருடமுடியாமல் அவர்கள் வீட்டில் கட்டுண்டு அழுத கண்ணனால் நாங்கள் இன்று முடிவோம்.* **217**

*தடுமாறித் தளர்ந்து நடையிடும் சிறிய குழந்தையான கண்ணன், கள்ளத்தனமாக வந்த பூதனைப் பேயின் வஞ்சனையை அறிந்ததால், முலைப்பாலுடன், அவள் உயிரையும், துடிக்கத் துடிக்கப் பசையற உண்டான். அவள் நஞ்சாலே பாதிக்கப்படாத கண்ணனால் நாங்கள் இன்று முடிந்து போவோம்.* **218**

மாவலி வேள்வியில் மாண் உருவாய்ச் சென்று
மூவடி தா என்று இரந்த இம் மண்ணினை
ஓரடி இட்டு, இரண்டாம் அடிதன்னிலே
தாவடி இட்டானால், இன்று முற்றும்;
தரணி அளந்தானால், இன்று முற்றும். 219

தாழை தண்ஆம்பல் தடம் பெரும் பொய்கைவாய்
வாழும் முதலை வலைப்பட்டு வாதிப்பு உண்
வேழம் துயர் கெட, விண்ணோர் பெருமானாய்,
ஆழி பணி கொண்டானால், இன்று முற்றும்;
அதற்கு அருள் செய்தானால், இன்று முற்றும். 220

வானத்து எழுந்த மழை முகில் போல் எங்கும்
கானத்து மேய்ந்து களித்து விளையாடி,
ஏனத்து உருவாய் இடந்த இம் மண்ணினைத்
தானத்தே வைத்தானால், இன்று முற்றும்;
தரணி இடந்தானால், இன்று முற்றும். 221

அங் கமலக் கண்ணன் தன்னை அசோதைக்கு
மங்கை நல்லார்கள் தாம் வந்து முறைப்பட்ட
அங்கு அவர் சொல்லைப் புதுவைக்கோன் பட்டன் சொல்
இங்கு இவை வல்லவர்க்கு ஏதம் ஒன்று இல்லையே. 222

## கண்ணனுக்கு முலைப்பால் கொடுக்க அஞ்சுதல்

தன்நேர் ஆயிரம் பிள்ளைகளோடு
தளர்நடை இட்டு வருவான்
பொன்ஏய் நெய்யொடு பால்அமுது உண்டு ஒரு
புள்ளுவன் பொய்யே தவழும்;
மின்நேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கை
துஞ்ச வாய்வைத்த பிரானே!
அன்னே! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 223

பொன்போல் மஞ்சனம் ஆட்டி அமுது ஊட்டிப்
போனேன்; வருமளவு இப்பால்
வன்பாரச் சகடம் இறச் சாடி
வடக்கில் அகம் புக்கு இருந்து
மின்போல் நுண்ணிடையாள் ஒரு கன்னியை
வேற்றுருவம் செய்து வைத்த
அன்பா! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 224





இறைவன் மகாபலியின் வேள்விச்சாலையில் பிரமசாரி வடிவத்தில் புகுந்து, 'மூன்றடி மண்தா' என்று வேண்டி இவ்வுலகப் பரப்பை ஓரடியால் அளந்து, மேலுலகங்களைத் தன் இரண்டாம் அடியில் அடக்கினான். இவ்வாறு உலகளந்தவனாலே நாங்கள் இன்று முடிந்து போவோம். 219

தாழைகளையும் குளிர்ந்த ஆம்பல்களையுமுடைய பெரிய பொய்கையில், யானை முதலை வாய்ப்பட்டு வருந்தவும் நித்திய சூரிகளின் தலைவன் தன் சக்கரத்தாலே முதலையைக் கொன்று யானையின் துன்பத்தைப் போக்கிப் பணிகொண்டான். இப்படி அருள் செய்தவனால் நாங்கள் இன்று முடிவோம். 220

பகவான் வானில் எழுந்த மேகம் போல வராஹ வடிவம் கொண்டு, காடெங்கும் திரிந்து விளையாடி, உலகை அண்ட பித்தியி விருந்து விடுவித்து இருந்த இடத்திலே வைத்துக் காப்பாற்றினான். பூமியை இவ்வாறு காத்தவனாலே நாங்கள் இன்று முடிந்து போவோம். 221

நல்லவர்களான ஆய்ச்சிகள், செந்தாமரைக் கண்ணனைப் பற்றி அசோதை வீட்டில் முறையிட்டவற்றைப் புதுவைக் கோன் பெரியாழ்வார் பாசுரங்களில் அருளினார். இவற்றை ஓதுபவர் களுக்குத் தீமை நேராது. 222

## கண்ணனுக்கு முலைப்பால் கொடுக்க அஞ்சுதல்

தன்னை ஒத்த ஆயிரம் சிறுவர்களுடன் தளர்ந்து நடப்பவனே! தங்க நிறநெய்யுடன் பாற்சோறு உண்டாய். திருட்டுத் தனத்தில் ஒப்பற்ற நீ பொய்யாகத் தவழ்ந்து மின்னலிடை கொண்ட வஞ்சகி யான பூதனை மாள, அவள்முலையில் வாய் வைத்து உண்டாயே! என் பிரானே! 'நீ குழந்தை இல்லை; தெய்வம்' என்று அறிந்து கொண்ட தால் நான் உனக்கு முலைப் பால் ஊட்டப் பயப்படுகிறேன். 223

அழகு விளங்க உன்னை நீராட்டி, உணவூட்டி நான் வெளியே சென்றேன். திரும்பி வருவதற்குள்ளே, பாரம் மிகுந்த வண்டி முறியும் படி, நீ உதைத்துச் சகடாசுரனைக் கொன்றாய். வடக்கு வீட்டுள் சென்று, மின்னலை ஒத்த இடையுடைய கன்னியிடம் குறும்பு செய்து, அவள் வடிவம் குலையும் படி செய்துவிட்டாய். அன்பா! உன்னைத்தெய்வம் என்று அறிந்து கொண்டதால் முலைப்பால் ஊட்டப்பயப்படுகிறேன். 224

கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கி,
குடத் தயிர் சாய்த்துப் பருகி,
பொய்ம் மாய மருது ஆன அசுரரைப்
பொன்றுவித்து இன்று நீ வந்தாய்;
இம் மாயம் வல்ல பிள்ளை நம்பீ! உன்னை
என்மகனே என்பர் நின்றார்;
அம்மா! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 225

மைஆர் கண் மட ஆய்ச்சியர் மக்களை
மையன்மை செய்து அவர் பின் போய்
கொய்ஆர் பூந்துகில் பற்றித் தனிநின்று
குற்றம் பல பல செய்தாய்;
பொய்யா! உன்னைப் புறம் பல பேசுவ
புத்தகத்துக்கு உள கேட்டேன்;
ஐயா! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 226

முப்போதும் கடைந்து ஈண்டிய வெண்ணெயி
னோடு தயிரும் விழுங்கி
கப்பால் ஆயர்கள் காவிற் கொணர்ந்த
கலத்தொடு சாய்த்துப் பருகி
மெய்ப்பால் உண்டு அழு பிள்ளைகள் போலநீ
விம்மி விம்மி அழுகின்ற
அப்பா! உன்னை அறிந்து கொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 227

கரும்பார் நீள் வயற் காய்கதிர்ச் செந்நெலைக்
கற்றாநிரை மண்டித் தின்ன
விரும்பாக் கன்று ஒன்று கொண்டு விளங்கனி
வீழ எறிந்த பிரானே!
சுரும்பார் மென்குழற் கன்னி ஒருத்திக்குச்
சூழ்வலை வைத்துத் திரியும்
அரம்பா! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 228

மருட்டார் மென்குழல் கொண்டு பொழில் புக்கு
வாய்வைத்து அவ் ஆயர்தம் பாடி
சுருட்டார் மென்குழல் கன்னியர் வந்து உன்னைச்
சுற்றும் தொழ நின்ற சோதி!
பொருள் தாயம் இலேன், எம்பெருமான்! உன்னைப்
பெற்ற குற்றம் அல்லால்; மற்று இங்கு
அரட்டா! உன்னை அறிந்து கொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 229





குழந்தைக் குறும்பில் சிறந்த நம்பியே! குழையச் சமைத்த பருப்புடன் வெண்ணெயையும் விழுங்கிக் குடத்தை உருட்டித் தயிரையும் உண்டாய். பொய்யான மாய மருத மரங்களில் மறைந்த அசுரர்களைக் கொன்ற நீ மாயங்கள் செய்ய வல்லவன். உன் வாசி அறியாதார் உன்னை என் மகன் என்பர். ஆனால் நீ எல்லோர்க்கும் தலைவன் என்றறிந்ததால் நான் உனக்கு முலைப்பால் ஊட்டப் பயப்படுகிறேன். 225

ஐயா! பொய்யனே! மைக்கண்கள் உடைய இடைச்சிகளை மயக்கி அவர்கள் புடவைக் கொசுவத்தைப் பற்றி இழுத்தாயே! பல பல தீமைகளைச் செய்யும் உன்னைப் பற்றிப் பிறர் கூறும் பொல்லாங்குகளைப் புத்தகமாகவே எழுதி விடலாம். என் காதால் உன் குற்றங்களைக் கேட்டபிறகு, மாயச் செயல்களுக்கெல்லாம் நீ தலைவன் என்றறிந்து, முலைப்பால் ஊட்ட அஞ்சுகிறேன். 226

என் அப்பனே! நீ, காலை, பகல் மாலைகளில் கடைந்தெடுக்கப் பட்ட வெண்ணெய்யையும் தயிரையும் விழுங்குகிறாய். ஆயர்கள் தங்கள் தோள்களிலே காவடி கட்டிக் கொண்டு வந்த பாலைக் கலத்துடன் சாய்த்துப் பருகிவிட்டாய். தாய்ப்பால் அருந்தியும் போதாததால் அழும் குழந்தைகளைப்போலே நீ விக்கிவிக்கி என் முலைப்பால் பருக அழுகிறாய். நீ மனித இயல்புக்கு அப்பாற் பட்டவன் என்றறிந்ததால் பால் ஊட்ட அஞ்சுகிறேன். 227

கன்றுகளுடன் பசுக்கூட்டம், அகன்றவயலில் கரும்பு போல் வளர்ந்த செந்நெற்கதிர்களை மேயும்பொழுது, தின்ன விருப்ப மில்லாத ஒரு கன்றுக் குட்டியை, நீ எடுத்து, பழங்கள் விழுமாறு, விளாமரத்தின் மீது வீசிய பிரானே! வண்டமரும் பூச்சூடிய கூந்தலுடைய கன்னி ஒருத்திக்கு உன் கண்களாகிய வலையை வீசித்திரியும் குறும்பனே! நீ சாதாரணக் குழந்தை இல்லை என்றறிந்து, உனக்கு முலைப் பாலூட்டப் பயப்படுகிறேன். 228

எம்பெருமானே! நீ தனித்த சோலை ஒன்றில் புகுந்து, உன் புல்லாங்குழலை வாயில் வைத்தூதி, மதி மயங்கச் செய்யும் மெல்லிய இசையை எழுப்புகிறாய், அப்பொழுது, சுருண்ட பூச்சூடிய கூந்தலையுடைய பெண்கள் குழலோசை கேட்டு மயங்கி ஜோதியான உன்னிடம் வந்து நாற்புறமும் சூழ்ந்து வணங்குகிறார்கள். உன்னைப் பிள்ளையாகப் பெற்ற குற்றம் அன்றி இச்சேரியில் மற்றவரோடு பொருள் வகையில் நான் தாயாதி அல்லேன். குறும்பனே! உன்னை நன்றாக அறிந்ததால், பாலூட்டப் பயப்படுகிறேன். 229

வாளா ஆகிலும் காணகில்லார்; பிறர்
மக்களை மையன்மை செய்து
தோளால் இட்டு அவரோடு திளைத்து நீ
சொல்லப் படாதன செய்தாய்;
கேளார் ஆயர் குலத்தவர் இப் பழி;
கெட்டேன்! வாழ்வில்லை, நந்தன்
காளாய்! உன்னை அறிந்து கொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 230

தாய்மார் மோர் விற்கப் போவர், தகப்பன்மார்
கற்றா நிரைப் பின்பு போவர்;
நீ ஆய்ப்பாடி இளங் கன்னிமார்களை
நேர்படவே கொண்டு போதி;
காய்வார்க்கு என்றும் உகப்பனவே செய்து
கண்டார் கழறத் திரியும்
ஆயா! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 231

தொத்தார் பூங்குழற் கன்னி ஒருத்தியைச்
சோலைத் தடம் கொண்டு புக்கு
முத்தார் கொங்கை புணர்ந்து இரா நாழிகை
மூவேழு சென்றபின் வந்தாய்;
ஒத்தார்க்கு ஒத்தன பேசுவர் உன்னை;
உரப்பவே நான் ஒன்றும் மாட்டேன்;
அத்தா! உன்னை அறிந்துகொண்டேன், உனக்கு
அஞ்சுவன் அம்மம் தரவே. 232

காரார் மேனி நிறத்து எம்பிரானைக்
கடிகமழ் பூங்குழல் ஆய்ச்சி
ஆரா இன்னமுது உண்ணத் தருவன், நான்
அம்மம் தாரேன் என்ற மாற்றம்
பாரார் தொல்புகழான் புதுவை மன்னன்
பட்டர்பிரான் சொன்ன பாடல்
ஏரார் இன்னிசை மாலைகள் வல்லார்
இருடிகேசன் அடியாரே. 233

### கண்ணனைக் கன்றின் பின் போக்கிய தாய் வருந்துதல்

அஞ்சன வண்ணனை ஆயர் கோலக் கொழுந்தினை
மஞ்சனம் ஆட்டி மனைகள்தோறும் திரியாமே,
கஞ்சனைக் காய்ந்த கழல்அடி நோவக் கன்றின்பின்
என்செயப் பிள்ளையைப் போக்கினேன்? எல்லே பாவமே! 234





*சாதுவான நந்தகோபன் குமாரனே! நீ சும்மா இருந்தாலும் பொறாமை உடையவர்கள் உன்னைக் காண விரும்பார்கள். நீயோ பிறர் பெண்களை மயக்கி அவர்கள் தோளோடு அணைத்தவாறு சொல்ல இயலாத தீம்புகளைச் செய்கிறாய். ஆய்க்குலத்தவர் இப்படிப் பழிகேட்கப் பொறாதவர்கள். உன்னால் என் வாழ்வு கெட்டது. நீ சாதாரணக் குழந்தை அன்று. ஆதலால் உனக்கு முலைப்பால் ஊட்டப் பயப்படுகிறேன்.* 230

*தாய்மார்கள் மோர் விற்கவும் தந்தையர் பசு மேய்க்கவும் வெளியே போகும் நேரம் பார்த்து, நீ இளங்கன்னியர்களை உன் விருப்பத்துக்கு கேற்ப அழைத்துப் போகிறாய். இம் மாதிரியான உன் தீம்புகள் உன்னைச் சீறி இகழ்பவர்களுக்கு மகிழ்ச்சியாக அமைகின்றன. உனக்கு வேண்டிய நல்லவர்களோ, வருந்தி உறுத்திச் சொல்லும்படி ஆகிறது. இடைக்குமரா! நீ மனித இயல்புக்கப்பாற்பட்ட தெய்வம் என்றறிந்து முலைப்பாலூட்டப் பயப்படுகிறேன்.* 231

*கண்ணா! நீ, பூங்கொத்தணிந்த கூந்தலை உடைய ஒரு கன்னியை அழைத்துக் கொண்டு சோலைப் பக்கம் சென்று, முத்தாரம் அணிந்த அவளைத் தழுவி, நேற்றிரவு, மூன்று சாமப் பொழுது கடந்தபின் வீடு வந்து சேர்ந்தாய். இது பற்றிப் பிறர் வேண்டிய படி குற்றம் சொல்வார்கள். தாயான எனக்கோ உன்னை அடக்க சக்தி இல்லை. என் அத்தா! மனித இயல்புக்கு அப்பாற்பட்ட உன் மாயத்தை அறிகிறபொழுது, முலைப் பாலூட்ட நான் அஞ்சுகிறேன்.* 232

*மேக நிறப் பிரானுக்குப் பூங்குழலை உடைய யசோதை 'முலைப்பால் ஊட்ட அஞ்சுகிறேன்' என்று கூறியவாறாகப் புதுவை மன்னர் பட்டர்பிரான், அருளிச் செய்தார். இயல், இசை, அமைந்த இவ்வினிய சொல் மாலையை ஓத வல்லவர் இருடீகேசனுக்கு அடியவர் ஆவார்கள்.* 233

### கண்ணனைக் கன்றின் பின் போக்கிய தாய் வருந்துதல்

*மைநிறம் கொண்ட ஆயர்குலக் கொழுந்தான கண்ணனை நீராட்டி, வீடுகளில் திரிந்து செல்லக்காணாமல், கன்றுகள் மேய்க்க அனுப்பி விட்டேனே! கம்சனை உதைத்த, கழலுடைய அவன் திருவடிகள் நொந்து போகுமே! எதற்காக இப்படிக் கன்றுமேய்க்க அனுப்பி விட்டேன்! நான் செய்த பாவமோ இது?* 234

பற்றுமஞ்சள் பூசிப் பாவைமாரொடு பாடியில்
சிற்றில் சிதைத்து எங்கும் தீமை செய்து திரியாமே,
கற்றுத் தூளியுடை வேடர் கானிடைக் கன்றின் பின்
எற்றுக்கு என் பிள்ளையைப் போக்கினேன்? எல்லே பாவமே! 235

நன்மணி மேகலை நங்கைமாரொடு நாள்தொறும்
பொன்மணி மேனி புழுதியாடித் திரியாமே,
கல்மணி நின்று அதிர் கான் - அதரிடைக் கன்றின்பின்
என் மணிவண்ணனைப் போக்கினேன்; எல்லே பாவமே! 236

வண்ணக் கருங்குழல் மாதர் வந்து அலர் தூற்றிடப்
பண்ணிப் பல செய்து இப் பாடி எங்கும் திரியாமே,
கண்ணுக்கு இனியானைக் கான் - அதரிடைக் கன்றின் பின்
எண்ணற்கு அரியானைப் போக்கினேன்; எல்லே பாவமே! 237

அவ்வவ் இடம் புக்கு அவ் ஆயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்க்
கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்யாமே,
எவ்வும் சிலை உடை வேடர் கானிடைக் கன்றின் பின்
தெய்வத் தலைவனைப் போக்கினேன்; எல்லே பாவமே! 238

மிடறு மெழுமெழுத்து ஓட வெண்ணெய் விழுங்கிப் போய்ப்
படிறு பல செய்து இப் பாடி எங்கும் திரியாமே,
கடிறு பல திரி கான் - அதரிடைக் கன்றின் பின்
இடற என்பிள்ளையைப் போக்கினேன்; எல்லே பாவமே! 239

வள்ளி நுடங்கு - இடை மாதர் வந்து அலர் தூற்றிடத்
துள்ளி விளையாடித் தோழரோடு திரியாமே,
கள்ளி உணங்கு வெங் கான் - அதரிடைக் கன்றின் பின்
புள்ளின் தலைவனைப் போக்கினேன்; எல்லே பாவமே! 240

பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்ட அப் பாங்கினால்,
என் இளங் கொங்கை அமுதம் ஊட்டி எடுத்து யான்
பொன்னடி நோவப் புலரியே கானிற் கன்றின் பின்
என் இளஞ் சிங்கத்தைப் போக்கினேன்: எல்லே பாவமே! 241





*பற்றும் மஞ்சளை உடம்பில் பூசிக்கொண்டு ஆய்ச்சிறுமிகளின் மணல் வீட்டைக் கலைத்து, எங்கும் தீம்புகள் செய்தபடி திரிய விடாமல், என் பிள்ளை கண்ணனை, வேடர் திரியும் காட்டில், கன்றுகளின் தூசி படியும் படி, மேய்க்கப் போக்கினேனே! இது என்ன பாவம்!* 235

*மணியை ஒத்த நீல நிறமுடைய என் பிள்ளையை, மணி பதித்த மேகலை அணிந்த பெண்களுடன், தன் நீலமேனி புழுதி படியத் தினமும் விளையாடித்திரிய முடியாதபடி, எதிரொலி கேட்கும் மலைக் காட்டு வழியிலே கன்றுகள் மேய்க்க அனுப்பினேனே! என்ன பாவம்!* 236

*கண்ணன், கண்களால் பார்க்க மிகவும் அழகன்; எண்ணங்களுக்கு அப்பாற்பட்டவன். இந்தப் பிள்ளையை, அழகிய கருங்கூந்தலை உடைய பெண்கள் வந்து பழி சொல்லும்படி, தீமைகள் செய்து திரிய விடாமல், கன்றுகளின் பின்னே மேய்க்க அனுப்பினேனே! இது என்ன பாவம்!* 237

*தெய்வத் தலைவன் கண்ணன், மச்சில், மாளிகைகளில் தனியனாய்ப் புகுந்து, ஆய்ப்பெண்களுடன் அந்தரங்கமாகக் கலந்து, கோவைப் பழம் போன்ற உதட்டைக் கொடுத்து, 'நீங்கள் இல்லாமல் நான் இல்லை' என்று கூறுவான். இப்படிக் கூழ்மைத் தனத்துடன் திரிய முடியாதபடி பயங்கரமான, வில்லேந்திய வேடர் திரியும் காட்டிலே, கன்றின் பின்னே போக்கிவிட்டேனே! என்ன பாவம் இது!* 238

*தொண்டையை உறுத்தாமல் மெழுமெழுவென்று செல்லும் வெண்ணெய்யை உண்ட பிறகு ஆய்ச்சேரி எங்கும் தீம்புகள் செய்து திரியாதபடி, கண்ணனை, யானைகள் திரியும் காட்டு வழியிலே கன்றுகளின் பின்னே போக்கினேனே! இது என்ன பாவம்!* 239

*கொடிபோலத் துவளும் இடையை உடைய பெண்கள் பழிக்கும்படி, தோழர்களுடன் துள்ளி விளையாடித் திரிய விடாமல், கருடனுக்குத் தலைவனான என் கண்ணனை, வற்றி உலர்ந்த கள்ளிச் செடிகள் நிறைந்த வெம்மையான காட்டிலே, கன்று மேய்க்கப் போக்கினேனே! இது என்ன பாவம்!* 240

*நான், பன்னிரண்டு மாதங்கள் கண்ணனை வயிற்றில் தாங்கிப் பெற்ற தாய் ஆவேன்; பாசத்துடன் முலைப்பால் ஊட்டி வளர்த்தேன். என் இளஞ்சிங்கமாகிய அப்பிள்ளையை இன்று அதிகாலையில் அவன் திருவடி நொந்து போகும்படி, காட்டிலே கன்றின் பின்னே போகச் செய்தேனே! இது என்ன பாவம்!* 241

குடையும் செருப்பும் கொடாதே தாமோதரனை நான்
உடையும் கடியன ஊன்று வெம் பரற்கள் உடைக்
கடிய வெங் கானிடைக் கால்-அடி நோவக் கன்றின் பின்
கொடியேன் என்பிள்ளையைப் போக்கினேன்; எல்லே பாவமே! 242

என்றும் எனக்கு இனியானை என் மணிவண்ணனைக்
கன்றின் பின் போக்கினேன் என்று அசோதை கழறிய
பொன் திகழ் மாடப் புதுவையர்கோன் பட்டன் சொல்
இன் தமிழ் மாலைகள் வல்லவர்க்கு இடர் இல்லையே. 243

## கண்ணன் கன்று மேய்த்து வரக்கண்டு யசோதை மகிழ்தல்

சீலைக் குதம்பை ஒருகாது, ஒருகாது
செந்நிற மேல் தோன்றிப்பூ;
கோலப் பணைக் கச்சும் கூறை உடையும்
குளிர் முத்தின் கோடாலமும்;
காலிப் பின்னே வருகின்ற கடல்வண்ணன்
வேடத்தை வந்து காணீர்;
ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார், நங்கைமீர்!
நானே மற்று ஆரும் இல்லை. 244

கன்னி நன் மா மதில் சூழ்தரு பூம்பொழில்
காவிரித் தென்னரங்கம்
மன்னிய சீர் மதுசூதனா! கேசவா!
பாவியேன் வாழ்வு உகந்து
உன்னை இளங்கன்று மேய்க்கச் சிறுகாலே
ஊட்டி ஒருப்படுத்தேன்;
என்னின் மனம் வலியாள் ஒரு பெண் இல்லை;
என்குட்டனே! முத்தம் தா. 245

காடுகள் ஊடு போய்க் கன்றுகள் மேய்த்து
மறியோடிக் கார்க்கோடற்பூச்
சூடி வருகின்ற தாமோதரா! கற்றுத்
தூளி காண் உன் உடம்பு;
பேடை மயிற் சாயற் பின்னை மணாளா!
நீராட்டு அமைத்து வைத்தேன்;
ஆடி அமுதுசெய், அப்பனும் உண்டிலன்,
உன்னோடு உடனே உண்பான். 246





*தாயாயிருந்தும் கொடியவளான நான், தாமோதரனுக்குக் குடையும் செருப்பும் கொடாமல், காட்டிற்கனுப்பிவிட்டேனே! காலில் உறுத்தும் கூரிய பரற்கற்கள், வெப்பமான காட்டிலே, கண்ணன் கால் அடி நோகச் செய்யுமே! என் பிள்ளையைக் கன்றின் பின்னே போக்கியது, என்ன பாவமோ!* 242

*'என்றும் எனக்கு இனிமையான மணி வண்ணனைக் காட்டில் இன்று மேய்க்கப் போக்கினேனே' என்று யசோதை கூறியதை அழகிய மாடங்கள் நிறைந்த திருப்புதுவையில் வாழ்பவர்களின் தலைவரான பெரியாழ்வார் அருளிச் செய்தார். இத்தமிழ் மாலையை ஓதுபவர்களுக்குத் துன்பம் இல்லாமற் போகும்.* 243

## கண்ணன் கன்று மேய்த்து வரக்கண்டு யசோதை மகிழ்தல்

*நங்கைமார்களே! கடல் போன்ற நீல நிறக் கண்ணன் தன் ஒரு காதிலே சீலைத் தக்கையையும் மற்றொரு காதில் செங்காந்தள் பூவையும் சூடிக்கொண்டு ஆடை அணிந்தவனாய் அதன் மேலே கச்சைக் கட்டிக் கொண்டு குளிர்ந்த முத்து மாலையையும் தரித்தவனாய்க் கன்றுகளின் பின்னால் வருகின்ற காட்சியைப் பாருங்கள். இவ்வுலகில், என்னைப் போலே நல்ல பிள்ளையைப் பெற்றவர் வேறில்லை.* 244

*கேசவா! அழிக்க இயலாத மதிலால் சூழப்பட்டுக் காவிரிக்குத் தெற்கே சோலைகளுடன் உள்ள, திருவரங்கத்தில், எழுந்தருளி உள்ள மதுசூதனனே! பாவியேனான நான், விடிகாலையிலேயே உனக்கு உணவு ஊட்டி, கன்று மேய்த்தலே வாழ்வென்று எண்ணி, இளங்கன்றின் பின்னே போக விட்டேன். என்னை விடவும் நெஞ்சம் கடியவள் வேறு ஒரு பெண் இல்லை. என் மகனே! எனக்கு முத்தம் தா.* 245

*தாமோதரா! கார்க் கோடல் பூக்களைச் சூடியவனாய், நீ, காட்டில் கன்றுகளை மறித்து ஓட்டி, மேய்த்து வந்தாய்; உன் உடம்பெங்கும் கன்றின் தூசிகள் படிந்துள்ளன. பெண் மயிலின் சாயல்கொண்ட நப்பின்னையின் நாதனே! நீ நீராடத்தயார் செய்துள்ளேன். நீராடியபின் உண்பாய்; உன்னுடன் சாப்பிட வேண்டுமென்று உன் தகப்பனாரும் இதுவரை உண்ணவில்லை. ஆகவே சடக்கென வருவாய்.* 246

கடி ஆர் பொழில் அணி வேங்கடவா! கரும்
போரேறே! நீ உகக்கும்
குடையும் செருப்பும் குழலும் தருவிக்கக்
கொள்ளாதே போனாய், மாலே!
கடிய வெங் கானிடைக் கன்றின்பின் போன
சிறுக்குட்டச் செங் கமல
அடியும் வெதும்பி உன்கண்கள் சிவந்தாய்,
அசைந்திட்டாய்; நீ எம்பிரான்! 247

பற்றார் நடுங்க முன் பாஞ்சசன்னியத்தை
வாய்வைத்த போரேறே! என்
சிற்றாயர் சிங்கமே! சீதை மணாளா!
சிறுக்குட்டச் செங்கண் மாலே!
சிற்றாடையும் சிறுப்பத்திரமும் இவை
கட்டிலில் மேல் வைத்துப் போய்,
கற்றாயரோடு நீ கன்றுகள் மேய்த்துக்
கலந்து உடன் வந்தாய் போலும். 248

அஞ்சுடர் ஆழி உன் கையகத்து ஏந்தும்
அழகா! நீ பொய்கை புக்கு
நஞ்சு உமிழ் நாகத்தினோடு பிணங்கவும்,
நான் உயிர் வாழ்ந்திருந்தேன்;
என்செய்ய என்னை வயிறு மறுக்கினாய்?
ஏதும் ஓர் அச்சம் இல்லை;
கஞ்சன் மனத்துக்கு உகப்பனவே செய்தாய்,
காயாம்பூ வண்ணம் கொண்டாய்! 249

பன்றியும் ஆமையும் மீனமும் ஆகிய
பாற்கடல் வண்ணா! உன்மேல்
கன்றின் உருவாகி மேய்புலத்தே வந்த
கள்ள அசுரர் தம்மைச்
சென்று பிடித்துச் சிறுக்கைகளாலே
விளங்காய் எறிந்தாய் போலும்;
என்றும் என்பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள்
அங்ஙனம் ஆவர்களே. 250

கேட்டு அறியாதன கேட்கின்றேன், கேசவா!
கோவலர் இந்திரற்குக்
காட்டிய சோறும் கறியும் தயிரும்
கலந்து உடன் உண்டாய் போலும்;
ஊட்ட முதல் இலேன் உன்தன்னைக் கொண்டு
ஒருபோதும் எனக்கு அரிது;
வாட்டம் இலாப் புகழ் வாசுதேவா! உன்னை
அஞ்சுவன் இன்று தொட்டும். 251





*மணம் வீசும் சோலைகள் உள்ள திருவேங்கட மலைவாசனே! கருத்த போர்க் காளையே! திருமாலே! நீ விரும்பும் குடை, செருப்பு, புல்லாங்குழல் ஆகியவற்றை தருவித்தும், கொள்ளாமல் கன்று மேய்க்கப் போய் விட்டாய். வெம்மையான காட்டில் கன்றின் பின்னே நடந்த சிறு பிள்ளையாகிய உன் தாமரைத் திருவடிகள் கொதித்துப் போமே! கண்கள் சிவந்து நீயும் இளைத்தாய் எம்பிரானே!* **247**

*இடையர்கள் சிங்கமே! பாரதப் போரிலே பகைவர் நடுங்கும்படி பாஞ்ச சன்னியத்தை வாய் வைத்து ஊதிய போர்க் காளையே! சீதை நாயகனே! என் சிறு பிள்ளையாகிய நீ, உன் சிற்றாடையையும் விளையாடு கருவியான சிறிய வாளையும் கட்டிலில் மறந்து வைத்துவிட்டுப் போய்க் கன்று மேய்த்து ஆயர்களுடன் கலந்து வந்தாயோ! செங்கண் மாலே!* **248**

*ஒளி விடும் சக்கரத்தைக் கையில் ஏந்திய அழகனே! நீ பொய்கையிலே குதித்து நஞ்சைக் கக்கிய காளியன் நாகத்துடன் போர் செய்தாயே! தாயாகிய நான் இதைக் கண்டு அஞ்சியும் உயிர் தாங்கி வாழ்கிறேன். உனக்கு அச்சமே இல்லையே! என்னையோ வயிறு கலங்கச் செய்கிறாய். காயாம்பூ நிறம் கொண்டவா! உன்னுடைய ஆபத்தான இச்செயல்கள் கம்சன் மகிழும் படியானவை.* **249**

*வராஹம், ஆமை, மீன் ஆகிய அவதாரங்களைச் செய்த பாற் கடல் வண்ணா! உன்னைக் கொல்லக் கன்றுகள் வடிவில் மறைந்து நின்ற கள்ள அசுரர்களைக் கொன்றாய். கன்றைக் கைகளில் தூக்கி விளா மரம் மீதெறிந்து காயை உதிரச்செய்வது போல இருவரையும் அழித்தாய். என் பிள்ளையான உனக்குத் தீமை செய்பவர்கள், இப்படித்தான் அழிவார்கள்.* **250**

*கேசவா! உன்னைப் பற்றிக் கேளாத அதிசயங்களைக் கேட்கிறேன். இந்திரனுக்காக இடையர்கள் கொடுத்த சாதம், கறி, தயிர் ஆகியவற்றைக் கலந்து மீதமின்றி உண்டாயே! இப்படிச் செய்யும் உனக்கு, ஒரு வேளை கூட என்னால் உணவூட்ட முடியாது என்றால், நாள்தோறும் ஊட்டுவதற்குக் கைம் முதல் இல்லை. வாடாத புகழுடைய வாசுதேவா! உன் ஆச்சரியங்களால் நான் அஞ்சுகிறேன்.* **251**

திண்ஆர் வெண்சங்கு உடையாய்! திருநாள் திரு-
வோணம் இன்று ஏழு நாள்; முன்,
பண்நேர் மொழியாரைக் கூவி முளை அட்டிப்
பல்லாண்டு கூறுவித்தேன்;
கண்ணாலம் செய்யக் கறியும் கலத்தது,
அரிசியும் ஆக்கி வைத்தேன்;
கண்ணா! நீ நாளைத்தொட்டுக் கன்றின் பின் போகேல்.
கோலம் செய்து இங்கே இரு. 252

புற்றரவு அல்குல் அசோதை நல் ஆய்ச்சி தன்
புத்திரன் கோவிந்தனைக்
கற்றினம் மேய்த்து வரக் கண்டு உகந்து அவள்
கற்பித்த மாற்றம் எல்லாம்
செற்றம் இலாதவர் வாழ்தரு தென்புது -
வை விட்டுசித்தன் சொல்
கற்று இவை பாட வல்லார் கடல்வண்ணன்
கழலிணை காண்பர்களே. 253

## கண்ணன்கன்று மேய்த்து வரும் அழகுகண்டு கன்னியர் காமுறுதல்

தழைகளும் தொங்கலும் ததும்பி எங்கும்
தண்ணுமை எக்கம் மத்தளி தாழ்பீலி
குழல்களும் கீதமும் ஆகி எங்கும்
கோவிந்தன் வருகின்ற கூட்டம் கண்டு,
மழைகொலோ வருகின்றது என்று சொல்லி
மங்கைமார் சாலக வாசல் பற்றி
நுழைவனர் நிற்பனர் ஆகி எங்கும்
உள்ளம் விட்டு ஊண் மறந்து ஒழிந்தனரே. 254

வல்லி நுண் இதழ் அன்ன ஆடை கொண்டு,
வசை அறத் திருவரை விரித்து உடுத்து,
பல்லி நுண் பற்றாக உடைவாள் சாத்தி,
பணைக்கச்சு உந்தி, பல தழை நடுவே
முல்லை நல் நறுமலர் வேங்கை மலர்
அணிந்து பல் ஆயர் குழாம் நடுவே
எல்லியம் போதாகப் பிள்ளை வரும்;
எதிர்நின்று அங்கு இனவளை இழவேன்மினே. 255





*திண்மையான வெண் சங்கேந்தியவனே! இன்றிலிருந்து ஏழாவது நாள், நீ பிறந்த திருவோண நட்சத்திர நன்னாள்; ஆகையால், அவ்விழாவிற்குத் திருமுளைச் சாத்து செய்து பல்லாண்டு பாட, இனிய இசை போன்ற பேச்சை உடைய பெண்களை அழைத்துத் திருக்கல்யாணத்துக்கான சாதத்தையும் கறியமுதையும் தயார் செய்து கலன்களில் வைத்துள்ளேன். ஆகவே கண்ணா! நாளைமுதல் கன்றின் பின் போக வேண்டாம். அலங்காரங்கள் செய்து கொண்டு அகத்திலேயே இரு.* 252

*புற்றுப் பாம்பின் படம் ஒத்த இடையை உடைய அசோதை ஆய்ச்சி, தன் பிள்ளையான கோவிந்தனைக் கன்று மேய்த்து வரக் கண்டு மகிழ்ந்து பேசினாள். அச்சொற்களைப் பொறாமை இலாதவர்கள் வாழும் தென்புதுவைநகர் விட்டுசித்தர் இப்பாசுரங்களாக அருளினார். இவற்றைக் கற்றுப் பாட வல்லவர்கள் கடல் நிறத் திருமாலின் இணை அடிகளை அடைவர்.* 253

## கண்ணன்கன்று மேய்த்து வரும் அழகுகண்டு கன்னியர் காமுறுதல்

*தழை, தொங்கல் என்னும் பீலிக்குடைகளுடன் கோவிந்தனும் ஆயர்கூட்டமும் மிருதங்கம், எக்கம், மத்தளி ஆகிய வாத்தியங்களை வாசித்தவராய்க் கன்று மேய்த்துத் திரும்பினர். மயிற் பீலி தொங்கும் புல்லாங்குழல்களில் இசைத்தவாறு வருகின்ற கண்ணன் கூட்டத்தைக் கண்ட மங்கையர்கள் மேகக் கூட்டமே பவனி வருகிறதோ என்று எண்ணியவராய்த் தங்கள் வீட்டுத்திட்டி வாசல்களில் நுழைந்து கண்ணன் பின்னே தங்கள் நெஞ்சங்களைப் ஓடவிட்டு, உண்பதையே மறந்தனர்.* 254

*கற்பகக் கொடியின் மெல்லிய இதழ் போன்ற ஆடையைக் கண்ணன் தன் அரையில் பழுதில்லாமல் விரிய உடுத்திக் கொண்டிருக்கிறான். அதற்கு மேலே, அரையைச் சுற்றிப் பெரிய கச்சை கட்டிக்கொண்டு உடைவாளைத் தொங்கவிட்டிருப்பது. சுவரைப் பற்றிக் கிடக்கும் பல்லி போன்று உள்ளது. அவன் ஆயர் பலரின் நடுவே, பல பீலிக்குடைகள் விளங்க, மணம் வீசும் முல்லை, வேங்கை மலர் மாலைகளை அணிந்தவனாக, மாலைப் பொழுதில் கன்று மேய்த்துத் திரும்புகிறான். தோழிகளே! நீங்கள், அந்தப் பிள்ளை வரும் வழியில் எதிரே நின்று உங்கள் கைவளைகளை இழந்து விடாதீர்கள்.* 255

சுரிகையும் தெறி - வில்லும் செண்டு - கோலும்
மேலாடையும் தோழன்மார் கொண்டு ஓட
ஒரு கையால் ஒருவன்தன் தோளை ஊன்றி
ஆநிரையினம் மீளக் குறித்த சங்கம்
வருகையில் வாடிய பிள்ளை கண்ணன்
மஞ்சளும் மேனியும் வடிவும் கண்டாள்,
அருகே நின்றாள் என்பெண் நோக்கிக் கண்டாள்;
அது கண்டு இவ் ஊர் ஒன்று புணர்க்கின்றதே. 256

குன்று எடுத்து ஆநிரை காத்த பிரான்
கோவலனாய்க் குழல் ஊதி ஊதிக்
கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு
கலந்து உடன் வருவானைத் தெருவிற் கண்டு
என்றும் இவனை ஒப்பாரை, நங்காய்!
கண்டறியேன், ஏடி! வந்து காணாய்;
ஒன்றும்நில்லா வளை, கழன்று துகில்;
ஏந்து இள முலையும் என் வசம் அல்லவே. 257

சுற்றி நின்று ஆயர் தழைகள் இடச்
சுருள்பங்கி நேத்திரத்தால் அணிந்து,
பற்றி நின்று ஆயர் கடைத்தலையே
பாடவும் ஆடக் கண்டேன்; அன்றிப் பின்,
மற்று ஒருவர்க்கு என்னைப் பேசலொட்டேன்
மாலிருஞ்சோலை எம் மாயற்கு அல்லால்;
கொற்றவனுக்கு இவள் ஆம் என்று எண்ணிக்
கொடுமின்கள்; கொடீராகிற் கோழம்பமே. 258

சிந்துரம் இலங்கத் தன் திருநெற்றிமேல்
திருத்திய கோறம்பும் திருக்குழலும்
அந்தரம் முழவத் தண் தழைக் காவின்கீழ்
வரும் ஆயரோடு உடன் வளைகோல் வீச,
அந்தம் ஒன்று இல்லாத ஆயப் பிள்ளை
அறிந்து அறிந்து இவ் வீதி போதுமாகில்
பந்து கொண்டான் என்று வளைத்து வைத்துப்
பவளவாய் முறுவலும் காண்போம், தோழீ! 259

சாலப் பல் நிரைப் பின்னே தழைக் காவின்கீழ்த்
தன் திருமேனிநின்று ஒளி திகழ,
நீல நல் நறுங்குஞ்சி நேத்திரத்தால்
அணிந்து, பல் ஆயர் குழாம் நடுவே
கோலச் செந்தாமரைக் கண் மிளிரக்
குழல் ஊதி இசை பாடிக் குனித்து ஆயரோடு
ஆலித்து வருகின்ற ஆயப் பிள்ளை
அழகு கண்டு என்மகள் அயர்க்கின்றதே. 260





*உடைவாள், சுண்டுவில், பூச்செண்டுக்கோல், மேலாடை ஆகியவற்றுடன் தோழர்கள் கண்ணன் பின் ஓடி வருகிறார்கள். அவன் ஒரு நண்பனின் தோள்மேல் ஒருகையை ஊன்றியவனாய், மற்றொரு கையில் பசுக்களைத் திருப்பச் சங்கூதுகிறான். தளர்ந்து வரும் என் பிள்ளையின் மஞ்சள் பூசப்பட்ட மேனியழகை நோக்கிய படி வழியிலே நிற்கும் ஒரு பெண்ணை ஊரார் கண்டு, இவர்கள் இருவருள்ளும் தொடர்புள்ளதாகப் பேசுகிறார்களே!* 256

*தோழிப் பெண்ணே! ஆய்க்குலத்தில் பிறந்த கண்ணன் மலையைக் குடையாகத் தூக்கிப் பசுக்களைக் காத்து உதவியவன் அன்றோ! அவன் புல்லாங்குழல் ஊதிக் கொண்டு கன்றுகளைத் தன் தோழர்களுடன் மேய்த்து வருவதைத் தெருவில் கண்டேன். என்றும் இவனை ஒப்பவர் யாருமே இல்லையடீ! அவனைக் கண்ட பிறகு என் அரையாடையும் கைவளையலும் கழல்கின்றன. என் மார்பகங்களும் என் வசம் அல்ல.* 257

*கண்ணன் தன் சுருண்ட தலைமயிரில் மயிற்பீலியை அணிந்துள்ளான்; ஆயர்கள் சுற்றி நின்று கொண்டு பீலிக்குடைகளைப் பிடிக்கவும், தலைவாசலில் ஆடிப்பாடிக்களிப்பதைக் கண்டேன். இத்திருமாலிருஞ் சோலை மாயனுக்கு அல்லால் மற்றுயாருக்கும் என்னை மணம் பேச ஒட்டேன். வெற்றி பொருந்திய இக் கண்ணனுக்கு இவளே தகுந்தவள் என்று நினைத்துக் கொடுங்கள். இல்லையாகில் குழப்பமே உண்டாகும்.* 258

*எல்லையற்ற அழகுடைய ஆய்ப்பிள்ளை, நெற்றியில் சிந்தூரம் விளங்க, நெற்றிப்பட்டம் சூடி, குழல் கற்றை விளங்கத் தோழர்கள் பிடித்த பீலிக்குடைச் சோலைக் கீழ், தடிகளை வீசி வருகிறான். விண்வரை மத்தள ஓசை எழுப்பும் ஆயர்கள் நடுவே, வீதியில் இவன் வருவதால், 'நம் பந்தைக் கொண்டான்' என்று முறையிட்டு வளைப்போம். அப்பொழுது அவன் பவள வாய்ப் புன்சிரிப்பைக் கண்டு மகிழ்வோம்.* 259

*பீலிக் குடைக்கீழ்த் தன் திருமேனி ஒளியுடன் திகழக் கண்ணன் பல பசுக்களின் பின்னே வருகிறான். சுருண்டு இருண்ட தலை மயிர் நடுவே பீலிக்கண் அணிந்த அவன், தன் தாமரைக் கண் மிளிரப் புல்லாங்குழல் ஊதி இசைபாடி, ஆடி, ஆயர்களுடன் களித்து வருகிறான். இந்த இடைப்பிள்ளையின் வடிவழகில் என் மகள் துவண்டு மயங்கி விட்டாள்.* 260

சிந்துரப்பொடி கொண்டு சென்னி அப்பித்
திருநாமம் இட்டு அங்கு ஓர் இலையந்தன்னால்
அந்தரம் இன்றித் தன்நெறி பங்கியை
அழகிய நேத்திரத்தால் அணிந்து
இந்திரன் போல் வரும் ஆயப்பிள்ளை
எதிர்நின்று அங்கு இனவளை இழவேல் என்ன,
சந்தியில் நின்று கண்டீர் நங்கை தன்
துகிலொடு சரிவளை கழல்கின்றதே. 261

வலங் காதின் மேல்தோன்றிப் பூ அணிந்து
மல்லிகை வனமாலை மௌவல் மாலை
சிலிங்காரத்தால் குழல் தாழ விட்டுத்
தீங்குழல் வாய்மடுத்து ஊதி ஊதி
அலங்காரத்தால் வரும் ஆயப் பிள்ளை
அழகு கண்டு என்மகள் ஆசைப்பட்டு
விலங்கி நில்லாது எதிர்நின்று கண்டீர்
வெள்வளை கழன்று மெய்ம் மெலிகின்றதே. 262

விண்ணின்மீது அமரர்கள் விரும்பித் தொழ
மிறைத்து ஆயர் பாடியில் வீதியூடே
கண்ணன் காலிப் பின்னே எழுந்தருளக்
கண்டு, இளஆய்க் கன்னிமார் காமுற்ற
வண்ணம், வண்டு அமர் பொழிற் புதுவையர்கோன்
விட்டுசித்தன் சொன்ன மாலை பத்தும்
பண் இன்பம் வரப் பாடும் பத்தர் உள்ளார்
பரமான வைகுந்தம் நண்ணுவரே. 263

## கோவர்த்தன மலையைக் குடையாய்ப் பிடித்தது

அட்டுக் குவி சோற்றுப் பருப்பதமும்
தயிர்வாவியும் நெய்அளறும் அடங்கப்
பொட்டத் துற்றி மாரிப் பகை புணர்த்த
பொரு மா கடல்வண்ணன் பொறுத்த மலை:
வட்டத் தடங்கண் மட மான் கன்றினை
வலைவாய்ப் பற்றிக் கொண்டு குறமகளிர்
கொட்டைத் தலைப் பால் கொடுத்து வளர்க்கும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 264





*"பெண்ணே! கண்ணன் தன் திருமுடியிலே சிந்தூரப்பொடி அணிந்தவனாய் நெற்றியில் மேல் நோக்கிய நாமத்தை இட்டுக் கொண்டுள்ளான். நெருங்கிய தலைமயிரிலே பீலிக்கண் அணிந்து கொண்டு இந்திரன் போல் வரும் இடைப்பிள்ளை வரும் வழியில் நின்று கொண்டு, நீ உன் வளையை இழந்துவிடாதே" என்று என் பெண்ணிடத்தே கூறினேன். ஆயினும், அவள் சந்தியில் நின்று, கண்ணனிடத்தே தன்னை இழந்து, துகிலுடன், வளையும் கழலும்படி மயங்கி விட்டாள்.* 261

*இடைப்பிள்ளையான கண்ணன் தன் வலக்காதில் செங்காந்தள் பூவைச் சூடியவனாய் சாதாரண மல்லிகை, காட்டு மல்லிகை மாலைகளை அணிந்து கொண்ட அலங்காரத்துடன், திருக்குழல் முதுகில் தாழ, இனிமையாகப் புல்லாங்குழல் ஊதி வருகிறான். என் பெண் இவன் அழகைக்கண்டு ஆசைப்பட்டவளாய், விலகாமல் அவன் முன்னேயே நின்ற வண்ணம் சங்கு வளைகள் கழலத் தன் உடல் மெலிய நின்றாள்.* 262

*மேலுலகத் தேவர்கள் தன்னை வணங்கித்தொழ விரும்புகையில் அவர்களைப் பொருட்படுத்தாது, இறைவன், இடைச் சேரியில் கண்ணனாக எழுந்தருளி வீதியில் பசுக்களை மேய்த்தான். அதைக் கண்டு மனம் இழந்த இளம் பெண்கள் ஆசைப்பட்டதை, வண்டு அமர் சோலையுடைய புதுவை நகர்க்கோன் பெரியாழ்வார் பாசுரங்களில் கூறினார். இச்சொல் மாலையான பத்துப் பாசுரங்களையும் மகிழ்ச்சியுடன் பாடும் பக்தர்கள் மேலான பரமபத, வைகுந்தத்தை அடைவார்கள்.* 263

## கோவர்த்தன மலையைக் குடையாய்ப் பிடித்தது

*இந்திரனுக்கென்று ஆயர்களால் சமைத்துக் குவிக்கப்பட்ட சோறு மலையாக, அதில் விட்ட தயிர் ஓடையாக, கலந்தளாவிய நெய் சேறாக விளங்கிற்று. இவற்றைச் சடக்கெனக் கண்ணன் உண்டு மழையாகிற பகையை உண்டாக்கினான். அலைகடல், நிறம் கொண்ட அவன் அப்பொழுது தூக்கித் தாங்கின மலையே கோவர்த்தனம் ஆகும். வட்டக் கண்களைப் பெற்றுள்ள தாய்ப்பாசம் மிகுந்த மான்கன்றை வலையில் பிடித்துக் குறப்பெண்கள், பஞ்சுச் சுருளின் நுனியாலே பால் ஊட்டி வளர்க்கும் இடம் இந்த மலையே. மழையை வென்ற இம் மலையைக்குடை என்று கூறலாம்.* 264

வழு ஒன்றும் இல்லாச் செய்கை வானவர்கோன்
வலிப்பட்டு முனிந்து விடுக்கப்பட்ட
மழை வந்து எழு நாள் பெய்து மாத் தடுப்ப
மதுசூதன் எடுத்து மறித்த மலை:
இழவு தரியாதது ஓர் ஈற்றுப் பிடி
இளஞ் சீயம் தொடர்ந்து முடுகுதலும்
குழவி இடைக் கால் இட்டு எதிர்ந்து பொரும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 265

அம்மைத் தடங்கண் மட ஆய்ச்சியரும்
ஆனாயரும் ஆநிரையும் அலறி
எம்மைச் சரண் ஏன்றுகொள் என்று இரப்ப
இலங்கு அழிக்கை எந்தை எடுத்த மலை:
தம்மைச் சரண் என்ற தம் பாவையரைப்
புனமேய்கின்ற மானினம் காண்மின் என்று
கொம்மைப் புயக் குன்றர் சிலை குனிக்கும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 266

கடு வாய்ச் சின வெங்கண் களிற்றினுக்குக்
கவளம் எடுத்துக் கொடுப்பான் அவன் போல்
அடிவாய் உறக் கையிட்டு எழப் பறித்திட்டு
அமரர்பெருமான் கொண்டு நின்ற மலை:
கடல்வாய்ச் சென்று மேகம் கவிழ்ந்து இறங்கிக்
கதுவாய்ப் பட நீர்முகந்து ஏறி எங்கும்
குடவாய் பட நின்று மழை பொழியும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 267

வானத்தில் உள்ளீர்! வலியீர் உள்ளீரேல்
அறையோ! வந்து வாங்குமின் என்பவன் போல்
ஏனத்து உரு ஆகிய ஈசன் எந்தை
இடவன் எழ வாங்கி எடுத்த மலை:
கானக் களியானை தன் கொம்பு இழந்து
கதுவாய் மதம் சோரத் தன் கை எடுத்துக்
கூனற் பிறை வேண்டி அண்ணாந்து நிற்கும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 268

செப்பாடு உடைய திருமால் அவன் தன்
செந்தாமரைக் கைவிரல் ஐந்தினையும்
கப்பு ஆக மடுத்து மணி நெடுந்தோள்
காம்பு ஆகக் கொடுத்துக் கவித்த மலை:
எப்பாடும் பரந்து இழி தெள்அருவி
இலங்கு மணி முத்துவடம் பிறழக்
குப்பாயம் என நின்று காட்சிதரும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 269





*குறை இல்லாத இந்திரன் கோபித்து ஏவிய மேகங்கள் ஏழு நாள்கள் மழை பெய்து பசுக்களைத் துன்புறுத்தவும், மதுசூதனன் உடல் வருத்தமின்றித் தலைகீழாகப் பிடித்த மலை. பெண் யானை ஈன்ற தன் குட்டியைத் தாக்க வரும் சிங்கக் குட்டியை எதிர்த்துப் போரிட்டுத் தன் குட்டியைக் கால்களுக்கு நடுவே இடுக்கிக் காப்பாற்றும் மலை கோவர்த்தன மென்னும் வெற்றிக் குடை ஆகும்.* 265

*அகன்ற மைக்கண்களை உடைய மடப்பகுண இடைச்சிகளும் இடையர்களும் அடைக்கலம் வேண்டி அலறவும் ஒளிச் சக்கரம் ஏந்திய இறைவன் தூக்கிப்பிடித்த மலை கோவர்த்தனம் ஆகும். திண்தோள்களை உடைய குறவர்கள், தங்களைக் காப்பவர்களாகக் கொண்ட குறத்திகளின் கண்களைக் கண்டு, 'புனம் மேயும் மான் கூட்டம்' என்றவாறு வில்லை வளைக்கும் கோவர்த்தனம் என்னும் வெற்றிக் குடை ஆகும்.* 266

*கொடிய வாயையும் சினந்த வெப்பக் கண்களையும் உடைய யானைக்குச் சோற்றுக் கவளத்தைத் திரட்டிக் கொடுக்கும் பாகனைப் போல, நித்திய சூரிகள் தலைவனான கண்ணன், மலையின் அடிவேரிலே தன் கையைச் செலுத்தித் தூக்கிய மலை கோவர்த்தனம் ஆகும். மேகங்கள் கடலில் இறங்கிக் கவிழ்ந்து எல்லா நீரையும் முகந்து, மேலேறிக்குடம் நீர் சொரிவது போல மழை பொழியும் மலை கோவர்த்தனம் என்னும் வெற்றிக் குடை ஆகும்.* 267

*"மேலுலகத்தோரே! நீங்கள் வல்லவர்களானால், இங்கே வந்து இம்மலையைத் தூக்குங்கள்!" என்று சவால் விடுபவன் போல, வராஹாவதாரம் எடுத்த இறைவன், மண் கட்டியைப் பெயர்த்து எடுப்பது போலத் தூக்கி நின்ற மலை. களித்துத் திரிந்த காட்டானை தன் கொம்பு முறிபட்டதும், வளைந்த மூன்றாம் பிறையைக் கண்டு தந்தமாக எண்ணி மதநீர்த் தூதிக்கையை மேலெடுத்து அண்ணாந்திடும் மலை கோவர்த்தன வெற்றிக் குடையே.* 268

*செவ்வைக் குணமுடைய திருமாலின் செந்தாமரைக் கை விரல்கள் ஐந்தும் கப்பாக விளங்க, நீல மணி நிற நீண்ட தோளே குடைக்காம்பாகத் தலைகீழாகக் கவிழ்த்த மலை. எங்கும் பரந்து விழும் தெளிந்த அருவிகள் முத்து வடம் போல் ஒளி விடும் பொழுது, அவன் முத்துக் கோத்த சட்டைபோல் தோன்றும், காட்சி உடைய கோவர்த்தனமலை, வெற்றிக் குடையாகும்.* 269

படங்கள் பலவும் உடைப் பாம்புஅரையன்
படர் பூமியைத் தாங்கிக் கிடப்பவன் போல்
தடங்கை விரல் ஐந்தும் மலர வைத்துத்
தாமோதரன் தாங்கு தடவரையன்;
அடங்கச் சென்று இலங்கையை ஈடழித்த
அனுமன் புகழ் பாடித் தம் குட்டன்களைக்
குடங்கைக் கொண்டு மந்திகள் கண்வளர்த்தும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 270

சல மா முகில் பல் கணப் போர்க்களத்துச்
சரமாரி பொழிந்து எங்கும் பூசலிட்டு
நலிவான் உறக் கேடகம் கோப்பவன் போல்
நாராயணன் முன் முகம் காத்த மலை;
இலை வேய் குரம்பைத் தவ மா முனிவர்
இருந்தார் நடுவே சென்று அணார் சொறியக்
கொலை வாய்ச் சின வேங்கைகள் நின்று உறங்கும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 271

வன் பேய்முலை உண்டது ஓர் வாய் உடையன்
வன் தூண் என நின்றது ஓர் வன் பரத்தை
தன் பேர் இட்டுக் கொண்டு தரணி தன்னில்
தாமோதரன் தாங்கு தடவரை தான்;
முன்பே வழி காட்ட முசுக் கணங்கள்
முதுகிற் பெய்து தம் உடைக் குட்டன்களைக்
கொம்பு ஏற்றி இருந்து குதி பயிற்றும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 272

கொடி ஏறு செந் தாமரைக் கைவிரல்கள்
கோலமும் அழிந்தில, வாடிற்று இல,
வடிவு ஏறு திருவுகிர் நொந்தும் இல,
மணிவண்ணன் மலையும் ஓர் சம்பிரதம்;
முடி ஏறிய மா முகிற் பல் கணங்கள்
முன் நெற்றி நரைத்தன போல எங்கும்
குடி ஏறி இருந்து மழை பொழியும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடையே. 273

அரவில் பள்ளிகொண்டு அரவம் துரந்திட்டு
அரவப்பகை ஊர்தி அவனுடைய
குரவிற் கொடி முல்லைகள் நின்று உறங்கும்
கோவர்த்தனம் என்னும் கொற்றக் குடைமேல்
திருவிற் பொலி மறைவாணர் புத்தூர்த்
திகழ் பட்டர்பிரான் சொன்ன மாலை பத்தும்
பரவு மனம் நன்கு உடைப் பத்தர் உள்ளார்
பரமான வைகுந்தம் நண்ணுவரே. 274



5 மு-ஆ



பலபடங்களை உடைய ஆதிசேஷன் பரந்த பூமியைத் தன் தலைகளால் தாங்கிக் கிடப்பதைப் போலத் தாமோதரன் தன் கை விரல்கள் ஐந்தாலும் தாங்கி நின்ற மலை கோவர்த்தனம் ஆகும். விண் வழியே சென்று இலங்கையை முற்றிலும் சீரழித்த அனுமனின் புகழைப் பெண் குரங்குகள் பாடித் தம் குட்டிகளைக் கையிலேந்தித் தூங்கச் செய்யும் கோவர்த்தன மலை வெற்றிக் குடை ஆகும். 270

போர்க்களத்தில் அம்பு மழை போன்று, நீர்கொண்ட கரு மேகத்திரள், இடைச் சேரியில் இடித்து மழை பெய்து துன்புறுத்தவும், மழையிலிருந்து காப்பாற்ற, நாராயணன் கேடகம் கோத்துப் பிடிப்பது போல் தூக்கிப் பிடித்த மலை. கொல்லும் வாயுடைய சினம் கொண்ட புலிகள், இலைகளால் வேயப்பட்ட குடிசைகளில் தவ முனிவர் நடுவே சென்று அவர்கள் தம் கழுத்தைச் சொறியவும், நின்றபடியே உறங்கும் சீர்மை உடைய கோவர்த்தனம் வெற்றிக் குடையாக விளங்கிற்று 271

பூதனைப் பேயின் முலை உண்ட வாயை உடைய தாமோதரன், மிகுந்த பாரத்தைத் தாங்கி நிற்கும் தூணைப் போல, கோவர்த்தனன் என்னும் தன் பெயரை இட்டுக் கொண்டு தாங்கிய மலை அது. குரங்குக் கூட்டங்கள் தத்தம் குட்டிகளை முதுகில் கட்டிக் கொண்டுக் கொம்புக்குக் கொம்பு தாவிக்குதிப்பதைப் பயிற்றும் காட்சி கொண்ட கோவர்த்தனமலை வெற்றிக்குடை ஆகும். 272

கொடி முதலிய ரேகைகள் உள்ள நீலக் கண்ணனின் தாமரைக்கை விரல்கள், மலையைச் சுமந்த போதிலும், அழகு அழியாமல் இருந்தன; வாட்டத்தையும் அடையவில்லை. அழகிய நகங்கள் நோவடையவுமில்லை. தூக்கிய நிலையில் நின்றது கண்கட்டு வித்தை போலிருந்தது. மலைச் சிகரங்கள் மேகத்திரள்கள், தம் நெற்றி நரைத்தாற் போல எங்கும் புகுந்து மழை பெய்தன. இத்தகைய கோவர்த்தனம் வெற்றிக் குடையே. 273

பாம்பின் பகையான கருடனை வாகனமாக உடைய இறைவன், பாம்புப் படுக்கையைவிட்டு ஆய்ப்பாடி வந்து, பாம்பான காளியனை ஓட்டினான். முல்லைக் கொடிகள் குரவ மரங்களில் படர்ந்து உறங்கும், மலையான கோவர்த்தனத்தைத் தூக்கி வெற்றிக் குடை ஆக்கினான். இதனைத் திருமிகுந்த வேதவாணர் வாழும் வில்லி புத்தூர்ப் பெரியாழ்வார் பாசுரங்களாய் அருளினார். இப்பத்துப் பாசுரங்களையும் பயில்பவர் பக்தி மனம் கொண்டு மேலான வைகுந்தம் அடைவர். 274

## கண்ணன் புல்லாங்குழல் ஊதற் சிறப்பு

நாவலம் பெரிய தீவினில் வாழும்
நங்கைமீர்கள்! இது ஓர் அற்புதம் கேளீர்!
தூ வலம்புரி உடைய திருமால்
தூய வாயிற் குழல் ஓசை வழியே
கோவலர் சிறுமியர் இளங் கொங்கை
குதுகலிப்ப உடல் உள் அவிழ்ந்து எங்கும்
காவலும் கடந்து கயிறுமாலை
ஆகி வந்து கவிழ்ந்து நின்றனரே. 275

இட அணரை இடத் தோளொடு சாய்த்து
இருகை கூடப் புருவம் நெரிந்து ஏறக்
குடவயிறு பட வாய் கடைகூடக்
கோவிந்தன் குழல்கொடு ஊதின போது,
மட மயில்களொடு மான்பிணை போலே
மங்கைமார்கள் மலர்க் கூந்தல் அவிழ
உடை நெகிழ ஓர்கையால் துகில் பற்றி
ஒல்கி ஓடு அரிக்கண் ஓட நின்றனரே. 276

வான் இளவரசு வைகுந்தக் குட்டன்
வாசுதேவன் மதுரைமன்னன் நந்த-
கோன் இளவரசு கோவலர் குட்டன்
கோவிந்தன் குழல்கொடு ஊதின போது,
வான் இளம்படியர் வந்து வந்து ஈண்டி
மனம் உருகி மலர்க்கண்கள் பனிப்பத்
தேன் அளவு செறி கூந்தல் அவிழச்
சென்னி வேர்ப்பச் செவி சேர்த்து நின்றனரே. 277

தேனுகன் பிலம்பன் காளியன் என்னும்
தீப்பப் பூடுகள் அடங்க உழக்கிக்
கானகம் படி உலாவி உலாவிக்
கருஞ்சிறுக்கன் குழல் ஊதின போது,
மேனகையொடு திலோத்தமை அரம்பை
உருப்பசியர் அவர் வெள்கி மயங்கி
வானகம் படியில் வாய் திறப்பு இன்றி
ஆடல் பாடல் இவை மாறினர் தாமே. 278





கண்ணன் புல்லாங்குழல் ஊதற் சிறப்பு

*பெரிய நாவல் தீவென்னும் பாரதத்தில் வாழும் நங்கையர்களே! இதோ ஓர் அதிசயத்தைக் கேளுங்கள். தூய வலம்புரிச் சங்கேந்திய திருமகள் கேள்வன், தன் தூய வாயில் புல்லாங்குழல் வைத்து ஊதினான். அந்த இசையைக் கேட்ட ஆயர்சிறுமியர், தங்கள் உடலும் உள்ளமும் குலையத் தங்களை இழந்தனர்; மார்பகங்கள் கிளர்ந்தன. இசை ஒலியே வழிகாட்டத் தங்கள் காவலையும் கடந்து, கயிற்றில் சேர்ந்த மாலைகள் போலத் திரண்டு வந்தனர். கண்ணனைக் கண்டு நாணத்தில் கவிழ்ந்தனர்.* **275**

*கோவிந்தன் தன் இடது மோவாயை இடது தோளில் சாய்த்த படி, இரு கைகளாலும் புல்லாங்குழல் வாசித்தான். அவன் புருவங்கள் நெளிந்து மேலேறின; வயிறு குடம் போலாயிற்று. உதடுகள் குவிந்து குழல் துளைகளில் துழாவின. குழலோசை கேட்ட ஆயர் மங்கையர் தங்கள் ஆடை நெகிழ, ஒரு கையாலே சேலையைப் பிடித்தவாறு நாணி, அவன் பக்கத்தே நின்றார்கள். தங்கள் கூந்தல் அவிழ்ந்த நிலையில் மட மயில்கள் போலவும், செவ்வரிக் கண்கள் ஓடிப் பார்ப்பதில் மான் பேடைகள் போலவும் காட்சி தந்தனர்.* **276**

*பரமபத இளவரசன் வைகுந்த நாதன் வசுதேவர் மகனாகப் பிறந்து வட மதுரை அரசன் ஆனான். நந்தகோபன் பிள்ளையாய் இடையர்களின் இளவரசு ஆனான். இந்த கோவிந்தன் புல்லாங் குழலில் ஊதின இசை கேட்ட, இளந்தேவ மாதர், குழலிசை வழி காட்ட வந்து திரண்டனர்; மனம் உருகினர். அவர்கள் பூக்கண்கள் பனிப்ப, நெற்றி வியர்த்தது. கூந்தல் அவிழ்ந்து அலைய, அதனால், தலைப்பூ விழத் தேனும் துளிர்த்தது. அவர்கள் இவ்வாறு இசைகேட்டு நின்றனர்.* **277**

*கொடிய பூண்டுகளைப் போன்ற தேனுகன், பிலம்பன், காளியன் ஆகியவர்களைக் கண்ணன் அழித்தான். கருத்த திருமேனி கொண்ட அப்பிள்ளை விருப்பமுடன் காட்டில் உலாவுகிற பொழுது புல்லாங்குழல் ஊதினான். அந்த இசையைக் கேட்ட, மேனகை, திலோத்தமை, அரம்பை, உருப்பசி ஆகிய தேவருலக நடனமங்கையர் மயங்கினர். தங்கள் தாழ்ச்சியாலே வெட்கமடைந்து, 'இனி வானகத்தும் பூமியிலும் வாய் திறந்து பாடவோ ஆடவோ மாட்டோம்' என்று, பிறர் தூண்டுதல் இன்றித்தாங்களே அவற்றைத் தவிர்த்தார்கள்.* **278**

முன் நரசிங்கமது ஆகி அவுணன்
முக்கியத்தை முடிப்பான், மூவுலகில்
மன்னர் அஞ்சும் மதுசூதனன் வாயிற்
குழலின் ஓசை செவியைப் பற்றி வாங்க,
நன் நரம்பு உடைய தும்புருவோடு
நாரதனும் தம் தம் வீணை மறந்து
கின்னர மிதுனங்களும் தம் தம்
கின்னரம் தொடுகிலோம் என்றனரே. 279

செம் பெருந் தடங்கண்ணன் திரள் தோளன்
தேவகி சிறுவன் தேவர்கள் சிங்கம்
நம் பரமன் இந்நாள் குழல் ஊதக்
கேட்டவர்கள் இடர் உற்றன கேளீர்!
அம்பரம் திரியும் காந்தப்பர் எல்லாம்
அமுத கீத வலையால் சுருக்குண்டு
நம் பரம் அன்று என்று நாணி மயங்கி
நைந்து சோர்ந்து கைம்மறித்து நின்றனரே. 280

புவியுள் நான் கண்டது ஓர் அற்புதம் கேளீர்!
பூணி மேய்க்கும் இளங்கோவலர் கூட்டத்து
அவையுள் நாகத்துஅணையான் குழல் ஊத
அமரலோகத்து அளவும் சென்று இசைப்ப,
அவியுணா மறந்து வானவர் எல்லாம்
ஆயர்பாடி நிறையப் புகுந்து ஈண்டிச்
செவி உணாவின் சுவை கொண்டு மகிழ்ந்து
கோவிந்தனைத் தொடர்ந்து என்றும் விடாரே. 281

சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்ய வாய் கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல்கொடு ஊதின போது,
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
கவிழ்ந்து இறங்கிச் செவி ஆட்டகில்லாவே. 282

திரண்டு எழு தழை மழைமுகில் வண்ணன்
செங்கமல மலர் சூழ் வண்டினம் போலே
சுருண்டு இருண்ட குழல் தாழ்ந்த முகத்தான்
ஊதுகின்ற குழல்ஓசை வழியே,
மருண்டு மான் கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்த புல்லும் கடைவாய் வழி சோர
இரண்டு பாடும் துலுங்காப் புடைபெயரா
எழுது சித்திரங்கள் போல நின்றனவே. 283





நரசிம்மாவதாரம் எடுத்து இரணியாசுரனை அழித்த இறைவன் மூவுலக அரசர்களும் நடுங்கும்படி 'மது' என்பவனையும் கொன்றான். இக்கண்ணன் ஊதிய புல்லாங்குழல் இசை நல்ல நரம்பு வீணையுடைய தும்புரு நாரதர் செவியிற்படவும் அவர்கள் தம் வாசிப்பை மறந்தனர். கின்னரரும் தம் வாசிப்பை விட்டனர். 279

திரண்ட தோள்களும் செங்கண்ணும் உடைய தேவகியின் மகன் தேவர்களுக்குச் சிங்கம் என்றாலும் நமக்கு எளியன். அவன் குழலிசை கேட்டவர்கள் பட்ட துன்பங்களைக் கேளுங்கள். விண்ணில் திரியும் கந்தர்வர் அவன் அமுத கீத வலையில் கட்டுப் பட்டுத் தம்மால் பாட இயலாமல் வெட்கி மயங்கினர்; நைந்து சோர்ந்தபடி அவர்கள் தம் கைகளைக் கட்டிய படி நின்றனர். 280

உலகில் நான் கண்ட அதிசயம் ஒன்றைக் கேளுங்கள். கன்றுகள் மேய்க்கும் இடையரிடையே, அனந்தசயனன் ஊதிய குழலோசையைக் கேட்ட தேவர்கள், தம் அவிர்ப்பாக உணவை மறந்து, ஆய்ப்பாடி நிறையும் படி வந்து நெருங்கினர். தத்தம் செவிகளையே நாவாகக் கொண்டு குழலினிமையைச் சுவைத்துக் கோவிந்தனைப் பிரியாதிருந்தனர். 281

தன் சிறிய விரல்கள் துளைகளைத் தடவிப் பரிமாறச் செங்கண்கள் வளைந்து பார்க்கச் சிவந்த கடைவாயைக் குவித்தபடி, புருவம் மேலே கிளர்ந்து வளையக் கோவிந்தன் புல்லாங்குழல் ஊதினான். அப்பொழுது பறவை இனங்கள் தத்தம் கூடுகளை விட்டுக் கண்ணனிடம் வந்து, வெட்டி விழுந்த காடு போலே சூழ்ந்து, தம்மை மறந்தன. பசுவினங்களும் கால்களைப் பரப்பியபடி தலைகளைக் கவிழ்த்தபடி காதுகள் அசையாமல் கேட்டன. 282

கண்ணன் திரண்டெழுந்து தழைக்கும் மேக நிறமுடையவன். செந்தாமரைப் பூவைச் சூழும் வண்டினம் போல், அவன் முகத்தில் இருண்ட முன் மயிர் விழுந்தது. மான் கூட்டங்கள், கண்ணனின் குழலோசையைக் கேட்டதும், அறிவிழந்து மேய்ச்சலை மறந்தன. வாயிற்கவ்விய புல், கடைவாய் வழியே விழ, முன்பின் அசையாமல், பக்கங்களில் பெயராமல் சுவர் ஓவியம் போலச் செயலற்று நின்றன. 283

கருங்கண் தோகை மயிற் பீலி அணிந்து
கட்டி நன்கு உடுத்த பீதக ஆடை
அருங்கல உருவின்ஆயர் பெருமான்
அவனொருவன் குழல் ஊதின போது,
மரங்கள் நின்று மது தாரைகள் பாயும்;
மலர்கள் வீழும்; வளர் கொம்புகள் தாழும்,
இரங்கும், கூம்பும்; திருமால் நின்ற நின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே. 284

குழல் இருண்டு சுருண்டு ஏறிய குஞ்சிக்
கோவிந்தனுடைய கோமள வாயிற்
குழல் முழைஞ்சுகளின் ஊடு குமிழ்த்துக்
கொழித்து இழிந்த அமுதப் புனல்தன்னைக்
குழல் முழவம் விளம்பும் புதுவைக்கோன்
விட்டுசித்தன் விரித்த தமிழ் வல்லார்
குழலை வென்ற குளிர் வாயினராகிச்
சாதுகோட்டியுள் கொள்ளப் படுவாரே. 285

## மகளின் இளமைக்குத் தாய் இரங்குதல்

ஐய புழுதி உடம்பு அளைந்து இவள்
பேச்சும் அலந்தலையாய்ச்
செய்ய நூலின் சிற்றாடை செப்பன்
உடுக்கவும் வல்லள் அல்லள்;
கையினில் சிறுதூதை யோடு இவள்
முற்றில் பிரிந்தும் இலள்
பை அரவணைப் பள்ளியானொடு
கைவைத்து இவள்வருமே. 286

வாயிற் பல்லும் எழுந்தில; மயி
ரும் முடி கூடிற்றில;
சாய்வு இலாத குறுந்தலைச் சில
பிள்ளைகளோடு இணங்கி
தீ இணக்கு இணங்கு ஆடி வந்து இவள்
தன் அன்ன செம்மை சொல்லி,
மாயன் மா மணிவண்ணன்மேல் இவள்
மால் உறுகின்றாளே. 287





*இடையர் தலைவனான கண்ணன் கறுத்த மயிலிறகுகளைத் திருமுடியில் அணிந்து, பீதக ஆடை உடுத்தியவனாய், அணிகலன் களைப் பூண்டு, விளங்கினான். ஒப்பற்ற அவன் குழல் ஊதியபொழுது, மரங்கள் ஒருபடிப் பட்டு உள்ளுருகித் தேன்தாரைகளைப் பொழிந்தன; பூக்கள் விழுந்தன. மேலே நிமிரும் கொம்புகள் தலைதாழ்ந்தன. இசையில் தம்மை மறந்து, கொம்புகள் கை கூப்புவது போலக் குவிந்தன. அவைகளின் குணம் தான் என்னே!* 284

*சுருண்டு இருண்டு நீண்டு வளர்ந்த தலைமயிருடைய கோவிந்தன், தன் வாயில் வைத்து ஊதிய புல்லாங்குழல் துளைகளின் வழியே கிளர்ந்த இசை அமுதப்புனலாக ஓடிற்று என்று புதுவைக் கோன் பெரியாழ்வார் அருளினார். இத்தமிழ்ப் பாசுரங்களை ஓதவல்லவர்கள், குழலோசையையும் வெல்லும் குளிர்ந்த பேச்சுடைய வைணவச் சான்றோர் கூட்டத்தில், ஏற்றுக் கொள்ளப்படுவார்கள்.* 285

## மகளின் இளமைக்குத் தாய் இரங்குதல்

*இளஞ்சிறுமியான என் மகள் தன் உடம்பெல்லாம் அழகிய புழுதி படிந்தவளாய் வந்தாள். அதன் காரணத்தை நான் கேட்டால், மனம் கலங்கி வேறுபேச்சுப் பேசுகிறாள். மேலும், சிவந்த நூலால் நெய்யப்பட் தன் சிற்றாடையைக் கூட ஒழுங்காக உடுத்திக் கொள்ளத் தெரியவில்லை. கையிலோ மணற் சோறாக்கும் பானையையும் சிறுசுளகையும் விடாமல் வைத்துக் கொண்டிருக்கும், இவள் பேதைப் பருவம் தான் என்னே! ஆயினும், இவள், படத்தை உடைய ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டவனுடன் கை கலந்து வருகிறாளே! இது என்னே!* 286

*குழந்தைப் பெண்ணான என் மகள் வாயில், எல்லாப் பற்களும் முளைக்க வில்லை; தன் தலைமயிரைச் சேர்த்து முடிக்கக் கூடத் தெரியாத பருவம் இது. ஆயினும், இவள், தாய்க்கடங்காத சில பெண்களுடன் பொல்லாத நட்புக் கொண்டு கலந்து வருகிறாள். 'யாருடன் சேர்ந்தாய்?' என்று கேட்டால், தன் செயலை மறைக்க, நேர்மை உடையவள் போலச் செம்மையாகப் பதில் கூறுகிறாள். கூடவே, மாயன், மணிநிறக்கண்ணனின் அழகை வியந்து இவள் பேசுவது, சேராச் சேர்த்தியாக இருக்கிறது. இவள் கண்ணனிடத்தே காதல் கொண்டு பித்தேறினாள் போல் தோன்றுகிறது.* 287

பொங்கு வெண்மணல் கொண்டு சிற்றிலும்
முற்றத்து இழைக்கலுறில்
சங்கு சக்கரம் தண்டு வாள் வில்லும்
அல்லது இழைக்கலுறாள்;
கொங்கை இன்னம் குவிந்து எழுந்தில;
கோவிந்தனோடு இவளைச்
சங்கை யாகி என் உள்ளம் நாள்தொறும்
தட்டுளுப்பு ஆகின்றதே. 288

ஏழை பேதை ஓர் பாலகன் வந்து என்
பெண்மகளை எள்கி,
தோழிமார் பலர் கொண்டுபோய்ச் செய்த
சூழ்ச்சியை யார்க்கு உரைக்கேன்?
ஆழியான் என்னும் ஆழ மோழையில்
பாய்ச்சி அகப்படுத்தி
மூழை உப்பு அறியாது என்னும்
மூதுரையும் இலளே. 289

நாடும் ஊரும் அறியவே போய்
நல்ல துழாய் அலங்கல்
சூடி நாரணன் போம் இடம் எல்லாம்
சோதித்து உழிதருகின்றாள்;
கேடு வேண்டுகின்றார் பலர் உளர்,
கேசவனோடு இவளைப்
பாடுகாவல் இடுமின் என்று என்று
பார் தடுமாறினதே. 290

பட்டம் கட்டிப் பொற்றோடு பெய்து இவள்
பாடகமும் சிலம்பும்
இட்ட மாக வளர்த்து எடுத்தேனுக்கு
என்னோடு இருக்கலுறாள்;
பொட்டப் போய்ப் புறப்பட்டு நின்று இவள்
பூவைப் பூவண்ணா! என்னும்;
வட்ட வார் குழல் மங்கைமீர்! இவள்
மால் உறுகின்றாளே. 291

பேசவும் தரியாத பெண்மையின்
பேதையேன் பேதை இவள்
கூசமின்றி நின்றார்கள் தம் எதிர்
கோல் கழிந்தான் மூழையாய்,
கேசவா! என்றும் கேடிலீ! என்றும்
கிஞ்சுக வாய் மொழியாள்
வாச வார்குழல் மங்கைமீர்! இவள்
மால் உறுகின்றாளே. 292





என்மகள் முற்றத்திலே வெள்ளைப் பொடி மணலால் சிறுவீடு கட்டி விளையாடுகையில், சங்கு, சக்கரம், கதை, வாள், வில் ஆகிய ஐந்து ஆயுதங்களையும் வரைகிறாளே அன்றி வேறு இழைக்கவில்லை. முலைகளே இன்னும் குவிந்தெழாத என் சிறுமிக்குக் கோவிந்தனுடன் தொடர்புண்டோ என்ற சந்தேகத்தில் என் மனம் தினமும் தடுமாறுகிறது. 288

ஏழைத்தனமான சபலத்தையும், விளைவு அறியாப் பேதைமையையும், உடைய என் இளம்பருவமகளைப் பல தோழிகள்கூட்டிப் போய் ஆழமான ஆற்றின் அடிச்சுழலிலே அகப்படுத்துவதுபோலே, சக்கரக் கையனின் காதலில் தள்ளி விட்டனர். இச் சூழ்ச்சியை யாரிடம் கூறுவேன்? ‘அகப்பை உப்பறியாது’ என்னும் பழமொழிக்கும் பொருத்தமிலாத இவள் கலந்து பரிமாறும் சுவை அறியாதவள். 289

ஆய்ப்பாடி நாட்டாரும் ஊராரும் அறியும் படி என் மகள் வீட்டை விட்டு வெளியே போய் விட்டாள். நாராயணனுடன் கலந்த அடையாளமாகத் துழாய் மாலைசூடி, அவள், அவனைத் தேடித் திரிகிறாள். எங்கள் குலத்துக்கோ கெடுதல் விரும்புவர் பலருண்டு. ஆகையால் பாரிலுள்ள நல்லவர்கள், “நீங்கள் இவளைக் கேசவனுடன் சேர்த்துவிட்டு அந்தப்புரக்காவலில் வையுங்கள்” என்று பதறுகின்றனர். 290

நீண்டு சுருண்ட கூந்தலுடைய மங்கையீர்! என் மகளை அவள் விரும்பிய படியெல்லாம் சீராட்டி வளர்த்தேன். நெற்றிப் பட்டம் கட்டிக் காதில் பொன்தோடு போட்டு, பாடகம் சிலம்புகளை அணிவித்து, இடுப்பில் எடுத்தபடி திரிந்தேன். இப்பெண்ணோ திடீரென்று என்னை விட்டகன்று தெருவில் யாவரும் காண, ‘காயாம்பூ நிறத்தவனே!’ என்று கதறிக் கண்ணனிடத்தே பித்தேறினாள். 291

மணம் வீசும் கூந்தல் மங்கையரே! என் பேதை மகள் குற்றமாக ஒரு சொல் கேட்கவும் பொறாத பெண்மை உடையவள்; கிளிபோலப் பேசுபவள். கோலைவிட்டு நீங்கிய அகப்பை போல் என் உறவை அறுத்துக் கொண்டாள். மாதர்கள் முன்னே கூசாமல், “கேசவா! கேடற்ற அச்சுதா!” என்று பித்தேறிப் பேசுகிறாள். 292

காறை பூணும், கண்ணாடி காணும், தன்
கையில் வளை குலுக்கும்;
கூறை உடுக்கும், அயர்க்கும், தன்
கொவ்வைச் செவ்வாய் திருத்தும்;
தேறித் தேறி நின்று ஆயிரம் பேர்த்
தேவன் திறம் பிதற்றும்;
மாறில் மா மணிவண்ணன்மேல் இவள்
மால் உறுகின்றாளே. 293

கைத்தலத்து உள்ள மாடு அழியக்
கண்ணாலங்கள் செய்து இவளை
வைத்து வைத்துக்கொண்டு என்ன வாணிபம்?
நம்மை வடுப்படுத்தும்
செய்த்தலை எழு நாற்றுப் போல் அவன்
செய்வன செய்துகொள்ள
மைத் தடமுகில் வண்ணன் பக்கல்
வளர விடுமின்களே. 294

பெருப் பெருத்த கண்ணாலங்கள் செய்து
பேணி நம் இல்லத்துள்ளே
இருத்துவான் எண்ணி நாம் இருக்க,
இவளும் ஒன்று எண்ணுகின்றாள்;
மருத்துவப் பதம் நீங்கினாள் என்னும்
வார்த்தை படுவதன்முன்,
ஒருப்படுத்து இடுமின் இவளை
உலகளந்தான் இடைக்கே. 295

ஞாலம் முற்றும் உண்டு ஆலிலைத் துயில்
நாராயணனுக்கு இவள்
மாலதாகி மகிழ்ந்தனள் என்று
தாய் உரை செய்ததனை
கோலம் ஆர் பொழில் சூழ் புதுவையர்கோன்
விட்டுசித்தன் சொன்ன
மாலை பத்தும் வல்லவர்கட்கு
இல்லை வரு துயரே. 296





இவள் பொன்காறையைத் தன் கழுத்தில் அணிந்து கொள்கிறாள்; கண்ணாடி முன் நின்று பார்த்துப் பூரிக்கிறாள். தன் கைவளையல்களை அசைத்துப்பார்த்துக் கொள்கிறாள். காறைக்குத் தக்க புடவையை ஒழுங்கு பட உடுத்திக் கொள்கிறாள். அவன் வராததால் தளர்கிறாள். மீண்டும் ஒப்பனையை மேலாக்கக் கோவைப் பழம் போன்ற உதட்டை செம்பூச்சால் சிவக்கச் செய்கிறாள். மிகத்தெளிவுடன் தரித்தவளாய்த் தேவனின் ஆயிரம் திருநாமங்களைப் பேசிப் பதற்றுகிறாள். நீல நிறக் கண்ணனிடத்தே பித்தேறி விட்டாளே! 293

"நமக்கு அடங்காத பெண்ணை ஆணையிட்டும் காவலில் வைத்தும் கைச்செல்வம் அழியும்படி கல்யாணம் செய்து என்ன பயன்? நம் குலத்துக்குப் பழி தான் உண்டாகும்" என்று தாயார் கூறினாள். அதைக் கேட்ட பந்துக்கள், "வயலிலே வளருகிற நாற்றைப் பிடுங்கி, நட்டவன், தான் வேண்டியபடி மாற்றி நடுவது போலே, இவள், விரும்பும் கண்ணன் இவளை அடையும் படி செய்வதே சரியாகும். கருத்த மேக நிறக் கண்ணனுடன் இவளைச் சேர்த்து விடுங்கள்" என்று கூறினார்கள். 294

"மிகப்பெரிய கல்யாணங்களைச் செய்து குலத்தைப் பேணி, இவளை நம் வீட்டில் இருத்தி வைக்க நாம் நினைத்தோம். ஆனால் இப்பெண்ணோ நமக்கு எதிராகவே எண்ணுகிறாள்." என்று தாயார் கூறினாள். இதைக் கேட்ட பந்துக்கள், "'பதம் பாராமல் செய்யும் மருந்து கெடுவது போல, இவள் தன்மையை நாம் பாராததால் கைவிட்டுப் போகிறாள்' என்கிற உலகப் பேச்சு உண்டாவதற்கு முன்னே உலகளந்தானிடத்தே இவளைச் சேர்த்து விடுங்கள்." என்றார்கள். 295

'உலகங்களை வயிற்றிலே வைத்து ஓர் ஆலந்தளிரிலே திருக்கண் வளர்ந்த நாராயணனிடத்தில் என் மகள் காதல் கொண்டு மகிழ்ந்தாள்' என்று திருத்தாயார் பேசினாள். அப்பேச்சை, அழகு மிக்க சோலைகள் சூழ்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர்த் தலைவர் பெரியாழ்வார் சொல் மாலையாக அருளிச் செய்தார். இப் பத்துப் பாடல்களையும் ஓத வல்லவர்களுக்கு, இறை அனுபவத்துக்கு எதிரான துயரம் உண்டாகாது. 296

## தலைவனுடன் சென்ற மகளைக் குறித்துத் தாய் வருந்துதல்

நல்லது ஓர் தாமரைப் பொய்கை
நாண்மலர் மேல் பனி சோர,
அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு,
அழகழிந்தால் ஒத்ததாலோ!
இல்லம் வெறியோடிற்றாலோ!
என்மகளை எங்கும் காணேன்;
மல்லரை அட்டவன் பின்போய்
மதுரைப் புறம் புக்காள் கொல்லோ? 297

ஒன்றும் அறிவு ஒன்று இல்லாத
உருவறைக் கோபாலர் தங்கள்
கன்று கால் மாறுமா போலே,
கன்னி இருந்தாளைக் கொண்டு
நன்றும் கிறி செய்து போனான்;
நாராயணன் செய்த தீமை
என்றும் எமர்கள் குடிக்கு ஓர்
ஏச்சுக்கொல் ஆயிடுங் கொல்லோ? 298

குமரி மணம் செய்து கொண்டு,
கோலம் செய்து இல்லத்து இருத்தி,
தமரும் பிறரும் அறியத்
தாமோதரற்கு என்று சாற்றி,
அமரர் பதியுடைத் தேவி
அரசாணியை வழிபட்டு,
துமிலம் எழப் பறை கொட்டித்
தோரணம் நாட்டிடுங் கொல்லோ? 299

ஒரு மகள் தன்னை உடையேன்,
உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்;
செங்கண் மால் தான் கொண்டு போனான்
பெரு மகளாய்க் குடி வாழ்ந்து
பெரும்பிள்ளை பெற்ற அசோதை
மருமகளைக் கண்டு உகந்து
மணாட்டுப் புறம்செய்யுங் கொல்லோ? 300





## தலைவனுடன் சென்ற மகளைக் குறித்துத் தாய் வருந்துதல்

அழகிய தாமரைப் பொய்கையிலே பூத்த புதிய பூவின் மேல் பனி விழுவதால் அதன் உள்ளிதழும் பொடிகளும் உதிர்ந்து அழகற்றுப் போவது போல, வீடு, ஆள் நடமாட்டமின்றி ஆகிவிட்டது. என் மகள் வீட்டை வெட்டு வெளியேறியதால் வெறிச்சென்றிருக்கிறது. அவளைத் தேடியும் எங்கும் காண முடியவில்லை. மதுரைக்குப் புறத்தே உள்ள ஆய்ப்பாடியிலே அவள் புகுந்தாளோ? சாணூர, முஷ்டிக மல்லர்களை அழித்த கண்ணன் ஊரன்றோ அது! 297

உலகியல் அறிவும் ஆத்ம ஞானமும் தோற்றப்பொலிவும் சிறிது கூட இல்லாத இடையர்கள், கன்றுகளை மாற்றித் திருடிப் போவது போல, என் கன்னி மகளை நாராயணன் தன்னுடன் அழைத்துப் போய்விட்டான். எனக்கு இதுவரை அடங்கி இருந்த அவளை அவன் தக்க சூழ்ச்சி செய்து கொண்டு போன தீம்பு எங்கள் குலத்துக்கு எப்பொழுதும் தீராப் பழி ஆகிவிட்டது. இது புகழ் ஆகுமா? 298

என் மகளுக்குத் திருமணவிழா சிறப்பாக நடைபெறுமா? அவளை ஆடை அணிகலன்களால் ஒப்பனை செய்து திருமண மண்டபத்தில் இருத்தி, கன்னிப்பெண்ணுக்குச் செய்யும் மங்கலச் சடங்கு செய்து, பறை கொட்டி. 'தாமோதரனான கண்ணனுக்குக் கொடுக்கிறோம்' என்று நிச்சயதார்த்தம் நடத்துவார்களா? தேவராஜனின் தேவியான இவளைக்குல வழக்கப்படி, அலங்கார பீடத்தூணான அரசங்கிளையை வலம் செய்யச் செய்வார்களா? ஆரவாரத்துடன் பறையை முழக்கி ஊரெங்கும் தோரணம் கட்டித் திருமணம் பெரிய விழாவாக நடக்குமோ? குடிப்பிறந்தார், கொண்டாட்டம் வேண்டாம் என்று விட்டு விடுவார்களோ? அறியேன். 299

இவளோ எனக்கு ஒரே மகள்; உலகமெங்கும் பரவிய புகழுடன் இவளைத் திருமகள் போலச் சீராட்டி வளர்த்தேன். ஆனால் இப்பொழுதோ செங்கண் திருமால் இவளைத் தன்னுடன் கொண்டு போய் விட்டான். என்றாலும், பெரிய இல்லத்தலைவியாய் குடி வாழ்க்கை வாழும் யசோதை பெருமையுள்ள கண்ணனைப் பெற்ற ஏற்றத்தால், என் மகளை மருமகளாக ஏற்று, மகிழ்ந்து, மணவாட்டிக்குச் செய்யும், சீர்களைச் செய்வாளோ? அல்லது சாதாரணமாய்க்கொண்டு சீர்மை செய்யாதிருப்பாளோ? 300

தம் மாமன் நந்தகோபாலன்
தழீஇக் கொண்டு, என் மகள் தன்னைச்
செம்மாந்திரே என்று சொல்லி,
செழுங் கயற் கண்ணும் செவ்வாயும்
கொம்மை முலையும் இடையும்
கொழும்பணைத் தோள்களும் கண்டிட்டு,
இம் மகளைப் பெற்ற தாயர்
இனித் தரியார் என்னுங் கொல்லோ? 301

வேடர் மறக்குலம் போலே,
வேண்டிற்றுச் செய்து என்மகளைக்
கூடிய கூட்டமே யாகக்
கொண்டு குடி வாழுங் கொல்லோ?
நாடும் நகரும் அறிய
நல்லது ஓர் கண்ணாலம் செய்து,
சாடு இறப் பாய்ந்த பெருமான்
தக்கவா கைப்பற்றுங் கொல்லோ? 302

அண்டத்து அமரர் பெருமான்
ஆழியான் இன்று என்மகளைப்
பண்டப் பழிப்புக்கள் சொல்லிப்
பரிசு அற ஆண்டிடுங் கொல்லோ?
கொண்டு குடிவாழ்க்கை வாழ்ந்து
கோவலப் பட்டம் கவித்துப்
பண்டை மணாட்டிமார் முன்னே
பாதுகாவல் வைக்குங் கொல்லோ? 303

குடியிற் பிறந்தவர் செய்யும்
குணம் ஒன்றும் செய்திலன், அந்தோ!
நடை ஒன்றும் செய்திலன், நங்காய்!
நந்தகோபன் மகன் கண்ணன்;
இடை இருபாலும் வணங்க
இளைத்து இளைத்து என்மகள் ஏங்கிக்
கடைகயிறே பற்றி வாங்கிக்
கை தழும்பு ஏறிடுங் கொல்லோ? 304

வெண்ணிறத் தோய் தயிர் தன்னை
வெள்வரைப்பின் முன் எழுந்து
கண் உறங்காதே இருந்து
கடையவும் தான்வல்லள் கொல்லோ?
ஒண்ணிறத் தாமரைச் செங்கண்
உலகளந்தான் என்மகளைப்
பண் அறையாப் பணிகொண்டு
பரிசு அற ஆண்டிடுங் கொல்லோ? 305





என் மகளுக்கு மாமனாரான நந்தகோபர் மருமகளைத் தம் மடியில் அணைத்தவாறு வைத்துக்கொள்ளும்போது, ‘வெட்கப் படாமல் தலை நிமிர்ந்தவாறு இரு’ என்று அன்புடன் பேசுவாரோ? கயல் மீன் போன்ற கண்களையும் சிவந்த உதட்டையும், திரண்ட மார்பையும், மூங்கிலை ஒத்த தோள்களையும் உடைய இப் பெண்ணின் வடிவழகைக் கண்டு, ‘இவள்தாய், இவளைப்பிரிந்தபின் தரிக்கமாட்டாள்’ என்று கூறுவாரோ? அல்லது பேசாமல் இருப்பாரோ? 301

வேடர்கள், மறவர்கள் குலத்தார் போலே, என் மகளுக்குத் திருமணம் மிகவும் சாதரணமாய் இருந்து விடலாகாதே! ‘ஆணும் பெண்ணும் நெஞ்சு பொருந்திய குடிவாழ்க்கை போதும்; விழா வேண்டாம்’ என்றிருந்து விடுவார்களோ? சகடத்தை முறியும் படி உதைத்த கண்ணன், நாட்டாரும் நகரத்தாரும் அறியும்படி, மிகவும் உயர்ந்த முறையில், ஒப்பற்ற திருமண விழா நடத்திக் குலமுறைக் கேற்றபடி என் மகளைக் கைப்பிடிப்பானோ! 302

நித்திய சூரிகள் தலைவனான சக்கராயுதம் தாங்கிய இறைவன் என் மகளிடத்தே, குணக்குறை, அழகுக்குறைகளை ஏறிட்டு வரிசைகெட ஒதுக்குவானோ? அல்லது, தான் முன்பே மணந்த பட்டதரசிகள் முன்பு இவளையும் சமமாகக் கொண்டு, ‘இடைக் குலத்தலைவி’ என்று பட்டங்கட்டி, தன் குடிவாழ்க்கைக்கு ஏற்ப அந்தப்புரத்தில் பிரியமாய், வைத்துக் கொள்வானோ? 303

நங்காய்! நந்தகோபர் மகனான கண்ணன், தன் உயர்ந்த குலத்துக்கேற்ப, இவளைத் திருமண நிச்சயம் செய்து கூட்டிப் போக வில்லை; குணத்தில் ஒன்றும் செய்யவில்லை; உலக நடைக்கேற்ப ஒரளவு கூட நடந்து கொள்ளவில்லை. ஐயோ! என் மகள், தன் இடுப்பு வளைய, மூச்சுத்திணற, கயிற்றைப் பிடித்து இழுத்துக் கடைகிற வேலையால் மிகவும் இளைத்துப் போவாள். அவள் மெல்லிய கையில் தழும்பு ஏறுமே! 304

மெல்லிய என் மகளால், பின்னிரவில் உறங்காது, கிழக்கு வெளுப்பதற்கு முன்னே அன்றாடம் எழுந்திருக்க இயலாதே! தோய்க்கப்பட்ட வெண்மையான தயிரைக்கடைய, சக்தி இல்லாதவள் ஆயிற்றே! செந்தாமரைக் கண்ணுடைய உலகளந்த பெருமான் என் மகளைத் தாழ்ந்த வேலைகளுக்கு ஏவிப் பெருமை இல்லாமல் அடிமைப்படுத்தி ஆள்வானோ? அறியேன். 305

மாயவன் பின்வழி சென்று வழியிடை மாற்றங்கள் கேட்டு
ஆயர்கள் சேரியிலும் புக்கு அங்குத்தை மாற்றமும் எல்லாம்
தாயவள் சொல்லிய சொல்லைத் தண் புதுவைப் பட்டன் சொன்ன
தூய தமிழ் பத்தும் வல்லார் தூ மணிவண்ணனுக்குஆளரே. 306

## உந்தி பறத்தல்

என் நாதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள்
தன் நாதன் காணவே தண்பூ மரத்தினை
வன் நாதப் புள்ளால் வலியப் பறித்திட்ட
என் நாதன் வன்மையைப் பாடிப் பற!
எம்பிரான் வன்மையைப் பாடிப் பற! 307

என் வில்வலி கண்டு போ என்று எதிர்வந்தான்
தன் வில்லினோடும் தவத்தை எதிர்வாங்கி
முன் வில் வலித்து முதுபெண் உயிருண்டான்
தன் வில்லின் வன்மையைப் பாடிப் பற!
தாசரதி தன்மையைப் பாடிப் பற! 308

உருப்பிணி நங்கையைத் தேர் ஏற்றிக் கொண்டு
விருப்புற்று அங்கு ஏக விரைந்து எதிர் வந்து
செருக்கு உற்றான் வீரம் சிதையத் தலையைச்
சிரைத்திட்டான் வன்மையைப் பாடிப் பற!
தேவகி சிங்கத்தைப் பாடிப் பற! 309

மாற்றுத்தாய் சென்று வனம்போகே என்றிட
ஈற்றுத்தாய் பின்தொடர்ந்து எம்பிரான்! என்று அழ
கூற்றுத் தாய் சொல்லக் கொடிய வனம் போன
சீற்றம் இலாதானைப் பாடிப் பற!
சீதை மணாளனைப் பாடிப் பற! 310

பஞ்சவர் தூதனாய்ப் பாரதம் கைசெய்து
நஞ்சு உமிழ் நாகம் கிடந்த நற் பொய்கை புக்கு
அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டு அருள்செய்த
அஞ்சன வண்ணனைப் பாடிப் பற!
அசோதைதன் சிங்கத்தைப் பாடிப் பற! 311

முடி ஒன்றி மூவுலகங்களும் ஆண்டு உன்
அடியேற்கு அருள் என்று அவன்பின் தொடர்ந்த
படியில் குணத்துப் பரத நம்பிக்கு அன்று
அடிநிலை ஈந்தானைப் பாடிப் பற!
அயோத்தியர் கோமானைப் பாடிப் பற! 312





மாயவனுடன் போன என் மகள், போகும் வழியில் கலந்துரையாடிப் பின் ஆய்ப்பாடி புகுந்து, அங்குள்ளோர்க்கு ஏற்ப நடந்ததைத் தாய்ப் பேச்சாகப் புதுவைப் பட்டர்பிரான் பாடினார் இத்தமிழ்ப் பாசுரங்களை ஓதுபவர் மணி வண்ணனுக்கு அடிமை செய்வர். 306

## உந்தி பறத்தல்

என் தலைவன் கண்ணனின் தேவி சத்தியபாமைக்கு, இந்திராணி கற்பகப் பூவைத் தர மறுத்தபொழுது, அவன் வேத வடிவமான கருடனைக் கொண்டு இந்திரன் முன்பே கற்பக மரத்தைப் பிடுங்கி, சத்தியபாமை வீட்டில் நட்டான். இந்நாதனின் வன்மையைப் பாடி உந்திபற. எம்பிரான் வல்லமையைப் பாடிப்பற. 307

'என்வில்வலி கண்டு போ' என்று எதிர்த்த பரசுராமன் தவத்தையும் வில்லையும், ஸ்ரீ ராமன், எதிர்வாங்கி அழித்தான். முன்பேயே அரக்கி தாடகையின் உயிரை, வில்வளைத்து உண்டான். அவ்வில்லின் வன்மையைப் பாடி உந்திபற. தசரத குமாரனின் தன்மையைப் பாடிப்பற. 308

ருக்குமிணிப் பிராட்டியைத் தேரிலே ஏற்றிப் போகிற பொழுது, போர் செய்ய விருப்பமுடன் வந்தெதிர்த்த செருக்குடைய ருக்மனின், வீரம் அழியும்படி, அவன் தலையை அம்பாலே சிதைத்துத் தப்பவிட்ட கண்ணனின் வன்மையைப் பாடிப்பற. தேவகி மகனைப் பாடிப் பற. 309

தன் தாயை ஒத்த சுமித்திரை 'காடுபோகிறாயே!' என்று கலங்கவும், பெற்ற தாயான கோசலை பின் தொடர்ந்து 'எம்பிரானே!' என்று கதறி அழவும், யமன் போன்ற கொடிய தாயான கைகேயி சொற் கொண்டு, கொடிய காடு சென்ற, கோபமில்லாத இராமனைப் பாடிப்பற; சீதை கணவனைப்பாடி உந்திபற. 310

கண்ணன் பாரதப்போரிலே பஞ்ச பாண்டவர்க்குத் தூதனாக உதவினான்; கொடிய பொய்கையில் குதித்து நஞ்சு கக்கிய காளிய நாகத்தின் படங்களின் மேலே பாய்ந்து அடக்கி, அருள் செய்தான். மை நிறம் கொண்ட இக்கண்ணனைப் பாடிப்பற, யசோதை சிங்கத்தைப்பாடி உந்திபற. 311

'திருமுடி சூடி மூவுலகங்களையும் ஆண்டு, அடியேனுக்கு அருளவேண்டும்' என்று வேண்டிய, ஒப்பற்ற குணவான் பரத நம்பிக்கு, அன்று தன் பாதுகைகளை அளித்தவனைப் பாடிப்பற. அயோத்தி அரசனான இராமனைப் பாடிப்பற. 312

காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன்
நீள்முடி ஐந்திலும் நின்று நடம்செய்து
மீள அவனுக்கு அருள்செய்த வித்தகன்
தோள் வலி வீரமே பாடிப் பற!
தூமணி வண்ணனைப் பாடிப் பற! 313

தார்க்கு இளந்தம்பிக்கு அரசு ஈந்து தண்டகம்
நூற்றவள் சொற்கொண்டு போகி நுடங்கு இடைச்
சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு அவள்
ஆர்க்க அரிந்தானைப் பாடிப் பற!
அயோத்திக்கு அரசனைப் பாடிப் பற! 314

மாயச் சகடம் உதைத்து மருது இறுத்து
ஆயர்களோடு போய் ஆநிரை காத்து அணி
வேயின் குழல் ஊதி வித்தகனாய் நின்ற
ஆயர்கள் ஏற்றினைப் பாடிப் பற!
ஆநிரை மேய்த்தானைப் பாடிப் பற! 315

காரார் கடலை அடைத்திட்டு இலங்கை புக்கு
ஓராதான் பொன்முடி ஒன்பதோடு ஒன்றையும்
நேரா அவன் தம்பிக்கே நீள் அரசு ஈந்த
ஆராவமுதனைப் பாடிப் பற!
அயோத்தியர் வேந்தனைப் பாடிப் பற! 316

நந்தன் மதலையைக் காகுத்தனை நவின்று
உந்தி பறந்த ஒளியிழையார்கள் சொல்
செந்தமிழ்த் தென்புதுவை விட்டுசித்தன் சொல்
ஐந்தினோடு ஐந்தும் வல்லார்க்கு அல்லல் இல்லையே. 317

### சீதையிடம் அனுமன் கூறிய அடையாளங்கள்

நெறிந்த கருங்குழல் மடவாய்! நின் அடியேன் விண்ணப்பம்;
செறிந்த மணி முடிச் சனகன் சிலை இறுத்து நினைக் கொணர்ந்தது
அறிந்து அரசு களைகட்ட அருந்தவத்தோன் இடை விலங்கச்
செறிந்த சிலைகொடு தவத்தைச் சிதைத்ததும் ஓர் அடையாளம். 318

அல்லியம்பூ மலர்க்கோதாய்! அடிபணிந்தேன் விண்ணப்பம்;
சொல்லுகேன் கேட்டருளாய், துணைமலர்க் கண் மடமானே!
எல்லியம் போது இனிதிருத்தல் இருந்தது ஓர் இட வகையில்
மல்லிகை மா மாலைகொண்டு அங்கு ஆர்த்ததும் ஓர் அடையாளம். 319





*பொய்கை கலங்கும்படி, காளிய நாகத்தின் மேல் பாய்ந்து ஐந்து பணங்கள் மீதும் நின்று நடனம் ஆடி அடக்கி அருள் செய்த வித்தகன் தோள் வலிமையைப் பாடிப்பற, தூமணி வண்ணனைப் பாடிப்பற.* 313

*தம்பி பரதனுக்குப் பாதுகை அரசைக் கொடுத்துத் தண்டகாரணியம் போகச் சொன்ன கைகேயி சொல் கேட்டுப் போய், அங்கே, துவண்ட இடையுடைய சூர்ப்பணகையின் காதையும் மூக்கையும் கதறக் கதற அறுத்தவனைப் பாடிப்பற, அயோத்தி அரசனைப் பாடிப்பற.* 314

*வஞ்சச் சகடத்தை உதைத்து மருத மரத்தை முறித்து இடையர்களுடன் காட்டில் பசு மேய்த்துப் புல்லாங்குழல் ஊதி நின்ற வித்தகன், இடையர் தலைவனைப் பாடிப் பற. பசுவினம் மேய்த்தவனைப் பாடிப்பற.* 315

*கருங்கடலை மலைகளால் அடைத்து இலங்கை புகுந்து, தன் வீரத்தை மதிக்காத இராவணின் பத்துத் தலைகளையும் அறுத்து, அவன் தம்பிக்கு ஆட்சி கொடுத்த ஆராவமுதனைப் பாடிப் பற. அயோத்தி அரசனைப் பாடிப்பற.* 316

*நந்தகோபன் பிள்ளை கண்ணனையும் காகுத்தனான இராமனையும் மாறி மாறிப் புகழ்ந்து பாடிக் குதித்த பெண்களின் உரையாடலைச் செந்தமிழிலே தென்புதுவைப் பெரியாழ்வார் அருளினார். இப்பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்களுக்கு எந்தத் துன்பமும் இல்லை.* 317

### சீதையிடம் அனுமன் கூறிய அடையாளங்கள்

*அடர்ந்து நீண்ட கூந்தலையும் மடப்பகுணத்தையும் உடைய பிராட்டியே! உம் அடியவன் விண்ணப்பமாவது:- ஸ்ரீராமர் மணிமுடி அணிந்த ஜனகப் பேரரசன் முன் வில்லை முறித்து உம்மைக் கைப்பிடித்து வரும் வழியில் அரசகுலத்தைக் களைபிடுங்கிய பரசுராம முனிவன் எதிர்க்கவும், கைவில்வாங்கி அவன் கர்வத்தையும் தவத்தையும் அறுத்தது ஓர் அடையாளம்.* 318

*அல்லி மலர் மாலை போன்றவரே! மலர்க் கண்களையும் மடப்ப குணமும் உடைய மான் போன்றவரே! அடியேன் விண்ணப்பம் கேட்டருள்க. பெருமாளும் தேவரீரும் தனியாக இனிதிருந்த இடத்தே, இரவிலே ஒரு மல்லிகை மாலை கொண்டு அவரைத் தேவரீர் கட்டியதும் ஓர் அடையாளம் ஆகும்.* 319

கலக்கிய மா மனத்தனளாய்க் கைகேசி வரம் வேண்ட
மலக்கிய மா மனத்தனனாய் மன்னவனும் மறாது ஒழியக்
குலக்குமரா! காடு உறையப் போ என்று விடை கொடுப்ப
இலக்குமணன் தன்னொடும் அங்கு ஏகியது ஓர் அடையாளம். 320

வார் அணிந்த முலை மடவாய்! வைதேவீ! விண்ணப்பம்;
தேர் அணிந்த அயோத்தியர்கோன் பெருந்தேவீ! கேட்டருளாய்,
கூர் அணிந்த வேல் வலவன் குகனோடும் கங்கைதன்னிற்
சீர் அணிந்த தோழமை கொண்டதும் ஓர் அடையாளம். 321

மான் அமரும் மென்நோக்கி! வைதேவீ! விண்ணப்பம்;
கான் அமரும் கல்அதர் போய்க் காடு உறைந்த காலத்துத்
தேன் அமரும் பொழிற் சாரல் சித்திரகூடத்து இருப்பப்
பால்மொழியாய்! பரதநம்பி பணிந்ததும் ஓர் அடையாளம். 322

சித்திரகூடத்து இருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட
அத் திரமே கொண்டு எறிய அனைத்து உலகும் திரிந்து ஓடி
வித்தகனே! இராமாவோ! நின் அபயம் என்று அழைப்ப
அத்திரமே அதன்கண்ணை அறுத்ததும் ஓர் அடையாளம். 323

மின் ஒத்த நுண் இடையாய்! மெய் அடியேன் விண்ணப்பம்;
பொன் ஒத்த மான் ஒன்று புகுந்து இனிது விளையாட
நின் அன்பின் வழிநின்று சிலை பிடித்து எம்பிரான் ஏகப்
பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததும் ஓர் அடையாளம். 324

மைத் தகு மா மலர்க்குழலாய்! வைதேவீ! விண்ணப்பம்;
ஒத்த புகழ் வானரக்கோன் உடன் இருந்து நினைத் தேட
அத்தகு சீர் அயோத்தியர்கோன் அடையாளம் இவைமொழிந்தான்
இத் தகையால் அடையாளம்; ஈது அவன் கைம் மோதிரமே. 325

திக்கு நிறை புகழாளன் தீ வேள்விச் சென்ற நாள்
மிக்க பெரும் சபை நடுவே வில் இறுத்தான் மோதிரம் கண்டு
ஒக்குமால் அடையாளம், அனுமான்! என்று உச்சிமேல்
வைத்துக்கொண்டு உகந்தனளால் மலர்க்குழலாய் சீதையுமே. 326





நல்ல மனமுடைய கைகேயி கூனியால் அறிவு கலங்கி வரம் வேண்ட, தசரத மன்னனும் மனம் குழம்பி மறுக்க முடியாமல் மயங்கி விழந்தான். அப்பொழுது இராமனை வரவழைத்த கைகேயி, 'குலக்குமரா! வனவாசம் போ!' என்று ஆணையிட, இலக்குவனுடன் இராமன் காடு சென்றதும் ஓர் அடையாளம் ஆகும். 320

கச்சணிந்த மார்பும் மடப்ப குணமும் உடைய வைதேகித் தாயே இராமன் பெருமைக் கேற்ற தேவியே! அடியேன் விண்ணப்பம். பெருமாள் ஸ்ரீராமன் கங்கைக் கரையிலே வேல் தொழில்வல்ல குகனுடன் சீர்மை மிகுந்த தோழமை கொண்டதும் ஓர் அடையாளம். 321

மான் பார்வையும் பாலினும் இனிய பேச்சும் உடைய வைதேகித் தேவியே! அடியேன் விண்ணப்பம் கல்பாதை கடந்து, காட்டில் வாழும் காலத்தில், தேன் துளிர்க்கும் சோலை உடைய சித்திர கூட மலை அடிவாரத்தில், பரத நம்பி, பணிந்து சரணாகதி செய்து, நாட்டிற்கு வர அழைத்ததும் ஓர் அடையாளம். 322

சித்திர கூடத்தில் தேவரீரும் பெருமாளும் தனியாய் இருக்கிற பொழுது, ஜயந்தன் காசு வடிவில் தேவரீர் மார்பைத் தீண்டினான். ஸ்ரீராமர் ஒரு புல்லிலே பிரம்மாத்திரத்தை ஏவிட, உலகெல்லாம், ஓடிய அவனும், முடிவில், 'உன் அபயம்! வித்தகா! ராமா!' என்று அடைக்கலம் புகுந்தான். அப்பொழுது அவனைக் கொல்லாமல் ஒரு கண்ணை மட்டும் அறுத்தது ஓர் அடையாளம். 323

மின்னலை ஒத்த நுண்ணிடைப் பிராட்டியே! அடியேன் விண்ணப்பம் . பொன் நிறமான மான் பர்ணசாலை முன், புகுந்து இனிதே விளையாடவும், தேவரீர் அதை அடைய ஆசைப்படவும், எம்பிரான் வில்லுடன் அதன்பின் போக, பிற்பாடு இலக்குவனும் தேவரீரைப் பிரிந்ததும் ஓர் அடையாளம். 324

பூச்சூடிய கருங்கூந்தலுடன் முன்பு விளங்கிய வைதேகித் தாயே! அடியேன் விண்ணப்பம். ஸ்ரீராமரின் இன்ப துன்பங்களில் பங்கு கொள்ளும் வானரத் தலைவர் சுக்ரீவர், உம்மைத் தேடும் பணியில் அடியேனை அனுப்பவும், பெருமாள் இவ்வடையாளங்களை எல்லாம் அருளினார். இதோ அவர் கைமோதிரமும் காண்க. 325

திக்கெலாம் புகழ்பெற்ற ஜனகனின் வேள்விச் சாலையில் வில் முறித்த பெருமாள் கை மோதிரத்தை, சீதை கண்டு மகிழ்ந்து, 'அனுமானே! நீ கூறிய அடையாளங்களும், இந்த மோதிர அடையாளமும் ஒத்துள்ளன' என்றாள். அதனை தன் தலை மேல் வைத்து உள்ளம் உகந்தாள். 326

வார் ஆரும் முலை மடவாள் வைதேவி தனைக் கண்டு
சீர் ஆரும் திறல் அனுமன் தெரிந்து உரைத்த அடையாளம்
பார் ஆரும் புகழ்ப் புதுவைப் பட்டர்பிரான் பாடல் வல்லார்
ஏர் ஆரும் வைகுந்தத்து இமையவரோடு இருப்பாரே. 327

## திருமாலைக் கண்ட சுவடு உரைத்தல்

கதிர் ஆயிரம் இரவி கலந்து எறித்தால் ஒத்த நீள்முடியன்
எதிர் இல் பெருமை இராமனை இருக்கும் இடம் நாடுதிரேல்,
அதிரும் கழற்பொருதோள் இரணியன் ஆகம் பிளந்து அரியாய்
உதிரம் அளைந்த கையோடு இருந்தானை உள்ளவா கண்டார் உளர். 328

நாந்தகம் சங்கு தண்டு நாண் ஒலிச் சார்ங்கம் திருச்சக்கரம்
ஏந்து பெருமை இராமனை இருக்கும் இடம் நாடுதிரேல்,
காந்தள் முகிழ் விரற் சீதைக்கு ஆகிக் கடுஞ்சிலை சென்று இறுக்க
வேந்தர்தலைவன் சனகராசன்தன் வேள்வியிற்கண்டார் உளர். 329

கொலையானைக் கொம்பு பறித்துக் கூடலர் சேனை பொருது அழியச்
சிலையால் மராமரம் எய்த தேவனைச் சிக்கென நாடுதிரேல்,
தலையால் குரக்கினம் தாங்கிச் சென்று தடவரை கொண்டு அடைப்ப
அலை ஆர்கடற்கரை வீற்றிருந்தானை அங்குத்தைக் கண்டார் உளர். 330

தோயம் பரந்த நடுவு சூழலிற் தொல்லை வடிவு கொண்ட
மாயக் குழவி யதனை நாடுறில் வம்மின், சுவடு உரைக்கேன்;
ஆயர் மடமகள் பின்னைக்கு ஆகி அடல் விடை ஏழினையும்
வீயப் பொருது வியர்த்து நின்றானை மெய்ம்மையே கண்டார் உளர். 331

நீர் ஏறு செஞ்சடை நீலகண்டனும் நான்முகனும் முறையால்
சீர் ஏறு வாசகஞ் செய்ய நின்ற திருமாலை நாடுதிரேல்,
வார் ஏறு கொங்கை உருப்பிணியை வலியப் பிடித்துக் கொண்டு
தேர் ஏற்றிச் சேனை நடுவு போர்செய்யச் சிக்கெனக் கண்டார் உளர். 332

பொல்லா வடிவு உடைப் பேய்ச்சி துஞ்சப் புணர்முலை வாய்மடுக்க
வல்லானை மா மணிவண்ணனை மருவும் இடம் நாடுதிரேல்,
பல்லாயிரம் பெருந் தேவிமாரொடு பௌவம் ஏறி துவரை
எல்லாரும் சூழச் சிங்காசனத்தே இருந்தானைக் கண்டார் உளர். 333





*கச்சணிந்த மார்பும் மடப்பகுணமும் உடைய வைதேகிப் பிராட்டியைச் சீர்மை சிறந்த அனுமன் சந்தித்துத் தெளிவாகக் கூறிய அடையாளங்களைப் பார் புகழ்ப் புதுவைப் பட்டர்பிரான் பாடினார். இவற்றை ஓதுபவர்கள் நித்திய சூரிகளுடன் இருப்பார்கள்.* **327**

## திருமாலைக் கண்ட சுவடு உரைத்தல்

*ஆயிரம் கதிர்களுடைய ஆயிரம் சூரியர்கள் கலந்து ஒளி விடுவது போல் விளங்கும், கிரீடம் அணிந்த இராமன் இருக்குமிடம் தேடுகிறீர்களா? ஒலிக்கும் கழலும் போரிடும் தோளும் உடைய இரணியனின் மார்பைப் பிளந்து இரத்தம் அளைந்த கையை உடைய நரசிம்மனைக் கண்டவர் உளர்.* **328**

*நாந்தகம், சங்கு, தண்டு, ஒலிக்கும் சார்ங்கவில், சக்கரம் ஆகியவற்றை ஏந்தும் ஸ்ரீராமன் இருக்கும் இடம் தேடுகிறீர்களா? காந்தள் பூ இதழ் ஒத்த விரல்களுடைய சீதையைப் பெற அரசர்முன், ஜனக ராஜன் வேள்விச் சாலையில் வலிய வில்லை முறித்ததைக் கண்டவர் உளர்.* **329**

*'கொல்ல வந்த குவலயா பீட யானைக் கொம்பை முறித்தவன்; கரதூடன அரக்கர் சேனை அழியப் போர் செய்தவன்; ஏழு மரங்களை வில்லால் ஊடுருவச் செய்தவன்; என்னும் பெருமைகள் உடைய தேவனை உறுதியாய்க் காண விரும்புகிறீர்களா? வானரங்கள் மலைகளால் அணைகட்டுவதைக் கண்டவாறு கடற்கரையில் வீற்றிருந்த இராமனைக் கண்டவர் உளர்.* **330**

*பரந்து நீர் சூழ்ந்த முடிவுக் காலத்தே, ஆச்சரியமாய், ஒரு குழந்தை வடிவில் உலகங்களை வயிற்றில் அடக்கியவனைத் தேடுபவர்களுக்கு ஓர் அடையாளம் கூறுகிறேன். ஆய்ப்பெண் நப்பின்னையைப் பெற ஏழு எருதுகளுடன் வியர்வை கொட்டப் போரிட்டு நின்றவனை உண்மையாகக் கண்டவர் உள்ளனர்.* **331**

*பெருமாளின் ஸ்ரீபாத தீர்த்தத்தைத் தாங்கிய சடையுடைய நீலகண்டனும் நான்முகனும் முறையாகத் தோத்தரிக்கும் ஏற்றமுடைய திருமாலைத் தேடுகிறீர்களா? கச்சணிந்த மார்புடைய ருக்குமணியை வலியச் சென்று கைப்பிடித்துத் தேர் ஏற்றும் பொழுதில் போர் செய்ததைக் கண்டவர் உளர்.* **332**

*பொல்லாத பூதனை மாள, அவள் முலையிலே வாய் வைத்த நீல நிறக் கண்ணன் இருக்கும் இடம் தேடுகிறீர்களா? துவாரகையில் பதினாயிரம் தேவிமார்கள் சூழ, சிம்மாசனத்தில் இருந்த கிருஷ்ணனைக் கண்டவர் உள்ளனர்.* **333**

வெள்ளை விளிசங்கு வெஞ்சுடர்த் திருச்சக்கரம் ஏந்து கையன்
உள்ள இடம் வினவில், உமக்கு இறை வம்மின், சுவடு உரைக்கேன்;
வெள்ளைப் புரவிக் குரக்கு வெல்கொடித் தேர்மிசை முன்புநின்று
கள்ளப் படைத்துணை ஆகிப் பாரதம் கைசெய்யக் கண்டார் உளர். 334

நாழிகை கூறு இட்டுக் காத்து நின்ற அரசர்கள்தம் முகப்பே
நாழிகை போகப் படை பொருதவன் தேவகி தன் சிறுவன்
ஆழிகொண்டு அன்று இரவி மறைப்பச் சயத்திரதன் தலையைப்
பாழில் உருளப் படை பொருதவன் பக்கமே கண்டார் உளர். 335

மண்ணும் மலையும் மறிகடல்களும் மற்றும் யாவும் எல்லாம்
திண்ணம் விழுங்கி உமிழ்ந்த தேவனைச் சிக்கென நாடுதிரேல்,
எண்ணற்கு அரியது ஓர் ஏனம் ஆகி இருநிலம் புக்கு இடந்து
வண்ணக் கருங்குழல் மாதரோடு மணந்தானைக் கண்டார் உளர். 336

கரிய முகில் புரை மேனி மாயனைக் கண்ட சுவடு உரைத்துப்
புரவி முகம்செய்து செந்நெல் ஓங்கி விளை கழனிப் புதுவைத்
திருவிற் பொலி மறைவாணன் பட்டர்பிரான் சொன்ன மாலை பத்தும்
பரவும் மனம் உடைப் பத்தர் உள்ளார் பரமன் அடிசேர்வர்களே. 337

## திருமாலிருஞ்சோலை – 1

அலம்பா வெருட்டாக் கொன்று திரியும் அரக்கரைக்
குலம் பாழ் படுத்துக் குலவிளக்காய் நின்ற கோன் மலை;
சிலம்பு ஆர்க்க வந்து தெய்வ மகளிர்கள் ஆடும் சீர்ச்
சிலம்பாறு பாயும் தென் திருமாலிருஞ் சோலையே. 338

வல்லாளன் தோளும் வாள் அரக்கன் முடியும் தங்கை
பொல்லாத மூக்கும் போக்குவித்தான் பொருந்தும் மலை;
எல்லா இடத்திலும் எங்கும் பரந்து பல்லாண்டு ஒலி
செல்லா நிற்கும் சீர்த் தென் திருமாலிருஞ் சோலையே. 339

தக்கார் மிக்கார்களைச் சஞ்சலம் செய்யும் சலவரைத்
தெக்கு ஆம் நெறியே போக்குவிக்கும் செல்வன் பொன்மலை;
எக் காலமும் சென்று சேவித்திருக்கும் அடியரை
அக் கான் நெறியை மாற்றும் தண் மாலிருஞ் சோலையே. 340





*விளிக்கின்ற வெண் சங்கையும், ஒளிச்சுடர்ச் சக்கரத்தையும் ஏந்திய கையன் இருக்குமிடம் கேட்டால் அடையாளம் சொல்கிறேன். வெள்ளைக் குதிரை பூட்டிக் குரங்குக் கொடிகட்டிய தேர்முன் நின்று கள்ளத்தனமாய்ப் பாரதப் போர் செய்தவனைக் கண்டவர் உளர்.* 334

*நாழிகைகளைக் கணக்கிட்டவாறு ஜயத்திரதனைக் காவல் செய்த அரசர்கள் முன்னே, தேவகி புதல்வன், பகல் முப்பது நாழிகைகளும் போனதாகத் தோன்றும்படி செய்தான். தன் சக்கரத் தாலே, சூரியனை மறைத்து ஜயத்திரதன் தலை உருளச் செய்தவனை, போரிட்ட அர்ஜுனன் பக்கம் கண்டவர் உள்ளனர்.* 335

*மண், மலை, கடல் மற்றெல்லாம் பிரளய காலத்தில் உண்டு, வெளிப்படுத்திக் காக்கும் இறைவனைக் காண நாடுபவர்களே! நினைக்க அரிய வராஹ வடிவத்தில் உலகை எடுத்துக் காத்துக் கருங்கூந்தல் பூமாதேவியை மணந்தவனைக் கண்டவர் உளர்.* 336

*குதிரை முகம் போல் நெற்கதிர் வளர்ந்த வயல்களுடைய வில்லி புத்தூரில், வைணவத்திரு வாய்க்கப்பெற்று விளங்கிய பெரியாழ்வார், மேகநிற மாயனைக் கண்ட சுவடுகளைப் பாசுரங்களில் பாடினார். இப்பத்தையும் பயில்பவர் பக்தராகிப் பரமன் அடி சேர்வார்கள்.* 337

## திருமாலிருஞ்சோலை – 1

*தேவ மாதர்கள், பாதச் சிலம்பொலிக்க நீராடும் பெருமை உடைய சிலம்பாறு, பாய்ந்தோடும் இடம் தென்னாட்டுத் திருமா லிருஞ்சோலை ஆகும். உயிரினங்களை அலைத்துப் பயமுறுத்திக் கொன்று திரிந்த அரக்கர்களைக் குலத்தோடு பாழாக்கின இராமன், தன் குல விளக்காய் எழுந்தருளி உள்ள இடம் திருமாலிருஞ்சோலை மலை ஆகும்.* 338

*பல்லாண்டு பாடுவார்களின் ஒலி எல்லா இடங்களிலும் பரவும் பெருமை உடைய திருமாலிருஞ் சோலை, வன்மையாளன் இராவணனின் தோள்களையும் தலைகளையும் அவன் தங்கை சூர்ப்பணகையின் கொடிய மூக்கையும் அறுத்துப் போட்ட ஸ்ரீராமன் எழுந்தருளும் திருமலை ஆகும்.* 339

*எக்காலமும் போய் வணங்கும் அடியார்களைப் பாவமாகிய காட்டு வழியிலிருந்து மாற்றி உய்விக்கும் குளிர்ந்த திருமாலிருஞ் சோலை மலை; அருளாளர்களையும் கருணையே காட்டும் மேலோர் களையும் மனம் கலங்கச் செய்யும் கபடர்களை, தெற்கு திசை யமனுலகுக்குப் போக்குவிக்கும் பகவான் எழுந்தருளி உள்ள பொன் மயமான திருமலை ஆகும்.* 340

ஆனாயர் கூடி அமைத்த விழவை அமரர்தம்
கோனார்க்கு ஒழியக் கோவர்த்தனத்துச் செய்தான் மலை;
வான் நாட்டினின்று மாமலர்க் கற்பகத் தொத்து இழி
தேன் ஆறு பாயும்தென் திருமாலிருஞ் சோலையே. 341

ஒரு வாரணம் பணி கொண்டவன் பொய்கையில், கஞ்சன்தன்
ஒரு வாரணம் உயிர் உண்டவன் சென்று உறையும் மலை;
கரு வாரணம் தன் பிடி துறந்து ஓடக் கடல்வண்ணன்
திருவாணை கூறத் திரியும் தண் மாலிருஞ் சோலையே. 342

ஏவிற்றுச் செய்வான் ஏன்று எதிர்ந்து வந்த மல்லரைச்
சாவத் தகர்த்த சாந்து அணி தோள் சதுரன் மலை;
ஆவத்தனம் என்று அமரர்களும் நன் முனிவரும்
சேவித்திருக்கும் தென் திருமாலிருஞ் சோலையே. 343

மன்னர் மறுக மைத்துனன்மார்க்கு ஒரு தேரின்மேல்
முன் அங்கு நின்று மோழை எழுவித்தவன் மலை;
கொல் நவில் கூர்வேற் கோன் நெடுமாறன் தென்கூடற்கோன்
தென்னன் கொண்டாடும் தென் திருமாலிருஞ் சோலையே. 344

குறுகாத மன்னரைக் கூடு கலக்கி வெங் கானிடைச்
சிறுகால் நெறியே போக்குவிக்கும் செல்வன் பொன்மலை;
அறுகால் வரி வண்டுகள் ஆயிர நாமம் சொல்லிச்
சிறுகாலைப் பாடும் தென் திருமாலிருஞ் சோலையே. 345

சிந்தப் புடைத்துச் செங்குருதி கொண்டு பூதங்கள்
அந்திப் பலி கொடுத்து ஆவத்தனம் செய் அப்பன் மலை;
இந்திர கோபங்கள் எம்பெருமான் கனிவாய் ஒப்பான்
சிந்தும் புறவில் தென் திருமாலிருஞ் சோலையே. 346

எட்டுத் திசையும் எண்இறந்த பெருந் தேவிமார்
விட்டு விளங்க வீற்றிருந்த விமலன் மலை;
பட்டிப் பிடிகள் பகடு உரிஞ்சிச் சென்று மாலைவாய்த்
தெட்டித் திளைக்கும் தென் திருமாலிருஞ் சோலையே. 347





இடையர்கள் கூடி நடத்திய தேவேந்திரனுக்கான விழாவில், அப்பூசை அவனுக்குக் கிடைக்காமல் கோவர்த்தன மலைக்குக் கிடைக்கும் படி செய்த இறைவன் எழுந்தருளி உள்ள இடம் திருமாலிருஞ் சோலை மலை ஆகும். அங்கு, வான் நாட்டுக் கற்பகப் பூவிலிருந்து பெருகும் தேன் ஆறாய் ஓடும். 341

பொய்கையில் முதலை வாய்ப்பட்ட ஒரு யானையைக் காத்துப் பணி கொண்ட இறைவன், இன்னொன்றான கம்சனின் யானையைக் கொன்றான். இப்பகவான் எழுந்தருளி உள்ள திருமாலிருஞ் சோலை மலையில் ஊடல் கொண்டு ஓடும் பெண் யானையைக் கடல் வண்ணன் மேல் ஆணையிட்டு ஆண் யானை நிறுத்தி வைக்கும். 342

கம்சனால் ஏவப்பட்டு எதிர்த்த மல்லர்களைத் தோளால் தாக்கிக் கொன்ற கண்ணன் கூனி இட்ட சந்தனத்தை அணிந்தான். அச்சதுரன் எழுந்தருளி உள்ள திருமாலிருஞ்சோலை மலையிலே, தேவரும் முனிவரும் இவனையே தங்கள் ஆபத்துக்குக் காவலான செல்வமாகக் கொண்டு வணங்குவார்கள். 343

மைத்துனர்களான பாண்டவர்க்குத் தேரோட்டிய கண்ணன், போரில் மன்னர்கள் அஞ்ச, அம்பினால் நீர் ஊற்று மேல்வரச் செய்தான். இப்பகவான் எழுந்தருளி உள்ள மலை திருமாலிருஞ் சோலை மலை ஆகும். கூர் வேல் தாங்கிய மதுரை அரசன் பாண்டியன் கொண்டாடும் மலை இதுவே. 344

திருமகள் கேள்வன், திருமலையை அணுகாத அரசர்கள் வாழிடத்தைக் குலைத்துக் காட்டில் சிற்றடிப் பாதையிலே போகும் படி செய்வான். இச்செல்வன் எழுந்தருளிய திருமாலிருஞ் சோலை மலையில் சிறு காலைப்பொழுதில் ஆறுகால்களை உடைய வண்டுகள் பகவானின் ஆயிர நாமங்களைக் கூறிப் பாடும். 345

அந்திப் பொழுதில் பூதங்கள் இறைவன் எதிரிகளை அடித்துக் கொன்று அவர்கள் இரத்தத்தையே தம் காணிக்கையாகக் கொடுத்து வணங்கும் மலை திருமாலிருஞ் சோலை மலை ஆகும். என் அப்பன் தங்கி உள்ள இம்மலையிலே பட்டுப்பூச்சிகள், பகவான் உதட்டுக்கு ஒப்பாக, அடிவாரத்தில் பறந்து திரியும். 346

திசை எட்டும் பெருமை விளங்கத் தேவிமார்கள் பலருடன், துவாரகையில் கொலுவிருந்த பகவான் எழுந்தருளி உள்ள மலை, திருமாலிருஞ்சோலை மலை ஆகும். இங்கு இரவில் திரியும் பெண் யானைகள் ஆண் யானைகளை உராய்ந்து செல்வதால், மிகுந்த களிப்படைந்து, திளைக்கும். 347

மருதப் பொழில் அணி மாலிருஞ் சோலை மலைதன்னைக்
கருதி உறைகின்ற கார்க்கடல் வண்ணன் அம்மான்தன்னை
விரதம் கொண்டு ஏத்தும் வில்லிபுத்தூர் விட்டுசித்தன் சொல்
கருதி உரைப்பவர் கண்ணன் கழலிணை காண்பரே. 348

## திருமாலிருஞ்சோலை – உ

உருப்பிணி நங்கைதன்னை மீட்பான் தொடர்ந்து ஓடிச் சென்ற
உருப்பனை ஒட்டிக் கொண்டிட்டு உறைத்திட்ட உறைப்பன்மலை;
பொருப்பிடைக் கொன்றை நின்று முறி ஆழியும் காசும் கொண்டு
விருப்பொடு பொன் வழங்கும் வியன் மாலிருஞ் சோலையதே. 349

கஞ்சனும் காளியனும் களிறும் மருதும் எருதும்
வஞ்சனையில் மடிய வளர்ந்த மணிவண்ணன் மலை;
நஞ்சு உமிழ் நாகம் எழுந்து அணவி நளிர் மா மதியைச்
செஞ்சுடர் நா வளைக்கும் திருமாலிருஞ் சோலையதே. 350

மன்னு நரகன்தன்னைச் சூழ் போகி வளைத்து எறிந்து
கன்னி மகளிர்தம்மைக் கவர்ந்த கடல்வண்ணன் மலை;
புன்னை செருந்தியொடு புன வேங்கையும் கோங்கும் நின்று
பொன் அரி மாலைகள் சூழ் பொழில் மாலிருஞ் சோலையதே. 351

மாவலி தன்னுடைய மகன் வாணன் மகள் இருந்த
காவலைக் கட்டழித்த தனிக் காளை கருதும் மலை;
கோவலர் கோவிந்தனைக் குற மாதர்கள் பண் குறிஞ்சிப்
பா ஒலி பாடி நடம் பயில் மாலிருஞ் சோலையதே. 352

பல பல நாழம் சொல்லிப் பழித்த சிசுபாலன் தன்னை
அலைவலைமை தவிர்த்த அழகன் அலங்காரன் மலை;
குல மலை கோல மலை குளிர் மா மலை கொற்ற மலை
நில மலை நீண்ட மலை திருமாலிருஞ் சோலையதே . 353

பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கம் எல்லாம்
ஆண்டு அங்கு நூற்றுவர்தம் பெண்டிர் மேல் வைத்த அப்பன் மலை;
பாண தகு வண்டினங்கள் பண்கள் பாடி மதுப் பருகத்
தோண்டல் உடைய மலை; தொல்லை மாலிருஞ் சோலையதே. 354





*மருத நிலச் சோலைகள் அணி செய்யும் திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளிய கரியநிற அழகனை வாழ்த்துவதையே விரதமாகக் கொண்டவர் வில்லிபுத்தூர் விட்டு சித்தர். அவர் அருளிய இப்பாசுரங்களை விரும்பிப் பயில்பவர் கண்ணன் திருவடி காண்பார்கள்.* 348

## திருமாலிருஞ்சோலை – உ

*ருக்மிணி நங்கையை மீட்க வந்த அண்ணன் ருக்மனை விரட்டிப் பிடித்து மானபங்கம் செய்த வலிமையாளன் கண்ணனின் மலை; பொன் மோதிர முறிகளையும் காசுகளையும் வாரி வழங்குவது போல், கொன்றைப் பூக்கள் உதிரும் மலை திருமாலிருஞ் சோலை மலை ஆகும்.* 349

*கம்சன், காளியன், குவலயாபீடயானை, அசுர மருத மரங்கள், அசுரக் காளை ஆகியோர் வஞ்சனையால் மாள, வளர்ந்த கண்ணனின் மலை; நஞ்சைக் கக்கும் மலைப் பாம்பு, குளிர்ந்த சந்திரனை அணுகித் தன் சிவந்த சுடர் நாவால் அளையும் இடம் திருமாலிருஞ் சோலை மலை ஆகும்.* 350

*கடல் நிறக்கண்ணன், தீமையில் நிலை நின்ற நரகாசுரனை வளைத்துக் கொன்று, கன்னிப் பெண்களைக் காப்பாற்றி மணம் செய்து கொண்டான். இப்பெருமான் எழுந்தருளி உள்ள திருமாலிருஞ்சோலை மலையில் புன்னை, செருந்தி, வேங்கை, கோங்கு மரங்கள் பொன்னரி மாலை போலே ஒழுங்குபட நின்ற சோலைகள் உள்ளன.* 351

*மஹாபலியின் மகனான வாணாசுரனின் மகள் இருந்த கட்டுக் காவலைக் கண்ணன் அழித்தான். இளைய காளை போன்ற இக்கண்ணன் விரும்பித் தங்கும் திருமாலிருஞ்சோலை மலையில், குறப்பெண்கள், கோவிந்தனைப் பற்றிப் பாடி, பாட்டிற்கேற்ப ஆடுவார்கள்.* 352

*கண்ணன், தன் மீது குற்றங்களைக் கூறிப் பழித்த சிசுபாலனின் அற்பத்தனத்தைப் போக்கி ஆட்கொண்டான். அழகுடைய இந்த அலங்காரன் எழுந்தருளிய மலை, தொண்டர் குல மலை; கோல மலை, குளிர் மாமலை; வெற்றி மலை; தாவரங்கள் வளரும் மிக உயர்ந்த திருமாலிருஞ்சோலை மலை ஆகும்.* 353

*பஞ்ச பாண்டவர் மனைவி பாஞ்சாலி, பட்ட மனத்துன்பத்தை உணர்ந்த கண்ணன், நூறு பேர்களான துரியோதனாதியர் மனைவிமார்கள், அதே துன்பத்தை அடையச் செய்தான். இந்த அப்பன் தங்கிய திருமாலிருஞ்சோலை மலையில் வண்டினங்கள் இசை பாடித்தேனை அருந்தும் தண்ணீர் ஊற்றுகள் பல உண்டு.* 354

கனங்குழையாள் பொருட்டாக் கனை பாரித்து அரக்கர் தங்கள்
இனம் கழு ஏற்றுவித்த ஏழில் தோள் எம் இராமன் மலை ;
கனம் கொழி தென் அருவி வந்து சூழ்ந்து அகல் ஞாலம் எல்லாம்
இனம் குழு ஆடும் மலை; ஏழில் மாலிருஞ் சோலையதே. 355

எரி சிதறும் சரத்தால் இலங்கையினைத் தன்னுடைய
வரி சிலை வாயிற் பெய்து வாய்க் கோட்டம் தவிர்த்து உகந்த
அரையன் அமரும் மலை; அமரரொடு கோனும் சென்று
திரிசுடர் சூழும் மலை; திரு மாலிருங் சோலையதே. 356

கோட்டுமண் கொண்டு இடந்து குடங்கையில் மண் கொண்டு அளந்து
மீட்டும் அது உண்டு உமிழ்ந்து விளையாடும் விமலன் மலை;
ஈட்டிய பல் பொருள்கள் எம்பிரானுக்கு அடியுறை என்று
ஒட்டரும் தண் சிலம்பாறு உடை மாலிருஞ் சோலையதே. 357

ஆயிரம் தோள் பரப்பிப, முடி ஆயிரம் மின் இலக,
ஆயிரம் பைந்தலைய அனந்த சயனன் ஆளும் மலை;
ஆயிரம் ஆறுகளும் சுனைகள் பல ஆயிரமும்
ஆயிரம் பூம்பொழிலும் உடை மாலிருஞ் சோலையதே. 358

மாலிருஞ் சோலை என்னும் மலையை உடைய மலையை
நாலிரு மூர்த்திதன்னை நால் வேதக் கடல் அமுதை
மேல் இருங் கற்பகத்தை வேதாந்த விழுப் பொருளின்
மேல் இருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனனே. 359

## திருக்கோட்டியூர்

நா அகாரியம் சொல் இலாதவர்
நாள்தொறும் விருந்து ஓம்புவார்
தேவ காரியம் செய்து வேதம்
பயின்று வாழ் திருக்கோட்டியூர்
மூவர் காரியமும் திருத்தும்
முதல்வனைச் சிந்தியாத அப்
பாவகாரிகளைப் படைத்தவன்
எங்ஙனம் படைத்தான் கொலோ! 360





தங்கத்தோடு அணிந்த சீதைக்காக இராமபிரான் அம்புச் சூலங்களில் அரக்கர் இனத்தை ஏற்றுவித்துக் கொன்றான். இத்தகைய வீரத் தோள்களை உடையவன் தங்கும் திருமாலிருஞ் சோலை மலையிலே பொன் கொழிக்கும் அருவிகளிலே மக்கள் வந்து சூழ்ந்து நீராடுவர். 355

இராமபிரான் தம் வரி வில்லில் அம்பேற்றி அதன் நெருப்பு வாயில் இலங்கையைப் புகுவித்து அழித்தான். தலை வணங்கா இராவணனைக் கொன்று அவன் அகங்காரத்தைத் தவிர்த்தான். இந்த என் அரசன் தங்கும் திருமாலிருஞ்சோலை மலையைத் தேவர்கள், இந்திரன், சந்திரன், சூரியன் முதலியோர் வந்து வலம் வருவார்கள். 356

வராஹ பகவான் தன் கொம்பினாலே பூமியை எடுத்துக் காத்தான்; மாவலி கை நீர் ஏற்று உலகளந்தான். பிரளய காலத்தில் பூமியை உண்டு, பின் உமிழ்ந்து காப்பாற்றித் திருவிளையாடல் செய்யும் விமலன் மலை திருமாலிருஞ் சோலை மலை ஆகும். இங்கே சிலம்பாறு பல பொருள்களைக் கொணர்ந்து பெருமானுக்குப் பாத காணிக்கையாகக் கொடுக்கும். 357

ஆயிரம் தோள்களைப் பரப்பி, ஆயிரம் முடிகள் ஒளிவிட, ஆயிரம் தலைகளுடைய ஆதிசேடன் ஆளும் திருமாலிருஞ் சோலை மலையில் ஆயிரம் ஆறுகளும் பல்லாயிரம் சுனைகளும் அழகிய ஆயிரம் சோலைகளும் உள்ளன. 358

திருமாலிருஞ் சோலைமலையில் மலை போன்ற திருமால் உள்ளான். அவனே எட்டெழுத்து வடிவன்; நான்கு வேதக்கடல் அமுதம்; மேலான கற்பக மரத்தை ஒத்த சீரியன்; வேதாந்த சீர்மையின் விழுப்பொருள் ஆவான். சுயஒளி உடைய விளக்கான இப்பரமனைப் பெரியாழ்வார் விரித்தருளினார். 359

## திருக்கோட்டியூர்

திருக்கோட்டியூரில் வாழும் வைணவர்கள் பேசக்கூடாத வற்றைத் தம் நாவால் பேசமாட்டார்கள்; தினமும் வேதம் ஓதி பகவானை வழிபட்டு விருந்தோம்புவார்கள். பிரமன், சிவன், இந்திரன் ஆகிய மூவரின் ஆபத்துகளைப் போக்கிய முதல்வனான திருக்கோட்டியூர் திருமாலைச் சிந்தியாத பாவிகளை அவன் எதற்காகப் படைத்தானோ? 360

குற்றம் இன்றிக் குணம் பெருக்கிக்
குருக்களுக்கு அனுகூலராய்ச்
செற்றம் ஒன்றும் இலாத வண்கையி
னார்கள் வாழ் திருக்கோட்டியூர்த்
துற்றி ஏழ் உலகு உண்ட தூ மணி
வண்ணன் தன்னைத் தொழாதவர்
பெற்ற தாயர் வயிற்றினைப் பெரு
நோய்செய்வான் பிறந்தார்களே. 361

வண்ண நல் மணியும் மரகதமும்
அழுத்தி நிழல் எழும்
திண்ணை சூழ் திருக்கோட்டியூர்த் திரு
மாலவன் திருநாமங்கள்
எண்ணக் கண்ட விரல்களால் இறைப்
பொழுதும் எண்ணகிலாது போய்
உண்ணக் கண்ட தம் ஊத்தை வாய்க்குக்
கவளம் உந்துகின்றார்களே. 362

உரக மெல் அணையான் கையில் உறை
சங்கம் போல் மட அன்னங்கள்
நிரைகணம் பரந்து ஏறும் செங்
கமல வயல் திருக்கோட்டியூர்
நரகநாசனை நாவிற் கொண்டு அழை -
யாத மானிட சாதியர்
பருகு நீரும் உடுக்குங் கூறையும்
பாவம் செய்தன தாம் கொலோ! 363

ஆமையின் முதுகத்திடைக் குதி
கொண்டு தூ மலர் சாடிப் போய்த்
தீமை செய்து இளவாளைகள் விளை
யாடு நீர்த் திருக்கோட்டியூர்
நேமி சேர் தடங்கையினானை
நினைப்பு இலா வலி நெஞ்சு உடைப்
பூமிபாரங்கள் உண்ணும் சோற்றினை
வாங்கிப் புல்லைத் திணிமினே. 364

பூதம் ஐந்தொடு வேள்வி ஐந்து
புலன்கள் ஐந்து பொறிகளால்
ஏதம் ஒன்றும் இலாத வண்கையி
னார்கள் வாழ் திருக்கோட்டியூர்
நாதனை நரசிங்கனை நவின்று
ஏத்துவார்கள் உழக்கிய
பாத தூளி படுதலால் இவ்
உலகம் பாக்கியம் செய்ததே. 365



6 மு-ஆ



திருக்கோட்டியூர் வாசிகள் குற்றமற்றவராய் ஆத்ம குணம் நிரம்பப் பெற்றவர்கள்; குருக்களுக்கு நன்மை செய்பவர்; பொறாமை இலாதவர்; ஒப்புரவாளர்கள். ஏழு உலகங்களையும் பிரளய காலத்தே உண்டு காப்பாற்றிய மணிவண்ணன் இவ்வூரில் எழுந்தருளி உள்ளான். இவ்விறைவனைத் தொழாதவர்கள், தாயார்களுக்கு நோவு செய்யப் பிறந்தார்களே அன்றிப் பெற்ற வயிற்றுக்குப் பெருமை தராதவர்களே ஆவர். 361

திருக்கோட்டியூர்த் திண்ணைகளிலே பதிக்கப்பட்ட நிறமான மணிகளும் மரகதங்களும் ஒளி விடும். இங்கு எழுந்தருளி உள்ள திருமாலின் திரு நாமங்களை ஜபித்து எண்ணுவதற்கு உண்டான கைவிரல்கள், நொடி நேரமும் எண்ணாமல் இருந்து பயன் என்ன? மாறாக, இவ்விரல்களால், ஊத்தை வாயில், சோற்றைத் திணித்து உடல் வளர்ப்பதையே செய்கிறார்களே! 362

மடப்ப குணமுடைய அன்னங்கள் வரிசையாகக் கூடி செந்தாமரை பூத்த வயல்களில் வாழும் . இவை, ஆதி சேடனைப் படுக்கையாகக் கொண்ட திருமாலின் கைச்சங்கு போலே வெண்மையானவை. இத்தகைய திருக்கோட்டியூரில் உள்ள பகவானை நாவால் துதிக்காத மனிதர்கள் குடிக்கிற நீரும் உடுக்கிற ஆடையும் பாவம் செய்தவை அன்றோ? 363

இளமையான வாளை மீன்கள் ஆமையின் முதுகுமீது குதித்துத் தாமரை போன்ற பூக்களைச் சாடி, ஒன்றை ஒன்று எதிர்த்து விளையாடும். இத்தகைய நீர் வளம் உடைய திருக்கோட்டியூரில் உள்ள சக்கரக் கையனான திருமாலை நினையாதவர்கள், கடின நெஞ்சுடையவர் ஆவர். பூமிக்குப் பாரமான இவர்கள் உண்ணும் சோற்றைப் பிடுங்கிப் புல்லைத் திணியுங்கள் . 364

திருக்கோட்டியூர் அடியார்கள் ஐம்பூத உடல், ஐம்புலன்கள், ஐம்பொறிகள் ஆகியவற்றால், எவ்வகைக் குற்றமும் இன்றி ஐந்து வகை வேள்விகளைச் செய்யும் கொடையாளர்கள் ஆவர். அவர்கள் இத்தலத்தில் எழுந்தருளி உள்ள சொக்க நாராயணப் பெருமாளையும், தெற்காழ்வாராகிய நரசிம்மரையும் வாயாரத் துதிக்கிறார்கள். இந்த ஸ்ரீவைஷ்ணவர் பாத தூளிபடுவதால் இவ்வுலகம் நல்ல பேறு பெற்று விட்டது. 365

குருந்தம் ஒன்று ஒசித்தானொடும் சென்று
கூடி ஆடி விழாச் செய்து
திருந்து நான்மறையோர் இராப்பகல்
ஏத்தி வாழ் திருக்கோட்டியூர்க்
கருந் தடமுகில் வண்ணனைக் கடைக்-
கொண்டு கைதொழும் பத்தர்கள்
இருந்த ஊரில் இருக்கும் மானிடர்
எத்தவங்கள் செய்தார் கொலோ! 366

நளிர்ந்த சீலன் நயாசலன் அபி-
மான துங்கனை நாள்தொறும்
தெளிந்த செல்வனைச் சேவகங் கொண்ட
செங்கண் மால் திருக்கோட்டியூர்க்
குளிர்ந்து உறைகின்ற கோவிந்தன் குணம்
பாடுவார் உள்ள நாட்டினுள்
விளைந்த தானியமும் இராக்கதர்
மீது கொள்ளகிலார்களே. 367

கொம்பின் ஆர் பொழில்வாய்க் குயிலினம்
கோவிந்தன் குணம் பாடு சீர்ச்
செம்பொன் ஆர்மதில்சூழ் செழுங்
கழனி உடைத் திருக்கோட்டியூர்
நம்பனை நரசிங்கனை நவின்று
ஏத்துவார்களைக் கண்டக்கால்
எம்பிரான் தன் சின்னங்கள் இவர்
இவர் என்று ஆசைகள் தீர்வனே. 368

காசின் வாய்க் கரம் விற்கிலும் கர-
வாது மாற்று இலி சோறு இட்டுத்
தேச வார்த்தை படைக்கும் வண்கையி
னார்கள் வாழ் திருக்கோட்டியூர்க்
கேசவா! புருடோத்தமா! கிளர்
சோதியாய்! குறளா! என்று
பேசுவார் அடியார்கள் எம்தம்மை
விற்கவும் பெறுவார்களே. 369

சீத நீர் புடை சூழ் செழுங் கழனி உடைத் திருக்கோட்டியூர்
ஆதியான் அடியாரையும் அடிமையின்றித் திரிவாரையும்
கோதில் பட்டர்பிரான் குளிர் புதுவைமன் விட்டுசித்தன் சொல்
ஏதம் இன்றி உரைப்பவர் இருடீகேசனுக்கு ஆளரே. 370





திருக்கோட்டியூரில் வாழும் அடியார்கள் நான்கு வேதங்களைத் திருத்தமாக ஓதுபவர்கள்; குருந்த மரம் முறித்த கண்ணன் குணங்களில் ஈடுபட்டுப் பாடி, ஆடி, இரவும் பகலும் வழிபடுவார்கள். இத்தலத்தில் உள்ள, மேகநிறப் பெருமானை, இப்பக்தர்கள், தங்கள் அடிமைத் திறம் தோன்றக் கை தொழுவார்கள். இவ்வூரிலே வாழ்வதற்கு, மனிதர்கள் என்ன தவம் செய்தார்களோ! 366

செல்வ நம்பி என்பவர், குளிர்ந்த சீலம், தவறாத நீதி, இறை அனுபவம் ஆகியவற்றில் மேம்பட்டவராய் நாள்தோறும் தெளிவு ஓங்கக் கைங்கரியம் செய்து வருவார். செங்கண்மால் இவரை அடிமை கொண்டார். இத்தகைய திருக்கோட்டியூரில், கோவிந்தனின் குணம் பாடும் அடியவர்களும் உள்ளார்கள். ஆகவே இந்நாட்டில் விளைந்த தானியங்களை அரக்கர்களால் கொள்ளை இட இயலாது. 367

தங்கமயமான மதில்சூழ்ந்த திருக்கோட்டியூரில் வயல்கள் செழித்துள்ளன; கிளைகள் அடர்ந்த சோலையில் குயில்கள் கோவிந்தன் குணம் பாடும். அடியார்களின் நம்பிக்கைக்கு உரிய நரசிம்மப் பெருமானைத் தோத்தரித்து வழிபடுபவர்களைக் கண்டால், ‘இவர்கள்தாம் பகவானின் அடையாளங்கள்’ என்று பாகவதர்கள் தொடர்புக்கு விழைந்த ஆசைகள் தீரப் பெறுவேன். 368

திருக்கோட்டியூர் வாசிகள், ஒரு பொற்காசுக்கு ஒரு பிடி நெல் விற்கும் பஞ்ச காலத்திலும் தம் பொருள்களை மறைத்து வைக்காமல், பிரதி பயனையும் எதிர்பாராமல் விருந்தினர்க்கு, சோறாகிய உணவு அளித்து உபசரிப்பார்கள். இதனால் கொடையாளர்கள் என்று பகவானைத் துதிக்கும் அடியார்களும் நாங்கள் அடியார்கள் . ஆதலால் எங்களை அவர்களை வேண்டியபடி விற்கவும் செய்யலாம். 369

திருக்கோட்டியூரில் குளிர்ந்த நீர் சூழும் செழுமையான வயல்கள் உள்ளன. இங்கு எழுந்தருளியுள்ள ஆதி முதல்வனின் அடியார்களை, குற்றமற்ற வைணவத் தலைவர் ஸ்ரீவில்லிபுத்தூர் பெரியாழ்வார், புகழ்ந்துரைத்தார். இறை அடிமை இன்றித் திரிபவர்களுககு இரங்கினார். இப்பத்துப் பாசுரங்களையும் குற்றமில்லாமல் சொல்பவர்கள் இருடீகேசனுக்கு அடிமை செய்யப் பெறுவர். 370

## உலகோர்களுக்கு உபதேசம்

ஆசைவாய்ச் சென்ற சிந்தையர் ஆகி
அன்னை அத்தன் என் புத்திரர் பூமி
வாச வார் குழலாள் என்று மயங்கி
மாளும் எல்லைக்கண், வாய் திறவாதே,
கேசவா! புருடோத்தமா! என்றும்
கேழல் ஆகிய கேடிலீ! என்றும்
பேசுவார் அவர் எய்தும் பெருமை
பேசுவான் புகில் நம் பரம் அன்றே. 371

சீயினால் செறிந்து ஏறிய புண்மேல்
செற்றல் ஏறிக் குழம்பு இருந்து எங்கும்
ஈயினால் அரிப்பு உண்டு மயங்கி
எல்லைவாய்ச் சென்று சேர்வதன் முன்னம்,
வாயினால் நமோ நாரணா என்று
மத்தகத்திடைக் கைகளைக் கூப்பிப்
போயினால் பின்னை இத் திசைக்கு என்றும்
பிணை கொடுக்கிலும் போக ஒட்டாரே. 372

சோர்வினால் பொருள் வைத்தது உண்டாகில்
சொல்லு சொல் என்று சுற்றும் இருந்து
ஆர் வினவிலும் வாய் திறவாதே
அந்த காலம் அடைவதன் முன்னம்,
மார்வம் என்பது ஓர் கோயில் அமைத்து
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பது ஓர் பூ இட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே. 373

மேல்எழுந்தது ஓர் வாயுக் கிளர்ந்து
மேல் மிடற்றினை உள் எழ வாங்கிக்
காலும் கையும் விதிர் விதிர்த்து ஏறிக்
கண் உறக்கமது ஆவதன் முன்னம்,
மூலம் ஆகிய ஒற்றை எழுத்தை
மூன்று மாத்திரை உள் எழ வாங்கி
வேலை வண்ணனை மேவுதிர் ஆகில்,
விண்ணகத்தினில் மேவலும் ஆமே. 374





## உலகோர்களுக்கு உபதேசம்

*உடலை விட்டு உயிர் பிரியும் காலத்தே, மனத்தை ஆசை போன வழியே விட்டு , 'என் தாய், என் தந்தை, என் மக்கள், என் பூமி, மணம் வீசும் கூந்தலை உடைய என் மனைவி' என்றிப்படி, வாய்விட்டுப் புலம்பாதீர். உலகினர் பெயர்களைக் கூவி அழைக்காமல், "கேசவா! புருடோத்தமா! வராஹ மூர்த்தியே! இயல்பு கெடாத எம் பெருமானே!" என்று இறைவனை அழையுங்கள். இவ்வாறு பேசுபவர்கள் அடையும் பெருமையை நம்மால் விரித்துரைக்க இயலாது.* **371**

*மரண காலத்தே, நோய் வாய்ப் பட்ட உடம்பின் மேலே புண் உண்டாகிப் புற்று ஏறிப் புழுத்துச் சீழ் வடியவும், ஈக்கள் அரிப்பதாலே மயக்கம் உண்டாகும். இத்தகைய இறுதிக் காலம் வரும் முன்னே, வாயாலே 'நமோ நாராயணா' என்று சொல்லிக் கைகூப்புபவர்கள் பரம பதம் அடைவார்கள். பரமபதவாசிகள் பிணைகளாக நின்றாலும் கூட, மோட்சம் அடைந்தவர்கள் மறுபடி இவ்வுலகுக்கு வருவதில்லை.* **372**

*இறப்பதற்கு முன்பு சுற்றத்தார்கள் நாற்புறமும் சூழ்ந்து கொண்டு, 'பொருள்களைப் புதைத்து வைத்திருக்கும் இடத்தை மறவாமல் சொல், சொல்' என்று துன்புறுத்திக் கேட்கையில், வாயைத் திறக்க முடியாமல் போய்விடும். இத்தகைய முடிவு காலம் வருவதற்கு முன்பே மனதையே கோவிலாகக் கொண்டு, மாதவனைத் தெய்வமாக எண்ணி, பக்தியாகிற பூவை இடவல்லவர்களுக்கு யமதூதர்கள் தண்டனையிலிருந்து பிழைத்து உய்வடைய முடியும்.* **373**

*மேல் மூச்சு எழுந்து இழுக்கவும் நெஞ்சு பதைபதைக்கக் கீழ்மூச்சு உள் வாங்கவும், கைகளும் கால்களும் நடு நடுங்கிப் பதறவும் நிரந்தரத் தூக்கமான சாவு உண்டாவதற்கு முன்னே, ஒற்றெழுத்து மூலமான பிரணவ மந்திரத்தை மூன்று மாத்திரை அளவில் உச்சரித்து, கடல் நிறக் கடவுளைத் தியானித்தால் பரம பதத்தை அடையலாம்.* **374**

மடி வழி வந்து நீர் புலன்சோர
வாயில் அட்டிய கஞ்சியும் மீண்டே
கடைவழி வாரக் கண்டம் அடைப்பக்
கண் உறக்கமது ஆவதன் முன்னம்,
தொடைவழி உம்மை நாய்கள் கவரா
சூலத்தால் உம்மைப் பாய்வதும் செய்யார்
இடைவழியில் நீர் கூறையும் இழவீர்
இருடீகேசன் என்று ஏத்த வல்லீரே. 375

அங்கம் விட்டு அவை ஐந்தும் அகற்றி
ஆவி மூக்கினிற் சோதித்த பின்னைச்
சங்கம் விட்டு அவர் கையை மறித்துப்
பையவே தலை சாய்ப்பதன் முன்னம்,
வங்கம் விட்டு உலவும் கடற் பள்ளி
மாயனை மதுசூதனை மார்பில்
தங்க விட்டு வைத்து ஆவது ஓர் கருமம்
சாதிப்பார்க்கு என்றும் சாதிக்கலாமே. 376

தென்னவன் தமர் செப்பம் இலாதார்
சே அதக்குவார் போலப் புகுந்து
பின்னும் வன் கயிற்றால் பிணித்து எற்றிப்
பின் முன் ஆக இழுப்பதன் முன்னம்,
இன்னவன் இனையான் என்று சொல்லி
எண்ணி உள்ளத்து இருள் அற நோக்கி
மன்னவன் மதுசூதனன் என்பார்,
வானகத்து மன்றாடிகள் தாமே. 377

கூடிக் கூடி உற்றார்கள் இருந்து
குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து
பாடிப் பாடி ஓர் பாடையில் இட்டு
நரிப் படைக்கு ஒரு பாகுடம் போலே
கோடி மூடி எடுப்பதன் முன்னம்,
கௌத்துவம் உடைக் கோவிந்தனோடு
கூடி ஆடிய உள்ளத்தர் ஆனால்,
குறிப்பிடம் கடந்து உய்யலும் ஆமே. 378

வாய் ஒரு பக்கம் வாங்கி வலிப்ப
வார்ந்த நீர்க் குழிக் கண்கள் மிழற்றத்
தாய் ஒரு பக்கம் தந்தை ஒரு பக்கம்
தாரமும் ஒரு பக்கம் அலற்ற
தீ ஒரு பக்கம் சேர்வதன் முன்னம்,
செங்கண் மாலொடும் சிக்கெனச் சுற்றம்
ஆய் ஒரு பக்கம் நிற்க வல்லார்க்கு,
அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே. 379





*மரண பயத்தாலே, சிறுநீர் மடி வழியே பெருகவும், வாயில் பெய்த கஞ்சி, தொண்டை அடைக்கக் கடைவாய் வழியே வழியவும், நிரந்தரத் தூக்கமான சாவு ஏற்படும் முன்னே, இருடீகேசனைத் துதியுங்கள். பகவானைத் துதித்தால், யமதூதர்களின் செந்நாய்கள் உங்கள் தொடைகளைக் கவ்வா; அவர்களும் தங்கள் சூலத்தால் குத்தமாட்டார்கள். நடு வழியிலே உங்கள் ஆடைகளை இழக்க மாட்டீர்கள்.* **375**

*ஐந்து ஆவிகளும் உடலை விட்டுப் போகும் காலத்தில், அருகில் இருப்பவர்கள் மூக்கில் கை வைத்துச் சோதித்து உயிர் போனதை ஐயம் இன்றித் தெரிந்த பின் கைவிரித்து, மெல்லத் தலையைத் தொங்க விடுவார்கள். இப்படி நடக்கும் முன்பே, மதுசுதனனை நெஞ்சில் நிற்கச் செய்யுங்கள். படகுகள் உலாவும் கடலிற் பள்ளி கொண்ட மாயனுக்கு ஆட்பட்டோர் எக்காலத்தும் அவனை வணங்கப் பெறுவர்.* **376**

*சீர்மை இல்லாத கீழோர் காளைகளை அடக்குவது போலே தென் திசையமனின் பணியாள்கள், பாசக் கயிற்றால் கட்டி, முகம் கீழ்ப்பட யம உலகுக்கு இழுத்துச் செல்வார்கள். இவ்வாறு மரணம் ஏற்படும் முன்பே, யமனுக்கும் அரசனான மதுசூதனின் குணங்களை ஏத்தி, மனத்தில் அறியாமை நீங்கத் தியானித்தால், தாமே பரம பதத்தில், பகவானுடன் கலந்து உரையாடப் பெறுவார்கள்.* **377**

*ஒருவன் இறந்த பின் உற்றார்கள் ஒன்றுகூடிக் குற்றங்களை மறந்து, அவன் செய்த சில நன்மைகளைச் சொல்லி அழுது, பாடையிலே உடலை ஏற்றி, நரிக்கூட்டத்துக்குப் பாகுக்குடம் கொடுப்பது போல், கோடிப் புடவையைப் போட்டு மூடி எடுத்துப் போவார்கள். இப்படி நடப்பதற்கு முன்பே, கௌத்துவம் அணிந்த கோவிந்தன் குணங்களில் ஈடுபட்டுத் தியானித்தால், யமபுரம் செல்லாமல் உய்வு பெறலாம்.* **378**

*மரண காலத்தே, வாய் ஒரு பக்கம் இழுத்து வலிக்கவும், குழி விழுந்த கண்களிலிருந்து, துயரக் கண்ணீர் பெருகி விழவும், உடலின் அருகே, தாய், தந்தை மனைவி ஆகியோர் கதறி அழுவார்கள்; இறந்த பிறகு உடல் மீது தீ மூட்டிப் பொசுக்குவார்கள். இத்தகைய இறுதி ஏற்படும் முன்னே, செங்கண் மாலையே சுற்றமாகக் கொண்டு இறைப்பற்றில் நிற்க வல்லவர்களுக்கு யமனிடமிருந்து தண்டனை ஏற்படுவதில்லை.* **379**

செத்துப் போவதோர் போது நினைந்து
செய்யும் செய்கைகள் தேவபிரான்மேல்
பத்தராய் இறந்தார் பெறும் பேற்றைப்
பாழித் தோள் விட்டுசித்தன் புத்தூர்க்கோன்
சித்தம் நன்கு ஒருங்கித் திருமாலைச்
செய்த மாலை இவை பத்தும் வல்லார்
சித்தம் நன்கு ஒருங்கித் திருமால் மேல்
சென்ற சிந்தை பெறுவர் தாமே. 380

## திருமாலின் பெயர்களை இட அறிவுறுத்தல்

காசும் கறை உடைக் கூறைக்கும் அங்கு ஓர் கற்றைக்கும்
ஆசையினால் அங்கு அவத்தப் பேர் இடும் ஆதர்காள்!
கேசவன் பேர் இட்டு நீங்கள் தேனித்து இருமினோ,
நாயகன் நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 381

அங்கு ஒரு கூறை அரைக்கு உடுப்பதன் ஆசையால்
மங்கிய மானிட சாதியின் பேர் இடும் ஆதர்காள்!
செங்கண் நெடுமால்! சிரீதரா! என்று அழைத்தக்கால்,
நங்கைகாள்! நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 382

உச்சியில் எண்ணெயும் சுட்டியும் வளையும் உகந்து
எச்சம் பொலிந்தீர்காள்! என் செய்வான் பிறர் பேர் இட்டீர்?
பிச்சை புக்கு ஆகிலும் எம்பிரான் திருநாமமே
நச்சுமின், நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 383

மானிட சாதியில் தோன்றிற்று ஓர் மானிட சாதியை
மானிட சாதியின் பேர் இட்டால் மறுமைக்கு இல்லை;
வான் உடை மாதவா! கோவிந்தா! என்று அழைத்தக்கால்
நான் உடை நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 384

மலம் உடை ஊத்தையில் தோன்றிற்று ஓர் மல ஊத்தையை
மலம் உடை ஊத்தையின் பேர் இட்டால் மறுமைக்கு இல்லை;
குலம் உடைக் கோவிந்தா! கோவிந்தா! என்று அழைத்தக்கால்
நலம் உடை நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 385





*மரண காலத்தில் ஏற்படும் வேதனைகள் பற்றியும் தேவபிரானிடம் பக்தி உடையோர் பெறும் பரமபதப் பேறு பற்றியும் பெரியாழ்வார் அருளினார். மிடுக்கான தோள்கள் உடைய வில்லிபுத்தூர் விட்டு சித்தர் கூறிய திருமால் பற்றிய பத்துப் பாசுரங்களை ஓதுபவர் திருமாலையே சிந்தை செய்வர்.* 380

## திருமாலின் பெயர்களை இட அறிவுறுத்தல்

*பணம், கரையுடைய புடவை, நெற்கதிர்க்கட்டு ஆகிய வற்றைப் பெறும் ஆசையாலே, மிக இழிந்த பெயர்களைப் பிள்ளைகளுக்கு இடும் அறிவற்றவர்களே! உங்கள் குழந்தை களுக்குக் கேசவன் பெயரை வைத்து மகிழ்ச்சி பெறுங்கள். நாயகனான நாராயணன் நாமம் உடைய பிள்ளையின் தாய், நரகத்தை அடைய மாட்டாள்.* 381

*அரையில் உடுக்கப் புடவை வேண்டும் என்னும் ஆசையால் அழியும் மனிதப் பெயர்களை இடுகிற அறிவற்றவர்களே! 'நங்கையர்களே! சிவந்த கண்ணனான திருமாலின் பெயர் இட்டு! ஸ்ரீதரா!' என்று அழைத்தால், நாராணன் பெயருடைய பிள்ளையின் தாய் நரகம் புகமாட்டாள்.* 382

*மக்கள் செல்வம் உடையோர்களே! தலை உச்சியில் தடவ எண்ணெயையும் நெற்றிச் சுட்டியையும் வளையையும் விரும்பி, எதற்காகப் பிறர் பேரிடுகிறீர்கள்? பிச்சை எடுத்தாலும் பகவானுடைய திருநாமத்தையே இட்டழைத்தால், நாராயணன் பெயருடைய பிள்ளையின் தாய் நரகம் புகாள்.* 383

*கர்மங்களின் காரணமாய் மனித இனத்தில் பிறப்பவருக்கு மனிதப் பெயர்களை இடுவது மோட்சமாகிய மறுமைக்கு உதவாது. பரமபதநாதனை 'மாதவா! கோவிந்தா!' என்று அழைத்தால், நாராயணன் பெயருடைய பிள்ளையின் தாய் நரகம் அடைய மாட்டாள்.* 384

*மலம் மூத்திரம் உடைய மாமிச மயமான உடம்பிலே பிறந்த, மலமாமிச மனிதக் குழந்தைக்கு, இத்தகைய மனிதப் பெயரை இட்டு அழைத்தால் மறுமையாகிற வீடு பேற்றுக்குப் பயன் தராது. எல்லா உயர்வுகளுமுடைய இறைவன் பெயரிட்டுக் 'கோவிந்தா! கோவிந்த ா!' என்று அழைத்தால், நலம் தரும் நாராயணன் பெயருடைய பிள்ளையின் தாய், நரகம் புகமாட்டாள்.* 385

நாடும் நகரும் அறிய மானிடப் பேர் இட்டுக்
கூடி அழுங்கிக் குழியில் வீழ்ந்து வழுக்காதே
சாடு இறப் பாய்ந்த தலைவா! தாமோதரா! என்று
நாடுமின்; நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 386

மண்ணிற் பிறந்து மண் ஆகும் மானிடப் பேர் இட்டு அங்கு
எண்ணம் ஒன்று இன்றி இருக்கும் ஏழை மனிசர்காள்!
கண்ணுக்கு இனிய கருமுகில் வண்ணன் நாமமே
நண்ணுமின்; நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 387

நம்பி பிம்பி என்று நாட்டு மானிடப் பேர் இட்டால்
நம்பும் பிம்பும் எல்லாம் நாலு நாளில் அழுங்கிப் போம்;
செம்பெருந் தாமரைக் கண்ணன் பேர் இட்டு அழைத்தக்கால்,
நம்பிகாள்! நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 388

ஊத்தைக் குழியில் அமுதம் பாய்வது போல் உங்கள்
மூத்திரப் பிள்ளையை என் முகில் வண்ணன் பேர் இட்டு
கோத்துக் குழைத்துக் குணாலம் ஆடித் திரிமினோ!
நாத் தகு நாரணன் தம் அன்னை நரகம் புகாள். 389

சீர் அணி மால் திருநாமமே இடத் தேற்றிய
வீர் அணி தொல்புகழ் விட்டுசித்தன் விரித்த சொல்
ஓர் அணி ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்றும் வல்லவர்
பேர் அணி வைகுந்தத்து என்றும் பேணி இருப்பரே. 390

### திருக்கண்டங்கடி நகர்

தங்கையை மூக்கும் தமையனைத் தலையும்
தடிந்த எம் தாசரதி போய்
எங்கும் தன் புகழா இருந்து அரசாண்ட
எம் புருடோத்தமன் இருக்கை;
கங்கை கங்கை என்ற வாசகத்தாலே
கடு வினை களைந்திடு கிற்கும்
கங்கையின் கரைமேல் கைதொழ நின்ற
கண்டம் என்னும் கடிநகரே. 391





நாட்டிலுள்ள சாமானியர்களும் நகரத்திலுள்ள அறிஞர்களும் 'இவன் உயர்ந்தவன்' என்று அறியும் படி, தாழ்ந்த மனிதர் பெயர் இட்டு, அவர்களுக்கு அடிமைப்பட்டு , விழுந்த பள்ளத்திலே விழுந்து தவறிப் போக வேண்டாம். 'சகடாசுரனை அழித்த தலைவா! தாமோதரா!' என்றழையுங்கள். நாராயணன் பெயருள்ள பிள்ளையின் தாய் நரகம் புகாள். 386

பூமியிற் பிறந்து பூமியில் புதைந்து போகும் மனிதப் பெயரை வைத்துக் கொண்டு, உய்வு பற்றிய கவலை இல்லாத அறிவற்ற மனிதர்களே! கண்ணுக்கினிய மேக நிறத் திருமாலின் பெயரிட்டு அழைக்க வாருங்கள். நாராயணன் நாமம் உடைய பிள்ளையின் அன்னை நரகம் புகமாட்டாள். 387

நம்பி, பிம்பி என்று நாட்டிலுள்ளார் பெயர்களை வைத்தால், அப்பெயர்களுக்குள்ள சிறப்புகள் நான்கு நாளிலேயே மறைந்து விடும். நம்பிகளே! செந்தாமரைப் பூப்பொன்ற கண்களுடைய திருமாலின் பெயரை இட்டால், நாராயண நாமம் உடைய பிள்ளையின் தாய் நரகம் புகாள். 388

அசுத்தமான குழியில் அமுதம் பாய்வது போல், மல, மூத்திர மயமான உங்கள் குழந்தைகளுக்குத் திருமாலின் பெயர் இடுங்கள். மேக நிற வண்ணனின் பெயர் இட்டால், அப்பெயரைக் கூறும் பொழுது, இறை அனுபவத்துடன் கூடிக் கலந்து களித்துத் திரியலாம்; உங்கள் நாவுக்கும் அது தகுந்ததே. நாராயணன் பெயருடைய தாய் நரகம் புகமாட்டாள். 389

புலன்களை வென்ற வீரமும் புகழும் உடைய பெரியாழ்வார் கல்யாண குணங்களுடைய திருமால் திருநாமங்களைக் குழந்தைகளுக்கு இடும்படி, அறிவுறுத்தினார். ஒண் தமிழில் உள்ள இப்பத்துப் பாசுரங்களை, ஓதவல்லவர்கள் வைகுந்தத்தில் பக்தியுடன் வாழ்வார்கள். 390

### திருக்கண்டங்கடி நகர்

தங்கையான சூர்ப்பணகை மூக்கையும் தமையனான இராவணன் தலையையும் அறுத்துப் போட்ட தசரதன் புதல்வனான ஸ்ரீ ராமன் தன் புகழ் பரவ, இருந்து அரசாண்டான். இப்பெருமானே திருக்கண்டம் என்னும் திருப்பதியில் ஸ்ரீ புருஷோத்தமனாக எழுந்தருளி உள்ளான். நீராடும் காலத்தில் 'கங்கை, கங்கை' என்றாலே பாவங்கள் தொலையும் புனிதம் உடைய கங்கை ஆற்றின் கரையில் இந்தத் திருக்கண்டங்கடி நகர் உள்ளது. 391

சலம் பொதி உடம்பின் தழல் உமிழ் பேழ்வாய்ச்
சந்திரன் வெங்கதிர் அஞ்ச
மலர்ந்து எழுந்து அணவு மணிவண்ண உருவின்
மால் புருடோத்தமன் வாழ்வு;
நலம் திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும்
நாரணன் பாதத் துழாயும்
கலந்து இழி புனலால் புகர் படு கங்கைக்
கண்டம் என்னும் கடிநகரே. 392

அதிர் முகம் உடைய வலம்புரி குமிழ்த்தி
அழல் உமிழ் ஆழிகொண்டு எறிந்து அங்கு
எதிர் முக அசுரர் தலைகளை இடறும்
எம் புருடோத்தமன் இருக்கை;
சதுமுகன் கையிற் சதுப்புயன் தாளிற்
சங்கரன் சடையினில் தங்கிக்
கதிர் முக மணிகொண்டு இழி புனற் கங்கைக்
கண்டம் என்னும் கடிநகரே. 393

இமையவர் இறுமாந்து இருந்து அரசாள
ஏற்று வந்து எதிர் பொரு சேனை
நமபுரம் நணுக நாந்தகம் விசிறும்
நம் புருடோத்தமன் நகர்தான்;
இமவந்தம் தொடங்கி இருங்கடல் அளவும்
இரு கரை உலகு இரைத்து ஆடக்
கமை யுடைப் பெருமைக் கங்கையின் கரைமேல்
கண்டம் என்னும் கடிநகரே. 394

உழுவது ஓர் படையும் உலக்கையும் வில்லும்
ஒண் சுடர் ஆழியும் சங்கும்
மழுவொடு வாளும் படைக்கலம் உடைய
மால் புருடோத்தமன் வாழ்வு;
எழுமையும் கூடி ஈண்டிய பாவம்
இறைப் பொழுது அளவினில் எல்லாம்
கழுவிடும் பெருமைக் கங்கையின் கரைமேல்
கண்டம் என்னும் கடிநகரே. 395

தலைப்பெய்து குமுறிச் சலம் பொதி மேகம்
சலசல பொழிந்திடக் கண்டு
மலைப் பெரும் குடையால் மறைத்தவன் மதுரை
மால் புருடோத்தமன் வாழ்வு;
அலைப்பு உடைத் திரைவாய் அருந்தவ முனிவர்
அவபிரதம் குடைந்து ஆடக்
கலப்பைகள் கொழிக்கும் கங்கையின் கரைமேல்
கண்டம் என்னும் கடிநகரே. 396





தண்ணீர் பொதிந்த சந்திரனும் நெருப்பைக் கக்கும் வாயுடைய சூரியனும் அஞ்சும்படி, நீலமணி வண்ணத் திருமால் பரந்துயர்ந்து உலகளந்தான். இப்புருஷோத்தமனின் திருத்தலம் கண்டங்கடி நகர் ஆகும். சிவன் முடிக் கொன்றைப் பூவும் நாராயணன் பாதத் திருத்துழாயும் கலந்து வந்து ஒளி விடும் கங்கை ஆற்றின் கரையில் இத்தலம் உள்ளது. 392

ஒலி எழுப்பும் சங்கை வாயில் வைத்து ஊதியபடி, நெருப்புமிழும் சக்கரத்தை வீசி, எதிர்த்து வந்த அசுரர்கள் தலைகளை உருட்டிய புருஷோத்தமனின் இருப்பிடம் கண்டமென்னும் கடிநகர் ஆகும். பிரமன் கைகளிலிருந்து விழுந்த தண்ணீர் நான்கு தோளனான திரிவிக்கிரமன் திருவடிபட்டு ஓடி, சிவன் சடையில் தங்கி வழிந்த பின்பு, மணிகளைக் கொழித்தோடும் கங்கை ஆறாயிற்று. இவ்வாற்றின் கரையில் கண்டம் என்னும் திருப்பதி உள்ளது. 393

இமயம் தொடங்கிக் கடல் வரை ஓடும் கங்கை நதி, தன் இரு கரைகளிலும் நீராடும், உலகத்தோர் பாவங்களைப் பொறுமையுடன் நீக்கும் புண்ணியம் உடையதாகும். இக்கங்கைக் கரைமேல் கண்டம் என்னும் கடிநகர் உள்ளது. இந்திரன் முதலிய தேவர்கள் செருக்குடன் ஆட்சி நடத்தும்படி, தன்னை எதிர்த்தவர் படை யமபுரம் செல்லுமாறு நாந்தக வாளை வீசி, வெற்றி பெற்ற புருஷோத்தமனின் இருப்பிடம் இக்கண்டங்கடிநகர் ஆகும். 394

கலப்பை, உலக்கை, சார்ங்கவில், சுடர்ச்சக்கரம், சங்கு, மழு, நாந்தகவாள் ஆகியவற்றை ஆயுதமாக ஏந்திய திருமாலான புருஷோத்தமன் எழுந்தருளி உள்ள திருத்தலம் கண்டங்கடிநகர் ஆகும். ஏழு பிறவிப் பாவங்களை நொடி நேரத்திலே கழுவிப் போக்கும் புண்ணியம் உடையது இத்திருப்பதி ஆகும். 395

கரைகளை உடைத்தபடி வீசும், அலைகள் உடைய கங்கையில், வேள்வி முடித்த முனிவர்கள் இறுதி நீராட்டம் செய்வர். வேள்விக் கலப்பைகள் தண்ணீருடன் ஓடும். இவ்வாற்றின் கரையில், கண்டங்கடி நகர் திருத்தலம் உள்ளது. மேகங்கள் குமுறி இடித்து, சலசல வென்று மழை பெய்த காலத்தே, கோவர்த்தன மலையைத் தூக்கி ஆய்க்குலத்தைக் காப்பாற்றிய மதுரை நகர்க் கண்ணபிரானான புருஷோத்தமன், எழுந்தருளி உள்ள திவ்விய தேசம் இதுவே. 396

விற் பிடித்து இறுத்து வேழத்தை முறுக்கி
மேல் இருந்தவன் தலை சாடி
மற் பொருது எழப் பாய்ந்து அரையனை உதைத்த
மால் புருடோத்தமன் வாழ்வு;
அற்புதம் உடைய ஐராவத மதமும்
அவர் இளம்படியர் ஒண் சாந்தும்
கற்பக மலரும் கலந்து இழி கங்கைக்
கண்டம் என்னும் கடிநகரே. 397

திரை பொரு கடல் சூழ் திண்மதிள் துவரை
வேந்து தன் மைத்துனன் மார்க்காய்
அரசினை அவிய அரசினை அருளும்
அரி புருடோத்தமன் அமர்வு;
நிரை நிரையாக நெடியன யூபம்
நிரந்தரம் ஒழுக்குவிட்டு இரண்டு
கரை புரை வேள்விப் புகை கமழ் கங்கைக்
கண்டம் என்னும் கடிநகரே. 398

வட திசை மதுரை சாளக்கிராமம்
வைகுந்தம் துவரை அயோத்தி
இடம் உடை வதரி இடவகை உடைய
எம் புருடோத்தமன் இருக்கை;
தடவரை அதிரத் தரணி விண்டு இடியத்
தலைப் பற்றிக் கரை மரம் சாடிக்
கடலினைக் கலங்கக் கடுத்து இழி கங்கைக்
கண்டம் என்னும் கடிநகரே. 399

மூன்று எழுத்து அதனை மூன்று எழுத்து அதனால்
மூன்று எழுத்து ஆக்கி மூன்று எழுத்தை
ஏன்று கொண்டு இருப்பார்க்கு இரக்கம் நன்கு உடைய
எம் புருடோத்தமன் இருக்கை;
மூன்று அடி நிமிர்த்து மூன்றினில் தோன்றி
மூன்றினில் மூன்று உரு ஆனான்
கான் தடம்பொழில் சூழ் கங்கையின் கரைமேல்
கண்டம் என்னும் கடிநகரே. 400

பொங்கு ஒலி கங்கைக் கரை மலி கண்டத்து
உறை புருடோத்தமன் அடிமேல்
வெங்கலி நலியா வில்லிபுத்தூர்க் கோன்
விட்டுசித்தன் விருப்பு உற்றுத்
தங்கிய அன்பால் செய் தமிழ்மாலை
தங்கிய நா உடையார்க்குக்
கங்கையில் திருமால் கழலிணைக் கீழே
குளித்திருந்த கணக்கு ஆமே. 401





வியக்கத்தக்க ஐராவத யானையின் மதநீரும், தேவ மாதர் பூசிக் கொண்ட சந்தனமும், கற்பகப் பூக்களும், கலந்தோடும் கங்கை நதிக் கரையில், கண்டங்கடி நகர் உள்ளது. விழாவில் வில்லை முறித்துக் குவலயாபீட யானைக் கொம்பொடித்து, பாகனின் தலையை உடைத்து, மல்லர்களைக் கொன்று, முடிவில் கம்சன் மீது பாய்ந்து உதைத்துக் கொன்ற பெருமையுடைய புருஷோத்தமன் தங்கும் திவ்விய தேசம் இதுவே. 397

கங்கைப்புறத்து யாக சாலையில் பசுக்கள் கட்டப்படும் வேள்வித் தூண்கள் வரிசையாக உள்ளன; ஓமப்புகையோ இருகரைகளிலும் கமழும். இத்தகைய கங்கை நதிக்கரையில் கண்டங்கடி நகர் உள்ளது. அலை கடல் சூழ்ந்த துவாரகை அரசன் கண்ணன், தன் மைத்துனர்களான, பாண்டவர்கள் பக்கம் நின்று துரியோதனாதி எதிரிகளை அழித்து, அவர்களுக்கு அரசை அருளினான். இப் புருஷோத்தமனின் திருத்தலம் இதுவே ஆகும். 398

அகன்ற மலைகள் அதிரும்படி, பூமி பிளவுபடக் கரையிலுள்ள மரங்களை மோதி, அவற்றின் உச்சி வரை உயர்ந்து, கங்கை ஆறு மிக வேகமாக ஓடும். கண்டங்கடி நகர் இவ்வாற்றின் கரையில் உள்ளது. வடமதுரை, சாளக்கிராமம், ஸ்ரீவைகுண்டம், துவாரகை, அயோத்தி, வதரி ஆகிய இடங்களில் எழுந்தருளும் எம் புருஷோத்தமனுக்கு இக்கண்டங்கடி நகரும் இருப்பிடமே ஆகும். 399

திருமந்திரத்தை மூன்று சொற்களாகக் கொண்டு, சேதனனின் மூவகைத் தன்மைகளை உணர்ந்து அவற்றிற்கு இணையான இறைவனின் சேஷித்வம், சரண்யத்வம், ப்ராப்யத்வம் ஆகியவற்றை இணைத்துத் திரு எட்டெழுத்தை உணர்பவர்கள், 'ஓம்'காரப் பொருளை அறிவார்கள். 'அகார, உகார, மகராமாகிய பிரணவம் நமக்குத் தஞ்சமான பொருளையே கூறுகிறது' என்று அறிபவர்களுக்கு, புருஷோத்தமன் தன் அருளை வழங்குகிறான். கங்கைக் கரையில், மணம் பொருந்திய சோலை சூழ்ந்த கண்டங்கடி நகரில் இப்பெருமான் எழுந்தருளி உள்ளான். 400

ஒலி பொங்கும் கங்கைக் கரையில் உள்ள கண்டங்கடி நகரில் எழுந்தருளிய புருஷோத்தமன் திருவடிகளில், வில்லிபுத்தூர் விஷ்ணு சித்தர் நிலையான அன்பு கொண்டு இத்தமிழ் மாலையைத் தொடுத்தார். இப்பாசுரங்களைப் பயிலும் நாவுடையார், கங்கையில் நீராடும் பயனைப் பெறுவதோடு, திருமாலின் இணை அடிகளில் நிரந்தரத் தொண்டு செய்யப் பெறுவர். 401

## திருவரங்கம் –1

மா தவத்தோன் புத்திரன் போய்
மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா
உருவுருவே கொடுத்தான் ஊர்;
தோதவத்தித் தூய் மறையோர்
துறைபடியத் துளும்பி எங்கும்
போதில் வைத்த தேன் சொரியும்
புனல் அரங்கம் என்பதுவே. 402

பிறப்பு அகத்தே மாண்டு ஒழிந்த
பிள்ளைகளை நால்வரையும்
இறைப் பொழுதில் கொணர்ந்து கொடுத்து
ஒருப்படுத்த உறைப்பன் ஊர்;
மறைப் பெருந் தீ வளர்த்திருப்பார்
வருவிருந்தை அளித்திருப்பார்
சிறப்பு உடைய மறையவர் வாழ்
திருவரங்கம் என்பதுவே. 403

மருமகன்தன் சந்ததியை
உயிர்மீட்டு, மைத்துனன்மார்
உருமகத்தே வீழாமே
குருமுகமாய்க் காத்தான் ஊர்;
திருமுகமாய்ச் செங்கமலம்
திருநிறமாய்க் கருங்குவளை
பொரு முகமாய் நின்று அலரும்
புனல் அரங்கம் என்பதுவே. 404

கூன் தொழுத்தை சிதகு உரைப்பக்
கொடியவள் வாய்க் கடியசொற்கேட்டு
ஈன்று எடுத்த தாயரையும்
இராச்சியமும் ஆங்கு ஒழிய,
கான் தொடுத்த நெறி போகிக்
கண்டகரைக் களைந்தான் ஊர்;
தேன் தொடுத்த மலர்ச் சோலைத்
திருவரங்கம் என்பதுவே. 405





## திருவரங்கம் – 1

தோய்த்து உலர்த்திய தூய ஆடைகளை உடுத்திய வேதியர்கள் காவிரித் துறையில் கூடி நீராடவும் பூக்கள் அலைந்து தேன் சொரியும்; இத்தகைய ஆற்றுப் பெருக்குடைய திருத்தலம் திருவரங்கம் ஆகும். தவத்தில் சிறந்த, தன் குருவான ஸாந்தீபினியின் புதல்வன் கடலில் மாண்டதைக் கேட்டு, அவனைப் பழைய உருவிலேயே மீட்டுக் கொண்டு வந்த ஸ்ரீகிருஷ்ணன், குருதட்சிணையாக அளித்தான். இந்த எம்பெருமான் நித்தியவாசம் செய்யும் இடம் புனல் அரங்கம் ஆகும். 402

அந்தணப் பெண் ஒருத்தி பெற்ற நான்கு பிள்ளைகள் பிறந்த அறையிலேயே இறந்து போகவும், ஸ்ரீகிருஷ்ணன், அப்பிள்ளைகளைப் பரமபதத்திலிருந்து, நொடிப்பொழுதில் மீட்டுக் கொண்டு வந்து, பெற்றோரிடத்தே கொடுத்தருளினான். இந்த எம் பெருமான் எழுந்தருளி உள்ள திருவரங்கத்தில் வேதியர்கள் தங்கள் மூவகை வேள்விக் கடமைகளையும் செய்வார்கள்; இவர்கள் விருந்தினர்களை உபசரிக்கும் சிறப்புடையவர்கள். 403

ஸ்ரீகிருஷ்ணன் தன் மருமகனான அபிமன்யுவின் மகன் பரீட்சித்தின் உயிர் போகாவண்ணம் காத்தான், மைத்துனர்களான பாண்டவர்கள், பாரத யுத்தமான யாகத்திலே அழியாதபடித் தானே குருநாதனாக நின்று உபதேசம் செய்து காத்தான். இந்த எம் பெருமான் நித்திய வாசம் செய்யும் திருவரங்கத்தே, தாமரை, குவளை மலர்கள் நிரம்பிய நீர்வளம் சிறந்து காணப்படும் செந்தாமரை, பெரிய பெருமாள் முகத்துக்கு ஒப்பாகவும் கருங்குவளை நிறத்துக் கொப்பாகவும் மலர்வன. 404

தாதியான கூனியின் தீய சொற்களின் தூண்டுதலால், கொடிய கைகேயி வாய்ப் பிறந்த ஆணையை ஸ்ரீராமன் ஏற்றுக் காடு சென்றான். தன்னைப் பெற்ற தாய், கோசலையையும், அரசையும் கைவிட்டுத் தண்டகாரணியம் எழுந்தருளி, அரக்கர்களை அழித்த பகவான் நித்திய வாசம் செய்யும் திவ்விய தேசம் திருவரங்கம் ஆகும். இங்குத் தேன் துளிர்க்கும் மலர்ச் சோலைகள் சூழ்ந்து காணப்படும். 405

பெருவரங்கள் அவைபற்றிப்
பிழக்கு உடைய இராவணனை
உரு அரங்கப் பொருது அழித்து இவ்
உலகினைக் கண்பெறுத்தான் ஊர்;
குரவு அரும்பக் கோங்கு அலரக்
குயில் கூவும் குளிர் பொழில் சூழ்
திருவரங்கம் என்பதுவே
என் திருமால் சேர்விடமே. 406

கீழ் உலகில் அசுரர்களைக்
கிழங்கிருந்து கிளராமே
ஆழி விடுத்து அவருடைய
கரு அழித்த அழிப்பன் ஊர்;
தாழைமடல் ஊடு உரிஞ்சித்
தவள வண்ணப் பொடி அணிந்து
யாழின் இசை வண்டினங்கள்
ஆளம் வைக்கும் அரங்கமே. 407

கொழுப்பு உடைய செழுங்குருதி
கொழித்து இழிந்து குமிழ்த்து எறியப்
பிழக்கு உடைய அசுரர்களைப்
பிணம் படுத்த பெருமான் ஊர்;
தழுப்பு அரிய சந்தனங்கள்
தடவரைவாய் ஈர்த்துக்கொண்டு
தெழிப்பு உடைய காவிரி வந்து
அடிதொழும் சீர் அரங்கமே. 408

வல்எயிற்றுக் கேழலுமாய்
வாள்எயிற்றுச் சீயமுமாய்
எல்லை இல்லாத் தரணியையும்
அவுணனையும் இடந்தான் ஊர்;
எல்லியம் போது இருஞ்சிறை வண்டு
எம்பெருமான் குணம் பாடி
மல்லிகை வெண்சங்கு ஊதும்
மதில் அரங்கம் என்பதுவே. 409

குன்று ஆடு கொழு முகில் போல்
குவளைகள் போல் குரைகடல் போல்
நின்று ஆடு கணமயில் போல்
நிறம் உடைய நெடுமால் ஊர்;
குன்று ஊடு பொழில் நுழைந்து
கொடி இடையார் முலை அணவி
மன்று ஊடு தென்றல் உலாம்
மதில் அரங்கம் என்பதுவே. 410





தான் பெற்ற பெரிய வரங்களின் துணை கொண்ட இராவணன் தேவர் முதலானோர்க்குத் துன்பம் செய்தான். அவனுடன் போர் செய்த ஸ்ரீராமன் அவனுருவம் சிதைய அழித்து இவ்வுலகினைக் காத்தான். இத்திருமால், குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்தில் விரும்பித் தங்கி உள்ளார். இங்கே குரவமரங்கள் அரும்புவிடும்; கோங்கு மலரும்; குயில்கள் களித்துக் கூவும். 406

பகவான் தன் சக்கரப்படையை ஏவிப் பாதாள உலக அசுரர்கள் அடியிலிருந்து மேலே வராதபடி, கருப்பை வரை அழித்துத் தேவர்களைக் காத்தான். இந்த அருளாளன் எழுந்தருளி உள்ள திருவரங்கத்தில் வண்டினங்கள் தாழம்பூக்களின் வெண்மையான பொடிகளை உடம்பில் பூசியபடி, களிப்பால், வீணை இசை போல, ‘தெனதென’ என ஆளத்தி பாடும். 407

கொழுப்புடன் கூடி, இரத்த ஊற்று அருவி போல் நிலத்திலே குமிழ்த்து ஓடும் படி உலக மக்களைக் கொன்ற பிழை உடைய அசுரர்களைப் பகவான் அழித்துப் பிணமாக்கினான். இந்த சர்வேச்வரன் நித்திய வாசம் செய்யும் திருவரங்கத்தில், காவிரி ஆறு மலையில் வளர்ந்து சந்தன மரங்களை வேருடன் பிடுங்கியபடி, ஆரவாரத்துடன் ஓடிப் பெரிய பெருமாள் திருவடிகளைத் தொட்டபடி தொழும். 408

வன்மையான பற்களை உடைய வராஹமாய் அவதரித்த இறைவன் எல்லை இல்லாப் பூமியை எடுத்துக் காத்தான். ஒளி வீசும் பற்களுடன் நரசிம்மமாய்த் தோன்றிய அவன் இரணியனைக் கொன்றான். இத்தகைய மேன்மை உடையவன் எழுந்தருளி உள்ள மதிள் சூழ்ந்த திருவரங்கத்தில், அந்திப் பொழுதில், பெரிய சிறகுடைய வண்டுகள், மல்லிகைப் பூக்களையே சங்காக ஊதி, அன்புடன், பெருமாளின் குணங்களைப் பாடும். 409

இறைவனான திருமால், மலையில் பரவும் மேகம் போன்ற குளிர்ந்த குணம் உடையவன்; குவளைப் பூப் போன்ற பளபளப்பும், ஒலிக்கும் கடல் போன்ற கம்பீரமும், கூட்டமாய் நின்றாடும் மயில் போன்ற அழகான நிறமும் உடையவன். இப்பெருமான் நித்தியவாசம் செய்யும் திருவரங்கத்தில், தென்றல் வீசும் மலைச் சோலைகளில் நுழைந்து வந்த தென்றல் கொடி போன்ற மாதர்களின் சந்தனம் பூசிய மார்புகளில் பட்டு, நாற்சந்திகள் ஊடே உலாவி மதிள்களைச் சார்ந்து வீசும். 410

பரு வரங்கள் அவைபற்றிப் படை ஆலித்து எழுந்தானைச்
செரு அரங்கப் பொருது அழித்த திருவாளன் திருப்பதிமேல்
திருவரங்கத் தமிழ்மாலை விட்டுசித்தன் விரித்தன கொண்டு
இருவர் அங்கம் எரித்தானை ஏத்த வல்லார் அடியோமே. 411

## திருவரங்கம் –2

மரவடியைத் தம்பிக்கு வான்பணையம் வைத்துப்போய்
வானோர் வாழச்
செரு உடைய திசைக்கருமம் திருத்திவந்து உலகாண்ட
திருமால் கோயில்;
திருவடிதன் திருஉருவும் திருமங்கை மலர்க்கண்ணும்
காட்டி நின்று
உரு உடைய மலர்நீலம் காற்று ஆட்ட ஓ! சலிக்கும்
ஒளி அரங்கமே. 412

தன் அடியார் திறத்தகத்துத் தாமரையாள் ஆகிலும்
சிதகு உரைக்குமேல்
என் அடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்
என்பர் போலும்;
மன் உடைய விபீடணற்கா மதில் இலங்கைத் திசைநோக்கி
மலர்க்கண் வைத்த
என்னுடைய திருவரங்கற்கு அன்றியும் மற்று ஒருவர்க்கு
ஆள் ஆவரே? 413

கருள் உடைய பொழில் மருதும் கதக் களிறும் பிலம்பனையும்
கடிய மாவும்
உருள் உடைய சகடரையும் மல்லரையும் உடைய விட்டு
ஓசை கேட்டான்
இருள் அகற்றும் எறி கதிரோன் மண்டலத்தூடு ஏற்றி வைத்து
ஏணி வாங்கி
அருள் கொடுத்திட்டு அடியவரை ஆட்கொள்வான் அமரும்ஊர்
அணி அரங்கமே. 414

பதினாறாம் ஆயிரவர் தேவிமார் பணிசெய்யத்
துவரை என்னும்
அதில் நாயகராகி வீற்றிருந்த மணவாளர்
மன்னு கோயில்;
புது நாள்மலர்க் கமலர் எம்பெருமான் பொன் வயிற்றிற்
பூவே போல்வான்
பொதுநாயகம் பாவித்து இறுமாந்து பொன் சாய்க்கும்
புனல் அரங்கமே. 415





*பெரிய வரங்களின் துணையுடன் போரிட வந்த இராவணனை ஸ்ரீ ராமபிரான் அழித்தார். இத்தகைய வீரத் திருவுடைய நம்பெருமாள் உறைகின்ற திருவரங்கம் பற்றிப் பாசுரமிட்ட பெரியாழ்வாரின் தமிழ் மாலையைப் பாடி மதுகைடபர்களை அழித்த பெருமாளைத் துதிப்பவர்களுக்கு நாங்கள் அடியவர்கள் ஆவோம்.* **411**

## திருவரங்கம் – 2

*தம்பியான பரதனுக்குத் தன் திருவடி நிலைகளை இராமபிரான் தான் திரும்பி வருவதற்காக அடகு வைத்தார். தேவர்களின் வாழ்விற் காகத் தெற்கே சென்று இராவணனைக் கொன்று வீடணனுக்கு முடிசூட்டிப் பின் அயோத்தி வந்து உலகை ஆண்டருளினார். இத்திருமாலுக்கு உறைவிடமான திருவரங்கத்தில் அழகிய கரு நெய்தல் பூ பெருமாளின் திருமேனி நிறத்தையும் பிராட்டியின் கண்ணழகையும் காட்டிக் காற்றில் அசையும்.* **412**

*பரிந்துரை செய்யும் பிராட்டியே ஆகிலும் தன் அடியார்களைக் குற்றம் சாட்டினால், 'என் அடியார் அது செய்யார்; அவ்வாறு குற்றம் செய்தாலும் எனக்கு அவர்கள் நல்லவர்களே!' என்று திருமால் கூறுவார். இக்குணத்தை எடுத்துக் காட்டுவது போலத் திருவரங்க நாதன் வீடணனுக்காக மதிள் இலங்கை நகர்த் திசை நோக்கி மலர்க்கண்ணால் பார்த்தபடி பள்ளி கொண்டுள்ளார். இப்பெரிய பெருமாளை அன்றி வேறு ஒருவர்க்கு ஆட்படலாகுமோ?* **413**

*சோலையில் நின்ற வஞ்சக மருத மரங்களையும் சீறிய குவலயா பீட யானையையும், பிரலம்பன், கேசி, சகடாசுரன், சாணூரன், முஷ்டிகன் ஆகியோரையும் கொன்ற ஸ்ரீகிருஷ்ணன் அடியார்கள் தோத்திரத்தைக் கேட்பான். இந்த பகவானே அடியார்களை இருள் நீக்கும் சூரிய மண்டல வழியாய்ப் பரம பதத்தில் ஏற்றித் தன் உபாய பாவமாகிய ஏணியைத் திரும்ப வாங்கி கைங்கர்யப் பேற்றை அடையுமாறு ஆட்கொள்வான். இந்தப் பெரிய பெருமாள் அமரும் ஊர் திருவரங்கம் ஆகும்.* **414**

*துவாரகையில் பதினாறாயிரம் கோபியர் பணி செய்ய நாயகனாய் வீற்றிருந்தவனே அழகிய மணவாளனாய்த் திருவரங்கத்தே கோயில் கொண்டான். அன்றாடம் மலரும் தாமரைப்பூ பெருமாள் திருநாபிக் கமலத்தைப் போல், தன் பேராட்சியை எண்ணி இறுமாந்து மற்றையப் பூக்களின் அழகைத் தாழ்வு செய்யும். இத்தகைய நீர்வளம் உடையது இப்புனல் அரங்கம் ஆகும்.* **415**

ஆமையாய்க் கங்கையாய் ஆழ் கடலாய் அவனியாய்
அரு வரைகளாய்
நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த்
தானும் ஆனான்
சேமம் உடை நாரதனார் சென்று சென்று துதித்து இறைஞ்சக்
கிடந்தான் கோயில்;
பூ மருவிப் புள் இனங்கள் புள் அரையன் புகழ் குழறும்
புனல் அரங்கமே. 416

மைத்துனன்மார் காதலியை மயிர் முடிப்பிடித்து அவர்களையே
மன்னர் ஆக்கி
உத்தரைதன் சிறுவனையும் உய்யக்கொண்ட உயிராளன்
உறையும் கோயில்;
பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும்
பரந்த நாடும்
சித்தர்களும் தொழுது இறைஞ்சத் திசைவிளக்காய் நிற்கின்ற
திரவரங்கமே. 417

குறள் பிரமசாரியாய் மாவலியைக் குறும்பு அதக்கி
அரசுவாங்கி
இறைப்பொழுதில் பாதாளம் கலவிருக்கை கொடுத்து உகந்த
எம்மான் கோயில்;
எறிப்பு உடைய மணிவரைமேல் இளஞாயிறு எழுந்தாற்போல்
அரவுஅணையின் வாய்
சிறப்பு உடைய பணங்கள்மிசைச் செழுமணிகள் விட்டு
எறிக்கும் திருவரங்கமே. 418

உரம் பற்றி இரணியனை உகிர்நுதியால் ஒள்ளிய மார்வு
உறைக்க ஊன்றிச்
சிரம் பற்றி முடி இடியக் கண் பிதுங்க வாய் அலறத்
தெழித்தான் கோயில்;
உரம் பெற்ற மலர்க்கமலம் உலகு அளந்த சேவடி போல்
உயர்ந்து காட்ட
வரம்பு உற்ற கதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத் தலைவணங்கும்
தண் அரங்கமே. 419

தேவு உடைய மீனமாய் ஆமையாய் ஏனமாய்
அரியாய்க் குறளும் ஆகி
மூஉருவில் இராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய்
முடிப்பான் கோயில்;
சேவலொடு பெடை அன்னம் செங்கமல மலர் ஏறி
ஊசல் ஆடிப்
பூஅணைமேல் துதைந்து எழு செம்பொடி ஆடி விளையாடும்
புனல் அரங்கமே. 420





திருமால், கங்கை நதியில் ஆமையாய், கங்கை ஆறாய்க் கடலாய்ப் பூமியாய், மலைகளாய்ப் பிரமனாய், நான்கு வேதங்களாய், வேள்விகளாய், தட்சிணையாய் ஆனவன். திவ்விய, திருமேனி உடைய அவன், நன்மையுடைய நாரதர் பலகாலும் வந்து துதிக்கும்படி, திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ளான். இங்கே பறவை இனங்கள் பூக்களில் தங்கிக் கருடாழ்வான் புகழ் பாடும். **416**

தன் மைத்துனர்களான பாண்டவர்களின் மனைவி திரௌபதியின் கூந்தலை முடிப்பித்த கண்ணன் அவர்களை அரசாள வைத்துப் பின் உத்தரையின் புதல்வனுக்கு உயிர் கொடுத்து அருளினான். எல்லா உயிர்களுக்கும் நாதனான இப்பெருமான் தங்குகிற திருவரங்கத்தே, பக்தர்கள், துறவிகள், முனிவர்கள், நித்ய முக்தர்கள் கூடித் திசை விளக்காகத் திகழும் இத்திவ்விய தேசத்தைத் தொழுது வணங்குவார்கள் . **417**

மகாபலியிடத்தே குட்டையான பிரமசாரி வடிவில் சென்ற பகவான் அவன் செருக்கை அடக்கி, அரசை நீரேற்று வாங்கி நொடிப் பொழுதில், பாதாள உலகை அவனுக்குக் கொடுத்து உகந்தான். இப் பெருமான் கோவில் கொண்டுள்ள திருவரங்கத்தில் பெருமானுக்குப் படுக்கையாக் கிடக்கும் ஆதிசேடனின் படங்கள் மீதுள்ள மணிகள் எங்கும் ஒளி வீசும். நீலரத்தின மலையின் மேல் இளஞ்சூரியன் உதித்தது போன்று காட்சி தரும். **418**

நரசிம்மனான பகவான் வலிமை பெற்ற இரணியன் மார்பில் தன் கை நகங்களை ஊன்றிக் கிழித்து, அவன் முடி பொடிபடக் கண் பிதுங்க, வாய் அலரத் தலையை நெறித்து வதைத்தான். இப் பெருமான் எழுந்தருளி உள்ள திருவரங்கத்தே, தாமரைப் பூ, திரிவிக்கிரமனின் திருவடிகளைப் போல் உயர்ந்து ஒளி விடும். வயல் வரம்பு வரை வளர்ந்த நெற்கதிர்கள் தாள்களை நீட்டித் தலை வளைந்து நிற்கும். **419**

அசுரர்களையும் அரக்கர்களையும் அழிப்பதற்காகப் பகவான், ஒளியுடைய மீனாய், ஆமையாய், வராஹமாய், நரசிம்மமாய், வாமனனாய், பரசுராம, ஸ்ரீராம, பலராமர்களாய்க் கண்ணனாய்க் கல்கியாய் அவதாரம் செய்தான். இப்பெரிய பெருமாளின் திருவரங்கத்தில் ஆண் அன்னம் தன் பேடையுடன் செந்தாமரைப் பூவில் ஊஞ்சல் ஆடி, அப்பூவின் பொடியிலே மூழ்கி விளையாடும். இத்தகைய நீர்வளம் அவ்வூரில் உண்டு. **420**

செரு ஆளும் புள்ளாளன் மண்ணாளன் செருச்செய்யும்
    நாந்தகம் என்னும்
ஒரு வாளன் மறையாளன் ஓடாத படையாளன்
    விழுக்கை யாளன்
இரவு ஆளன் பகலாளன் என்னையாளன் ஏழு உலகப்
    பெரும் புரவாளன்
திருவாளன் இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற
    திருவரங்கமே. 421

கைந்நாகத்து இடர் கடிந்த கனல் ஆழிப் படை உ.டையான்
    கருதும் கோயில்
தென்நாடும் வடநாடும் தொழுநின்ற திருவரங்கத்
    திருப்பதியின் மேல்
மெய்ந்நாவன் மெய்அடியான் விட்டுசித்தன் விரித்த தமிழ்
    உரைக்க வல்லார்
எஞ்ஞான்றும் எம்பெருமான் இணையடிக்கீழ் இணை பிரியாது
    இருப்பர் தாமே. 422

## இறுதிக் காலத்தே அருள் வேண்டி அரங்கனைச் சரணடைதல்

துப்புடையாரை அடைவது எல்லாம்
    சோர்விடத்துத் துணை ஆவர் என்றே;
ஒப்பிலேன் ஆகிலும் நின் அடைந்தேன்
    ஆனைக்கு நீ அருள் செய்தமையால்;
எய்ப்பு என்னை வந்து நலியும்போது அங்கு
    ஏதும் நான் உன்னை நினைக்கமாட்டேன்;
அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்.
    அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 423

சாம் இடத்து என்னைக் குறிக்கொள் கண்டாய்,
    சங்கொடு சக்கரம் ஏந்தினானே!
நா மடித்து என்னை அனேக தண்டம்
    செய்வதா நிற்பர் நமன்தமர்கள்;
போம் இடத்து உன்திறத்து எத்தனையும்
    புகாவண்ணம் நிற்பதோர் மாயை வல்லை;
ஆம் இடத்தே உன்னைச் சொல்லி வைத்தேன்,
    அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 424





*என்னை ஆளும் எம்பெருமான் ஏழுலகங்களுக்கும் அதிபதி. போரில் ஆளுமை உடைய கருடனை ஆளும் பகவான், மண்ணுலகை ஆள்பவன்; போர் செய்யும் நாந்தக வாளுடன் புறமுதுகிடாதவன். வேதங்களை ஆளும் சீர்மை உடைய கால நாயகன். இராப்பகலுக்குத் தலைவன். இப்பெருமான் திருக்கண் வளர்கின்ற திவ்விய தேசம் திருவரங்கம் ஆகும்.* **421**

*துதிக்கை பெற்ற கஜேந்திரனின் துன்பத்தை நீக்கின, சக்கரப்படை ஏந்திய திருமால், தென்னாடும் வடநாடும் தொழும் படியான திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ளார். இத்திருப்பதி பற்றி, உண்மை அடியார் ஆகிய பெரியாழ்வார் விரித்த தமிழ் மாலையை உரைக்க வல்லவர் திருமால் அடிக்கீழ் இருக்கப் பெறுவர்.* **422**

## இறுதிக் காலத்தே அருள் வேண்டி அரங்கனைச் சரணடைதல்

*எம் பெருமானே! அடைக்கலம் புகுந்தாரைக் காக்கும் உம் வலிமையைக் காட்ட அன்றோ நீர் திருவரங்கத்தில் பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டீர்! அடியேன் புலன்கள் யாவும் சோர்ந்து விட்டன; தேவரீரே துணை, என்று சரணம் அடைந்தேன். சரணாகதி செய்வோர்க்கு அடியேன் ஒப்பில்லை ஆகிலும், தேவரீர் கஜேந்திரனுக்கு அருள் செய்தது போல அடியேனுக்கும் அருள் புரிய வேண்டும். கப, வாத, பித்தங்கள் கிட்டி வருத்தும் முடிவுக் காலத்தில் சற்றாவது உம்மை நான் நினைக்க மாட்டேன். அக்காலத்துக்காக இப்போதே சொல்லி வைத்தேன்.* **423**

*ஆத்மாக்களைக் காப்பதற்காக, சங்கு சக்கரம் ஏந்தியவனாய்த் திருவரங்கத்தில் ஆதி சேடன் மீது பள்ளி கொண்டவரே! யமனின் பணியாளர் கோபத்துடன் நாக்கைக் கடித்துக் கொண்டு, என்னைப் பலவாறு தண்டிக்க வந்து நின்று இழுத்துக் கொண்டு போகும் பொழுது உம்மைப் பற்றிச் சிறிதளவாவது என் மனம் எண்ணாது தேவரீரோ உம்மை மறைத்துக் கொள்ளும் மாயை செய்வதில் வல்லவர். ஆதலால் புலன்கள் நல்ல நிலையில் உள்ள இப்பொழுதேயே உம்மைக் குறித்துக் கூறி விட்டேன். சாகும் பொழுது உம்மை நினைக்க முடியாத என்னை இப்பொழுதே திருவுள்ளம் பற்றி அருள வேண்டும்.* **424**

எல்லையில் வாசல் குறுகச் சென்றால்
    எற்றி நமன்தமர் பற்றும்போது
நில்லுமின் என்னும் உபாயம் இல்லை;
    நேமியும் சங்கமும் ஏந்தினானே!
சொல்லலாம் போதே உன் நாமம் எல்லாம்
    சொல்லினேன், என்னைக் குறிக்கொண்டு என்றும்
அல்லற் படாவண்ணம் காக்க வேண்டும்;
    அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 425

ஒற்றை விடையனும் நான்முகனும்
    உன்னை அறியாப் பெருமையோனே!
முற்ற உலகு எல்லாம் நீயே ஆகி
    மூன்று எழுத்து ஆய முதல்வனே! ஓ!
அற்றது வாழ்நாள் இவற்கு என்று எண்ணி
    அஞ்ச நமன்தமர் பற்றல் உற்ற
அற்றைக்கு, நீ என்னைக் காக்க வேண்டும்;
    அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 426

பை அரவின் அணைப் பாற்கடலுள்
    பள்ளி கொள்கின்ற பரம மூர்த்தி!
உய்ய உலகு படைக்க வேண்டி
    உந்தியில் தோற்றினாய் நான்முகனை;
வைய மனிசரைப் பொய் என்று எண்ணிக்
    காலனையும் உடனே படைத்தாய்;
ஐய! இனி என்னைக் காக்கவேண்டும்;
    அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 427

தண்ணனவு இல்லை, நமன் தமர்கள்
    சாலக் கொடுமைகள் செய்யாநிற்பர்;
மண்ணொடு நீரும் எரியும் காலும்
    மற்றும் ஆகாசமும் ஆகி நின்றாய்!
எண்ணலாம் போதே உன் நாமம் எல்லாம்
    எண்ணினேன், என்னைக் குறிக்கொண்டு என்றும்
அண்ணலே! நீ என்னைக் காக்கவேண்டும்
    அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 428

செஞ்சொல் மறைப்பொருள் ஆகி நின்ற
    தேவர்கள் நாயகனே! எம்மானே!
எஞ்சலில் என்னுடை இன் அமுதே!
    ஏழ் உலகும் உடையாய்! என் அப்பா!
வஞ்ச உருவின் நமன் தமர்கள்
    வலிந்து நலிந்து என்னைப் பற்றும்போது
அஞ்சலை என்று என்னைக் காக்கவேண்டும்;
    அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 429





*திருவரங்கத்தில் பாம்புப் படுக்கையில் பள்ளி கொண்டவனே! சக்கரத்தையும் சங்கையும் ஏந்தியவனே! அடியேன் ஆயுள் முடிந்து யமனுலகின் வாசல் அடையும் பொழுது, யமன் பணியாளர்கள் ஏற்றிப் பிடிக்கையில், தடுத்து நிறுத்தும் உபாயம் என் கையில் இல்லை. ஆதலால், இந்திரியங்கள் சரியாய் இருக்கும் இப்பொழுதே உம் திருநாமங்களைச் சொல்கிறேன். யமபடர்கையில் துன்புறா வண்ணம் காக்க வேண்டும்.* **425**

*காளை வாகனமுடைய சிவனும் பிரமனும் அறிய ஒண்ணாத பெருமையுடையவனே! அரங்கத்து அரவணைப் பள்ளியானே! எல்லா உலகங்களுக்கும் காரணனான முதல்வனே! மூன்றெழுத்து வடிவமான பிரணவப் பொருளே! 'இவனுக்கு ஆயுள் முடிந்தது' என்று யமபடர்கள் அடியேனைப் பிடிக்கிற பொழுது நீ என்னை அவர்களிடமிருந்து காக்க வேண்டும்.* **426**

*பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது கண்வளர்ந்தவனே; பரமமூர்த்தி! எல்லா ஆன்மாக்களையும் உய்விக்க எண்ணி உலகைப் படைக்க நான்முகனை உன் கொப்பூழிலே தோற்றுவித்த நீயே, உலகிலுள்ள மனித வாழ்வைப் பொய்யென்று எண்ணும்படி, யமனையும் கூடவே படைத்தாயே! உற்ற சுற்றமான அரங்கத் தரவணைப் பள்ளி யானே! என்னை, இனி யமபடரிடமிருந்து காத்தருள வேண்டும்.* **427**

*பூமி, நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐம்பூதங்களாயும் அவற்றை நியமிப்பவனாயும் உள்ள இறைவனே! இப்போது அடியேன் உன் திரு நாமங்களைத் தாரகமாகவும் போக்யமாகவும் எண்ணித் துதிக்கிறேன். ஆனால், யமபடர்கள் இரக்கமின்றிக் கொடுமைகள் செய்யும் முடிவுக் காலத்தே துதிக்க இயலுமோ? ஆதலின் நீ என்றும் அடியேனைக் குறிக் கொண்டு காக்க வேண்டும்.* **428**

*செஞ்சொல் வேதத்தின் பொருள் ஆனவனே! நித்திய சூரிகள் தலைவனான சுவாமியே! இன்னமுதே! ஏழுலகும் உடைய இறைவனே! என் அப்பனே! அரங்கத்து அரவணைப் பள்ளியானே! கண்ணுக்குத் தெரியாமல் மறைந்த வடிவில் வரும் யமதூதர்கள் என்னை வலிந்து பிடித்துத் துன்புறுத்தும் காலத்தில் 'அஞ்சாதே!' என்று என்னைக் காத்தருள வேண்டும்.* **429**

நான் ஏதும் உன் மாயம் ஒன்று அறியேன்;
நமன் தமர் பற்றி நலிந்திட்டு இந்த
ஊனே புகே என்று மோதும்போது அங்கு
ஏதும் நான் உன்னை நினைக்கமாட்டேன்;
வான் ஏய் வானவர் தங்கள் ஈசா!
மதுரைப் பிறந்த மா மாயனே! என்
ஆனாய்! நீ என்னைக் காக்கவேண்டும்;
அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 430

குன்று எடுத்து ஆதிரை காத்த ஆயா!
கோநிரை மேய்த்தவனே! எம்மானே!
அன்று முதல் இன்று அறுதியாக,
ஆதி அஞ் சோதி! மறந்து அறியேன்;
நன்றும் கொடிய நமன் தமர்கள்
நலிந்து வலிந்து என்னைப் பற்றும்போது
அன்று அங்கு நீ என்னைக் காக்கவேண்டும்;
அரங்கத்து அரவணைப் பள்ளியானே! 431

மாயவனை மதுசூதனனை
மாதவனை மறையோர்கள் ஏத்தும்
ஆயர்கள் ஏற்றினை அச்சுதனை
அரங்கத்து அரவணைப் பள்ளியானை
வேயர் புகழ் வில்லிபுத்தூர் மன்
விட்டுசித்தன் சொன்ன மாலை பத்தும்
தூய மனத்தினர் ஆகி வல்லார்
தூ மணிவண்ணனுக்கு ஆளர் தாமே. 432

## தன் தாழ்ச்சியை அறிவித்தல்

வாக்குத் தூய்மை இலாமையினாலே,
மாதவா! உன்னை வாய்க்கொள்ள மாட்டேன்;
நாக்கு நின்னை அல்லால் அறியாது;
நான் அது அஞ்சுவன், என்வசம் அன்று;
மூர்க்குப் பேசுகின்றான் இவன் என்று
முனிவாயேலும் என் நாவினுக்கு ஆற்றேன்;
காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர்;
காரணா! கருளக் கொடியானே! 433





அடியேன் எல்லா வல்லமைகளும் உடைய உமது மாயைகளில் யாது ஒன்றையும் அறியேன். யமன் பணியாளர்கள் என்னைப் பிடித்துத் துன்புறுத்தி, 'நரக வேதனைக்கான வேற்று உடம்பில் புகுந்து கொள்' என்று அடிக்கும் பொழுது உம்மை நினைக்க மாட்டேன். பரமபத நாதனே! மதுரையிலே அவதரித்த மாயக் கண்ணனே! பாகனுக்கு வசப்படும் யானை போன்று, அடியேனிடத்தே எளிமையானவனே! அரங்கத்தரவணைப் பள்ளியானே! அடியேனைக் காத்தல் வேண்டும். 430

மலையைத் தூக்கிப் பசுக்கூட்டத்தைக் காத்தவனே! பசு மேய்த்தவனே! என் இறைவனே! அரங்கத்தரவணைப் பள்ளியானே! அன்று முதல் இன்று வரை ஆதி காரணன் ஆகிய உன்னுடைய ஒளி வடிவ மேனியை மறந்தறியேன். மிகவும் கொடியவரான யம படர்கள் என்னைத் துன்புறுத்தும் பொழுது, அங்கு நீ என்னைக் காக்க வேண்டும். 431

வேதியர்கள் துதிக்கும் இடையர்தலைவனான மாயவனை, மதுசூதனனைத் திருமகள் கேள்வனை, அச்சுதனை, அரங்கத்து அரவணைப் பள்ளி யானை, வேயர் குலம் புகழும் வில்லிபுத்தூர் விஷ்ணுசித்தர் பத்துப் பாசுரங்களில் ஏத்தினார். இவற்றைத் தூய மனத்துடன் பயில்பவர்கள், தூமணிவண்ணனான திருமாலுக்கு அடிமை செய்யப் பெறுவர். 432

## தன் தாழ்ச்சியை அறிவித்தல்

திருமகள் கேள்வனே! உன்னைத் துதி செய்யும் தூய்மை அடியேன் வாக்குக்கு இல்லாததாலே, அதனை மேற் கொள்ள இயலவில்லை. ஆனாலும் என் நாவோ உன்னை அல்லது வேறு அறியாதது; அந்த நாவுக்கு உள்ள இயல்பான குற்றத்தை எண்ணி நான் பயப்படுகின்றேன். அது என் வசம் உள்ளதன்று. 'இவன் மூர்க்கத்தனமாகப் பேசுகிறானே!' என்று நீ என்மேல் கோபப்பட்டாலும், என் நாவுக்கு ஆற்றேன். எல்லாவற்றிற்கும் காரணனாக உள்ள பெருமானே! கருடக்கொடியைப் பெற்றவனே! காக்கை வாயிலும் நல்ல சொற்களையே அறிவுடையார் கொள்வார். ஆகையால் என் பேச்சிலும் நல்லதையே நீ கொண்டருள வேண்டும். 433

சழக்கு நாக்கொடு புன்கவி சொன்னேன்,
சங்கு சக்கரம் ஏந்து கையானே!
பிழைப்பர் ஆகிலும் தம் அடியார் சொல்
பொறுப்பது பெரியோர் கடன் அன்றே;
விழிக்கும் கண்ணிலேன் நின் கண் மற்றல்லால்,
வேறு ஒருவரோடு என் மனம் பற்றாது,
உழைக்கு ஓர் புள்ளி மிகை அன்று கண்டாய்;
ஊழி ஏழ் உலகு உண்டு உமிழ்ந்தானே! 434

நன்மை தீமைகள் ஒன்றும் அறியேன்,
நாரணா! என்னும் இத்தனை அல்லால்;
புன்மையால் உன்னைப் புள்ளுவம் பேசிப்
புகழ்வான் அன்று கண்டாய், திருமாலே!
உன்னுமாறு உன்னை ஒன்றும் அறியேன்,
ஓவாதே நமோ நாரணா! என்பன்;
வன்மை ஆவது உன் கோயிலில் வாழும்
வைட்டணவன் என்னும் வன்மை கண்டாயே! 435

நெடுமையால் உலகேழும் அளந்தாய்!
நின்மலா! நெடியாய்! அடியேனைக்
குடிமை கொள்வதற்கு ஐயுற வேண்டா,
கூறை சோறு இவை வேண்டுவதில்லை;
அடிமை என்னும் அக் கோயின்மையாலே
அங்கங்கே அவை போதரும் கண்டாய்;
கொடுமைக் கஞ்சனைக் கொன்று நின் தாதை
கோத்த வன் தளை கோள் விடுத்தானே! 436

தோட்டம் இல்லவன் ஆத் தொழு ஓடை
துடவையும் கிணறும் இவை எல்லாம்
வாட்டம் இன்றி உன் பொன்னடிக் கீழே
வளைப்பு அகம் வகுத்துக்கொண்டு இருந்தேன்;
நாட்டு மானிடத்தோடு எனக்கு அரிது,
நச்சுவார் பலர்; கேழல் ஒன்று ஆகிக்
கோட்டு மண் கொண்ட கொள்கையினானே!
குஞ்சரம் வீழக் கொம்பு ஒசித்தானே! 437

கண்ணா! நான்முகனைப் படைத்தானே!
காரணா! கரியாய்! அடியேன் நான்
உண்ணா நாள் பசி ஆவது ஒன்று இல்லை;
ஓவாதே நமோ நாரணா என்று
எண்ணா நாளும் இருக்கு எசுச் சாம
வேத நாள்மலர் கொண்டு உன் பாதம்
நண்ணா நாள் அவை தத்துறுமாகில்,
அன்று எனக்கு அவை பட்டினி நாளே. 438





*சங்கு சக்கரக்கையனே! குற்றமுடைய நாவாலே தாழ்ந்த கவிகள் சொன்ன அடியேனைக் காப்பவர் உம்மை அன்றி வேறு யாரும் இலர். அடியேன் மனமும் வேறு யாரையும் பற்றாது. பெருந்தன்மை உடையவர்களுக்குத் தம் அடியவர் தவறுகளைப் பொறுப்பது கடமை அன்றோ! புள்ளி மானுக்கு ஒரு புள்ளி அதிகமாக இருப்பது பாரம் ஆகாதது போல, அடியேன் தவறுகளை, ஏழுலகினையும் உண்டுமிழ்ந்த நீரே பொறுக்க வேண்டும்.* 434

*திருமாலே! நாராயணா என்று கூறுவதையன்றி வேறு நன்மை தீமைகளை நான் அறியேன். பயனை எதிர்ப்பார்த்து வஞ்சகமாகப் புகழ்வதும் அறியேன். இடைவிடாமல் 'நமோ நாராயணாய' என்பதைக் கூறுவதன்றி வேறு உபாயமும் அறியேன். 'உன் கோயிலில் வாழும் ஸ்ரீவைஷ்ணவன் என்னும் தகுதி ஒன்றே அன்றி, வேறு வல்லமை எதுவும் அடியேனிடம் இல்லை.* 435

*திரிவிக்கிரமனாய் உலகங்களை அளந்த தூய நெடுமாலே! கொடிய கம்சனைக் கொன்று தந்தை கால் விலங்கை அறுத்த கண்ணா! அடியேனை அடிமை கொள்ளச் சந்தேகம் வேண்டாம். உன்னிடம் ஆடை, உணவுகளை நான் விரும்பவில்லை. அடியேன் வேண்டற்பாடு உன்னிடம் அடிமை புகுவதுவே ஆகும். அதுவே ஜன்மந்தோறும் சோற்றையும் ஆடையையும் தந்து விடும்.* 436

*வராஹ வடிவம் எடுத்துப் பூமியைத் தூக்கிக் காத்தவனே! குவலயாபீட யானையின் கொம்பொடித்தவனே! அடியேன் உன் திருவடி நிழலிலே எல்லா வளங்களும் பெற்று விட்டேன். தோட்டம், மனைவி, பசு, தொழுவம், குளம், நிலம், கிணறு ஆகிய செல்வங்கள் குறையாமல், நெஞ்சால் வளைத்துக் கொண்டு விட்டேன். எல்லாம் நீயே என்கிற அடியேனுக்கு மனிதத் தொடர்பு வேண்டாம். பலர் இதை விரும்பினாலும், கர்மத் தொடர்பைக் கழித்து அருள வேண்டும்.* 437

*கண்ணா! பிரமனைப் படைத்த ஆதிகாரணனே! நீல நிறத்த இறைவனே! உன் அடியனான நான், உண்ணாத நாளில் பசி உண்டாவதில்லை. இடைவிடாமல் 'நமோ நாராயணாய' என்று எண்ணாத நாள்களும் இருக்கு யசுர், யாம வேதங்களால் பூக்களைப் போட்டு உன் திருவடிகளில் வணங்காத நாள்களும், எனக்குப் பட்டினி, நாள்கள் மந்திர வழிபாடும் பூப்போடும் பூஜையும் தட்டுப் பட்டால், அந் நாள்களே பட்டினி நாள்கள் உன் திருவடி சேரும் நாள் உண்ணும் நாள்; உன் திருவடி பணியாத நாளே, பட்டினி நாள் ஆகும்.* 438

வெள்ளை வெள்ளத்தின் மேல் ஒரு பாம்பை
மெத்தையாக விரித்து அதன் மேலே
கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம்
காணலாங்கொல் என்று ஆசையினாலே,
உள்ளம் சோர உகந்து எதிர் விம்மி
உரோம கூபங்களாய்க் கண்ண நீர்கள்
துள்ளம் சோரத் துயில் அணை கொள்ளேன்;
சொல்லாய் யான் உன்னைத் தத்துறுமாறே. 439

வண்ண மால் வரையே குடையாக
மாரி காத்தவனே! மதுசூதா!
கண்ணனே! கரி கோள் விடுத்தானே!
காரணா! களிறு அட்ட பிரானே!
எண்ணுவார் இடரைக் களைவானே!
ஏத்தரும் பெருங் கீர்த்தியினானே!
நண்ணி நான் உன்னை நாள்தொறும் ஏத்தும்
நன்மையே அருள்செய், எம்பிரானே! 440

நம்பனே! நவின்று ஏத்த வல்லார்கள்
நாதனே! நரசிங்கமது ஆனாய்!
உம்பர்கோன் உலகு ஏழும் அளந்தாய்!
ஊழி ஆயினாய்! ஆழி முன் ஏந்திக்
கம்ப மா கரி கோள் விடுத்தானே!
காரணா! கடலைக் கடைந்தானே
எம்பிரான் என்னை ஆள் உடைத் தேனே!
ஏழையேன் இடரைக் களையாயே. 441

காமர் தாதை கருதலர் சிங்கம்
காண இனிய கருங்குழற் குட்டன்
வாமனன் என் மரதக வண்ணன்
மாதவன் மதுசூதனன் தன்னைச்
சேம நன்கு அமரும் புதுவையர் கோன்
விட்டுசித்தன் வியன் தமிழ் பத்தும்
நாமம் என்று நவின்று உரைப்பார்கள்
நண்ணுவார் ஒல்லை நாரணன் உலகே. 442







தூய பாற்கடலில் ஒப்பற்ற திருவனந்தாழ்வானைப் படுக்கை ஆகக் கொண்டு யோக நித்திரை செய்யும் உன் அழகினைப் பார்க்கலாகுமோ என்கிற ஆசையாலே அடியேன் நெஞ்சம் சோர்கிறது. ஆயினும் நெஞ்சின் அனுபவத்தாலே, களித்து விம்மி, மயிர்க்கூச் செறிகிறேன். உருவெளித் தோற்றத்தால், கையை நீட்டி அணைக்கத் தேடுகையில் காணாததால் கண்ணீர்த் துளிகள் விழுந்து, படுக்கையிலே தூக்கமில்லாமல் வருந்துகிறேன். உன்னை அடையும் வழியை நீதான் அருள வேண்டும். 439

மதுசூதா! உலகங்கள் உண்டாகக் காரணமான உன்னை எண்ணுபவர்களின் துன்பங்களைப் போக்குபவனே! கஜேந்திரனின் ஆபத்தைப் போக்கிய கண்ணா! அழகிற் பெரிய கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கி, மழையிலிருந்து ஆனிரைகளைக் காத்தவனே! குவலயா பீட யானையைக் கொன்றவனே! துதிகளுக்கு அப்பாலான புகழுடையவனே! அடியேன் எப்பொழுதும் உமக்கு ஆட்பட்டுத் தினந்தோறும் துதித்து வழிபடும் நன்மையைத் தந்தருள வேண்டும். 440

நம்பிக்கைக்கு ஏற்ற காப்பாளனே! துதிப்பவர்கள் நாதனே! நரசிம்மாவதாரம் செய்த நித்ய சூரிகள் தலைவா! உலகேழும் அளந்தாயே! ஊழிக்காலமான நீயே, பின்பு உலகங்களைப் படைத்துக் காக்கிறாய். சக்கரம் ஏந்தி வந்து கஜேந்திரனின் துன்பத்தைத் தீர்த்த இறைவா! உலக காரணன் ஆன நீயே, திருப்பாற் கடலைக் கடைந்தாய். எம்பிரானே! என்னை அடிமை கொண்ட, தேனிலும் இனியவனே! ஏழையான அடியேன் துன்பத்தைக் களைந்தருள வேண்டும். 441

திருமாலாகிய இறைவன், தன்னை நினையாதவர்க்குச் சிங்கம் போன்றவன்; மன்மதனின் தந்தையான அவன் பற்றினார்க்கு இனியவன், கறுத்த மயிர்க் கற்றையுடன் குள்ள வடிவில் வாமனனாக வந்த மரகத வண்ணன்; திருமகள் கேள்வன்; இம் மதுசூதனனே காப்பு என்று பணிந்த புதுவையர் கோன் பெரியாழ்வார் அருளிய தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் நாம ஸங்கீர்த்தனமாக எண்ணி வாழ்த்துபவர்கள், ஸ்ரீவைகுண்டத்தைச் சீக்கிரமே அடையப் பெறுவார்கள். 442

## ஆத்மாவில் புகுந்த இறைவனை ஏத்தி நோய்களை அகல வேண்டுதல்

நெய்க் குடத்தைப் பற்றி ஏறும்
எறும்புகள் போல் நிரந்து எங்கும்
கைக் கொண்டு நிற்கின்ற நோய்காள்!
காலம் பெற உய்யப் போமின்;
மெய்க் கொண்டு வந்து புகுந்து
வேதப் பிரானானர் கிடந்தார்;
பைக் கொண்ட பாம்புஅணையோடும்
பண்டு அன்று பட்டினம் காப்பே. 443

சித்திரகுத்தன் எழுத்தால்
தென்புலக் கோன் பொறி ஒற்றி
வைத்த இலச்சினை மாற்றித்
தூதுவர் ஓடி ஒளித்தார்;
முத்துத் திரைக் கடற் சேர்ப்பன்
மூதறிவாளர் முதல்வன்
பத்தர்க்கு அமுதன் அடியேன்;
பண்டு அன்று பட்டினம் காப்பே. 444

வயிற்றிற் தொழுவைப் பிரித்து
வன்புலச் சேவை அதக்கிக்
கயிற்றும் அக்கு ஆணி கழித்துக்
காலிடைப் பாசம் சுழற்றி,
எயிற்றிடை மண்கொண்ட எந்தை
இராப்பகல் ஓதுவித்து என்னைப்
பயிற்றிப் பணிசெய்யக் கொண்டான்;
பண்டு அன்று பட்டினம் காப்பே. 445

மங்கிய வல்வினை நோய்காள்!
உமக்கும் ஓர் வல்வினை கண்டீர்;
இங்குப் புகேன்மின், புகேன்மின்;
எளிது அன்று கண்டீர், புகேன்மின்;
சிங்கப் பிரான் அவன் எம்மான்
சேரும் திருக்கோயில் கண்டீர்;
பங்கப்படாது உய்யப் போமின்;
பண்டு அன்று பட்டினம் காப்பே. 446





## ஆத்மாவில் புகுந்த இறைவனை ஏத்தி நோய்களை அகல வேண்டுதல்

*நெய்க் குடத்தைப் பற்றிக் கொண்டு ஏறும் எறும்புகள் போல எங்கும் பரந்து உடன் வாழும் நோய்களே! நீங்கள் பிழைக்க வேண்டுமாகில் விரைவாகப் போய் விடுங்கள். வேதத்தை அருளிய பகவான் ஆதிசேஷனாகிய படுக்கையுடன் என் உடலுக்குள் வந்து புகுந்து விட்டார். என் உடலும் ஆத்மாவும் பழைய நிலைமை உடையதன்று. எம்பெருமானால் காக்கப்பட்டு விட்டது. ஆகவே நீங்கள் புக இனி இடமில்லை.* 443

*தென்திசை அரசனான யமன், மேல் எழுத்திட்டு முத்திரை இட்ட சித்திரகுப்தன் கணக்கை, அவன் தூதர்கள் சுட்டுப் போட்டு ஓடி ஒளிந்து விட்டார்கள். முத்துக்கள் கொழிக்கும் கடலிலே கண் வளர்ந்து, நித்திய சூரிகள் தலைவனாய்ப் பக்தர்களுக்கு அமுதமாய் விளங்கும் திருமாலுக்கு அடியேன் அடிமைப் பட்டேன். ஆகவே அடியேன் பழைய நிலை மாறி, எம்பெருமானால் காக்கப்பட்டு விட்டேன்.* 444

*வராஹமாய்ப் பூமியைக் கொம்பிலே தூக்கிக் காப்பாற்றிய தந்தையான திருமால் அடியேனைக் கர்ப்பமாகிய சிறைத் தொழுவத்திலிருந்து நீக்கி, வலிய புலன்களாகிய காளைகளை நெருக்கி, நரம்பும் எலும்புமான பூத உடலை நீக்கிக் கால்கட்டான காமப் பிணிப்பைப் போக்கினான். இரவும் பகலும் திருமாலுக்குச் சிறப்புச் செய்ய ஆட்படும் சேஷத்துவமே ஆத்மாவுக்கு இயல்பு என்பதை அறிவித்து, அதை நான் பயின்று நித்திய கைங்கரியம் செய்யும்படி ஆட்கொண்டான். அடியேன் நிலை பழைமையன்று; காக்கப்பட்டேன்.* 445

*மங்கிய வலிய வினைகளால் வந்த நோய்களே! உங்களுக்கும் கூட, வலிய பாவ வினைகள் உண்டென்பதைக் கண்டீர்களா? இனி இங்குப் புகாதீர்கள்; வராதீர்கள்; நீங்கள் என்னை அடைவது எளிதன்று. அப்பால் நில்லுங்கள், நரசிம்மாவதாரம் எடுத்த என் சுவாமி நித்தியவாசம் செய்யும் திருக்கோயில் அடியேன் உடலும் ஆத்மாவும் ஆகும். ஆதலால் நீங்கள் துன்பப்படாமல் பிழைத்துப் போங்கள். அடியேன் ஆத்மநிலை பழையதன்று; காக்கப்பட்ட பட்டினம் ஆகிவிட்டது.* 446

மாணிக் குறள் உரு ஆய
  மாயனை என் மனத்துள்ளே
பேணிக் கொணர்ந்து புகுத
  வைத்துக் கொண்டேன், பிறிது இன்றி;
மாணிக்கப் பண்டாரம் கண்டீர்;
  வலி வன் குறும்பர்கள் உள்ளீர்!
பாணிக்க வேண்டா, நடமின்;
  பண்டு அன்று பட்டினம் காப்பே. 447

உற்ற உறுபிணி நோய்காள்!
  உமக்கு ஒன்று சொல்லுகேன் கேண்மின்;
பெற்றங்கள் மேய்க்கும் பிரானார்
  பேணும் திருக்கோயில் கண்டீர்;
அற்றம் உரைக்கின்றேன் இன்னம்,
  ஆழ்வினைகாள்! உமக்கு இங்கு ஓர்
பற்றில்லை, கண்டீர் நடமின்;
  பண்டு அன்று பட்டினம் காப்பே. 448

கொங்கைச் சிறுவரை என்னும்
  பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி
அங்கு ஓர் முழையினில் புக்கிட்டு
  அழுந்திக் கிடந்து உழல்வேனை
வங்கக் கடல் வண்ணன் அம்மான்
  வல்வினை ஆயின மாற்றிப்
பங்கப் படாவண்ணம் செய்தான்;
  பண்டு அன்று பட்டினம் காப்பே. 449

ஏதங்கள் ஆயின எல்லாம்
  இறங்கல் இடுவித்து என்னுள்ளே,
பீதக வாடைப் பிரானார்
  பிரம குருவாகி வந்து,
போதில் கமல வன் நெஞ்சம்
  புகுந்து என் சென்னித் திடரில்
பாத இலச்சினை வைத்தார்;
  பண்டு அன்று பட்டினம் காப்பே. 450

உறகல் உறகல் உறகல்
  ஒண்சுடர் ஆழியே! சங்கே!
அற எறி நாந்தக வாளே!
  அழகிய சார்ங்கமே! தண்டே!
இறவு படாமல் இருந்த
  எண்மர் உலோக பாலீர்காள்!
பறவை அரையா! உறகல்
  பள்ளியறை குறிக்கொண்மின். 451





*மாணிக்க நிதியே வடிவெடுத்தாற் போலே, வாமனனாக அவதாரம் செய்த மாயன் திருமால், விருப்பத்துடன் என் நெஞ்சில் புகும்படி, பிரிவின்றி நிலை நிறுத்திக் கொண்டேன். வலிய குறும்புகள் செய்யும் இந்திரியங்களே! நீங்கள் பிழைக்க எண்ணினால் தாமதம் செய்யாமல் ஓடிப் போய்விடுங்கள். என்னுடைய ஆத்ம நிலை பழையதன்று; தற்போது பகவானால் காப்பாற்றப்பட்டு விட்டது.* 447

*மாறுபட்ட உருவங் கொண்டு பிணிக்கிற கொடிய நோய்களே! உங்களுக்கு ஒன்று சொல்கிறேன்; கேளுங்கள் . என் உடம்பு பசுக்களை மேய்த்த கண்ணபிரான் விரும்பித் தங்கும் கோயில் ஆகி விட்டது. ஆழ்ந்து போகும்படி செய்யும் வினைகளே! மீண்டும் உங்களுக்கு முடிவாகச் சொல்கிறேன். இங்கு ஒரு பயனும் இல்லை; ஆகவே வெளியே நடந்து போங்கள். என் ஆத்மா பழைய நிலை அன்று; காக்கப்பட்டு விட்டது.* 448

*மார்பகங்களையும் சிற்றிடையையும் கொண்டாடிக் காமக் குழியில் வழுக்கி விழுந்து கொடிய நரகத்தில் புகுந்து அழுந்தி, உழன்ற என்னை, எம்பெருமான் துன்புறா வண்ணம் எடுத்துக் காப்பாற்றினான். மரக்கலம் ஓடும் கடல் போன்ற நிறமுடைய திருமால், என் கொடிய வினைகளை மாற்றி விட்டதால், அடியேன் காக்கப்பட்டேன். பழைய நிலை இல்லை.* 449

*பீதாம்பரம் உடுத்திய திருமால், பிரமோபதேசம் செய்யும் குருநாதனாய் வந்து, ஞான பீடமாகிய நெஞ்சத் தாமரையில் புகுந்து, என் உள் மனத்தில் இருந்த, தேசு, ஆத்மக் குற்றங்களை எல்லாம் நீங்கச் செய்து விட்டான். என் தலைமீது தன் திருவடி முத்திரைகளைப் பதித்துள்ளீ பகவானால் அடியேன் காக்கப் பட்டேன். பழைய நிலை இல்லை.* 450

*அடியேன் உடம்பு எம்பெருமான் திருப்பள்ளி அறை ஆகி விட்டது. ஒளி மிகுந்த சக்கரத்தாழ்வானே! திருச்சங்கே! பகைவர்களைக் கொல்லும் நாந்தகமாகிய உடைவாளே! ஸ்ரீ சார்ங்கவில்லே! ஸ்ரீகதாயுதமே! எட்டுத் திக்கில் இருக்கும் காவல்காரர்களே! தப்பாமல் உறங்குங்கள்! உறங்குங்கள்! உறங்குங்கள்! கருடாழ்வானே நீரும் உறங்கும். நீங்கள், பகவான் பள்ளியறையாக, என் உடம்பைக் குறிக்கொண்டு நோக்குங்கள்.* 451

அரவத்து அமளியினோடும்
அழகிய பாற்கடலோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம்படி வந்து புகுந்து
பரவைத் திரை பல மோதப்
பள்ளி கொள்கின்ற பிரானைப்
பரவுகின்றான் விட்டுசித்தன்
பட்டினம் காவற் பொருட்டே. 452

## திருமாலிருஞ்சோலைப் பெருமானைப் போகவிடேன் எனல்

துக்கச் சுழலினைச் சூழ்ந்து கிடந்த
வலையை அறப் பறித்துப்
புக்கினிற் புக்கு உன்னைக் கண்டு கொண்டேன், இனிப்
போக விடுவதுண்டே?
மக்கள் அறுவரைக் கல்லிடை மோத
இழந்தவள் தன்வயிற்றில்
சிக்கென வந்து பிறந்து நின்றாய்! திரு
மாலிருஞ் சோலை எந்தாய்! 453

வளைத்து வைத்து, இனிப் போகலொட்டேன், உன்தன்
இந்திர ஞாலங்களால்
ஒளித்திடில் நின் திருவாணை கண்டாய்;
ஒருவர்க்கும் மெய்யன் அல்லை;
அளித்து எங்கும் நாடும் நகரமும் தம்முடைத்
தீவினை தீர்க்கல் உற்றுத்
தெளித்து வலஞ்செய்யும் தீர்த்தம் உடைத் திரு
மாலிருஞ் சோலை எந்தாய்! 454

உனக்குப் பணி செய்திருக்கும் தவம் உடை
யேன், இனிப் போய் ஒருவன்
தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின்
சாயை அழிவு கண்டாய்;
புனைத்தினைக் கிள்ளிப் புது அவி காட்டி உன்
பொன்னடி வாழ்க என்று
இனக் குறவர் புதியது உண்ணும் எழில்
மாலிருஞ் சோலை எந்தாய்! 455





ஆதிசேடனாகிய படுக்கையுடன் அழகிய பாற்கடல் அலை மோத, செந்தாமரைப் பூவில் தங்கிய பெரிய பிராட்டியும் தானுமாய், இறைவன் திருமால், அடியார்களுடன் தம் திரு உள்ளத்துள் வந்து புகுந்ததைப் பெரியாழ்வார் பாடிப் பரவினார். அதனால்தம் உடலைக் காக்கும்படி வேண்டிப் பகவானைத் துதித்தார். 452

## திருமால்இருஞ்சோலைப் பெருமானைப் போகவிடேன் எனல்

திருமாலிருஞ் சோலை மலையில் எழுந்தருளிய என் தந்தையே! முன்னால் பிறந்த ஆறு குழந்தைகளையும் கல்லிலே (கம்சன்) மோதி முடித்த பின் அவர்களை இழந்த தேவகியின் வயிற்றில் சிக்கெனப் பிறந்தாய். கழன்று வளைந்த ஆறாகிய துன்பத்தைச் சுற்றிக் கிடந்த நோய்களின் இருப்பிடமான உடம்பு என்னும் வலையைக் கர்மம் அடியாகப் பிறந்த சுவை, வாசனையுடன் கூடிய அறியாமை ஒழியப் பறித்துப் போட்டு விட்டேன். உன்னை உள்ளபடியே கண்டு கொண்ட பிறகு, இனிப் போக ஒட்டுவேனோ? 453

திருமாலிருஞ் சோலையிலுள்ள தீர்த்தங்கள், நாட்டார், நகரத்தார், உற்றார், மற்றோர் யாவருடைய கொடிய தீவினைகளைப் போக்கும் புண்ணிய பலம் உடையவை. அங்கு எழுந்தருளி உள்ள பெருமானே! உன்னைச் சூழ்ந்து கொண்டு சுவடறிந்த நான், இனி உன்னைப் போக விடமாட்டேன். உன்னுடைய இந்திர கால வித்தையால் நீ மறைந்து கொண்டால், பெரிய பிராட்டியார் மீது ஆணையாக உன்னைப் போகவிடேன். ஏனெனில் நீர் ஒருவர்க்கும் உண்மை பேசுகிறதில்லை. 454

சோலை மலையில், குறவர்கள் கூட்டமாகக் கூடி, 'உன் பொன்னடி வாழ்க' என்று பல்லாண்டு பாடி, புனத்தில் விளைந்த தினைகளைக் கிள்ளிக் கொண்டு வந்து புதியதாக உணவு சமைத்து, உனக்குப் படைத்த பின் உண்பார்கள். இத்தகைய திருமாலிருஞ்சோலை மலைப் பெருமானே! இறைவனான உனக்குக் கைங்கர்யம் செய்து வாழ்ச்சி பெறும் அடியேன் உன் திருவருள் பெற்ற தவமுடையேன்; இனிமேல், பிரமன் முதலிய மற்றவர்களில் எவனுக்கும் பணி செய்ய மாட்டேன். அவ்வாறு புறம்பே சென்று வேறு ஒருவன் கடைத்தலை இருத்தல் உன் திவ்விய ஒளிக்கு அழிவன்றோ? 455

காதம் பலவும் திரிந்து உழன்றேற்கு அங்கு ஓர்
நிழல் இல்லை நீரும் இல்லை, உன்
பாத நிழல் அல்லால் மற்றோர் உயிர்ப்பிடம்
நான் எங்கும் காண்கின்றிலேன்;
தூது சென்றாய்! குரு பாண்டவர்க்காய் அங்கு ஓர்
பொய்ச்சுற்றும் பேசிச் சென்று
பேதம் செய்து எங்கும் பிணம்படுத்தாய்! திரு
மாலிருஞ் சோலை எந்தாய்! 456

காலும் எழா, கண்ண நீரும் நில்லா, உடல்
சோர்ந்து, நடுங்கிக் குரல்
மேலும் எழா, மயிர்க் கூச்சும் அறா, என
தோள்களும் வீழ்வு ஒழியா;
மால் உகளாநிற்கும் என் மனனே! உன்னை
வாழத் தலைப்பெய்திட்டேன்;
சேல் உகளாநிற்கும் நீள்சுனை சூழ் திரு
மாலிருஞ் சோலை எந்தாய்! 457

எருத்துக் கொடி உடையானும் பிரமனும்
இந்திரனும் மற்றும்
ஒருத்தரும் இப் பிறவி என்னும் நோய்க்கு
மருந்து அறிவாரும் இல்லை;
மருத்துவனாய் நின்ற மா மணிவண்ணா!
மறு பிறவி தவிரத்
திருத்தி உன் கோயிற் கடைப் புகப் பெய், திரு
மாலிருஞ் சோலை எந்தாய்! 458

அக்கரை என்னும் அனத்தக் கடலுள்
அழுந்தி உன் பேர் அருளால்
இக்கரை ஏறி இளைத்திருந்தேனை அஞ்
சேல் என்று கை கவியாய்;
சக்கரமும் தடக்கைகளும் கண்களும்
பீதக ஆடையொடும்
செக்கர் நிறத்துச் சிவப்புடையாய்! திரு
மாலிருஞ் சோலை எந்தாய்! 459

எத்தனை காலமும் எத்தனை ஊழியும்
இன்றொடு நாளை என்றே
இத்தனை காலமும் போய்க் கிறிப்பட்டேன்,
இனி உன்னைப் போகலொட்டேன்;
மைத்துனன்மார்களை வாழ்வித்து மாற்றலர்
நூற்றுவரைக் கெடுத்தாய்!
சித்தம் நின்பாலது அறிதி அன்றே, திரு
மாலிருஞ் சோலை எந்தாய்! 460





திருமாலிருஞ் சோலை மலைப் பிரானே! குரு வம்சப் பாண்டவர்களுக்காகத் தூது சென்று, பொய் உறவு பேசி, பேதங்களை உண்டாக்கிப் போர் விளைவித்து, அதில் துரியோதனாதியர்களைப் பிணமாக்கினாய். உலக வாழ்க்கைப் பயணத்தில் தூரங்கள் பலவும் திரிந்து வருந்திய அடியேனுக்கு ஒதுங்குமிடமான நிழல் இல்லை; தாகம் தீர்க்கும் தண்ணீரும் இல்லை. உன் திருவடி நிழலன்றி மூச்சு விடும் வேறிடம் காணேன். 456

மீன்கள் துள்ளி விளையாடும் சுனைகள் சூழ்ந்த திருமாலிருஞ் சோலைமலையில் எழுந்தருளியவனே! என் கால்கள் அடி பெயரா; கண்ணீரோ நில்லாமல் பெருகி விழுகிறது. உன்னை நினைத்து அனுபவிக்கையில், உடல் பரவசப்பட்டுத் தடுமாறுகிறது. குரலோ எழவில்லை. மயிர்க்கூச்சம் விடாமல் உண்டாகிறது. தோள்களும் செயல் அற்றன. என் மனம் உன்னிடமே பித்துப் பிடித்து உன் அருளை எண்ணி உருகுகிறது. உன் திருவடிக் கீழ் வாழ்ச்சி பெற்று முடி சூடப்பெற்றேன். 457

திருமாலிருஞ்சோலை எந்தாய்! காளைக் கொடி பெற்ற சிவனும் பிரமனும் இந்திரனும், மற்று யாரும் பிறவி நோய்க்கான மருந்தை அறியார்கள். மருத்துவனாக விளங்கும் ஆசார்யனனான நீலமணி வண்ணா! இனி வரப்போகும் பிறவிகளை அடியேனுக்கு இல்லாதவாறு நீக்கி, உன் திருக்கோவிலின் கடைத்தலையிலே இருந்து வாழும் படி அருள வேண்டும். 458

சக்கரம் ஏந்திய அகன்ற கைகளுடன், திருக்கண்கள் ஒளிவிட, பீதாம்பரம் அணிந்தவனாய்ச் செவ்வான நிறத்தோடு விளங்கும் திருமாலிருஞ்சோலை மலைப் பெருமானே! கேட்டை விளைவிக்கும் ஸம்ஸாரம் ஆகிய கடலில் அழுந்தி இளைத்துக் கிடக்கிற அடியேன் கரையேற உன் அருளை வேண்டுகிறேன். 'பயப்படாதே கொள்' என்று கை குவித்து அருள் புரிய வேண்டும். 459

திருமாலிருஞ்சோலை மலை எந்தாய்! இன்று, நாளை, நேற்று என்று கழிந்த காலங்கள் எத்தனையோ! எத்தனை ஊழிக் காலங்களோ! கல்ப காலங்களோ! அடியேன் தப்ப முடியாதபடி ஸம்ஸார சக்கரத்தில் அகப்பட்டேன். இனி உன்னைப் போக விடமாட்டேன். மைத்துனர்களான பாண்டவர்களை அரசாள வைத்துப் பகைவர்களான துரியோதனாதிகளை அழித்த கண்ணா! உன்னிடத்தே என் மனம் அடிமைப்பட்டதை நீ அறிவாய் அன்றோ! 460

அன்று வயிற்றிற் கிடந்திருந்தே அடி -
மை செய்யல் உற்றிருப்பன்,
இன்று வந்து இங்கு உன்னைக் கண்டுகொண்டேன்;
இனிப் போக விடுவதுண்டே?
சென்று அங்கு வாணனை ஆயிரம் தோளும்
திருச் சக்கரம் அதனால்
தென்றித் திசைதிசை வீழச் செற்றாய்! திரு-
மாலிருஞ்சோலை எந்தாய்! 461

சென்று உலகம் குடைந்தாடும் சுனைத் திரு-
மாலிருஞ்சோலை தன்னுள்
நின்ற பிரான் அடிமேல் அடிமைத் திறம்
நேர்பட விண்ணப்பஞ் செய்
பொன் திகழ் மாடம் பொலிந்து தோன்றும் புது-
வைக்கோன் விட்டுசித்தன்
ஒன்றினொடு ஒன்பதும் பாட வல்லார் உல-
கம் அளந்தான் தமரே. 462

## இதயம் புகுந்த இறைவன் அருள்

சென்னி ஓங்கு தண் திருவேங்-
கடம் உடையாய்! உலகு
தன்னை வாழ நின்ற நம்பீ!
தாமோதரா! சதிரா!
என்னையும் என் உடைமையையும் உன்
சக்கரப் பொறி ஒற்றிக்கொண்டு
நின் அருளே புரிந்திருந்தேன்;
இனி என் திருக்குறிப்பே? 463

பறவை ஏறு பரம்புருடா!
நீ என்னைக் கைக்கொண்டபின்
பிறவி என்னும் கடலும் வற்றிப்
பெரும்பதம் ஆகின்றதால்;
இறவு செய்யும் பாவக் காடு
தீக்கொளீஇ வேகின்றதால்;
அறிவை என்னும் அமுத ஆறு
தலைப்பற்றி வாய்க்கொண்டதே. 464





சோணித புரம் சென்று பாணாசுரனை, ஆயிரம் தோள்களும் திசைதிசைகளில் விழும்படி, சக்கரத்தாலே, கொன்றவனே! திருமாலிருஞ்சோலையிலே தங்கும்பிரானே! அடியேன் தாயார் வயிற்றில் கிடந்த அக்காலத்திலேயே உனக்கு அடிமை செய்ய ஒருப்பட்டேன். இப்போது இத்திருமலையிலே எழுந்தருளி அடியேனுக்கு மிகவும் இனியவனாய் அருள் செய்வதைக் கண்டு கொண்டேன். இனிப் போக விட மாட்டேன். 461

குடைந்து நீராடும்படியான ஆழமான சுனைகள் சூழ்ந்த திருமாலிருஞ்சோலை மலையிலே எழுந்தருளி உள்ள அழகர் திருவடிகளிலே அடிமைத்திறம் பற்றி, பொன் மாடங்கள் பொலிந்த வில்லிபுத்தூர் பெரியாழ்வார் அருளிய பத்துப்பாட்டுகளையும் பாடவல்லவர்கள் மூன்று உலகங்களையும் அளந்த எம்பெருமானுக்கு அடியாராகப் பெறுவார்கள். 462

## இதயம் புகுந்த இறைவன் அருள்

வான் அளாவும் சிகரங்களை உடைய குளிர்ந்த திருவேங்கட மலையில் எழுந்தருளி உள்ளவனே! உலகத்தவரை வாழ்விக்கும் நம்பீ! தாமோதரா! அடியார் குற்றங்களைப் பாராத பெருந் தன்மையனே! என் ஆத்மாவுக்கும் உடைமையான உடலுக்கும் உன் சங்கு சக்கரப் பொறிகளை இடுவித்துக் கொண்டுள்ளேன். உன் அருளை விரும்பி வேண்டுகிறேன். இனிமேல் உன் திரு உள்ளக் கருத்து எதுவாய் இருக்குமோ? 463

கருடாழ்வானை வாகனமாக ஏறும் பரம் பொருளே! கதி அற்ற அடியேனை நீ ஏற்றுக் கொண்ட பிறகு, பிறவிக்கடல் வற்றிப் போய் பெரிய தரம் பெற்று விட்டது. அடியேன் ஆத்மாவை மூடிக் கிடந்த பாவக்காடு நெருப்பாலே கொளுத்தப்பட்டு வெந்து போய் விட் டது. ஞானம் என்னும் அமுதமயமான ஆறு வாயளவு உயர்ந்து தலைக்கு மேல் போகின்றது. அடியேன் வேண்டிய நன்மைகளைப் பெற்றேன். 464

எம்மனா! என் குலதெய்வமே!
என்னுடை நாயகனே!
நின்னுளேனாய்ப் பெற்ற நன்மை இவ்
உலகினில் ஆர் பெறுவார்?
நம்மன் போலே வீழ்த்து அமுக்கும்
நாட்டில் உள்ள பாவம் எல்லாம்
சும்மெனாதே கைவிட்டு ஓடித்
தூறுகள் பாய்ந்தனவே. 465

கடல் கடைந்து அமுதம் கொண்டு
கலசத்தை நிறைத்தாற்போல்
உடல் உருகி வாய் திறந்து
மடுத்து உன்னை நிறைத்துக்கொண்டேன்;
கொடுமை செய்யும் கூற்றமும் என்
கோல்ஆடி குறுகப் பெறா;
தட வரைத் தோள் சக்கரபாணி!
சார்ங்க விற் சேவகனே! 466

பொன்னைக் கொண்டு உரைகல் மீதே
நிறம் எழ உரைத்தாற் போல்,
உன்னைக் கொண்டு என் நாவகம்பால்
மாற்றின்றி உரைத்துக்கொண்டேன்;
உன்னைக் கொண்டு என்னுள் வைத்தேன்;
என்னையும் உன்னில் இட்டேன்;
என் அப்பா! என் இருடீகேசா!
என் உயிர்க் காவலனே! 467

உன்னுடைய விக்கிரமம்
ஒன்று ஒழியாமல் எல்லாம்
என்னுடைய நெஞ்சகம்பால்
சுவர்வழி எழுதிக்கொண்டேன்;
மண் அடங்க மழு வலங்கைக்
கொண்ட இராம நம்பீ!
என்னிடை வந்து எம்பெருமான்!
இனி எங்குப் போகின்றதே? 468

பருப்பதத்துக் கயல் பொறித்த
பாண்டியர் குலபதி போல்
திருப் பொலிந்த சேவடி என்
சென்னியின் மேல் பொறித்தாய்;
மருப்பு ஒசித்தாய்! மல் அடர்த்தாய்!
என்று என்று உன் வாசகமே
உருப் பொலிந்த நாவினேனை
உனக்கு உரித்து ஆக்கினையே. 469





அடியேனுக்கு அரசனாய், அடியேன் குலத்துக்குத் தெய்வமாய் விளங்கும் நாயகனே! உன் அருளால் நான் பெற்ற நன்மையை இந்த உலகில் மற்று யார்தான் அடைவார்? பூதங்களையும் பேய்களையும் போல, கீழே தள்ளி அமுக்குகிற உலகப் பாவங்கள் எல்லாம் மூச்சு விடாமல் சிறையிலிருந்து ஓடுபவர்கள் போல, ஓடிப் புதர்களிலே பாய்ந்தன. 465

அகன்ற மலைகள் போன்ற தோள்களை உடைய சக்கரக்கையனே! சார்ங்க வில்லை ஏந்திய அரசனே! திருப்பாற் கடலைக் கடைந்து எடுத்த அமுதத்தைக் கலசத்திலே நிறைத்தாற் போல, எல்லையற்ற உன் அருள் என்னும் அமுதத்தை, அடியேன் உடல் உருகி, வாயால் பாடி, இரண்டு கைகளிலும் ஏந்தி, மனத்திலே தேக்கிக் கொண்டேன். இதற்குப் பிறகு கொடுமை செய்யவரும் யமனும் என்னுடைய செங்கோல் உள்ள இடத்திலே கிட்டப்பெறான். 466

அடியேன் தகப்பனான இருடீகேசா! என் ஆத்மா பிறருக்கு அடிமை ஆகாதபடி ஆட்கொள்ளும் காவலனே! தங்கத்தை நிறம் காண, உரை கல்லிலே உரைத்துப் பார்ப்பது போல, உன்னைக் கொண்டு என் நாவினுள்ளே மாற்று அழியும்படி, பேசினேன். உன்னுடைய அனுமதியையும் இசைவையும் கொண்டு என் அனுபவத்துக்குப் பொருள் ஆக்கினேன். என் ஆத்மாவை, உன் திருவடிகளில் காணிக்கையாக வைத்துவிட்டேன். 467

அரசர்குலம் அழிவதற்காக மழுவை வலது கையில் ஏந்திப் பரசுராமாவதாரம் செய்த நம்பீ! சுவரில் எழுதப்படும் ஓவியம் கண்ணுக்குத் தெரிவது போல, உன் திருவிளையாடல்கள் ஒன்று விடாமல் என் நெஞ்சிலே ஒளியுடன் விளங்கும்படி எழுதிக் கொண்டேன். எம்பெருமானே! அடியவன் ஆன என்னிடத்தில் எழுந்தருளிய பிறகு, இனி நீ எங்கே போகிறாய்? 468

மாமேரு மலையிலே, தன் மீன்கொடியை நட்ட பாண்டிய அரசன் போலே, அழகு விளங்கும் உன் சிவந்த திருவடிகளை அடியேன் தலை மீது வைத்து அருள் செய்தாய். குவலயாபீட யானையின் கொம்பினை ஒடித்த கண்ணா! மல்லர்களைக் கொன்றவா! உன் குணங்களைப் பாடித் தழும்பேறின நாக்கை உடைய அடியேனை உனக்கு உரியவன் ஆகச் செய்தாயே! 469

அனந்தன்பாலும் கருடன் பாலும்
ஐது நொய்தாக வைத்து, என்
மனந்தனுள்ளே வந்து வைகி
வாழச் செய்தாய்; எம்பிரான்!
நினைந்து என்னுள்ளே நின்று நெக்குக்
கண்கள் அசும்பு ஒழுக
நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன்
நேமி நெடியவனே! 470

பனிக் கடலில் பள்ளி கோளைப்
பழகவிட்டு ஓடிவந்து, என்
மனக் கடலில் வாழ வல்ல
மாய மணாள நம்பீ!
தனிக் கடலே! தனிச் சுடரே!
தனி உலகே! என்று என்று
உனக்கு இடமாய் இருக்க என்னை
உனக்கு உரித்து ஆக்கினையே. 471

தட வரைவாய் மிளிர்ந்து மின்னும்
தவள நெடுங்கொடி போல்
சுடர்ஒளியாய் நெஞ்சின் உள்ளே
தோன்றும் என் சோதி நம்பீ!
வட தடமும் வைகுந்தமும்
மதிள் துவராபதியும்
இட வகைகள் இகழ்ந்திட்டு என்பால்
இடவகை கொண்டனையே. 472

வேயர் தங்கள் குலத்து உதித்த
விட்டுசித்தன் மனத்தே
கோயில்கொண்ட கோவலனைக்
கொழுங்குளிர் முகில்வண்ணனை
ஆயர்ஏற்றை அமரர் கோவை
அந்தணர்தம் அமுதத்தினைச்
சாயை போலப் பாட வல்லார்
தாமும் அணுக்கர்களே. 473

**பெரியாழ்வார் திருமொழி முற்றிற்று.**





திருச்சக்கரத்தைக் கையில் ஏந்திய சர்வ வல்லமை உள்ள எம்பெருமானே! திருவனந்தாழ்வானிடத்தும் கருடாழ்வானிடத்தும் நீ வைத்துள்ள அன்பு சிறிதாகத் தோன்றுமளவு என் மனத்துள்ளே புகுந்து ஒரு காரணமும் இல்லாமல் அருள் செய்தாயே! என்னுடன் பொருந்தி வாழச் செய்த உன்னை என் நெஞ்சுள்ளே நினைத்து நின்று நீர்ப்பண்டமாய் உருகுகிறேன். கண்களிலிருந்து நீர் ஒழுகும்படி, உன் குணங்களை எண்ணி, என் இளைப்புத் தீரப்பெற்றேன். 470

பெரிய பிராட்டியாரின் மணவாளனே! குண நிறைவுடைய பெருமானே! குளிர்ந்த திருப்பாற் கடலில் பள்ளி கொள்ளும் நீ, அதை மறந்து அங்கிருந்து ஓடி வந்து, அடியேன் மனமாகிய கடலிலே பள்ளி கொண்ட உன் ஆச்சரியமான சக்திதான் என்னே! ஒப்பற்ற திருப்பாற்கடல், ஒளி பொருந்திய சூரிய மண்டலம், தனித்தன்மை உடைய பரமபதம் என்றிப்படியான உன் உறைவிடங்கள் இருக்க, என்னை உனக்கு உரிமை ஆக்கிக் கொண்டாயே! 471

அகன்றுயர்ந்த மலையிலே ஒளியுடன் விளங்கும் கொடி, கீழுள்ள எல்லோராலும் காணப்படுவது போல, எல்லையற்ற சுடருடன், அடியேன் இதயகமலத்திலே நின்று விளங்கும் நம்பீ! நீ, வடதிசைத் திருப்பாற் கடல், வைகுந்தம், மதிள் சூழ்ந்த துவாரகை ஆகிய உன் இருப்பிடங்களை அலட்சியமாக விட்டு விட்டு, அங்கங்கே காட்டும் அன்பை எல்லாம், என்னிடம் புகுந்து காட்டி அருளினாயே! நீ உகந்தருளின நிலங்களை விடவும் என்திருமேனியை விரும்பிய உன் எல்லையற்ற பேரருள்தான் என்னே! 472

பசுக்களை மேய்த்த ஸ்ரீகிருஷ்ணன், வேதியர்கள் குலத்தில் தோன்றிய பெரியாழ்வார் மனத்திலே கோயில் கொண்டு எழுந்தருளினான். குளிர்ந்த மேகம் போன்ற நிறமுடைய ஆயர் தலைவனான நித்திய சூரிகளின் சுவாமியும், ஸனகாதி முனிவர்களுக்கு எல்லையற்ற அமுதமாகியவனும் ஆகிய திருமாலைப் பாட வல்லவர்கள், நிழலைப் போலத் தொடர்ந்து, அந்தரங்கமான கைங்கர்யங்கள் செய்யப் பெறுவார்கள். 473

**பெரியாழ்வார் திருமொழி முற்றிற்று.**

ஸ்ரீ

# ஆண்டாள் திருப்பாவை, நாச்சியார் திருமொழி

## திருப்பாவை தனியன்கள்

நீளாதுங்கஸ்தன கிரிதடீ ஸுப்தம் உத்போத்ய க்ருஷ்ணம்
பாரார்த்த்யம் ஸ்வம் ச்ருதிசத சிரஸ் ஸித்தம் அத்யாப யந்தீ
ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகளிதம் யா பலாத் க்ருத்ய புங்க்தே
கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:

**- பட்டர்**

அன்னவயல் புதுவை ஆண்டாள் அரங்கர்க்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம் - இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.
சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை
பாடி அருள வல்ல பல்வளையாய் - நாடிநீ
வேங்கடவற்கென்னை விதியென்ற இம்மாற்றம்
நாம்கடவா வண்ணமே நல்கு.

**- உய்யக்கொண்டார்**

## நாச்சியார் திருமொழித் தனியன்கள்

அல்லி நாள் தாமரை மேல் ஆரணங்கின் இன் துணைவி
மல்லி நாடாண்ட மடமயில் - மெல்லியலாள்
ஆயர்குல வேந்தன் ஆகத்தாள் தென் புதுவை
வேயர் பயந்த விளக்கு.

கோலச் சுரி சங்கை மாயன் செவ்வாயின் குணம் வினவும்
சீலத் தனள் தென் திருமல்லிநாடி செழுங்குழல் மேல்
மாலைத்தொடை தென்அரங்கர்க்கு ஈயும் மதிப்புடைய
சோலைக்கிளி அவள் தூய நற்பாதம் துணை நமக்கே.

**- திருக்கண்ண மங்கை ஆண்டான்**



ஸ்ரீ

# ஆண்டாள் திருப்பாவை, நாச்சியார் திருமொழி

## திருப்பாவை தனியன்கள்

நப்பின்னைப் பிராட்டியின் மார்புகளாகிய மலையிலே கண் வளர்ந்த கண்ணனை ஆண்டாள் தான் சூடியமாலையாலே பிணித்தாள். தன் அடிமையை அறிவித்துப் பலாத்காரம் செய்து அவனை அடைந்தாள். அவளுடைய பாரதந்திரியம் வேதங்களின் தலைமைப்பகுதிகளில் தேறிய சித்தாந்தம் ஆகும். இத்தகைய கோதைக்குக் காலமெல்லாம் நமஸ்காரம் செய்கிறோம்.

அன்னங்கள் உலாவும் ஸ்ரீவில்லிபுத்தூரில் தோன்றிய ஆண்டாள், திருப்பாவைப் பாசுரங்களை, இனிய இசையுடன் பாடி, அரங்க நாதனுக்குப் பாமாலையாகக் கொடுத்தாள். பூமாலையைச் சூடிக்கொடுத்து, அரங்கனை அடைந்த கோதையை வாயால் பேசு.

பூமாலைசூடி அரங்கனுக்குக் கொடுத்த ஒளி மிகுந்த கொடி போன்றவளே! பழைய மரபுடன் கூடிய பாவை நோன்பைப் பாடிக் கருணை புரியவல்ல, வளைகள் அணிந்த கோதையே! நீ மன்மதனை நாடி, 'என்னைத் திருவேங்கட முடையானுடன் சேர்த்துவை' என்று கூறிய சொல்லை நாம் மீறாதபடி அருள் புரிவாய் ஆக.

## நாச்சியார் திருமொழித் தனியன்கள்

ஆண்டாள், இதழ்களுடைய தாமரைப் பூவில் தங்கும் பெரிய பிராட்டியின் இனிய தோழி ஆவாள். மல்லி நாட்டை ஆளும், மட மயில் போன்ற மென்மைத் தன்மை உடைய இவள், இடைக்குல வேந்தன் கண்ணனின் திருமேனிக்குப் பொருந்தினாள். ஸ்ரீவில்லிபுத்தூர் வேதியர் பெரியாழ்வாரின் பெண்ணாய் திருவிளக்குப் போல் விளங்கினாள்.

தென்திசைத் திருமல்லி நாட்டுத் தலைவி ஆண்டாள், அழகான சங்கை நோக்கிக் கண்ணனின் சிவந்த உதட்டின் குணம் பற்றிக் கேட்டாள். செழுமையான தன் கூந்தலில் அணிந்த கதம்பகன் மாலையை அரங்கனுக்குக் காணிக்கையாகக் கொடுத்த மேன்மை உடையவள். சோலைக்கிளி போன்ற இனிய பேச்சுடைய கோதையின் தூய பாதமே நமக்குத் தஞ்சமாகும்.

## ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்;
நீராடப் போதுவீர் போதுமினோ, நேரிழையீர்!
சீர் மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறை தருவான்;
பாரோர் புகழப் படிந்து - ஏலோர் எம்பாவாய். 474

வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ: பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடி பாடி,
நெய் உண்ணோம், பால் உண்ணோம், நாட்காலே நீராடி,
மையிட்டு எழுதோம், மலர் இட்டு நாம் முடியோம்,
செய்யாதன செய்யோம், தீக்குறளை சென்று ஓதோம்,
ஐயமும் பிச்சையும் ஆம்தனையும் கைகாட்டி
உய்யுமாறு எண்ணி உகந்து - ஏலோர் எம்பாவாய். 475

ஓங்கி உலகு அளந்த உத்தமன் பேர் பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீர் ஆடினால்,
தீங்கு இன்றி நாடு எல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயல் உகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கு இருந்து சீர்த்த முலை பற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்;
நீங்காத செல்வம் நிறைந்து - ஏலோர் எம்பாவாய். 476

ஆழி மழைக்கண்ணா! ஒன்று நீ கை கரவேல்;
ஆழியுள் புக்கு, முகந்துகொடு, ஆர்த்து ஏறி,
ஊழி முதல்வன் உருவம்போல் மெய் கறுத்து,
பாழியந் தோள் உடைப் பற்பநாபன் கையில்
ஆழிபோல் மின்னி, வலம்புரிபோல் நின்று அதிர்ந்து,
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய்; நாங்களும்
மார்கழி நீர் ஆட மகிழ்ந்து - ஏலோர் எம்பாவாய். 477





## ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை

செல்வம் நிறைந்த ஆய்ப்பாடியில் கைங்கர்யத்திரு உடைய சிறுமிகளே! அழகிய அணிகலன்கள் அணிந்தவர்களே! மார்கழி மாத முழு நிலாநாளில் கண்ணன் குணத்தில் நீராட வாருங்கள். கூர்மையான வேல் தாங்கிக் காவலாகிய கொடுந்தொழில் புரியும் நந்தகோபனுக்கு அடங்கிய குமரனான கண்ணன், கண்ணழகுடைய யசோதைக்குச் சிங்கக்குட்டி ஆவான். மேக நிற உடலும் சூரிய சந்திரர் போன்ற கண்களும் உடைய ஸ்ரீமந் நாராயணனான இவனே, நமக்குப் பறை தருவான். உலகோர்கள் கொண்டாட, நோன்பு நோற்க வாருங்கள். 474

பூமியில் வாழப்பிறந்தவர்களே! உய்வடையும் வழியை உணர்ந்து நாம், நம் நோன்புக்குச் செய்ய வேண்டியவற்றைக் கேளுங்கள்: பாற் கடலில் மெதுவாக யோக நித்திரை செய்யும் பரமனின் திருவடிகளைப் பாடித் தானத்தையும் பிச்சையையும் முடிந்த வரை கொடுத்து மகிழ்வோம். விடியற்காலையில் நீராடுவோம். நோன்பாகையால் நெய் உண்ணோம்; பால் குடியோம்; கண்ணில் மை இடோம்; பூ வைத்துக் கொள்ளோம். மேலைப் பெரியோர்கள் செய்யாதவற்றைச் செய்யோம். கொடிய கோள் சொல்லை எம் பெருமானிடம் கூறோம். 475

ஓங்கி வளர்ந்து மூவுலகுகளை அளந்த உத்தமனான திரிவிக்கிரமனின் நாமங்களைப்பாடி நாம், நோன்பிற்கு நீராடினால், நாடெங்கும் தீமை இல்லாமல் மாதம் மூன்று மழை பெய்யும். அதனால் செந்நெல் வளர, நடுவே கயல் மீன்கள் துள்ள, வண்டுகள் நெய்தல் பூவிலே உறங்கும். பருத்தமடுக்களைச் சலியாமல் பிடித்துக்கறக்க, வள்ளல்களான பெரிய பசுக்கள் ஏங்காமல் நின்று பால் சொரிந்து குடங்களை நிரப்பும். இவ்வாறு செல்வம் நீங்காமல் நிலைக்கும். 476

கடல் போன்று கம்பீரமான வருண தேவனே! நீ சிறிதும் ஒளிக்காமல் கடலில் புகுந்து நீரைமொண்டு, இடித்தவாறே வானில் ஏற வேண்டும். கால புருஷனான பகவானின் மேனி போலக் கறுத்து, அழகான தோள்பெற்ற பத்ம நாபன் கைச் சக்கரம் போல் மின்னி, வலம்புரிச் சங்கே போல் முழங்கி, சார்ங்கவில் பொழிந்த அம்பு மழை போல்; கால தாமதம் செய்யாமல் உலகோர்கள் வாழப் பெய்ய வேண்டும். நாங்களும் மகிழ்ந்து, மார்கழி நோன்புக்கு நீராடுவோம். 477

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது,
வாயினால் பாடி, மனத்தினால் சிந்திக்க,
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசு ஆகும்; செப்பு - ஏலோர் எம்பாவாய். 478

புள்ளும் சிலம்பின காண், புள்அரையன் கோயிலில்
வெள்ளை விளி சங்கின் பேர்அரவம் கேட்டிலையோ?
பிள்ளாய்! எழுந்திராய், பேய்முலை நஞ்சு உண்டு
கள்ளச் சகடம் கலக்கு அழியக் கால் ஓச்சி
வெள்ளத்து அரவில் துயில் அமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரி என்ற பேர்அரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்து - ஏலோர் எம்பாவாய். 479

கீசு கீசு என்று எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து
பேசின பேச்சுஅரவம் கேட்டிலையோ? பேய்ப் பெண்ணே!
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங் குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிர்அரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாராயணன் மூர்த்தி
கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ?
தேசம் உடையாய்! திற - ஏலோர் எம்பாவாய். 480

கீழ்வானம் வெள்ளென்று, எருமை சிறு வீடு
மேய்வான் பரந்தன காண்; மிக்கு உள்ள பிள்ளைகளும்
போவான் போகின்றாரைப் போகாமல் காத்து உன்னைக்
கூவுவான் வந்து நின்றோம்; கோதுகலம் உடைய
பாவாய்! எழுந்திராய், பாடிப் பறை கொண்டு
மா வாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால்,
ஆவா என்று ஆராய்ந்து அருள் - ஏலோர் எம்பாவாய். 481

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கு எரியத்
தூபம் கமழத் துயில் அணைமேல் கண்வளரும்
மாமான் மகளே! மணிக் கதவம் தாள் திறவாய்,
மாமீர்! அவளை எழுப்பீரோ? உன் மகள் தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மா மாயன் மாதவன் வைகுந்தன் என்று என்று
நாமம் பலவும் நவின்று - ஏலோர் எம்பாவாய். 482





மாயச்செயலுடைய கண்ணன் வடமதுரைத்தலைவன்; தூய யமுனைக்கரையில் ஆயர் குலத்தின் விளக்காகத் தோன்றி யசோதைத் தாயின் வயிறு விளங்கச் செய்தான். இத்தாமோதரனை நாங்கள் பரிசுத்தமுடன் வந்து தூய மலர்களைத் தூவி வணங்கி, வாயாரப் பாடி, மனம் ஆரத் தியானம் செய்வோம். முன் செய்த பாவங்களும் பின் வரும் பாவங்களும் அவன் அருளால் நெருப்பி விட்ட பஞ்சாகப் பொசுங்கும். ஆகவே அவன் நாமங்களைச் சொல். 478

பறவைகள் கூவுகின்றன; பறவை அரசன் கருடனுக்குச் சுவாமி ஆன திருமால் கோவிலில் வெண்சங்கொலி அழைப்பதைக் கேட்க வில்லையா? ஏ! பெண் பிள்ளையே! எழுந்திரு. பேய் முலை நஞ்சு உண்ட கண்ணன் வஞ்சகச் சகடத்தின் கட்டுக் குலையும் படி காலால் உதைத்தான். பாற்கடலில் ஆதிசேடன் மீது கண்வளர்ந்த உலக காரணனை முனிவர்களும் யோகிகளும் தியானம் செய்தபடி, மெது வாக 'ஹரி! ஹரி!' என்று கூறும் ஒலி நெஞ்சில் புகுந்து குளிர்ந்தது. 479

மதிகெட்ட பெண்ணே! ஆணும் பெண்ணுமான வலியன் பறவைகள் கலந்து பேசும் 'கீசுகீசு' என்னும் ஒலியை எங்கும் நீ கேட்க வில்லையா? மணம் வீசும் கூந்தலுடைய இடைச்சிகள் கழுத்தில் அச்சுத்தாலியும் ஆமைத்தாலியும் கலகல என ஒலிக்கக் கைகளை வீசி மத்தாலே ஓசைப் படுத்திய தயிரோசையைக் கேட்கவில்லையா? பெண்கள் தலைவியே! நாங்கள் கேசவனான நாராயணனைப் பாடவும் கேட்டவாறு படுத்திருக்கலாமா? ஒளியுடையவளே! கதவைத்திற. 480

கண்ணனின் ஆசைப்பெண்ணே! கீழ்வானம் வெளுத்தது; எருமைகள் பனிப்புல் மேய, சிறு வீடு சென்றன. யாத்திரையே நோக்காகப் போகும் பிள்ளைகளைப் போகாமல் தடுத்து உன்னை அழைக்க வந்து நின்றோம். எழுந்திரு. கண்ணன் குணங்களைப்பாடிப் பறை பெறுவோம். குதிரையாக வந்த கேசியின் வாயைப் பிளந்த தேவாதி தேவன் மல்லர்களை வதைத்தான். அவனடி பணிந்தால், நம் குறைகளை ஆராய்ந்து ஐயோ என்று இரங்கி அருள்வான். 481

தூய்மையான மணிகள் பதிக்கப்பெற்ற மாளிகையில் விளக்கு எரிய, வாசனைப் புகை வீசப் படுக்கையில் தூங்கும் மாமன் மகளே! மணிக்கதவின் தாழ்ப்பாழைத் திற. மாமீ! உம் மகளை எழுப்புங்கள். அவள் ஊமையோ? அல்லது செவிடோ? அன்றி, மயங்கித் தூங்கு கிறாளோ? படுக்கையில் காவலிடப்பட்டாளா? அல்லது மந்திரத்தால் கட்டுப்பட்டாளோ? மாயன், மாதவன், வைகுந்தன் என்று பகவானின் நாமங்களை வாயாரக் கூறுகிறோம். உம்மகள் இதை உணராளா? 482

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்?
நாற்றத் துழாய் முடி நாராயணன் நம்மால்
போற்றப் பறை தரும் புண்ணியனால்; பண்டு ஒருநாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகர்ணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?
ஆற்ற அனந்தல் உடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து திற - ஏலோர் எம்பாவாய். 483

கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து
செற்றார் திறல் அழியச் சென்று செருச் செய்யும்
குற்றம் ஒன்று இல்லாத கோவலர்தம் பொற்கொடியே!
புற்றரவு அல்குல் புனமயிலே! போதராய்,
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்து நின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர் பாடச்
சிற்றாதே பேசாதே, செல்வப் பெண்டாட்டி! நீ
எற்றுக்கு உறங்கும் பொருள்? - ஏலோர் எம்பாவாய். 484

கனைத்து இளங் கற்றுஎருமை கன்றுக்கு இரங்கி
நினைத்து முலை வழியே நின்று பால் சோர
நனைத்து இல்லம் சேறு ஆக்கும் நற் செல்வன் தங்காய்!
பனித் தலை வீழ நின் வாசற் கடை பற்றி,
சினத்தினால் தென் இலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக்கு இனியானைப் பாடவும் நீ வாய் திறவாய்;
இனித் தான் எழுந்திராய், ஈது என்ன பேர் உறக்கம்!
அனைத்து இல்லத்தாரும் அறிந்து - ஏலோர் எம்பாவாய். 485

புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப் போய்
பிள்ளைகள் எல்லாரும் பாவைக்களம் புக்கார்;
வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று;
புள்ளும் சிலம்பின காண்; போதுஅரிக் கண்ணினாய்!
குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே
பள்ளிக் கிடத்தியோ? பாவாய்! நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்து - ஏலோர் எம்பாவாய். 486

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து, ஆம்பல் வாய் கூம்பின காண்;
செங்கல்பொடிக் கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்;
எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும்
நங்காய்! எழுந்திராய், நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடு - ஏலோர் எம்பாவாய். 487





நோன்பு நோற்றுச் சுகம் அனுபவிப்பவளே! வாசற் கதவைத் திறக்காவிடிலும் பதில் பேசக்கூடாதா அம்மா! மணம் வீசும் துழாய் மாலை சூடிய நாராயணன், நாம் பல்லாண்டு பாடினால், உறுதிப் பொருளை அருள்வான். புண்ணிய வடிவெடுத்த இராமனால் யமன்வாய் விழுந்த கும்பகர்ணன், உனக்குத் தோற்றுத் தூக்கத்தைத் தந்தானோ? அதிகத் தூக்கம் உடையவளே! அணிகலன் போன்றவளே! தெளிவுடன் வந்து கதவைத்திற. 483

கன்றுகள் போல் காணப்படும் பசுக்கூட்டத்தைக் கறக்கும் இடையர்கள் பகைவர் அழியும்படி போர் செய்வார்; குற்றமில்லாத இந்த ஆயர்கள் குடியில் பிறந்த பெண்கொடியே! பாம்புப் படம் போன்ற இடைபெற்ற, மயில் போன்ற பெண்ணே! கண்ணனின் ஆசைப் பெண்ணே! எழுந்துவா. சுற்றத்தாரான தோழிகள் உன் வீட்டு வாசலில் நின்று மேக நிறக்கண்ணனின் நாமங்களைப் பாடுகிறார்கள். சலியாமல், பேச்சின்றி உறங்குகிறாயே! இதனால் பயன் என்ன? அறியோம். 484

இளங்கன்றுகளைப் பெற்ற எருமைகள், பாலூட்ட எண்ணி, இரக்கத்துடன் காம்புகள் வழியே பாலைப் பெருக்கும். இதனால் சேறாகும் வீட்டு இடையன் தங்கையே! பனித்துளிகள், தலைகள் மீது விழ, நாங்கள் உன் வீட்டு வாசலில் நிற்கிறோம். தென் இலங்கை இராவணனைச் சினந்து, கொன்ற, மனத்துக்கினிய, இராமன் புகழைப் பாடுகிறோம். நீ, வாய்திறவாமல், தூங்குவதை எல்லா வீட்டினரும் அறிந்து விட்டார்கள். 485

பறவையாய் வந்த பகாசுரன் வாயைப் பிளந்தவனும் கொடிய இராவணன் தலையை அழித்தவனும் ஆகிய திருமாலின் வீரத்தைப் பாடியவாறு, பெண்கள் நோன்பு நோற்கும் இடம் சென்று விட்டனர். சுக்கிரன் எழுந்து வியாழன் மறையும் காலைப்பொழுதில், பறவைகள் கூவுகின்றன. பூப்போன்ற மான்கண் உடையவளே! நீ, உன்னுடைய கபடத்தை விட்டுவிட்டு, எங்களுடன் கூடிக் குளிர்ந்து நீராட வா. படுக்கையில் கிடக்கலாமோ? 486

பெண்ணே! உங்கள் வீட்டுப் பின்புறக்குளத்தில், செங்கழுநீர்ப் பூக்கள் மலர்ந்து ஆம்பல் மலர்கள் குவிந்து விட்டன. செங்கற்பொடிக் காவி ஆடை அணிந்த வெண்பற்கள் உடைய முனிவர்கள், தங்கள் கோவில்களில் சங்கூதப்போகின்றார்கள். முன்பே வந்து எங்களை எழுப்புவதாக வாய் பேசிய நங்கையே! உனக்கு வெட்கமில்லையா? சங்கு சக்கரக்கையனான தாமரைக் கண்ணனைப்பாட, நீ எழுந்திரு. 487

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ!
சில் என்று அழையேன்மின், நங்கைமீர்! போதர்கின்றேன்;
வல்லை உன் கட்டுரைகள், பண்டே உன் வாய் அறிதும்;
வல்லீர்கள் நீங்களே நானே தான் ஆயிடுக!
ஒல்லை நீ போதாய், உனக்கு என்ன வேறு உடையை?
எல்லாரும் போந்தாரோ? போந்தார், போந்து எண்ணிக்கொள்
வல் ஆனை கொன்றானை மாற்றாரை மாற்று அழிக்க
வல்லானை மாயனைப் பாடு - ஏலோர் எம்பாவாய். 488

நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே! கொடித் தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள் திறவாய்,
ஆயர் சிறுமியரோமுக்கு அறை பறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்;
தூயோமாய் வந்தோம், துயிலெழப் பாடுவான்;
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே, அம்மா! நீ
நேய நிலைக் கதவம் நீக்கு - ஏலோர் எம்பாவாய். 489

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ் செய்யும்
எம்பெருமான் நந்தகோபாலா! எழுந்திராய்;
கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே! குல விளக்கே!
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறாய்;
அம்பரம் ஊடு அறுத்து ஓங்கி உலகு அளந்த
உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்;
செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கு - ஏலோர் எம்பாவாய். 490

உந்து மத களிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்த கோபாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்;
வந்து எங்கும் கோழி அழைத்தன காண், மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயில்இனங்கள் கூவின காண்,
பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர் பாடச்
செந்தாமரைக் கையால் சீர் ஆர் வளை ஒலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்து - ஏலோர் எம்பாவாய். 491

குத்து விளக்கு எரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்சசயனத்தின் மேல் ஏறிக்
கொத்து அலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர் மார்பா! வாய்திறவாய்;
மைத் தடங்கண்ணினாய்! நீ உன் மணாளனை
எத்தனை போதும் துயில் எழ ஒட்டாய் காண்,
எத்தனையேலும் பிரிவு ஆற்றகில்லாயால்;
தத்துவம், அன்று தகவு - ஏலோர் எம்பாவாய், 492





"இளங்கிளி போன்றவளே! என்னே! இன்னமும் நீ உறங்குகிறாயே!" "பெண்களே! இதோவருகிறேன்; சிலுகு சிலுகு என்று பேசாதீர்." "வாய்ப்பேச்சில் வல்ல உன்கடுஞ்சொற்களை முன்னே அறிவோம்". "நீங்கள்தான் வாயாடிகள்; இல்லையில்லை; நானே தான் வாயாடி" "நீ சீக்கிரம் வா. உனக்கு என்று தனி உடைமை உண்டா?" "எல்லோரும் வந்தார்களா?" "வந்தார்கள்; நீயே வந்து எண்ணிப்பார். குவலயாபீட யானையையும் கம்சன் முதலிய பகைவர்களையும் அழித்த மாயனைப் பாட நீ விரைவாக வா." 488

தலைவரான நந்த கோபருடைய மாளிகையைக் காப்பவனே! கொடி உயர்த்திய தோரண வாசலைக் காப்பவனே! மணிபதித்த கதவைத்திற. மாயனான மணிவண்ணன் நேற்றே, இடைச் சிறுமிகளான எங்களிடம் ஒலி எழுப்பும் பறையைத் தருவதாக வாக்களித்துள்ளான். அவனை உறக்கத்திலிருந்து எழுப்ப, நாங்கள் தூயவர்களாய் வந்தோம். ஐயனே! வாயால் மறுக்காமல், நிலையான கதவை நீயே திறக்க வேண்டும். 489

ஆடைகளையும் பானங்களையும் சோற்றையும் தருமம் செய்யும் எம்பெருமான் நந்த கோபாலரே! எழுந்திருக்க வேண்டும். வஞ்சிக் கொடி போன்ற பெண்களின் தலைவியாய்க் கொழுந்து போன்ற குல விளக்கான எம் பெருமாட்டி யசோதைத்தாயே! உணர்ந்து எழுக. ஆகாயத்தூடே வளர்ந்து உலகளந்த தேவாதி தேவனே உறங்காமல் எழுந்திரு. தங்கக்கழல் அணிந்த திருவடி உடைய பல தேவனான செல்வனே! நீயும் உன்தம்பியும் உறங்கலாகாது. 490

மதநீர்பெருக விடும் யானை போன்ற பலத்தையும் முதுகு காட்டி ஓடாத தோள் வலிமையும் உடைய நந்த கோபனின் மருமகளே! நப்பின்னையே! மணம் வீசும் கூந்தல் உடையவளே! நீ வந்து கதவைத் திறப்பாய். கோழிகள் எங்கும் கூவுகின்றன; குருக்கத்திப் பந்தலில் குயில்கள் கூவுகின்றன. பந்தைத் தாங்கிய விரல்களை உடையவளே! உன் மைத்துனன் கண்ணன் பேரைப்பாடவா. வளையல்கள் ஒலிக்க உன் தாமரைக் கையால் தாழ்ப் பாளைத் திற. 491

அகன்ற மார்புடைய பெருமானே! நிலை விளக்கு எரிய, யானைத் தந்தக் கால்களை உடைய கட்டிலில் மெத்தென்ற படுக்கை மீது, நப்பின்னையுடன் மார்பு பொருந்தப்பள்ளி கொள்பவனே! வாய்திறந்து பேசு. மைக்கண்ணுடைய நப்பின்னையே! நீ உன் கணவனை நொடிப் பொழுதும், படுக்கையை விட்டு எழுந்திருக்க விடவில்லை; நீயும் அவனைப் பிரிந்து தரிக்கமாட்டாய். ஆ! ஆ! நீ இப்படி எங்களுக்கு எதிராக இருப்பது தகுதியன்று; உன் தத்துவமும் அன்று. 492

முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயில் எழாய்;
செப்பம் உடையாய்! திறல் உடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயில் எழாய்;
செப்பு அன்ன மென் முலைச் செவ்வாய் சிறு மருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயில் எழாய்;
உக்கமும் தட்டொளியும் தந்து உன் மணாளனை
இப்போதே எம்மை நீர் ஆட்டு - ஏலோர் எம்பாவாய். 493

ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீது அளிப்ப
மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்;
ஊற்றம் உடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயில் எழாய்;
மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசற்கண்
ஆற்றாது வந்து உன் அடிபணியுமா போலே
போற்றி யாம் வந்தோம் புகழ்ந்து - ஏலோர் எம்பாவாய். 494

அங்கண் மா ஞாலத்து அரசர் அபிமான
பங்கமாய் வந்து நின் பள்ளிக்கட்டிற் கீழே
சங்கம் இருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம்;
கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப் போலே
செங்கண் சிறுச் சிறிதே எம்மேல் விழியாவோ?
திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்
அங்கண் இரண்டும் கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல்,
எங்கள்மேல் சாபம் இழிந்து - ஏலோர் எம்பாவாய். 495

மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்து உறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே நீ பூவைப்பூ வண்ணா! உன்
கோயில் நின்று இங்ஙனே போந்தருளி, கோப்பு உடைய
சீரிய சிங்காசனத்து இருந்து, யாம் வந்த
காரியம் ஆராய்ந்து அருள் - ஏலோர் எம்பாவாய். 496

அன்று இவ் உலகம் அளந்தாய்! அடி போற்றி!
சென்று அங்குத் தென்னிலங்கை செற்றாய்! திறல் போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய்! புகழ் போற்றி,
கன்று குணிலா எறிந்தாய்! கழல் போற்றி,
குன்று குடையா எடுத்தாய்! குணம் போற்றி!
வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல் போற்றி!
என்று என்று உன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான்
இன்று யாம் வந்தோம் இரங்கு - ஏலோர் எம்பாவாய். 497





முப்பத்து முக்கோடி தேவர்களுக்குத் துன்பம் வருமுன்பே சென்று அவர்களின் நடுக்கத்தைப் போக்கும் வன்மை உடைய கண்ணனே! தூக்கத்திலிருந்து எழுந்திரு. நேர்மையும் பலமும் உள்ளவனே! பகைவர்க்குப் பயத்தைக் கொடுக்கும் தூயவனே எழுந்திரு. பொன் கலசம் போன்ற முலையையும் சிவந்த வாயையும் சிறிய இடையையும் உடைய நப்பின்னை நங்கையே! திருமகளே! எழுந்திராய். விசிறியையும் கண்ணாடியையும் தந்து, உன் நாயகனையும், எங்களையும் நீராட்டு. 493

வைத்த பாத்திரங்கள் பாலை ஏற்றுப் பொங்கி வழியவும், இடைவிடாமல் பாலைச் சொரியும் வள்ளல் போன்ற பசுக்களை அதிகம் பெற்ற நந்தகோபன் மகனே! தூக்கத்தினின்று உணர்ந்து எழு. நிலையான திண்மை உடையவனே! பெருமையாளனே! இவ்வுலகில் ஒளியுடன் தோன்றி நிற்பவனே! எழுந்திரு. பகைவர்கள் உன் வலிமைக்குத் தோற்று, வாசலிலே கதியற்று வந்து திருவடி பணிவது போல, நாங்கள் உன்னைத் துதித்து வாழ்த்துப் பாட வந்தோம். 494

அழகிய அகன்ற உலகத்து அரசர்கள் அகங்காரம் குலைந்து வந்து உன் சிம்மாசனத்தின் அடியில் கூடி, இருப்பதைப் போல நாங்களும் நெருங்கி வந்துள்ளோம். கிங்கிணி போலப் பாதி திறந்த தாமரைப் பூவோ என்னும்படி, உன் திருக்கண்கள் சிறிது சிறிதாக எங்கள் மேல் பார்க்கமாட்டாவோ? சந்திரனும் சூரியனும் உதித்தாற் போல அழகிய இருகண்களாலும் எங்களைப் பார்த்தால், எங்கள் பாவங்கள் தொலைந்து விடும். 495

மழைக் காலத்தில் மலைக்குகையில் படுத்துத் தூங்கும் சீரிய சிங்கம், உணர்ந்து எழும்பொழுது, கண்களில் தீப்பொறி பறக்கும். பிடரி மயிர் பொங்க, நாற்புறமும் தன் உடலை அசைத்துச் சோம்பல் முறித்துக் கர்ஜனை செய்யும். இவ்வாறு சிங்கம் வெளி வருதல் போல, காயாம் பூ நிறக்கண்ணனே! நீ உன் கோயிலினின்று அவைக்கு வந்து, அழகிய அமைப்புடைய சிங்காசனத்தில் எழுந்தருளி, நாங்கள் வந்த காரியத்தை விசாரித்து அருள வேண்டும். 496

'அக்காலத்தில் இவ்வுலகங்களை அளந்த உன் இணை அடிகள் பல்லாண்டு வாழ்க! தென் இலங்கை சென்று இராவணனை அழித்த உன் வலிமைக்கு வாழ்த்துகள்! சகடத்தை உதைத்த உன் புகழுக்குப் போற்றி! கன்றாய் நின்ற அசுரனை எறிதடியாய்க் கொண்டு எறிந்த உன் கழல் அடிகளுக்குப் போற்றி! கோவர்த்தன மலையைக் குடையாய்த் தூக்கிய உன் திருக் குணங்களுக்குப் போற்றி! பகைவரை வென்று அவர் வெறுப்பை அழிக்கும் உன் கையிலுள்ள வேலுக்குப் போற்றி!' - இவ்வாறு என்றும் உன் வீரத்தைப் பாடி, நாம், இப்போது பறை பெற வந்தோம். நீ அருள் செய்ய வேண்டும். 497

ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஓர் இரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்
தரிக்கிலான் ஆகித் தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பு என்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம்; பறை தருதி யாகில்,
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி
வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்து - ஏலோர் எம்பாவாய். 498

மாலே! மணிவண்ணா! மார்கழி நீர் ஆடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன, கேட்டியேல்;
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பால் அன்ன வண்ணத்து உன் பாஞ்சசன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே;
சாலப் பெரும் பறையே, பல்லாண்டு இசைப்பாரே,
கோல விளக்கே, கொடியே, விதானமே;
ஆலின் இலையாய்! அருள் - ஏலோர் எம்பாவாய். 499

கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம் பெறு சம்மானம்;
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப் பூவே,
பாடகமே, என்று அனைய பல் கலனும் யாம் அணிவோம்;
ஆடை உடுப்போம், அதன் பின்னே பாற் சோறு
மூட நெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்து - ஏலோர் எம்பாவாய். 500

கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்போம்.
அறிவு ஒன்றும் இல்லாத ஆய்க் குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாம் உடையோம்;
குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது;
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே
இறைவா! நீ தாராய் பறை - ஏலோர் எம்பாவாய். 501

சிற்றஞ் சிறுகாலே வந்து உன்னைச் சேவித்து, உன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்;
பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்திற் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது;
இற்றைப் பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்;
மற்றை நம் காமங்கள் மாற்று - ஏலோர் எம்பாவாய். 502





திருமாலே! நீ, தேவகி என்னும் ஒருத்திக்கு மகனாகத் தோன்றி ஒரே இரவிலே யசோதையான மற்றொருத்திக்கு மகனாக ஆனாய். இவ்வாறு ஒளித்து வளரும் காலத்தில், பொறுக்க இயலாத கம்சன் உன்னைக் கொல்லத் தீமையை எண்ணவும், அதை வீணாக்கி, அவன் வயிற்றில், நெருப்பாக நின்றாய், நாங்கள் வேண்டும் பறை தருவாயாகில், திருவும் ஆசைப்படும் அடிமைச்செல்வத்தையும் வீரத்தையும் பாடி, பிரிவுத் துன்பம் நீங்கி மகிழ்வோம். 498

அடியாரிடத்தே மோகமுடைய மணி வண்ணா! ஆலந்தளிரில் பள்ளி கொண்டவா! மார்கழி நீராட்டத்துக்குச் சான்றோர் வேண்டு வனவற்றைக் கூறுகிறோம். உலகம் நடுங்க ஒலிக்கும் பால் நிறப் பாஞ்ச சன்னியம் போன்ற சங்குகளையும், அகன்ற பெரிய பறைகளையும், பல்லாண்டு பாடுபவர்களையும் அழகிய விளக்குகளையும், கொடி களையும், மேற்கட்டிகளையும் தந்தருளவேண்டும். 499

உன்னடி பணியாதாரை வெல்லும் குணங்களை உடைய கோவிந்தா! உன்னைப் பாடிப் பறையைப் பெற்றபின் நாங்கள் விரும்பும் பரிசுகள் உண்டு. நாட்டார் புகழும் காப்புகளும், தோள்வளைகளும் தோடும் செவிப் பூவும் பாதசரமும் என்று பலவகைப் பட்ட ஆபரணங்களை அணிவோம். நீ உடுத்த ஆடைகளை உடுப்போம். பின்பு பாற்சோறு மூடும்படி, நெய்யைப் பெய்த அடிசில், முழங்கை வழியும் படி, உன்னுடன் கூடி, இருந்து, குளிர்ந்து உண்போம். 500

குறை ஒன்று கூட இல்லாத கோவிந்தனே! உடல் வளர்க்கும் நோக்க முடன் நாங்கள் பசுக்கள் பின் சென்று காட்டில் திரிவோம். ஆனாலும் அறிவு சிறிது கூட இல்லாத எங்கள் இடைக்குலத்தில் நீ பிறந்து வாழும் புண்ணியம் பெற்று விட்டோம். இறைவா! நமக்குள் உண்டான உறவு, உன்னாலோ, எங்களாலோ ஒழிக்க முடியாதது. அறிவில்லாத சிறுமிகளான நாங்கள் அன்பால் அழைத்ததைப் பொறுத்துக் கோபம் கொள்ளாமல், அடிமைத் தனத்தை அருள வேண்டும். 501

கண்ணா! சிறுவிடியல் நேரத்தே வந்து உன்னைப் பணிந்து, தாமரைத் திருவடிகளைப் போற்றும் பொருளைக் கேட்டருள வேண்டும். பசு மேய்க்கும் குலத்தில் பிறந்த நீ, அந்தரங்கத் தொண்டுகளை உனக்கு நாங்கள் செய்யத் திருவுள்ளம் பற்ற வேண்டும். இன்று நாங்கள் வந்தது கொட்டும் பறை கொள்ள அல்ல. காலமுள்ள அளவும், ஏழு ஏழு பிறவிகளிலும் உன்னோடு உறவு கொண்டு, உன் மகிழ்ச்சிக்காகவே, நாங்கள் அடிமை செய்யக் கடவோம். எங்களுடைய மற்றைய ஆசைகளை நீயே தவிர்த்து அருள வேண்டும். 502

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள்திருமுகத்துச் சேயிழையார் சென்று இறைஞ்சி
அங்கப் பறைகொண்டஆற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண் தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கு இப் பரிசு உரைப்பார் ஈரிரண்டு மால் வரைத் தோள்
செங்கண்திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய். 503

திருப்பாவை முற்றிற்று.

ஸ்ரீ

## நாச்சியார் திருமொழி

### கண்ணனைப் பெறக் காமனைத் தொழுதல்

தை ஒரு திங்களும் தரை விளக்கித்
தண் மண்டலம் இட்டு மாசி முன்னாள்
ஐய நுண் மணல் கொண்டு தெரு அணிந்து
அழகினுக்கு அலங்கரித்து, அனங்கதேவா!
உய்யவும் ஆம்கொலோ? என்று சொல்லி
உன்னையும் உம்பியையும் தொழுதேன்;
வெய்யது ஓர் தழல் உமிழ் சக்கரக் கை
வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே. 504

வெள்ளை நுண் மணல்கொண்டு தெரு அணிந்து
வெள்வரைப்பதன் முன்னம் துறை படிந்து
முள்ளும் இல்லாச் சுள்ளி எரி மடுத்து
முயன்று உன்னை நோற்கின்றேன், காமதேவா!
கள் அவிழ் பூங்களை தொடுத்துக்கொண்டு
கடல்வண்ணன் என்பது ஓர் பேர் எழுதி
புள்ளினை வாய் பிளந்தான் என்பது ஓர்
இலக்கினிற் புக என்னை எய்கிற்றியே. 505

மத்த நன் நறுமலர் முருக்க மலர்
கொண்டு முப்போதும் உன் அடி வணங்கித்
தத்துவம் இலி என்று நெஞ்சு எரிந்து
வாசகத்து அழித்து உன்னை வைதிடாமே,
கொத்து அலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்தன் என்பது ஓர் பேர் எழுதி
வித்தகன் வேங்கட வாணன் என்னும்
விளக்கினிற் புக என்னை விதிக்கிற்றியே. 506





*கப்பல்கள் ஓடும் கடலைக் கடைந்த திருமகள் கேள்வனான கண்ணனை, சந்திரனை ஒத்த முகமுடைய ஆய்ச்சிகள் வணங்கிப் பறையாகிய உறுதிப் பொருளை அடைந்தார்கள். புதுவை நகரில் தோன்றிய தாமரை மாலை அணிந்த பெரியாழ்வாரின் மகள் ஆண்டாள், இதனை முப்பது பாசுரங்களாக அருளினாள். இவற்றைத் தவறாமல் ஓதுபவர்கள், நான்கு தோள்களைப் பெற்ற செங்கண் திருமால் அருளால், எங்கும் இன்பம் அடைவர்.* 503

திருப்பாவை முற்றிற்று.

ஸ்ரீ

## நாச்சியார் திருமொழி

### கண்ணனைப் பெறக் காமனைத் தொழுதல்

*மன்மதனே! தைமாதம் முழுவதும் தரையைச் சுத்தம் செய்து அலங்கரித்துக் குளிர்ந்த வட்டமான கோலம் போட்டு, மாசி மாத முதல் பருவமான வளர்பிறைக்காலத்தே அழகிய மணலாலே தெருவை அணி செய்தேன். 'நான் உய்வுபெறுவேனோ?' என்று கூறி உன்னையும் உன் தம்பி காமனையும் வணங்கி நோன்பு நோற்றேன். வெம்மையான தீ உமிழும் சக்கரத்தை ஏந்திய திருவேங்கடநாதனுக்கு என்னை நீ அந்தரங்கக் கைங்கர்யம் செய்யும் படி விதிக்கவேண்டும்.* 504

*காம தேவா! வெண்பொடி மணலாலே பகவான் வரும் வழியை அலங்காரம் செய்த பின், கீழ்வானம் வெளுப்பதற்கு முன்னே துறையிலே நீராடினேன். உன் உதவியை நாடி, முள் இல்லாத சுள்ளிகளை நெருப்பில் இட்டு வேள்வி செய்து நோன்பு நோற்கிறேன். நீ, கடல் நிறத்திருமாலை இலக்காக் கொண்டு, தேன் ஒழுகும் பூக்களாகிய அம்புகளைத் தொடுத்து, அவனிடத்தே நான் சேரும் படி எய்ய வேண்டும்.* 505

*வேங்கட நாதனைப் பெறுவதற்காகக் காலை, பகல், மாலை ஆகிய மூன்று நேரங்களிலும் ஊமத்தம்பூவையும் முருக்கம்பூவையும் உன் காலில் போட்டு வணங்கி நோற்றேன். 'நீ பொய்யன்' என்று நான் நெஞ்சு கொதித்து வாயால் உன்னை வையாதபடி, கொத்தாகப் பூக்களையே அம்பாகக் கொண்டு கோவிந்தன் என்னும் பெயரை இதயத்தில் எழுதி, வியக்கத் தக்க வேங்கட வாணனாகிய விளக்கினிலே நான் புகும்படி செய்ய வேண்டும்.* 506

சுவரில், புராண! நின் பேர் எழுதிச்
சுறவ நற் கொடிக்களும் துரங்கங்களும்
கவரிப் பிணாக்களும் கருப்பு வில்லும்
காட்டித் தந்தேன், கண்டாய் காமதேவா!
அவரைப் பிராயம் தொடங்கி என்றும்
ஆதரித்து எழுந்த என் தட முலைகள்
துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
தொழுது வைத்தேன், ஒல்லை விதிக்கிற்றியே. 507

வானிடை வாழும் அவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி
கானிடைத் திரிவது ஓர் நரி புகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வது ஒப்ப,
ஊனிடை ஆழி சங்கு உத்தமர்க்கு என்று
உன்னித்து எழுந்த என் தட முலைகள்
மானிடவர்க்கு என்று பேச்சுப் படில்
வாழகில்லேன் கண்டாய், மன்மதனே! 508

உருவு உடையார் இளையார்கள் நல்லார்
ஒத்து வல்லார்களைக் கொண்டு வைகல்
தெருவிடை எதிர்கொண்டு பங்குனி நாள்
திருந்தவே நோற்கின்றேன், காமதேவா!
கருவுடை முகில் வண்ணன் காயாவண்ணன்
கருவிளை போல் வண்ணன் கமல வண்ணத்
திரு உடை முகத்தினில் திருக் கண்களால்
திருந்தவே நோக்கு எனக்கு அருள், கண்டாய். 509

காய் உடை நெல்லொடு கரும்பு அமைத்து,
கட்டி அரிசி அவல் அமைத்து,
வாய் உடை மறையவர் மந்திரத்தால்
மன்மதனே! உன்னை வணங்குகின்றேன்;
தேசம் முன் அளந்தவன் திரிவிக்கிரமன்
திருக்கைகளால் என்னைத் தீண்டும் வண்ணம்
சாய் உடை வயிறும் என் தட முலையும்
தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே. 510

மாசு உடை உடம்பொடு, தலை உலறி,
வாய்ப்புறம் வெளுத்து, ஒருபோதும் உண்டு,
தேசு உடைத் திறல் உடைக் காமதேவா!
நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள், கண்டாய்;
பேசுவது ஒன்று உண்டு இங்கு: எம்பெருமான்!
பெண்மையைத் தலை உடைத்து ஆக்கும் வண்ணம்
கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள்
என்னும் இப் பேறு எனக்கு அருள், கண்டாய். 511





தொன்றுதொட்டே பெருமை உடைய மன்மதனே! சுவர்களிலே உன் பெயர்களை எழுதி, சுறாமீன் வரையப் பட்ட துணிக்கொடி களையும் குதிரைகளையும் சாமரங்கள் ஏந்திய பெண்களையும் கரும்பு வில்லையும் உனக்குக் காணிக்கையாகத் தருகிறேன். பருவம் நிரம்பாத சிறுவயது முதல், ஒரு படிப் பட்டு எழுந்த என் முலைகளைத் துவாரகா நாதனான கண்ணனுக்கே என்று முடிவு செய்து தொழுதேன். சீக்கிரம் என்னை நீ அவனிடம் சேர்ப்பிக்க வேண்டும். 507

மன்மதனே! மேல் உலகத் தேவர்களுக்கு என்று அந்தணர்கள் தங்கள் யாகங்களிலே கொடுக்கும் உணவைக் காட்டில் திரியும் நரி புகுந்து, முகர்ந்து எடுத்துக் கொள்ளல் தக்கதன்று. இதே போல், நானும் திருமாலுக்கன்றி, மனிதனுக்கு வாழ்க்கைப்படேன். சங்கு சக்கரங்களைத் திருமேனியில் தாங்கிய உத்தமனான திருமாலுக் கென்றே எழுந்த என் முலைகள், மனிதர்களுக்கு என்ற பேச்சு உண்டானால், நான் உயிர் வாழ மாட்டேன். 508

காமதேவா! காம நூலில் புலமை உள்ள அழகிய நல்ல இளையவர்களை முன்னிட்டுக்கொண்டு, நீ வரும் வழியிலே தினமும் எதிரேசென்று, பங்குனிப் பண்டிகை நாள் அன்று திருத்தமாக நோன்பு நோற்கிறேன். சூல் கொண்ட மேகம், காயாம்பூ, கருவிளைப் பூ ஆகியவற்றின் நிறமுடைய கமல வண்ணனின் திருமுகக் கண்களின் பார்வை என் மேல்விழ, நீ அருள் செய்ய வேண்டும். 509

மன்மதனே! பசுங்காய் நெல்லையும் கரும்பையும் பரப்பி கருப்புக் கட்டி, அரிசி, அவல் ஆகியவற்றைச் சேர்த்துச் சமைத்ததைப் படைத்து, காம நூல் வல்ல அந்தணர் மந்திரம் ஓத நோன்பு செய்து உன்னை வணங்குகிறேன். உலகம் அனைத்தையும் அளந்த திரிவிக்கிரமன் திருக்கைகளால், ஒளியுடைய என் வயிற்றையும் மென்மையான முலைகளையும் தொடும்படி நீ அருள வேண்டும். உலகில் நெடுங்காலம் நிலைக்கும் இத்தகைய புகழை எனக்குத் தருவாயா? 510

ஒளியும் வலிமையும் உடைய மன்மதனே! அழுக்குப்படிந்த உடம்புடன் தலைமயிரை விரித்தவாறு, வாய் உதடுகள் வெளுத்துப் போக, ஒரு வேளை மட்டுமே சாப்பிட்டு, நோற்கும், என் நோன்பினை நீ குறிக்கொள்ள வேண்டும். இப்போது நான் கூறுவதைக் கேள், பெண் தன்மையான என் இருப்பைத் தலைமை ஆக்கும்படி கேசவனான நம்பியை நான் கால்பிடிக்கும் பாக்கியத்தை எனக்கு நீ அருளவேண்டும். 511

தொழுது முப்போதும் உன் அடி வணங்கித்
தூமலர் தூய்த் தொழுது ஏத்துகின்றேன்;
பழுது இன்றிப் பாற்கடல் வண்ணனுக்கே
பணிசெய்து வாழப் பெறாவிடில், நான்
அழுது அழுது அலமந்து அம்மா வழங்க,
ஆற்றவும் அது உனக்கு உறைக்கும், கண்டாய்;
உழுவதோர் எருத்தினை நுகங்கொடு பாய்ந்து
ஊட்டம் இன்றித் துரந்தால் ஒக்குமே. 512

கருப்பு வில் மலர்க் கணைக் காமவேளைக்
கழலிணை பணிந்து, அங்கு ஓர் கரி அலற
மருப்பினை ஒசித்துப் புள் வாய்பிளந்த
மணிவண்ணற்கு என்னை வகுத்திடு என்று,
பொருப்பு அன்ன மாடம் பொலிந்து தோன்றும்
புதுவையர்கோன் விட்டுசித்தன் கோதை
விருப்பு உடை இன்தமிழ் மாலை வல்லார்
விண்ணவர் கோன் அடி நண்ணுவரே. 513

## சிற்றில் சிதைக்க வேண்டாம் என்று வேண்டுதல்

நாமம் ஆயிரம் ஏத்த நின்ற
நாராயணா! நரனே! உன்னை
மாமி தன் மகன் ஆகப் பெற்றால்
எமக்கு வாதை தவிருமே;
காமன் போதரு காலம் என்று பங்-
குனி நாள் கடை பாரித்தோம்;
தீமை செய்யும் சிரீதரா! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே. 514

இன்று முற்றும் முதுகு நோவ
இருந்து இழைத்த இச் சிற்றிலை
நன்றும் கண் உற நோக்கி நாம் கொளும்
ஆர்வந்தன்னைத் தணிகிடாய்;
அன்று பாலகன் ஆகி ஆலிலை
மேல் துயின்ற எம் ஆதியாய்!
என்றும் உன்தனக்கு எங்கள்மேல் இரக்-
கம் எழாதது எம் பாவமே. 515





முக்காலங்களிலும் மனத்தால் உன்னைத் தொழுது தலையால் வணங்கித் தூய பூக்களைக் காலில் போட்டுத் துதிக்கிறேன். பூமியைச் சுற்றியுள்ள கடல் போன்ற நிறமுடைய திருமாலுக்கு நான் குற்றமின்றிப் பணி செய்து வாழப் பெறாவிட்டால், அழுது மனம் கலங்கி ‘அம்மா’ என்று அலறும்படி ஆகும். இந்தப் பாவம் உன்னையே சாரும். ஏர் உழுகிற காளையை நுகத்தடியால் தள்ளித் தீனி இடாமல் விலக்கி விடுவது போல் என் நிலை ஆகிவிடும். 512

கரும்பு வில்லும் மலர் அம்பும் கொண்ட மன்மதனின், கழல்கள் உள்ள இரு அடிகளிலும் ஆண்டாள் வணங்கினாள். குவலயாபீடம் யானை அலற அதன் கொம்பை ஒடித்தவனும் பகாசுரப்பறவை வாயைப் பிளந்தவனும் ஆன மணி வண்ணனுடன் தன்னைச் சேர்க்குமாறு அவள் வேண்டினாள். மலை போன்ற மாளிகைகள் உள்ள புதுவை நகர்க்கோன் பெரியாழ்வார் மகளான கோதை அருளிய இத்தமிழ் மாலையைப் பாட வல்லவர், திருமால் அடி அடைவார்கள். 513

## சிற்றில் சிதைக்க வேண்டாம் என்று வேண்டுதல்

நித்திய சூரிகள் ஆயிரம் திருநாமங்களைக் கூறித் துதிக்கும்படி வீற்றிருக்கும் நாராயணனே! மனித வடிவங்களில் அவதரித்தவனே! எங்கள் மாமியான யசோதை தீம்பு செய்யும் உன்னை மகனாகப் பெற்றதால், நாங்கள் உன் குறும்பால் துன்புறுவது தப்புமோ? பங்குனி மாதம் ஆதலால், மன்மதன் வரும் காலம் என்று பாதையை அலங்கரித்தோம். தீம்புகள் செய்யும் சிரீதரா! எங்களுடைய சிறு வீடுகளைச் சிதைக்காதே. 514

எங்கள் முதுகுகள் நொந்து போகும்படி இன்று முழுவதும் இருந்து கட்டிய இந்தச் சிறு வீட்டை ஆர்வத்துடன் உற்றுப் பார்க்கிறோம். இப்படிப் பார்த்துக் கொண்டிருக்கும் ஆசை அழியும் படி செய்யாதே! பிரளய காலத்தில் குழந்தையாய் மாறி, ஆலந்தளிரிலே கண் வளர்ந்த எங்கள் ஆதிப்பிரானே! உனக்கு எங்களிடத்தில் எக்காலத்தும் இரக்கம் ஏற்படாதது எங்களுடைய பாவமோ? 515

குண்டு நீர் உறை கோளரீ! மத-
யானை கோள் விடுத்தாய்! உன்னைக்
கண்டு மால் உறுவோங்களைக் கடைக்
கண்களால் இட்டு வாதியேல்;
வண்டல் நுண் மணல் தெள்ளி யாம் வளைக்
கைகளால் சிரமப் பட்டோம்;
தெண் திரைக்கடற் பள்ளியாய்! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே. 516

பெய்யு மா முகில்போல் வண்ணா! உன்தன்
பேச்சும் செய்கையும் எங்களை
மையல் ஏற்றி மயக்க உன் முகம்
மாய மந்திரம் தான் கொலோ?
நொய்யர் பிள்ளைகள் என்பதற்கு உன்னை
நோவ நாங்கள் உரைக்கிலோம்
செய்ய தாமரைக் கண்ணினாய்! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே. 517

வெள்ளை நுண் மணல் கொண்டு சிற்றில்
விசித்திரப் பட வீதி வாய்த்
தெள்ளி நாங்கள் இழைத்த கோலம்
அழித்தி யாகிலும், உன்தன் மேல்
உள்ளம் ஓடி உருகலல்லால்
உரோடம் ஒன்றும் இலோம், கண்டாய்;
கள்ள மாதவா! கேசவா! உன்
முகத்தன கண்கள் அல்லவே! 518

முற்று இலாத பிள்ளைகளோம் முலை
போந்திலா தோமை நாள்தொறும்
சிற்றில் மேல் இட்டுக் கொண்டு நீ சிறிது
உண்டு திண்ணென நாம் அது
கற்றிலோம்; கடலை அடைத்து அரக்-
கர் குலங்களை முற்றவும்
செற்று இலங்கையைப் பூசல் ஆக்கிய
சேவகா! எம்மை வாதியேல். 519

பேதம் நன்கு அறிவார்களோடு இவை
பேசினால் பெரிது இன் சுவை;
யாதும் ஒன்று அறியாத பிள்ளைக-
ளோமை நீ நலிந்து என் பயன்?
ஓத மா கடல்வண்ணா! உன் மண-
வாட்டிமாரொடு சூழறும்;
சேதுபந்தம் திருத்தினாய்! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே. 520





ஆழமான பிரளய காலக் கடலிலே திருக்கண் வளர்ந்த சிங்கமே! யானையான கஜேந்திராழ்வனின் துன்பத்தைப் போக்கியவனே! உன்னைப் பார்த்து ஆசைப்படும் எங்களைக் கடைக்கண்ணால் விழித்து வதைக்காதே. நாங்கள், வண்டல் உள்ள இடம் தேடிப் பொடி மணல்களைக் கொண்டு வந்து, வளைக் கைகளால் சிரமப் பட்டு இச்சிறுவீட்டைக் கட்டி உள்ளோம். அலை பொருந்திய பாற்கடலில் பள்ளி கொண்டவனே! இச்சிற்றிலைக் கலைக்காதே. 516

மழை பெய்யும் கருத்த மேகம் போன்ற நிறமுடையவனே! உன் பேச்சும் செய்கையும் எங்களை மயக்கிப் பித்துப்பிடிக்கச் செய்கின்றன. உன் முகம் சொக்குப்பொடி போடும் மாய மந்திரமோ? தாமரைப்பூப் போன்ற கண்களை உடையவனே! “இச்சிறுமிகள் பலவீனமான பிள்ளைகள்” என்று பிறர் கூறுவதற்குப் பயந்து, நீ வருந்தும்படி நாங்கள் பேசவில்லை. எங்கள் சிறுவீட்டைச் சிதைக்காதே. 517

கள்ளத்தனம் கொண்ட கண்ணா! கேசவா! நாங்கள் வெண்மணற்பொடிகளாலே தெருவிலே யாவரும் வியக்கும்படி தெளித்துக் கட்டிய இச்சிறு வீட்டுக் கோலத்தை நீ அழித்தாலும், எங்கள் இதயம் உடைந்து உருகுமே அல்லாமல், உன்மேல் கோபம் கொள்ளமாட்டோம். காரணம் உன் கண்ணழகே. உன் முகத்திலுள்ள கண்கள், பார்க்கும் கண்கள் அல்ல. எங்களை விழச்செய்யும் வலையாக அன்றோ உள்ளன! 518

கடலில் அணை கட்டி, இலங்கை சென்று அதனைப் போர்க்களமாக்கி அரக்கர் குலத்தை முழுவதும் அழித்த வீரம் மிகுந்தவனே! சிறுவீட்டை அழிப்பது போல வந்து, நீ எங்களிடத்தே செய்யும் செயல்களுக்கு கருத்து உண்டு. நாங்களோ, அதைக் கற்கவில்லை. மார்பகங்கள் கிளர்ந்து எழாத சிறுமிகளாகிய எங்களிடத்தே நாள்தோறும் வந்து துன்புறுத்தாதே. உன் நினைவு அறிவதற்கு ஈடான பருவத்தை நாங்கள் அடையவில்லை. 519

அலைகடல் நிறம் உடைய கண்ணா! நீ பேசும் கருத்தை அறிவாருடன் சொன்னால் உனக்குப் பயன் கிடைக்கும்; அது உனக்கு இனிமை ஆகும். யாதொன்றும் அறியாத பேதைப் பெண்களான எங்களை நீ நலிவதால் என்ன பயன்? கடலின்மீது அணை கட்டியவனே! எங்கள் சிறுவீட்டைச் சிதைக்காதே. உன் மனைவிமார்கள் மீது ஆணை இட்டோம். 520

வட்ட வாய்ச் சிறு தூதையோடு
சிறுசுளகும் மணலும் கொண்டு
இட்டமா விளையாடு வோங்களைச்
சிற்றில் ஈடழித்து என் பயன்?
தொட்டு உதைத்து நலியேல் கண்டாய்;
சுடர்ச் சக்கரம் கையில் ஏந்தினாய்!
கட்டியும் கைத்தால் இன்னாமை
அறிதியே கடல்வண்ணனே! 521

முற்றத்து ஊடு புகுந்து நின் முகம்
காட்டிப் புன்முறுவல் செய்து
சிற்றிலோடு எங்கள் சிந்தையும் சிதைக்-
கக் கடவையோ? கோவிந்தா!
முற்ற மண்ணிடம் தாவி விண் உற
நீண்டு அளந்து கொண்டாய்! எம்மைப்
பற்றி மெய்ப்பிணக்கு இட்டக்கால் இந்தப்
பக்கம் நின்றவர் என் சொல்லார்? 522

சீதை வாயமுதம் உண்டாய்! எங்கள்
சிற்றில் நீ சிதையேல் என்று
வீதிவாய் விளையாடும் ஆயர்
சிறுமியர் மழலைச் சொல்லை
வேத வாய்த் தொழிலார்கள் வாழ் வில்லி-
புத்தூர் மன் விட்டுசித்தன்தன்
கோதை வாய்த் தமிழ் வல்லவர் குறைவு
இன்றி வைகுந்தம் சேர்வரே. 523

### கண்ணனிடம் ஆடைகளைத்தரும்படி வேண்டுதல்

கோழி அழைப்பதன் முன்னம்
குடைந்து நீராடுவான் போந்தோம்;
ஆழியஞ் செல்வன் எழுந்தான்;
அரவுஅணைமேல் பள்ளி கொண்டாய்!
ஏழைமை ஆற்றவும் பட்டோம்,
இனி என்றும் பொய்கைக்கு வாரோம்;
தோழியும் நானும் தொழுதோம்;
துகிலைப் பணித்தருளாயே. 524





ஒளி பொருந்திய சக்கரத்தைக் கையில் ஏந்திய கடல் நிறக் கண்ணனே! வட்டமான வாயுடைய சிறிய பானையுடன் சிறிய முறத்தையும் மணலையும் கொண்டு விருப்பமுடன் விளையாடும் எங்கள் சிறு வீட்டைக் கலைத்துப் பயன்படாது அழிப்பதால் உனக்கு என்ன பயன்? கையால் தொட்டும் காலால் உதைத்தும் எங்களை நலியாதே. இதயம் கசந்து போய்விட்டால் கருப்புக் கட்டியும் இனிக்காது என்பதை அறிவாயன்றோ? 521

கோவிந்தா! உன் ஒருகாலால் பூமி முழுவதையும் தாவி அளந்து மற்றொரு காலால் பரம பதம் வரை ஓங்கி அளந்தாய். எங்கள் முற்றத்திலே புகுந்து உன் அழகியமுகம் காட்டிப் புன்சிரிப்புச் செய்தபடி, எங்கள் சிற்றிலையும் இதயத்தையும் அழிக்கலாமோ? இம்மட்டு மின்றி எங்களைப் பிடித்து உடம்போடு அணைத்துக் கொண்டால், பக்கத்தில் நின்று பார்ப்பவர்கள் என்னதான் கூறமாட்டார்கள்? 522

தெருவில் விளையாடும் இடைப் பெண்கள், "சீதா தேவியின் வாய் அமுதம் பருகிய பெருமானே! எங்கள் சிற்றிலைச் சிதைக்காதே" என்று பேசியதாக ஆண்டாள் அருளினாள். வேதம் ஓதி, வைதிகத்தொழில் செய்யும் அந்தணர்கள் வாழும் ஸ்ரீவில்லிபுத்தூர் தலைவரான பெரியாழ்வாரின் மகள் கோதை வாயில் தோன்றிய இத்தமிழ்ப் பாசுரங்களை ஓத வல்லவர்கள் குறைவில்லாமல் வைகுந்தம் சேரப் பெறுவார்கள். 523

### கண்ணனிடம் ஆடைகளைத்தரும்படி வேண்டுதல்

ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவனே! நாங்கள் இக்காலைப் பொழுதில் தண்ணீருக்குள் மூழ்கிக் குளிப்பதற்காக, கோழி கூவுவதற்கு முன்பேயே வந்துவிட்டோம். ஆயினும் உன் எண்ணத்துக்கு மாறாக, ஒற்றைச் சக்கரத்தேருடைய சூரியன் தோன்றிவிட்டான். உன்னாலே மிகவும் துன்பப்பட்ட நாங்கள் இனிமேல் என்றைக்கும் குளத்திற்கு வரமாட்டோம். நானும் தோழியும் உன்னைத் தொழுகின்றோம். தயவுடன் எங்கள் சேலைகளைத் தந்தருள வேண்டும். 524

இது என் புகுந்தது இங்கு? அந்தோ!
இப் பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்?
மதுவின் துழாய் முடி மாலே!
மாயனே! எங்கள் அமுதே!
விதி இன்மையால் அது மாட்டோம்;
வித்தகப் பிள்ளாய்! விரையேல்;
குதிகொண்டு அரவில் நடித்தாய்!
குருந்திடைக் கூறை பணியாய். 525

எல்லே! ஈது என்ன இளமை?
எம் அனைமார் காணில் ஒட்டார்;
பொல்லாங்கு ஈது என்று கருதாய்,
பூங்குருந்து ஏறி இருத்தி;
வில்லால் இலங்கை அழித்தாய்;
வேண்டியது எல்லாம் தருவோம்;
பல்லாரும் காணாமே போவோம்;
பட்டைப் பணித்தருளாயே. 526

பரக்க விழித்து எங்கும் நோக்கிப்
பலர் குடைந்து ஆடும் சுனையில்,
அரக்க நில்லா கண்ண நீர்கள்
அலமருகின்றவா பாராய்;
இரக்கமேல் ஒன்றும் இலாதாய்!
இலங்கை அழித்த பிரானே!
குரக்குஅரசு ஆவது அறிந்தோம்;
குருந்திடைக் கூறை பணியாய். 527

காலைக் கதுவிடுகின்ற
கயலொடு வாளை விரவி;
:வலைப் பிடித்து என்னைமார்கள்
ஓட்டில் என்ன விளையாட்டோ?
கோலச் சிற்றாடை பலவும்
கொண்டு நீ ஏறியிராதே,
கோலம் கரிய பிரானே!
குருந்திடைக் கூறை பணியாய். 528

தடத்து அவிழ் தாமரைப் பொய்கைத்
தாள்கள் எம் காலைக் கதுவ,
விடத் தேள் எறிந்தாலே போல
வேதனை ஆற்றவும் பட்டோம்;
குடத்தை எடுத்து ஏறவிட்டுக்
கூத்தாட வல்ல எம் கோவே!
படிற்றை எல்லாம் தவிர்ந்து, எங்கள்
பட்டைப் பணித்தருளாயே. 529





ஐயோ! இங்கே நடந்தது என்னே! மாயனே! நீ இப் பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்? தேன் சொட்டும் துழாய் மாலையைத் திருமுடியில் சூடிய திருமாலே! இனிய அமுதே! எங்களுக்குப் பாக்கியம் இல்லாததாலே, நீ விரும்பும் சேர்க்கைக்கு இசையோம். வித்தகப் பிள்ளையே அவசரப்படாதே! காளிய நாகத்தின் மீது ஆடியவா! நீ, குருந்த மரத்தில் வைத்துள்ள சேலைகளைக் கொடுத்தருள்வாய். 525

வில்லால் இலங்கையை அழித்தவனே! இது என்ன சிறுபிள்ளைத்தனம்! எங்கள் இந்த நிலையைத் தாய்மார்கள் கண்டால், எங்களை மறுபடியும் சேர்த்துக் கொள்ளார்கள். எங்கள் ஆடைகளைப் பறித்துக் கொண்டதைத் தீங்கு என்று எண்ணாமல், பூத்த குருந்தமரத்தின் மேல் ஏறி நிற்கிறாய். நீ விரும்புவதைத் தருவோம். எங்களுடைய பட்டுச் சேலைகளை தந்தருள வேண்டும். ஊரில் உள்ளோர் காணாதபடி நாங்கள் போவோம். 526

இலங்கையை அழித்த பெருமானே! பலரும் நீராடும் இந்த பொய்கைக் கரையில் நாங்கள் எங்கும் விழித்துப் பார்த்துப் பிறர் அறிவாரே என்று பயந்து, கண்ணீர்த்தாரைகள் பெருக, அடக்க முடியாமல், வருந்துகிறோம். எங்கள் இந்நிலையைப் பார்த்தும் கூட உனக்கு இரக்கம் ஏற்படவில்லையா? நீ, குரங்குகளுக்கு அரசன் என்பதை அறிவோம். குருந்தின் மேலுள்ள சேலை களைக் கொடு. 527

கறுத்த நிறமுடைய கண்ணனே! இப்பொய்கையில், கயல்மீன்களும் வாளை மீன்களும் கூடி, எங்கள் கால்களைக் கடிக்கின்றன. எங்களின் இத்துன்பத்தைத் தமையன்மார்கள் கேள்விப் பட்டால், வேல்களைத் தூக்கிவாறு ஓடிவந்து உன்னைத் துரத்துவார்கள். பிறகு உன் விளையாடல் என்னாகும்? ஆகவே, அழகிய எங்கள் சிற்றாடைகளுடன் மரத்தில் ஏறி இராமல், கீழிறங்கிக் குருந்தமரத்திலுள்ள சேலைகளைத் தந்துவிடு. 528

அகன்ற இப்பொய்கையில் உள்ள தாமரைத் தண்டுகள் எங்கள் கால்களைக் கடிப்பது விஷம்கொண்ட தேள் கொட்டுவது போல மிகவும் வேதனைப் படுகிறோம். குடக்கூத்து ஆட வல்லவனான அரசே! நீ செய்யும் தீம்புகளை விட்டு, எங்களுடைய பட்டாடைகளைத் தந்தருள்வாய். 529

நீரிலே நின்று அயர்க்கின்றோம்;
நீதிஅல்லாதன செய்தாய்;
ஊரகம் சாலவும் சேய்த்தால்;
ஊழி எல்லாம் உணர்வானே!
ஆர்வம் உனக்கே உடையோம்;
அம்மனைமார் காணில் ஒட்டார்;
போர விடாய் எங்கள் பட்டைப்
பூங்குருந்து ஏறியிராதே. 530

மாமிமார் மக்களே அல்லோம்;
மற்றும் இங்கு எல்லாரும் போந்தார்;
தூமலர்க் கண்கள் வளரத்
தொல்லை இராத் துயில்வானே!
சேமமேல் அன்று இது சால,
சிக்கென நாம் இது சொன்னோம்;
கோமள ஆயர் கொழுந்தே!
குருந்திடைக் கூறை பணியாய். 531

கஞ்சன் வலைவைத்த அன்று
காரிருள் எல்லிற் பிழைத்து,
நெஞ்சு துக்கம் செய்யப் போந்தாய்
நின்ற இக் கன்னியரோமை;
அஞ்ச உரப்பாள் அசோதை,
ஆணாட விட்டிட்டு இருக்கும்;
வஞ்சகப் பேய்ச்சிபால் உண்ட
மகிமையிலீ! கூறை தாராய். 532

கன்னியரோடு எங்கள் நம்பி
கரிய பிரான் விளையாட்டைப்
பொன் இயல் மாடங்கள் சூழ்ந்த
புதுவையர்கோன் பட்டன் கோதை
இன்னிசையால் சொன்ன மாலை
ஈரைந்தும் வல்லவர் தாம் போய்
மன்னிய மாதவனோடு
வைகுந்தம் புக்கு இருப்பாரே. 533

## கூடல் இழைத்தல்

தெள்ளியார் பலர் கைதொழும் தேவனார்
வள்ளல் மாலிருஞ்சோலை மணாளனார்
பள்ளி கொள்ளும் இடத்து அடி கொட்டிடக்
கொள்ளுமாகில், நீ கூடிடு கூடலே. 534





ஊழிக்காலத்தில் உலகங்களைக் காக்கும் உணர்வுடையவனே! நாங்கள் தண்ணீரிலே நின்று தளர்ந்து விட்டோம். நியாய மற்றவற்றைச் செய்யும் உன்னிடமிருந்து தப்பி ஓட, எங்கள் ஊரும் வீடும் மிகவும் தூரத்தில் உள்ளன. ஐயோ! நீ எங்களைத் துன்புறுத்தினாலும், நாங்கள் உன்னிடத்தே அன்புடையோம். நாங்கள் உன்னைச் சேர்ந்திருப்பதைத் தாய்மார்கள் அறிந்தால் ஒப்புக் கொள்ளார். எங்கள் பட்டைத்தந்துவிடு. பூங்குருந்தில் ஏறிக் கொண்டு தீமைகளைச்செய்யாதே. 530

முன்னிரவெல்லாம் வம்புசெய்து விட்டுப் பின்னிரவில் தூங்கும் பூப்போன்ற கண்களுடைய கண்ணா! ஆய்ப்பாடியிலுள்ள மாமிமார்களும் தாய்மார்களும் மற்றவர்களும் இங்கு வந்திருக் கிறார்கள். நீ செய்யும் தீம்பு தகுதி அற்றது. இடையர்களின் தலைவனான இளங்கொழுந்தே! உண்மையாக, உறுதியுடன் கூறுகிறோம். குருந்தமரத்து ஆடைகளைத் தந்துவிடு. 531

கம்சன் உன்னை அழிக்க வலை வீசிய காலத்தில், இருண்ட இரவில் இடம் மாறிப் பிழைத்தாய். இன்றோ, தண்ணீரில் நிற்கும் எங்கள் நெஞ்சம் வருந்தும்படி செய்கிறாய். யசோதைப் பிராட்டியோ நீ பயப்படும்படி அதட்டாமல், தீமையிலே வளரும்படி விட்டு விட்டாள். வஞ்சனையாய் வந்த பூதனைப் பேயின் பாலை அருந்தி அவள் உயிரை உறிஞ்சியவனே! வெட்க மற்றவனே! சேலைகளைத்தா. 532

எங்கள் தலைவனான, கரிய பிரான் கண்ணன், கோபியர்களுடன் செய்த விளையாட்டை, ஆண்டாள் இனிய இசைப்பாட்டாக அருளினாள். பொன்பூசிய மாடங்கள் உள்ள புதுவை நகர்க்கோன் பட்டர்பிரானின் திருமகளான கோதை அருளிய இவற்றைக் கற்க வல்லவர்கள் வைகுந்தம் புகுந்து மாதவனுடன் கூடி இருப்பார்கள். 533

## கூடல் இழைத்தல்

கூடலே! என்றும் தெளிந்திருக்கும் நித்திய சூரிகள் பலரால் கைகள் ஆர வணங்கப்பெறும் இறைவனான திருமால், வள்ளலாக, திருமாலிருஞ் சோலைமலையிலே எழுந்தருளி உள்ளான். இந்த அழகிய மணவாளன் பள்ளி கொள்ளும் இடமாகிய திருவரங்கத்தே அவன் திருவடிகளை நான் பிடிக்கும் படியாக, அருள்வானோ! அவன் திரு உள்ளம் பற்றுவான் என்றால் நீ, கூடிக்காட்ட வேண்டும். (வட்டச் சுழிகள் இரட்டைப் படையாய் வருவது 'கூடும்' என்பதாகும்) 534

காட்டில் வேங்கடம் கண்ணபுர நகர்
வாட்டம் இன்றி மகிழ்ந்து உறை வாமனன்
ஓட்டரா வந்து என் கைப் பற்றித் தன்னொடும்
கூட்டு மாகில், நீ கூடிடு கூடலே. 535

பூ மகன் புகழ் வானவர் போற்றுதற்கு
ஆமகன் அணி வாணுதல் தேவகி
மா மகன் மிகு சீர் வசுதேவர்தம்
கோமகன் வரில், கூடிடு கூடலே. 536

ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிட,
பூத்த நீள் கடம்பு ஏறிப் புகப் பாய்ந்து
வாய்த்த காளியன்மேல் நடம் ஆடிய
கூத்தனார் வரில், கூடிடு கூடலே. 537

மாட மாளிகை சூழ் மதுரைப் பதி
நாடி, நம் தெருவின் நடுவே வந்திட்டு,
ஓடை மா மத யானை உதைத்தவன்
கூடுமாகில், நீ கூடிடு கூடலே. 538

அற்றவன் மருதம் முறிய நடை
கற்றவன் கஞ்சனை வஞ்சனையிற்
செற்றவன் திகழும் மதுரைப் பதிக்
கொற்றவன் வரில், கூடிடு கூடலே. 539

அன்று இன்னாதன செய் சிசுபாலனும்
நின்ற நீள் மருதும் எருதும் புள்ளும்
வென்றி வேல் விறல்கஞ்சனும் வீழ முன்
கொன்றவன் வரில், கூடிடு கூடலே. 540

ஆவல் அன்பு உடையார் தம் மனத்து அன்றி
மேவலன் விரை சூழ் துவராபதிக்
காவலன் கன்று மேய்த்து விளையாடும்
கோவலன் வரில், கூடிடு கூடலே. 541





கூடலே! வாமனனாக அவதாரம் செய்தவன் காட்டையே வாழிடமாகக் கொண்டு திருவேங்கடத்திலும் திருவாய்ப்பாடி போன்ற கண்ணபுர நகரிலும் குறைவில்லாமல் ஆனந்தமும் அன்பும் மேலிட எழுந்தருளி உள்ளான். இவன் ஓடி வந்து என் கை பற்றி அணைத்துக் கொள்வானாகில் நீ கூடுக. 535

தாமரையில் தோன்றிய பிரமனும் புகழுடைய நித்திய சூரிகளும் போற்றத் தகுந்த உபயவிபூதி நாயகன், ஒளி முகம் பெற்ற தேவகிக்கும் நற்குணங்கள் உடைய வசுதேவர்க்கும், ஆளுமை கூடிய மாண்புடன் மகனாகப் பிறந்தான். இக் கண்ணன் என்னை அணைக்க வருவானாகில் கூடலே! நீ கூடிடு. 536

பயமே இயல்பான இடைச்சிகளும் அச்சமே அறியாத ஆயர்களும் பயப்படப் பூத்துயர்ந்த கடம்ப மரத்தின் மேலிருந்து, நீருக்குள் புகும்படி பாய்ந்து, பேறு பெற்ற காளிய நாகத்தின் மேல் ஆடிய நடனக்கலைஞன், கண்ணபிரான் வரக்கூடுமாகில் கூடலே நீ, கூடிடு. 537

நெற்றிப் பட்டத்தை உடைய மதம் மிகுந்த குவலயாபீட யானையை உதைத்துக் கொன்ற கண்ணன் மாட மாளிகை சூழ்ந்த மதுரை நகரிலே நம் வீடு தேடி, தெருவின் நடுவே வந்து நம்மோடு கூடுவானாகில், கூடலே! நீ கூடிடு. 538

என்னை அடையத் தீர்ந்த முடிவுடன் அவதரித்து, மருத மரங்கள் முறிந்து விழும்படித் தவழ்ந்த நடை கற்று, வஞ்சகக் கஞ்சனை வஞ்சனையாலேயே அழித்து, மதுரை நகருக்கு அரசன் போல் திகழ்ந்த கண்ண பிரான் வருவானாகில், கூடலே! நீ கூடிடு. 539

கூடலே! முன்பொருகால், தீமைகளையே செய்த சிசுபாலனும், இரட்டை மருதமரங்களாய்ப் பாதையில் நின்ற அசுரர்களும் ஏழு காளைகளும், பறவை வடிவில் நின்ற பகாசுரனும், வெற்றிவேல் தாங்கிய பலம் மிகுந்த கம்சனும் அழியும்படி, வதம் செய்த கண்ணன் வரக்கூடுமாகில், கூடிடுக. 540

ஆவலையும் அன்பையும் உடையவர்களுடைய உள்ளத்தை அன்றி வேறுஎங்கும் தங்காத கண்ணன் மணம் சூழ்ந்த துவாரகை அரசன் ஆவான். கன்றுகளை மேய்த்துக் காத்து விளையாடிய கோபாலனாகிய இக் கண்ணன் வருவானாகில், கூடலே! நீ கூடிடு. 541

கொண்ட கோலக் குறள் உருவாய்ச் சென்று
பண்டு மாவலிதன் பெரு வேள்வியில்
அண்டமும் நிலனும் அடி ஒன்றினால்
கொண்டவன் வரில், கூடிடு கூடவே. 542

பழகு நான்மறையின் பொருளாய் மதம்
ஒழுகு வாரணம் உய்ய அளித்த எம்
அழகனார் அணி ஆய்ச்சியர் சிந்தையுள்
குழகனார் வரில், கூடிடு கூடலே. 543

ஊடல் கூடல் உணர்தல் புணர்தலை
நீடு நின்ற நிறை புகழ் ஆய்ச்சியர்
கூடலைக் குழற் கோதை முன் கூறிய
பாடல் பத்தும் வல்லார்க்கு இல்லை பாவமே. 544

### குயிலை வேண்டுதல்

மன்னு பெரும்புகழ் மாதவன் மா மணி-
வண்ணன் மணிமுடி மைந்தன்
தன்னை உகந்தது காரணமாக என்
சங்கு இழக்கும் வழக்கு உண்டே?
புன்னை குருக்கத்தி ஞாழல் செருந்திப்
பொதும்பினில் வாழும் குயிலே!
பன்னி எப்போதும் இருந்து விரைந்து என்
பவளவாயன் வரக் கூவாய். 545

வெள்ளி விளிசங்கு இடங்கையில் கொண்ட
விமலன் எனக்கு உருக் காட்டான்,
உள்ளம் புகுந்து என்னை நைவித்து நாளும்
உயிர்ப்பெய்து கூத்தாட்டுக் காணும்;
கள்அவிழ் செண்பகப்பூ மலர் கோதிக்
களித்து இசை பாடும் குயிலே!
மெள்ள இருந்து மிழற்றி மிழற்றாது என்
வேங்கடவன் வரக் கூவாய். 546





பூணூல், பவித்திரம், தண்டு ஆகியவற்றுடன் குட்டையான பிரமசாரி வடிவம் கொண்டு முற்காலத்தில், மகாபலியின் வேள்விச்சாலை சென்று மேல் உலகங்களுடன், பூமி, கீழ் உலகங்களையும் ஒவ்வோர் அடியாலே அளந்து நின்ற திரிவிக்கிரமன் வருவானாகில், கூடலே! நீ கூடிடு. 542

எம்பெருமான், எழுதாக் கிளவியாய்ப் பழகி வந்துள்ள அநாதியான நான்கு வேதங்களுக்கு உட்பொருள் ஆனவன்; மதம் பெருக்கும் யானையான கஜேந்திராழ்வானின் துன்பம் நீக்கி உய்வித்தவன்; என்னைத் தன் அழகாலே ஈர்த்து ஈடுபடுத்தியவன்; அழகிய இடைச்சிகளின் உள்ளத்தில் குழைந்திருக்கும் இக்கண்ணன் வரில், கூடலே! நீ கூடிடு 543

ஊடுதல், கூடுதல், குற்றங்களை உணர்த்துதல், முடிவில் கலத்தல் ஆகியவற்றில் பொருந்திய ஆய்ப்பெண்கள் இழைத்த கூடல் பற்றி அழகிய கூந்தலை உடைய ஆண்டாள் அருளினாள். இப்பத்துப் பாசுரங்களையும் ஓதுபவர்களுக்குப் பகவானைப் பிரிந்துபடும் பாவம் இல்லை. 544

### குயிலை வேண்டுதல்

புன்னை, குருக்கத்தி, கோங்கு, செருந்தி ஆகிய மரங்கள் நிறைந்த சோலைப் பொந்துகளில் வாழும் குயிலே! மணிகள் பதித்த திருமுடி சூடியவனாய், நீல நிறத்துடன், நித்திய கல்யாண குணங்களால் புகழ் பெற்ற திருமகள் கேள்வனை ஆசைப்பட்டது காரணமாக, என் கைவளையல்கள் கழன்று போக நியாயம் உண்டோ? என் செய்வேன்? பவளம் போன்ற வாயுடைய என் நாயகன் வரும்படி, எப்போதும் அவன் திருப்பெயர்களைக் கூறி, விரைவில் நீ கூவுவாயாக. 545

தேன் துளிர்க்கும் செண்பகப் பூவைக் கோதி, மகிழ்ந்து இசை பாடும் குயிலே! கைங்கர்யம் செய்ய அழைக்கும் வெண்மையான சங்கினை இடது கையில் ஏந்திய குற்றமற்ற தூயவனான திருமால், தன் உருவத்தை எனக்குக் காட்டவில்லை. ஆனால் அவன் என் இதயம் புகுந்து, என்னைத் தளரச் செய்து, நாள் தோறும் உயிரை உருக்கித் தத்தளிக்கச் செய்து வேடிக்கை பார்க்கிறான். நீ என்னருகே இருந்து மழலைச் சொல்லால் துன்புறுத்தாது, திருவேங்கடவன் வரும்படி கூவாய். 546

மாதலி தேர் முன்பு, கோல்கொள்ள மாயன்
இராவணன் மேல் சரமாரி
தாய் தலை அற்று அற்று வீழத் தொடுத்த
தலைவன் வர எங்கும் காணேன்;
போது அலர் காவிற் புதுமணம் நாறப்
பொறி வண்டின் காமரம் கேட்டு உன்
காதலியோடு உடன் வாழ் குயிலே! என்
கருமாணிக்கம் வரக் கூவாய். 547

என்பு உருகி இன வேல் நெடுங் கண்கள்
இமை பொருந்தா பல நாளும்,
துன்பக் கடல் புக்கு வைகுந்தன் என்பது ஓர்
தோணி பெறாது உழல்கின்றேன்;
அன்பு உடையாரைப் பிரிவு உறு நோயது
நீயும் அறிதி குயிலே!
பொன் புரை மேனிக் கருளக் கொடி உடைப்
புண்ணியனை வரக் கூவாய். 548

மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத்தூர் உறைவான் தன்
பொன்னடி காண்பது ஓர் ஆசையினால் என்
பொரு கயற் கண்ணிணை துஞ்சா;
இன் அடிசிலொடு பால்அமுது ஊட்டி
எடுத்த என் கோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன், குயிலே!
உலகு அளந்தான் வரக் கூவாய். 549

எத் திசையும் அமரர் பணிந்து ஏத்தும்
இருடீகேசன் வலி செய்ய,
முத்து அன்ன வெண் முறுவல் செய்ய வாயும்
முலையும் அழகு அழிந்தேன் நான்;
கொத்து அலர் காவில் மணித்தடம் கண்படை
கொள்ளும் இளங் குயிலே! என்
தத்துவனை வரக் கூகிற்றியாகில்
தலை அல்லால் கைம்மாறு இலேனே. 550

பொங்கிய பாற்கடல் பள்ளி கொள்வானைப்
புணர்வது ஓர் ஆசையினால், என்
கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்து
ஆவியை ஆகுலம் செய்யும்;
அம் குயிலே! உனக்கு என்ன மறைந்து உறைவு?
ஆழியும் சங்கும் ஒண் தண்டும்
தங்கிய கையவனை வரக் கூவில், நீ
சாலத் தருமம் பெறுதி. 551





பூக்கள் மலர்கிற சோலையில் புதிய வாசனை பரவவும் வரிவண்டுகள் 'காமரம்' என்னும் பண்ணைப் பாடக் கேட்டு, உன் பேடையோடு வாழும் குயிலே! மாதலியானவன் கோல் கொண்டு தேர் ஓட்ட, மாயாவியான இராவணன் மீது அம்பு மழை தொடுத்து அவன் நடுத்தலையை அற்று விழும்படி செய்த தலைவனான எம்பெருமானின் வரவை எத்திசையிலும் காணேனே! நீ, என் கருமாணிக்கம் வரும் படியாகக் கூவ வேண்டும். 547

குயிலே! பிரிவுத் துயரால் எலும்புருகி, வேல் கூட்டம் போன்று நீண்ட என் கண்கள் தூக்கமில்லாமல் மூடவே இல்லை. பல நாள்களாய்த் துன்பமாகிய கடலுள் அழுந்திய நான் வைகுண்டநாதனாகிய தோணியை அடையப் பெறாமல் பிரிவுக் கடலில் தடுமாறுகிறேன். காதல் உடையார்கள், பிரிவால் அடையும் துன்பத்தை நீ அறிய மாட்டாயா? அழகான திருமேனி உடைய, என் நாயகன், கருடக் கொடி பெற்ற புண்ணிய மூர்த்தியை இங்கே வரும்படி கூவ வேண்டும். 548

மெல்ல நடை போடும் அன்னங்கள் ஓடி விளையாடும் ஸ்ரீ வில்லிபுத்தூரில் எழுந்தருளி உள்ளவனின் அழகிய திருவடிகளைக் காணும் ஆசை யால் என் கயல் மீன்கள் போன்ற கண்கள் தூங்கவே இல்லை. ஓ! குயிலே! உலகத்தை அளந்த அந்தத் திரிவிக்கிரமன் இங்கே வரும்படி நீ கூவு. நீ அவ்வாறு கூவினால், சோறும் பாலும் ஊட்டி வளர்த்த என் அழகிய கிளியை உன்னுடன் நட்புறச் செய்வேன். 549

பூக்கள் கொத்தாக மலரும் சோலையில், அழகிய இடத்தே உறங்கும் குயிலே! அகங்காரம் தொலைந்த தேவர்கள், எத்திசையும் வணங்கித்துதிக்கும் பெருமை உடைய இருடீகேசனான பகவான், தன்னை எனக்குக் காட்டாமல் துன்பம் செய்கிறான். அதனால் நான், முத்துப்போன்ற பற்களும், சிவந்த உதடுகளும் முலைகளும் அழகு இழக்கும்படி, மாறுபட்டேன். தான் உளன் ஆகில் நான் உள்ளவளாகும் படியாய்ச் செய்யும் மூல காரணனை இங்கேவரும்படி கூவுவாய் ஆனால், என் ஆயுள் முழுவதும் என் தலையால் உன்னை வணங்கும் பிரதிஉபகாரம் உடையேன். 550

அழகிய குயிலே! அலைபொங்கும் பாற்கடலில் பள்ளி கொண்டவனைச் சேரும் ஆசையால், என் மார்புகள் பருத்துக்களித்து, உயிரை உருக்கித் துன்புறுத்துகின்றன. வெயில் படாமல் நிழலிலே மறைந்திருப்பதால், குயிலே! உனக்கு என்ன பயன்? சங்கு, சக்கரம், கதை, தாங்கிய கைகள் உடைய பகவானை இங்கே வரும்படி நீ கூவினால், மிகவும் தர்மம் செய்தாய் ஆவாய். 551

சார்ங்கம் வளை வலிக்கும் தடக்கைச்
சதுரன் பொருத்தம் உடையன்;
நாங்கள் எம் இல்லிருந்து ஒட்டிய கச்சங்கம்
நானும் அவனும் அறிதும்;
தேம் கனி மாம் பொழில் செந்தளிர் கோதும்
சிறு குயிலே! திருமாலை
ஆங்கு விரைந்து ஒல்லைக் கூகிற்றியாகில்
அவனை நான் செய்வன காணே. 552

பைங்கிளி வண்ணன் சிரீதரன் என்பது ஓர்
பாசத்து அகப்பட்டிருந்தேன்;
பொங்குஒளி வண்டுஇரைக்கும் பொழில்வாழ் குயிலே
குறிக்கொண்டு இதுநீகேள்;
சங்கொடு சக்கரத்தான் வரக் கூவுதல்
பொன்வளை கொண்டு தருதல்
இங்கு உள்ள காவினில் வாழக் கருதில்
இரண்டத்து ஒன்றேல் திண்ணம் வேண்டும். 553

அன்று உலகம் அளந்தானை உகந்து
அடிமைக்கண் அவன் வலி செய்ய,
தென்றலும் திங்களும் ஊடறுத்து என்னை
நலியும் முறைமை அறியேன்;
என்றும் இக் காவில் இருந்திருந்து என்னைத்
ததைத்தாதே நீயும் குயிலே!
இன்று நாராயணனை வரக் கூவாயேல்,
இங்குத்தை நின்றும் துரப்பன். 554

விண் உற நீண்டு அடி தாவிய மைந்தனை
வேற்கண் மடந்தை விரும்பிக்
கண்ணுற என் கடல்வண்ணனைக் கூவு,
கருங்குயிலே! என்ற மாற்றம்
பண் உறு நான்மறையோர் புதுவைமன்னன்
பட்டர்பிரான் கோதை சொன்ன
நண் உறு வாசக மாலை வல்லார் நமோ
நாராயணாய என்பாரே. 555

## கனவிற் கண்ட திருமணத்தைத் தோழியிடம் கூறுதல்

வாரணம் ஆயிரம் சூழ வலஞ்செய்து
நாரணன் நம்பி நடக்கின்றான் என்று எதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறம் எங்கும்
தோரணம் நாட்டக் கனாக் கண்டேன், தோழீ! நான். 556





இனிய பழங்கள் உள்ள மாந்தோப்பிலே சிவந்த தளிர்களைக் கோதும் சிறிய குயிலே! சார்ங்க வில்லை வளைத்திழுக்கும் வலிய கைகளுடைய திருமால் வீரத்தில் காட்டும் சாமர்த்தியம் போலவே. காதல் ஊடலில் திறமை உடையவன். “பிரிந்தால் உயிர் தரியோம்” என்று எங்களுக்குள் நாங்கள் செய்துகொண்ட ரகசிய வாக்குறுதியை மற்றவர் அறியார்கள். ஆகவே அவனை நீ சீக்கிரம் கூவுவாயாகில், அவன் இங்கு வந்தபின் நான் படுத்தும் பாட்டைக் காண்பாய். 552

ஒளி பொங்கும் வண்டுகள் ஒலித்து இசைபாடும் சோலையில் வாழும் குயிலே! நான் கூறுவதைக் கவனமாகக் கேள். பசுங்கிளி நிறம் உடைய ‘ஸ்ரீதரன்’ என்னும் வலையில் நான், சிக்கிக்கிடக்கிறேன். இச்சோலையில் இனியும் நீ வாழ வேண்டும் என்று எண்ணினால், சங்குசக்கரப் பெருமானை இங்குவரும்படி கூவி, என் கழன்ற பொன் வளையைத் தங்கும்படி செய். அல்லது அவன் உகந்த ஆபரணங்களைக் கொண்டுவந்து கொடு. இவை இரண்டில் ஒன்றாவது கட்டாயம் நீ செய்ய வேண்டும். 553

மகாபலி செருக்கில் மேலோங்கிய காலத்தில், தன்னை விரும்பாத அவன் தலையில், திருமால் தன் திருவடிகளை வைத்து உலகங்களை அளந்தான். பெற்றால் அன்றி உயிர் வாழ முடியாத கைங்கர்யத்தை அன்றோ இவன் விஷயத்தில் நான் ஆசைப்பட்டேன். அவனோ வஞ்சனை செய்து விட்டான். தென்றலும் சந்திரனும் என்னைப் பிளந்து துன்புறுத்தும் நியாயத்தை அறியேன். ஓ! குயிலே! நீ என்றும் இச்சோலையில் இருந்து இடைவிடாமல் என்னைத் துன்புறுத்தாதே. ஸ்ரீமந்நாராயணன் இங்கே வரும்படி இன்று கூவா விட்டால் இங்கிலிருந்து உன்னைத் துரத்தி விடுவேன். 554

வேல் போன்ற கண்ணழகும் பெண்மையும் நிரம்பிய ஆண்டாள், வானில் திருவடி நீட்டி உலகளந்த எம்பெருமானை விரும்பி “கருங் குயிலே! என் கடல் வண்ணனை வரும்படி கூவு!” என்று பாடினாள். இசை யுடன் நான்கு வேதங்களை ஓதும் அந்தணர் வாழும் ஸ்ரீவில்லிபுத்தூர் பட்டர்பிரானின் மகளான கோதை அருளிய இவ்வாசகங்களை ஓதுபவர்கள் ‘நமோ நாராயணாய’ என்று கைங்கர்யம் செய்வர். 555

## கனவிற் கண்ட திருமணத்தைத் தோழியிடம் கூறுதல்

தோழியே! கல்யாண குணங்கள் நிறைந்த ஸ்ரீமந்நாராயணன், ஆயிரம் யானைகள் சூழ்ந்துவர, ஊர்வலமாக வருவதால் எதிரே, பொன் மயமான பூரண கும்பங்கள் வைத்து, நகர் முழுவதும் தோரணங்கள் நாட்டியிருப்பதாக, நான் கனவு கண்டேன். 556

நாளை வதுவைமணம் என்று நாள் இட்டு,
பாளை கமுகு பரிசு உடைப் பந்தற் கீழ்
கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர்
காளை புகுதக் கனாக் கண்டேன், தோழீ! நான். 557

இந்திரன் உள்ளிட்ட தேவர்குழாம் எல்லாம்
வந்திருந்து என்னை மகட் பேசி, மந்திரித்து,
மந்திரக் கோடி உடுத்தி, மணமாலை
அந்தரி சூட்டக் கனாக் கண்டேன், தோழீ! நான். 558

நால்திசைத் தீர்த்தம் கொணர்ந்து, நனி நல்கி,
பார்ப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்து ஏத்தி,
பூப் புனை கண்ணிப் புனிதனோடு என்தன்னைக்
காப்புநாண் கட்டக் கனாக் கண்டேன். தோழீ! நான். 559

கதிர்ஒளித் தீபம் கலசம் உடன் ஏந்திச்
சதிர் இள மங்கையர் தாம் வந்து எதிர்கொள்ள,
மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டு, எங்கும்
அதிரப் புகுதக் கனாக் கண்டேன், தோழீ! நான். 560

மத்தளம் கொட்ட, வரிசங்கம் நின்று ஊத,
முத்து உடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற் கீழ்,
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன், தோழீ! நான். 561

வாய் நல்லார் நல்ல மறை ஓதி, மந்திரத்தால்
பாசிலை நாணல் படுத்துப் பரிதி வைத்து,
காய் சின மா களிறு அன்னான் என் கைப்பற்றி,
தீ வலஞ் செய்யக் கனாக் கண்டேன், தோழீ! நான். 562

இம்மைக்கும் ஏழ் ஏழ் பிறவிக்கும் பற்று ஆவான்,
நம்மை உடையவன், நாராயணன் நம்பி
செம்மை உடைய திருக்கையால் தாள் பற்றி
அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன், தோழீ! நான். 563





தோழீ! நாளைக்குத் திருமண முகூர்த்தம் என்று நிச்சயித்துக் கமுகம் பாளைகளுடன் அலங்காரம் செய்யப்பட்ட பந்தலில் சிங்கம் போன்ற நடையுடன் திருமகள் கேள்வனாகிய கோவிந்தன் என்னும் காளை புகுவதை நான் கனவிற் கண்டேன். 557

இந்திரன் அடக்கமான தேவர்கள் கூட்டம் இங்கு வந்து என்னைத் திருமணப் பெண்ணாகப் பேசிப் பெண் வீட்டாரும் பிள்ளை வீட்டாரும் கலந்து பேசித்தனியாகச் சென்று முடிவு செய்து, வேதமந்திரத்தால் தூய்மையாக்கிய கூறைப் புடவையை உடுத்தச் செய்து துர்க்கையான நாத்தனார், மணம் மிகுந்த மாலையைச் சூட்டக் கனவு கண்டேன் தோழீ! 558

தோழீ! வைதிகச் சடங்குகளில் வல்ல நல்ல அந்தணர்கள் பலரும் நான்கு திசைகளிலிருந்து தீர்த்தங்களைக் கொண்டு வந்து தெளித்து உயர்ந்த குரலில் மணமக்களுக்கு மங்களாசாசனம் செய்ய, பூக்கள் சூடிய புனிதனான கண்ணனுடன் என்னைச் சேர்த்து கங்கணம் கட்டக் கனவு கண்டேன். 559

பருவத்தாலும் வடிவத்தாலும் அழகு மிகுந்த இளம் பெண்கள் சூரிய ஒளி போன்ற மங்கள விளக்கையும் பொன்கலசங்களையும் தங்கள் கைகளில் தாங்கியவர்களாய் எதிரே வரவும், மதுரை மன்னன் கண்ணன் பாதுகைகளை அணிந்தவராய் பூமி அதிர நடந்து புகுவதைக் கனவிற்கண்டேன் தோழீ! 560

தோழீ! மத்தளங்கள் கொட்டவும் வரியுடைய சங்குகளை ஊதவும் மைத்துனமை முறையுள்ள நம்பியான கண்ணன், முத்து மாலைகள் தொங்க விடப்பட்ட பந்தலின் கீழே என் கைகளைப் பற்றி அருளக் கனவு கண்டேன். 561

தோழீ! உச்சரிப்பில் வல்லவர்களான வேதியர்கள் சிறந்த வேதத் தொடர்களை ஓதி, அந்தந்தச் சடங்குகளுக்கு உரிய மந்திரங்களாலே, பசுமையான தர்ப்பைகளையும் ஸமித்துகளையும் பரிதி வைத்து, சினமுடைய மதயானை போன்ற கண்ணன், என் கையைப் பிடித்துக் கொண்டு அக்னியைச் சுற்றி வருவதாகக் கனவு கண்டேன். 562

தோழீ! இப்பிறவிக்கும் மேல் வரும் எல்லாப்பிறவிகளுக்கும் அடைக்கலமான பற்றுக் கோடாய், நமக்கு நாயகத் தலைவனாய் உள்ள நம்பியான நாராயணன், தன் செவ்விய திருக்கையால், எனது கால்களைப்பிடித்து அம்மியின் மேல் எடுத்துவைக்கக் கனவு கண்டேன். 563

வரிசிலை வாள் முகத்து என்னைமார் தாம் வந்திட்டு,
எரிமுகம் பாரித்து, என்னை முன்னே நிறுத்தி,
அரிமுகன் அச்சுதன் கைம்மேல் என் கை வைத்துப்
பொரிமுகந்து அட்டக் கனாக் கண்டேன், தோழீ! நான். 564

குங்குமம் அப்பிக் குளிர் சாந்தம் மட்டித்து,
மங்கல வீதி வலஞ் செய்து, மண நீர்
அங்கு அவனோடும் உடன் சென்று, அங்கு ஆனைமேல்
மஞ்சனம் ஆட்டக் கனாக் கண்டேன், தோழீ! நான். 565

ஆயனுக்காகத் தான் கண்ட கனாவினை
வேயர் புகழ் வில்லிபுத்தூர்க்கோன் கோதை சொல்
தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்
வாயும் நன் மக்களைப் பெற்று மகிழ்வரே. 566

## திருச்சங்கு அடைந்த திருமால் பேறு

கருப்பூரம் நாறுமோ? கமலப் பூ நாறுமோ?
திருப் பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?
மருப்பு, ஒசித்த மாதவன்தன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல், ஆழி வெண்சங்கே! 567

கடலிற் பிறந்து, கருதாது பஞ்சசனன்
உடலில் வளர்ந்துபோய், ஊழியான் கைத்தலத்து
இடரில் குடியேறி, தீய அசுரர்
நடலைப் பட முழங்கும் தோற்றத்தாய், நற் சங்கே! 568

தட வரையின் மீதே சரற்கால சந்திரன்
இடை உவாவில் வந்து எழுந்தாலே போல், நீயும்
வட மதுரையார் மன்னன் வாசுதேவன் கையில்
குடியேறி வீற்றிருந்தாய், கோலப் பெருஞ் சங்கே! 569





தோழீ! வில்லை ஒத்த புருவமும் ஒளி பொருந்திய முகமும் உடைய என் தமையன்மார்கள் வந்து, ஓம குண்ட நெருப்பைப் பாரித்து, என்னை அதன் முன்னே நிறுத்தி, அச்சுத்தனான கண்ணன் கைமேல் என்கையை வைத்துப் பொரிகளை அள்ளி நெருப்பிலே சேர்ப்பதைக் கனவு கண்டேன். 564

தோழீ! ஓமப்புகை முன்னே இருந்த வெப்பம் நீங்கக் குளிர்ந்த குங்குமக் குழம்பை உடம்பில் பூசி, சந்தனத்தை நிறையத்தடவி, அங்குள்ள யானையின் மீது கண்ணனுடன் கூடி அமர்ந்து, திருமண அலங்காரம் மிகுந்த தெருக்களிலே, ஊர்வலம் வந்து, நிறைவாக, வாசனை நீரில், மஞ்சனம் ஆட்டுவதைக் கனவு கண்டேன். 565

வேயர் குலத்தில் புகழ்மிக்க, ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பெரியாழ்வாரின் மகள் கோதை தான் கண்ணனைத்திருமணம் செய்து கொண்டதாகக் கண்ட கனவை, தூய தமிழிலே அருளினாள். இப்பத்துப் பாசுரங்களையும் பயில வல்லவர்கள் நல்லகுணங்களுடைய குழந்தைகளைப் பெற்று மகிழ்வார்கள். பெண்கள் கண்ணனைப் போன்ற கணவன்மார்களைப் பெறுவார்கள். 566

## திருச்சங்கு அடைந்த திருமால் பேறு

கடலிற் பிறந்த வெண்மையான பாஞ்ச சன்னியச்சங்கே! குவலயாபீட யானையின் கொம்பை ஒடித்த கண்ணனின் உதட்டின் சுவையையும், வாசனையையும் பற்றி ஆசையுடன் உன்னிடம் கேட்டறிய விரும்புகிறேன். அவனுடைய, பவள உதடுகளில் பச்சைக் கற்பூர வாசனை வீசுமோ? தாமரைப் பூமணம் வீசுமோ? இனிமையாய் இருப்பது எப்படி என்று எனக்குச் சொல்வாய். 567

நல்ல சங்கே! உப்புக் கடலில் பிறந்த நீ, இறைவனை வெறுத்த பஞ்சசனன் என்னும் அசுரன் உடலுக்குள் வளர்ந்து, இரண்டு இடங்களையும் கருதாமல், ஊழிக்கால நிர்வாகனான திருமாலின் கைத்தலங்களில் குடி புகுந்து, தீய அசுரர்கள் அழிவுபட, முழங்கும் மேன்மை பெற்றாய். 568

உன் அழகுக்கும் மேலே திருமாலுக்கு அழகூட்டும் கோலம் உடைய சங்கே! சரற் காலத்தில் முழு நிலா நாளன்று பெரிய மலையிலே சந்திரன் உதயமாகி ஒளி விடுவது போலே, வட மதுரை அரசன் கண்ணன் திருக்கையில் நீயும் குடி புகுந்து, உன் பெருமைகள் தோற்ற விளங்குகிறாய். 569

சந்திரமண்டலம் போல் தாமோதரன் கையில்
அந்தரம் ஒன்று இன்றி ஏறி, அவன் செவியில்
மந்திரம் கொள்வாயே போலும் வலம்புரியே!
இந்திரனும் உன்னோடு செல்வத்துக்கு ஏலானே. 570

உன்னோடு உடனே ஒரு கடலில் வாழ்வாரை
இன்னார் இனையார் என்று எண்ணுவார் இல்லை காண்;
மன் ஆகி நின்ற மதுசூதன் வாயமுதம்
பன்னாளும் உண்கின்றாய், பாஞ்சசன்னியமே! 571

போய்த் தீர்த்தம் ஆடாதே நின்ற புணர் மருதம்
சாய்த்து ஈர்த்தான் கைத்தலத்தே ஏறிக் குடிகொண்டு,
சேய்த் தீர்த்தமாய் நின்ற செங்கண் மால்தன்னுடைய
வாய்த் தீர்த்தம் பாய்ந்து ஆட வல்லாய், வலம்புரியே! 572

செங்கமல நாண் மலர்மேல் தேன் நுகரும் அன்னம் போல்
செங்கண் கருமேனி வாசுதேவனுடைய
அங்கைத் தலம் ஏறி அன்னவசஞ் செய்யும்
சங்குஅரையா! உன் செல்வம் சால அழகியதே! 573

உண்பது சொல்லில் உலகு அளந்தான் வாயமுதம்;
கண்படை கொள்ளில் கடல்வண்ணன் கைத்தலத்தே;
பெண் படையார் உன் மேல் பெரும் பூசல் சாற்றுகின்றார்;
பண் பல செய்கின்றாய், பாஞ்சசன்னியமே. 574

பதினாறாம் ஆயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
மது வாயில் கொண்டாற்போல் மாதவன் தன் வாயமுதம்
பொதுவாக உண்பதனைப் புக்கு நீ உண்டக்கால்,
சிதையாரோ உன்னோடு? செல்வப் பெருஞ்சங்கே! 575

பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும்
வாய்ந்த பெருஞ் சுற்றம் ஆக்கிய வண்புதுவை
ஏய்ந்த புகழ்ப் பட்டர்பிரான் கோதை தமிழ் ஈரைந்தும்
ஆய்ந்து ஏத்த வல்லார் அவரும் அணுக்கரே. 576





வலம்புரிச்சங்கே! தாமோதரனாகிய கண்ணன் கையில் சந்திர மண்டலம் போல, அவன் நாயகிகள் பிரியாதிருப்பதை ஒத்து, இடைவிடாது இருந்து, அவன் காதுகளில் மந்திரம் பேசுகிறாயா? இத்தகைய உன் செல்வத்துக்கு இந்திரனும் ஒப்பாக மாட்டான். 570

பாஞ்சசன்னியமே! கடலில் உன் இனத்தைச் சேர்ந்த மற்ற சங்குகளை, ‘இவர்கள் இப்படிப்பட்டவர்’ என்று மதித்துப் பேசுவார் இல்லையே! ஒரே கடலில் வாழ்ந்த உங்களுக்குள், நீ ஒருவன் மட்டும், உலக சக்கரவர்த்தியாய் விளங்கும் மதுசூதனின் வாயமுதத்தைப் பல நாள்களாய்ப் பருகுகிறாய். 571

வலம்புரிச் சங்கே! கங்கை முதலிய தீர்த்தங்களில் நீராட மேற்கொள்ளும் துன்பங்கள் இல்லாமலே, அப்பலனைப் பெற்றுவிட்டாய். இரட்டை மருதமரங்களை முறித்துத் தள்ளிய கண்ணனின் கைத்தலத்தில் குடிகொண்ட நீ, அச்செங்கண்மாலின் வாய்த் தீர்த்தத்தில் நீராடும் பேறு பெற்றாயே! 572

சங்குகளின் அரசனான பாஞ்சசன்னியமே! அன்று மலர்ந்த செந்தாமரைப் பூவில் தேனைக்குடிக்கும் அன்னம் போல, சிவந்த கண்களையும் கருத்த உடம்பையும் உடைய கண்ணனின் அழகிய கைத்தலத்தின் மீதேறி உறங்கும் உன் செல்வம் மிகவும் சிறந்தது அன்றோ! 573

பாஞ்சசன்னியமே! உலகளந்த திருமாலின் வாய் அமுதத்தை நீ உண்கிறாய். நீ தூங்கும் இடமோ, கடல் நிறக் கடவுளின் திருக்கை. இப்படி உணவும் உறக்கமும் கண்ணனிடமே உனக்கு வாய்த்ததால், பெண் குலத்தவர் உன்னிடம் பொறாமை கொண்டு பூசல் இடுகிறார்கள். பண்பல்லாத இக்காரியத்தை நீ செய்வது உனக்குத் தகுதியா? 574

பெரும் செல்வம் உடைய சங்கே! பதினாறாயிரம் தேவிமார்கள் கண்ணனின் வாயமுதம் பருகக் காத்திருக்கையில், நீ ஒருவனே புகுந்து, தேனைக்குடிப்பது போல, பருகலாமா? பகவான் அடியவர்கள் யாவருக்கும் பொதுவாக உள்ளதை, நீ மட்டுமே பெறலாமா? மற்றவர்கள் உன்னிடம் வேறு படமாட்டார்களா? 575

அழகிய ஸ்ரீ வில்லிபுத்தூரில் புகழுடைய பட்டர்பிரானுக்கு மகளான கோதை, பாஞ்சசன்னிய சங்கை பத்ம நாபனுடன் கிட்டிய சுற்றமாக்கிப் பாசுரங்கள் அருளினாள். இப்பத்தையும் பயின்று எம்பெருமானைத் துதிப்பவர்கள், அவனுக்கு அணுக்கத் தொண்டர்கள் ஆவார். 576

## மேகவிடுதூது

விண் நீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்!
தெண் நீர் பாய் வேங்கடத்து என் திருமாலும் போந்தானே?
கண்ணீர்கள் முலைக்குவட்டிற் துளி சோரச் சோர்வேனைப்
பெண் நீர்மை ஈடழிக்கும் இது தமக்கு ஓர் பெருமையே? 577

மா முத்தநிதி சொரியும் மா முகில்காள்! வேங்கடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட தாளாளன் வார்த்தை என்னே?
காமத்தீ உள்புகுந்து கதுவப்பட்டு, இடைக் கங்குல்
ஏமத்து ஓர் தென்றலுக்கு இங்கு இலக்காய் நான் இருப்பேனே? 578

ஒளி வண்ணம் வளை சிந்தை உறக்கத்தோடு இவை எல்லாம்
எளிமையால் இட்டு என்னை ஈடழியப் போயினவால்;
குளிர் அருவி வேங்கடத்து என் கோவிந்தன் குணம் பாடி
அளியத்த மேகங்காள்! ஆவி காத்து இருப்பேனே? 579

மின் ஆகத்து எழுகின்றமேகங்காள்! வேங்கடத்துத்
தன் ஆகத் திருமங்கை தங்கிய சீர் மார்வற்கு
என் ஆகத்து இளங்கொங்கை விரும்பித் தாம் நாள்தோறும்
பொன் ஆகம் புல்குதற்கு என் புரிவுடைமை செப்புமினே. 580

வான் கொண்டு கிளர்ந்து எழுந்தமாமுகில்காள்! வேங்கடத்துத்
தேன் கொண்ட மலர் சிதறத் திரண்டு ஏறிப் பொழிவீர்காள்!
ஊன் கொண்ட வள்உகிரால் இரணியனை உடல் இடந்தான்
தான் கொண்ட சரிவளைகள் தருமாகிற் சாற்றுமினே. 581

சலங் கொண்டு கிளர்ந்து எழுந்த தண் முகில்காள்! மாவலியை
நிலங் கொண்டான் வேங்கடத்தே நிரந்து ஏறிப்பொழிவீர்காள்!
உலங்கு உண்ட விளங்கனி போல் உள் மெலியப் புகுந்து என்னை
நலங் கொண்ட நாரணற்கு என் நடலைநோய் செப்புமினே. 582





## மேகவிடுதூது

ஆகாயத்தில் நீலநிற விதானம் விரித்தால் போல் விளங்கும் மேகங்களே! தெளிந்த அருவி நீர் கொட்டும் திருவேங்கடமலைத் திருமால் உங்களுடன் வந்தானோ! பிரிவுத்துயரால், என் மார்பக முனையில் கண்ணீர் சொட்டுமாறு வருந்தி அழுகிற என் பெண்மை யின் உயர்வை அழிக்கிறானே! இச்செயல் அப்பெருமானுக்குப் பெருமை தரக்கூடிய ஒன்றா? 577

உயர்ந்த முத்துக்களையும் பொன்னையும் சொரிகின்ற பெரிய மேகங்களே! நீலநிறமுடைய திருவேங்கடமுடையான் என்னும் மேன்மையன், எனக்கு ஏதாவது செய்தி விடுத்திருக்கிறானா? விரக தாபமான தீ என்னுள் புகுந்து, கவ்வியதால், இரவு நடுயாமத்திலே, வீசும் தென்றல் காற்றின் கொடுமைக்கு இலக்காகி விட்டேன். அதனால் நலிந்து இங்கு இருப்பேனோ? 578

அருள் புரியும் மேகங்களே! பிரிவுத்துயரால், என் ஒளி, நிறம், உறக்கம் யாவும் போய்விட்டன; உதவிற்ற என் எளிமையாலே, நான் குலைந்து போக, அவை நீங்கின. குளிர்ந்த அருவி கொட்டும் திருமலையில் உள்ள என் கண்ணனின் கல்யாண குணங்களைப்பாடி, அதுவே தாரகமாக, நான் என் உயிரைக் காத்திருக்க முடியுமா? 579

உங்கள் உடம்புகளில் மின்னலைத் தோன்றச் செய்யும் மேகங்களே! அந்த எம்பெருமான், என்னை விரும்பி, உடம்போடு மார்பு தழுவுவதற்கு, எனக்கு, ஆசை தினந்தோறும் உள்ளது. திருமகளான மங்கையைத் தன் மார்பிலே, கொண்டுள்ள திருவேங்கட முடையானிடம் இதனைச் சொல்லுங்கள். 580

திருமலையிலே தேன் மலர்கள் சிதறும்படி, கூட்டங் கூட்டமாக வானில் ஏறி மழைபொழிந்து வானையே விழுங்குவது போல் கிளறும் மேகங்களே! தசையுடன் கூடிய கூர்மையான நகங்களால் இரணியன் உடலைக் கீறி எறிந்த எம்பெருமான், என்னிட மிருந்து பறித்த, கை வளைகளை, அவன் திரும்பத் தருவான் ஆகில், என் அவலநிலையை அவனிடம் எடுத்துக் கூறுங்கள். 581

நீரைமொண்டு மேலெங்கும் குளிர்ந்த மேகங்களே! மஹாபலி யிடத்தே சென்று யாசித்துப் பூமியைப் பெற்ற திரிவிக்கிரமன் எழுந்தருளி இருக்கும் திருவேங்கடமலையின் மீதேறிப் பரந்து மழை பொழிபவர்களே! உலங்கு என்னும் ஜாதி வகையைச் சார்ந்த கொசுக்கள் புகுந்து உண்ட விளாம்பழம், ஒன்றமில்லாமற்போவது போல், என்னுள்ளே புகுந்த பிரிவு என்னும் வியாதி, என் நலன்களை உண்டது. இத்துன்பத்தை அவனிடம் தெரிவியுங்கள். 582

சங்க மா கடல் கடைந்தான் தண் முகில்காள்! வேங்கடத்துச்
செங்கண் மால் சேவடிக் கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்:
கொங்கை மேல் குங்குமத்தின் குழம்புஅழியப்புகுந்து ஒருநாள்
தங்குமேல், என் ஆவி தங்கும் என்று உரையீரே. 583

கார் காலத்து எழுகின்ற கார்முகில்காள்! வேங்கடத்துப்
போர் காலத்து எழுந்தருளிப் பொருதவனார் பேர் சொல்லி,
நீர் காலத்து எருக்கின் அம் பழ இலை போல, வீழ்வேனை
வார் காலத்து ஒருநாள் தம் வாசகம் தந்தருளாரே. 584

மத யானை போல் எழுந்த மா முகில்காள்! வேங்கடத்தைப்
பதியாக வாழ்வீர்காள்! பாம்புஅணையான் வார்த்தை என்னே!
கதி என்றும் தான் ஆவான் கருதாது ஓர் பெண்கொடியை
வதை செய்தான் என்னும் சொல் வையகத்தார் மதியாரே? 585

நாகத்தின் அணையானை நன்னுதலாள் நயந்து உரை செய்
மேகத்தை வேங்கடக்கோன் விடு தூதில் விண்ணப்பம்
போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதை தமிழ்
ஆகத்து வைத்து உரைப்பார் அவர் அடியார் ஆகுவரே. 586

### திருமாலிருஞ்சோலைப் பெருமானை வழிபடுதல்

சிந்துரச் செம்பொடிப் போல் திருமாலிருஞ்சோலை எங்கும்
இந்திர கோபங்களே எழுந்தும் பரந்திட்டனவால்;
மந்தரம் நாட்டி அன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட
சுந்தரத் தோளுடையான் சுழலையில் நின்று உய்துங் கொலோ? 587

போர்க்களிறு பொரும் மாலிருஞ்சோலை அம் பூம்புறவில்
தார்க்கொடி முல்லைகளும் தவள நகை காட்டுகின்ற;
கார்க்கொள் பிடாக்கள் நின்று கழறிச் சிரிக்கத் தரியேன்;
ஆர்க்கு இடுகோ? தோழீ! அவன் தார் செய்த பூசலையே. 588





சங்குகள் உள்ள கடலைக் கடைந்தவனின் திருவேங்கட மலையில் பரவும் மேகங்களே! சிவந்த கண்களுடைய திருமாலின் அடிக் கீழ்ச்செய்யும் விண்ணப்பத்தை அவனிடம் கூறுங்கள். அவன் அடியேனை ஒரு நாளாகிலும் அணைத்து, என் மார்பிற் பூசப்பட்ட குங்குமக் குழம்பு அழியுமாறு செய்தால் என் உயிர் நிலைக்கும். 583

திருவேங்கட மலையில் எழுந்த மழைக்காலக் கருமேகங்களே! அடியார்களுக்காகப் போர் செய்து வெற்றி பெறும் பகவானின் திருநாமங்களை நான் பலபடியாகச் சொல்லி மழைக்காலத்தில் பழுத்து விழும் எருக்கம்பூப் போலத் தளர்ந்து விழுகிறேன். பிரிவால் நீளும் இக்காலத்தில் அவன் ஒரு நாளாவது என்னுடன் பேசமாட்டானா? 584

திருவேங்கடமே வாழிடமாகக் கொண்டு மதயானை போல் கிளரும் மேகங்களே! ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டவனின் பேச்சுத்தான் யாது? எனக்குக் கதியாக உள்ள அவன், தன்னைக் காப்பவனாகக் கருதவில்லையா? “இவன் ஒரு பெண் கொடியை வதைத்தான்” என்னும் பேச்சை உலகோர்கள் மதிக்க மாட்டார்களோ? 585

பக்தியில் தவறாத புதுவைக் கோன் பெரியாழ்வாரின் மகளாய், அழகிய முகமுடைய ஆண்டாள், ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்ட திருவேங்கடமுடையானை ஆசைப்பட்டு மேகத்தைத் தூது விட்டாள். இப்பாசுரங்களை மனத்துக்கொண்டு ஓதுபவர்கள் திருமாலுக்கு அடிமை ஆவார்கள். 586

### திருமாலிருஞ்சோலைப் பெருமானை வழிபடுதல்

திருமாலிருஞ் சோலைமலையில் எங்கும் பட்டுப்பூச்சிகள் சிவந்த சிந்தூரப் பொடிபோல் மேலெழுந்து பரவியுள்ளன. மந்தர மலையை நாட்டிப்பாற் கடலைக் கடைந்து, இனிய அமுதம் போன்ற திருமகளைக் கைப்பிடித்த அழகிய தோளுடைய எம் பெருமான் வீசிய வலையிலிருந்து பிழைப்பேனோ? 587

யானைகள் தங்களுக்குள் போரிடும் திருமாலிருஞ் சோலை மலை அடிவாரத்தில், அழகரின் புன்முறுவலைக் காட்டும் முல்லைகளுடன் படாக்கொடிகளும் பூத்துச் சிரிக்கின்றன. அவைகளின் ஏளனப் பேச்சைத் தாங்க முடியவில்லை. தோழீ! அவன் தோள் மாலைக்கு ஆசைப்பட்ட நான் படும் துயரை யாரிடம் கூறுவேன்? 588

கருவிளை ஒண் மலர்காள்! காயா மலர்காள்! திருமால்
உருஒளி காட்டுகின்றீர், எனக்கு உய் வழக்கு ஒன்று உரையீர்;
திரு விளையாடு திண் தோள் திருமாலிருஞ்சோலை நம்பி
வரிவளை இற் புகுந்து வந்திபற்றும் வழக்கு உளதே? 589

பைம்பொழில் வாழ் குயில்காள்! மயில்காள்! ஒண் கருவிளைகாள்!
வம்பக் களங்கனிகாள்! வண்ணப் பூவை நறுமலர்காள்!
ஐம் பெரும் பாதகர்காள்! அணி மாலிருஞ்சோலை நின்ற
எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கு என் செய்வதே? 590

துங்க மலர்ப் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற
செங்கண் கருமுகிலின் திருவுருப் போல் மலர்மேல்
தொங்கிய வண்டினங்காள்! தொகு பூஞ்சுனைகாள்! சுனையில்
தங்கு செந்தாமரைகாள்! எனக்கு ஓர் சரண் சாற்றுமினே. 591

நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்;
நூறு தடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்;
ஏறுதிருவுடையான் இன்றுவந்து இவைகொள்ளுங்கொலோ? 592

இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப் பெறில், நான்
ஒன்று நூறாயிரமாக் கொடுத்துப் பின்னும் ஆளும் செய்வன்;
தென்றல் மணம் கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள்
நின்றபிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படிலே. 593

காலை எழுந்திருந்து கரிய குருவிக் கணங்கள்
மாலின் வரவு சொல்லி மருள் பாடுதல் மெய்ம்மைகொலோ?
சோலைமலைப் பெருமான் துவாராபதி எம்பெருமான்
ஆலின்இலைப் பெருமான் அவன் வார்த்தை உரைக்கின்றதே. 594

கோங்கு அலரும் பொழில் மாலிருஞ்சோலையிற் கொன்றைகள்மேல்
தூங்கு பொன் மாலைகளோடு உடனாய் நின்று தூங்குகின்றேன்;
பூங்கொள் திருமுகத்து மடுத்து ஊதிய சங்கு ஒலியும்
சாா்ங்கவில் நாண்ஒலியும் தலைப்பெய் வது எஞ்ஞான்று கொலோ? 595





அழகான கருவிளைப் பூக்களே! காயாம் பூக்களே! பெரிய பிராட்டியாருடன் கூடியுள்ள பகவானின் நிறத்தைக் காட்டி என்னை வருந்தச்செய்கிறீர்களே! நான் உய்வு பெற வகை சொல்லல் ஆகாதோ? திருமகள் விளையாடும் திண்மையான தோள்களை உடைய அழகர் என் வீட்டில் புகுந்து என் வளைகளைப் பலாத்காரமாக கொண்டு போவது நேர்மையா? 589

பரந்த சோலையில் வாழும் குயில்களே! மயில்களே! காக்கணம் பூக்களே! புதிய களாப் பழங்களே! அழகும் மணமும் உள்ள காயாம் பூக்களே! நீங்கள் ஒன்று சேர்ந்து ஐந்து பெரும் பாதகர்களைப் போலே என்னை நலிகிறீர்களே! திருமாலிருஞ்சோலை மலை அழகரின் நிறத்தை ஏன் நீங்கள் ஏறிட்டுக் கொண்டீர்கள்? 590

ஓங்கிய பூஞ்சோலைகள் சூழ்ந்த திருமாலிருஞ் சோலையில் நின்ற, சிவந்த கண்ணுடைய மேகம் போன்ற அழகரின் வடிவத்தை ஒத்துப் பூக்கள் மேல் தொங்கித் தங்கும் வண்டுக் கூட்டங்களே! அருகருகே இருக்கும் சுனைகளே! சுனைகளில் உள்ள தாமரைப் பூக்களே! எனக்குப் புகலிடம் காட்டுங்கள். 591

மணம் மிகுந்த திருமாலிருஞ் சோலைமலையில் எழுந்தருளி உள்ள குணங்கள் நிறைந்த அழகருக்கு, அடியேன் நூறு தடாக்களில் வெண்ணெய்யையும். இன்னும் நூறு தடாக்களில் அக்கார அடிசிலை யும் மனத்தாலும் வாயாலும் காணிக்கை ஆக்குகிறேன். மார்பில் ஏறி அமரும் திருமகளின் நாதன் இன்று இவற்றைக் கொள்வானோ? 592

மணம் கலந்து, தென்றல் வீசும் திருமாலிருஞ் சோலை மலைப் பெருமாள் இன்று வந்து, காணிக்கையாக்கிய, வெண்ணெய்யையும் அக்கார அடிசிலையும் அமுது செய்வானாகில் அடியேன் நெஞ்சில் வசிப்பதாக எண்ணுவேன். மேலும் நூறாயிரம் தடாக்களாக அமுது சமர்பிப்பேன். பின்னும் கைங்கர்யங்கள் செய்வேன். 593

கறுத்த குருவிக்கூட்டங்கள், காலையில் எழுந்து, திருமாலின் வருகையைக் கூறி 'மருள்' என்னும் பண் பாடும். இவை, "சோலை மலைப்பெருமான்", "துவாரகாபுரி நாதன்", "ஆலிலையில் வளர்ந்தவன்" என்று பேசும். 594

கோங்குமரங்கள் பூக்கும் திருமாலிருஞ் சோலையில் கொன்றை மரங்கள் மேல் தொங்கும் அழகிய பொன் நிற மாலை களுடன் நானும் பயனற்றுக் கிடக்கிறேன். திருமால் தன் அழகிய, பவள வாயில் வைத்து ஊதும் சங்கொலியையும் சார்ங்க வில்லின் ஓசையையும் கேட்கப்பெறுவது என்றைக்கோ? 595

சந்தொடு காரகிலும் சுமந்து தடங்கள் பொருது
வந்திழியும் சிலம்பாறு உடை மாலிருஞ்சோலை நின்ற
சுந்தரனைச் சுரும்பு ஆர் குழற் கோதை தொகுத்து உரைத்த
செந்தமிழ் பத்தும் வல்லார் திருமாலடி சேர்வர்களே. 596

## பிரிவுத்துயரில் வருந்தித்தரித்தல்

கார்க்கோடற் பூக்காள்! கார்க்கடல் வண்ணன் என்மேல் உம்மைப்
போர்க் கோலம் செய்து போர விடுத்தவன் எங்கு உற்றான்?
ஆர்க்கோ இனி நாம் பூசல் இடுவது? அணி துழாய்த்
தார்க்கு ஓடும் நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேன், அந்தோ! 597

மேல்தோன்றிப் பூக்காள்! மேல்உலகங்களின் மீது போய்
மேல் தோன்றும் சோதி வேத முதல்வர் வலங்கையில்
மேல் தோன்றும் ஆழியின் வெஞ்சுடர் போலச் சுடாது, எம்மை
மாற்றோலைப் பட்டவர் கூட்டத்து வைத்துக்கொள்கிற்றிரே? 598

கோவை மணாட்டி! நீ உன் கொழுங்கனி கொண்டு எம்மை
ஆவி தொலைவியேல்; வாயழகர் தம்மை அஞ்சுதும்;
பாவியேன் தோன்றிப் பாம்புஅணையார்க்கும் தம் பாம்புபோல்
நாவும் இரண்டு உள ஆய்த்து நாணிலியேனுக்கே. 599

முல்லைப் பிராட்டி! நீ உன் முறுவல்கள் கொண்டு எம்மை
அல்லல் விளைவியேல்; ஆழி நங்காய்! உன் அடைக்கலம்;
கொல்லை அரக்கியை மூக்கு அரிந்திட்ட குமரனார்
சொல்லும் பொய்யானால், நானும் பிறந்தமை பொய் அன்றே? 600

பாடும் குயில்காள்! ஈது என்ன பாடல்? நல் வேங்கட-
நாடர் நமக்கு ஒரு வாழ்வு தந்தால் வந்து பாடுமின்;
ஆடும் கருளக் கொடி உடையார் வந்து அருள்செய்து
கூடுவராயிடில் கூவி நும் பாட்டுக்கள் கேட்டுமே. 601





சந்தனம், அகில் ஆகியவற்றைச் சுமந்து, கரைகளை அழித்தபடி ஓடும் நூபுர கங்கை என்னும் சிலம்பாறு உள்ள திருமாலிஞ்சோலை அழகரை, வண்டு தங்கும் பூவணிந்த கூந்தலுடைய கோதை பாடினாள். இப்பத்துப் பாசுரங்களை ஓதுபவர்கள் திருமால் அடி சேர்வார்கள். 596

## பிரிவுத்துயரில் வருந்தித்தரித்தல்

கறுமையான காந்தள் மலர்களே! என்னுடன் போர் செய்ய உங்களை அனுப்பிய கறுத்த கடல் நிறத்திருமால் எங்கே இருக்கிறான்? உங்களால் துன்புறும் நான் இனி யாரிடத்தே முறையிடுவது? அவனுடைய திருத்துழாய் மாலைக்கு ஆசைப்பட்ட நெஞ்சுடையேன்! அந்தோ! 597

உயரத்தே பூத்துள்ள காந்தள் பூக்களே! மேலுலகங்களைக் கடந்து, சுயம் ஜோதியாகப் பரமபதத்தில் எழுந்தருளி உள்ள வேத முதல்வனின் வலக்கைச் சக்கரத்தின் ஒளிபோல் எரிக்காமல், என்னை, ஆத்மானுபவத்தை மட்டுமே விரும்பும் மாற்றார்கள் கூட்டத்தில் சேர்ப்பீர்களோ? 598

மணவாட்டி போன்ற கோவைக்கொடியே! உன் கனிந்த பழம் திருமாலின் பவளச் செவ்வாயை எனக்கு நினைவு படுத்தி, என் உயிரைத் தொலக்கிறது. கூடற்காலத்தில், அழகரின் திருவாய்ச் சேர்த்தியின் இனிமையால் என் கண்ணை மூடும்படி அச்சுறுத்தும்; பிரிவிலே விரகத்தாலே பயமுற்றுத்தும். வெட்கம் அற்ற பாவியேனுக்கு ஆதிசேஷனின் நாவுபோல இரண்டு சொற்கள் பிறக்கும்படி ஆயிற்று. 599

கம்பீர நங்கையான முல்லைப்பிராட்டியே! புன்சிரிப்பது போல் மலரும் நீ, உன்னை அடைக்கலம் அடையும் என்னைத் துன்புறுத்தாதே! பெண்மையின் எல்லை கடந்த சூர்ப்பணகையை மூக்கறுத்த இராமபிரான் கூறியவை பொய்யாகி விட்டால், பெரியாழ்வார் மகளாய் நான் பிறந்ததும் பொய் அன்றோ! 600

பாடுகிறகுயில்களே! உங்கள் பாட்டு காதுகளுக்குக் கடூரமாக அன்றோ உள்ளது! திருவேங்கடமுடையான் எனக்கு அவனுடன் இருக்கும் வாழ்வைத் தந்தால், அப்போது வந்து பாடுங்கள். ஆடும் கருடனைக்கொடியாக உடையவன் அருள்காட்டி, இங்கே வந்தால், உங்களை அழைத்து நானே உங்கள் பாடல்களைக் கேட்பேன். 601

கண மா மயில்காள்! கண்ணபிரான் திருக்கோலம் போன்று
அணி மா நடம் பயின்று ஆடுகின்றீர்க்கு அடி வீழ்கின்றேன்;
பணம் ஆடு அரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள்
மணவாளர் நம்மை வைத்த பரிசு இது காண்மினே. 602

நடம் ஆடித் தோகை விரிக்கின்ற மா மயில்காள்! உம்மை
நடம்ஆட்டம் காணப் பாவியேன் நான் ஓர் முதல் இலேன்;
குடம் ஆடு கூத்தன் கோவிந்தன் கோமிறை செய்து எம்மை
உடைமாடு கொண்டான் உங்களுக்கு இனி ஒன்று போதுமே? 603

மழையே! மழையே! மண் புறம் பூசி உள்ளாய் நின்று
மெழுகு ஊற்றினாற் போல ஊற்று நல் வேங்கடத்து உள் நின்ற
அழகப்பிரானார் தம்மை என் நெஞ்சத்து அகப்படத்
தழுவநின்று என்னைத் தகைத்துக்கொண்டு ஊற்றவும் வல்லையே? 604

கடலே! கடலே! உன்னைக் கடைந்து கலக்குஉறுத்து
உடலுள் புகுந்துநின்று ஊறல் அறுத்தவற்கு என்னையும்
உடலுள் புகுந்துநின்று ஊறல் அறுக்கின்ற மாயற்கு என்
நடலைகள் எல்லாம் நாகணைக்கே சென்று உரைத்தியே? 605

நல்ல என் தோழீ! நாகணைமிசை நம்பரர்
செல்வர் பெரியர்; சிறு மானிடவர் நாம் செய்வதென்?
வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை
வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே. 606

## திருவரங்கன் மேலுற்ற காதல்

தாம் உகக்கும் தம் கையிற் சங்கமே போலாவோ
யாம் உகக்கும் எம் கையில் சங்கமும் ஏந்திழையீர்!
தீ முகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்
ஆ! முகத்தை நோக்காரால் அம்மனே! அம்மனே! 607





மயில்கூட்டங்களே! கண்ணனைப் போல் அழகாய் நடனம் ஆடும் உங்கள் அடிகளில் வணங்குகிறேன். ஆடுவதை நிறுத்துங்கள். படமெடுத்து ஆடும் பாம்பைப் படுக்கையாய்ப் பற்பல காலமும் பள்ளிகொள்ளும் அழகிய மணவாளன் என்னை உங்கள் காலைப் பிடிக்கச் செய்து விட்டானே! 602

தோகைகளை விரித்து நடனம் ஆடும் மயில்களே! உங்கள் கூத்தைப் பார்க்க, என்னிடம் எக் கைமுதலும் இல்லை. குடக்கூத்து ஆடிய கோவிந்தன், தான் சுதந்திரன் என்று ஆளுமையைக் காட்டி, என் நாணம், நிறம் முதலிய உடைமைகளைக் கவர்ந்தான். நீங்கள் ஏன் கூத்தாடிக் குலைக்கிறீர்? என்னைத் துன்புறுத்துவது உங்களுக்குத் தகுமோ? 603

ஓ! மேகமே! மேகமே! ஈரமண்ணை வெளியே பூசி, உள்ளே இருக்கும் மெழுகைச் சுடவைத்து வெளியே தள்ளுவது போலே, என்னை அணைத்து, அதற்குப்பின் என் நெஞ்சை உருக்கி, எம்பெருமான் தள்ளி விட்டான். திருவேங்கட நாதன் என் நெஞ்சில் தோன்றுகிறபடியே தழுவிக் கொள்ள என்னை அவருடன் நெருங்கச் செய்து, மழை பொழியவல்லையோ? 604

ஓ! கடலே! கடலே! உன்னைக் கடைந்து கலக்கி, உன்னுள் புகுந்து, பிழிவான அமுதத்தை எடுத்தவன், என் உடம்பிலும் புகுந்து, என் உயிரை அறுக்கிறான். இம்மாயப் பிரானுக்கு என் துன்பங்களைச் சொல்ல, அவன் படுக்கையாகிய ஆதிசேஷனிடத்தே நீ சென்று கூறவேண்டும். 605

என் நல்ல தோழியே! ஆதிசேஷன் மேல பள்ளிகொள்ளும் நம் பெருமாள் திருமகள் கேள்வனான பெரிய செல்வர்; பரம்பொருளானவர். மிகப்பெரியவர். நாமோ மிகவும் தாழ்ந்த மனிதர்கள். ஆகையால் அவனைப் பெற என் செய்வது? ஸ்ரீவில்லிபுத்தூர் பெரியாழ்வாருக்கு உகந்த தேவர் ஆதலால், அவரையே ஆச்சாரியராகக் கொண்டு பெறலாம். அவர் அவனை தம்மால் கூடிய வழிகளாலே அழைத்தால், வரப்பெற்று நாம் அவனை வணங்கப்பெறுவோம். 606

## திருவரங்கன் மேலுற்ற காதல்

ஆபரணங்கள் அணிந்துள்ள மாதர்களே! விருப்பத்துடன் நான் போட்டிருக்கும் கைவளைகள், திருமால் தரித்துக்கொண்டுள்ள தம் கைச்சங்குக்கு ஒவ்வாதோ? தீ உமிழும் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டுள்ள அரங்கநாதன் என் முகத்தைப் பார்த்து அருளவில்லையே ஐயோ! எந்நிலை என்னாவது! அந்தோ! 607

எழில் உடைய அம்மனைமீர்! என் அரங்கத்து இன்னமுதர்,
குழல் அழகர், வாய் அழகர், கண் அழகர், கொப்பூழில்
எழு கமலப் பூ அழகர்; எம்மானார் என்னுடைய
கழல் வளையைத் தாமும் கழல் வளையே ஆக்கினரே. 608

பொங்கு ஓதம் சூழ்ந்த புவனியும் விண்உலகும்
அங்கு ஆதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான்
செங்கோல் உடைய திருவரங்கச் செல்வனார்
எம் கோல்வளையால் இடர் தீர்வர் ஆகாதே? 609

மச்சு அணி மாட மதில் அரங்கர் வாமனனார்
பச்சைப் பசுந் தேவர் தாம் பண்டு நீர் ஏற்ற
பிச்சைக் குறையாகி, என்னுடைய பெய்வளை மேல்
இச்சை உடையரேல், இத் தெருவே போதாரே? 610

பொல்லாக் குறள் உருவாய்ப் பொற் கையில் நீர் ஏற்று
எல்லா உலகும் அளந்து கொண்ட எம்பெருமான்
நல்லார்கள் வாழும் நளிர் அரங்க நாகணையான்
இல்லாதோம் கைப்பொருளும் எய்துவான் ஒத்து உளனே. 611

கைப் பொருள்கள் முன்னமே கைக்கொண்டார், காவிரி நீர்
செய்ப் புரள ஓடும் திருவரங்கச் செல்வனார்:
எப் பொருட்கும் நின்று ஆர்க்கும் எய்தாது நான் மறையின்
சொற்பொருளாய் நின்றார் என் மெய்ப்பொருளும் கொண்டாரே. 612

உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்துப்
பெண் ஆக்கை யாப்புண்டு தாம் உற்ற பேது எல்லாம்
திண்ணார் மதில் சூழ் திருவரங்கச் செல்வனார்;
எண்ணாதே தம்முடைய நன்மைகளே எண்ணுவரே. 613

பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டு ஒரு நாள்
மாசு உடம்பில் நீர் வாரா மானம் இலாப் பன்றி ஆம்
தேசு உடைய தேவர் திருவரங்கச் செல்வனார்
பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே. 614





*அழகான தாய்மார்களே! திருவரங்கன் எனக்கு அமுதம் போன்று இனியவர்; அவருடைய குழல், வாய், கண், கொப்பூழ் ஆகியயாவும் அழகு சிறந்து விளங்குவன. என்னுடைய தலைவரான அவர், என் கைவளையைக் கழன்று போகும் வளையாக ஆக்கிவிட்டார்.* 608

*பொங்குகின்ற கடலாலே சூழப்பட்ட இப்பூவுலகும், பரம பதமும் எந்தக் குறைபாடும் இன்றி அரசாளும் எம்பெருமான். தன் செங்கோலை வழுவாது செலுத்துபவராய்த்திருவரங்கத்தில் பள்ளி கொண்டுள்ளார். அவர் என்னுடைய திண்மையான கோல் வளையையும் கொண்டார்.* 609

*மேல் மாடிகள், மாடங்கள், மதிள்கள் உள்ள திருவரங்கத்தே எழுந்தருளிய அழகிற்சிறந்த தேவரான நம் பெருமாள் மஹாபலி முன்னே வாமனனாகச் சென்று தண்ணீரைக் கையிலேந்தி பிச்சை பெற்ற குறையைத் தீர்ப்பதற்காக, என்கை வளையை விரும்பினாரோ? அவர் இத்தெரு வழியே எழுந்தருளுவாரோ?* 610

*அழகிற் சிறந்த வாமனனாய்க் கையில் நீர் ஏற்று உலகங்கள் அனைத்தையும் அளந்து தனதாக்கிக் கொண்ட எம்பெருமான், நல்லவர்கள் வாழும் குளிர்ந்த திருவரங்கத்தே ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்டுள்ளார். அப்பெரிய பெருமாள் கைம்முதல் எதுவும் இல்லாத அடியேன் உடம்பைக் கொள்ளை கொள்வாரோ?* 611

*வயல்களில் காவிரி நீர் ஓடிப்பாயும் வளம் உள்ள திருவரங்கச் செல்வனார். அடியார்களாகிய யாவர்க்கும் எளியவராய், தன் முனைப் புடைய உயர்ந்தார்க்கு எட்டாதவராய் நான்கு வேதப் பொருளாய் விளங்குபவர். முன்பே அடியேன் கைப்பொருளைக் கொண்டதால், இப்போது உடலாகிய பொருளைக் கொண்டார்.* 612

*திண்மையான மதிள் சூழ்ந்த திருவரங்கச் செல்வனார், இராமனாக அவதரித்த பொழுது சீதாப் பிராட்டியின் திருமேனியில் கட்டுண்டு, உண்ணாமல், உறங்காமல் ஒலிக்கும் கடலில் அணை கட்டித் தாம்பட்ட எளிமை எல்லாம் எண்ணாமல் என் பிரிவுத் துயரைத் தமக்குப் பெருமையாக எண்ணுகிறாரோ?* 613

*பண்டைக் காலத்தில் பாசிபடர்ந்து கிடந்த, பூ மாதாவுக்காக, அழுக்குடம்புடன் தண்ணீர் ஒழுகும் வெட்கமற்ற வராஹவடிவம் கொண்ட திருமால், திருவரங்கத்தில் ஒளி திகழ உள்ளார். இவர் முன்பு 'உன்னைப் பிரியேன்' என்று சொன்னதை மறந்து பிழைக்க முடியவில்லை.* 614

கண்ணாலம் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்
திண் ஆர்ந்து இருந்து சிசுபாலன் தேசு அழிந்து
அண்ணாந்து இருக்கவே, ஆங்கு அவளைக் கைப்பிடித்த
பெண்ணாளன் பேணும் ஊர் பேரும் அரங்கமே. 615

செம்மை உடைய திருவரங்கர் தாம் பணித்த
மெய்ம்மைப் பெரு வார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்;
தம்மை உகப்பாரைத் தாம் உகப்பர் என்னும் சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர் இனியே? 616

கண்ணனிடத்தே கொண்டு விடும்படி வேண்டுதல்

மற்று இருந்தீர்கட்கு அறியலாகா
மாதவன் என்பது ஓர் அன்புதன்னை
உற்று இருந்தேனுக்கு உரைப்பது எல்லாம்
ஊமையரோடு செவிடர் வார்த்தை;
பெற்றிருந்தாளை ஒழியவே போய்ப்
பேர்த்து ஒரு தாய் இல் வளர்ந்த நம்பி
மற் பொருந்தாமற் களம் அடைந்த
மதுரைப் புறத்து என்னை உய்த்திடுமின். 617

நாணி இனி ஓர் கருமம் இல்லை,
நால்அயலாரும் அறிந்தொழிந்தார்;
பாணியாது என்னை மருந்து செய்து
பண்டு பண்டு ஆக்க உறுதிராகில்,
மாணி உருவாய் உலகு அளந்த
மாயனைக் காணில் தலைமறியும்;
ஆணையால் நீர் என்னைக் காக்க வேண்டில்,
ஆய்ப்பாடிக்கே என்னை உய்த்திடுமின். 618

தந்தையும் தாயும் உற்றாரும் நிற்கத்
தனிவழி போயினாள் என்னும் சொல்லு
வந்த பின்னைப் பழி காப்பு அரிது;
மாயவன் வந்து உருக் காட்டுகின்றான்;
கொந்தளம் ஆக்கிப் பரக்கழித்துக்
குறும்பு செய்வான் ஓர் மகனைப் பெற்ற
நந்தகோபாலன் கடைத்தலைக்கே
நள்இருட்கண் என்னை உய்த்திடுமின். 619





ருக்மிணியைக் கைப்பிடிப்பதாகத் திண்ணமாக எண்ணித் திருமண ஏற்பாடுகளைச் செய்து முடித்த சிசுபாலன் ஒளி இழந்து மேலே பார்த்துத் தளர்ந்த நேரத்தில், தன்கையை அவள் பிடிக்குமாறு செய்த கண்ணன், பெண்களைக் காக்கும் பெண்ணாளன் அன்றோ! இப்பெருமான் எழுந்தருளி உள்ள திவ்விய தேசப்பெயர் திருவரங்கம் ஆகும். 615

மனம், மொழி, செயல் மூன்றும் ஒன்றுபட்ட செம்மை உடைய திருவரங்க நாதர் வாயால் அருளிய உண்மைத் தத்துவமான சரம சுலோகச் செய்தியை பெரியாழ்வார் கேட்டு அறிந்து ஊன்றி இருப்பார். 'தம்மை விரும்பியவர்களைத் தாமும் விரும்புவர்' என்னும் உலக மொழி பொய்யாகாதே! நீரே இதைப் பொய்யாக்காமல், என்னை உகக்கவேண்டும். 616

கண்ணனிடத்தே கொண்டு விடும்படி வேண்டுதல்

நான் மாதவனிடத்தே கொண்டுள்ள காதலை எனக்கு எதிராக உள்ள உங்களுக்குக் கூறுவது, ஊமையும் செவிடனும் கூடிப் பேசுவது போல் உள்ளது. உடம்பு நோவப் பெற்ற தேவகியை விட்டு, யசோதைத் தாயிடத்தே வளர்ந்த கண்ணன் மல்யுத்த களத்தில் முற்பட்டு நின்று வென்றான். இந்த நம்பியின் நகரமான மதுரைப் புறத்தே, என்னைக் கொண்டு சேர்த்து விடுங்கள். 617

நான் இனிமேல் வெட்கப் படுவதால் என்ன பயன்? நான்கு பக்கத்து அயலார்களும் என் நிலையைத் தெரிந்து கொண்டார்கள். காலம் தாழ்த்தாமல் இதற்கு வேண்டிய மருந்தென்ன என்று கண்டு என் விரக நிலை, கலவி நிலைக்கு முன்பான கன்னி நிலையை நான் பெறும்படி காக்கவிரும்பினால், என்னை ஆய்ப்பாடிக்குக் கொண்டு சேருங்கள். வாமனனாய் வந்து திரிவிக்கிரமனாக வளர்ந்த அவனைக் கண்டால் நோய் நீங்கும். 618

"தந்தை, தாய், உற்றார்களை விட்டுத்தன் மனம் போனபடி, இவள் தனியாகத் தெருவே புறப்பட்டாள்" என்னும் பழிவந்த பிறகு. அதனைத் தடுக்க முடியாது; நானும் தனி வழியே போகாதிருக்க முடியாது. ஏன்னெனில், மாயன் கண்ணன் வந்து திருமேனி காட்டி இழுக்கிறான். வலுச்சண்டைக் கிழுத்துத் தீம்பு செய்யும் பிள்ளையைப் பெற்ற நந்த கோபருடைய இல்லத்துக்கு என்னை நடு இரவிலே கொண்டு போய்ச் சேருங்கள். 619

அங்கைத் தலத்திடை ஆழி கொண்டான்
அவன் முகத்து அன்றி விழியேன் என்று
செங்கச்சுக் கொண்டு கண் ஆடை ஆர்த்துச்
சிறு மானிடவரைக் காணில் நாணும்;
கொங்கைத்தலம் இவை நோக்கிக் காணீர்,
கோவிந்தனுக்கு அல்லால் வாயில் போகா;
இங்குத்தை வாழ்வை ஒழியவே போய்,
யமுனைக் கரைக்கு என்னை உய்த்திடுமின். 620

ஆர்க்கும் என் நோய் இது அறியலாகாது;
அம்மனைமீர்! துழதிப் படாதே,
கார்க்கடல் வண்ணன் என்பான் ஒருவன்
கைகண்ட யோகம் தடவத் தீரும்;
நீர்க் கரை நின்ற கடம்பை ஏறிக்
காளியன் உச்சியில் நட்டம் பாய்ந்து
போர்க்களமாக நிருத்தம் செய்த
பொய்கைக் கரைக்கு என்னை உய்த்திடுமின். 621

கார்த் தண் முகிலும் கருவிளையும்
காயா மலரும் கமலப் பூவும்
ஈர்த்திடுகின்றன என்னை வந்திட்டு
இருடீகேசன் பக்கல் போகே என்று;
வேர்த்துப் பசித்து வயிறு அசைந்து
வேண்டு அடிசில் உண்ணும் போது ஈது என்று
பார்த்திருந்து நெடு நோக்குக் கொள்ளும்
பத்தவிலோசனத்து உய்த்திடுமின். 622

வண்ணம் திரிவும் மனம் குழைவும்
மானம் இலாமையும் வாய்வெளுப்பும்
உண்ண லுறாமையும் உள் மெலிவும்
ஓத நீர் வண்ணன் என்பான் ஒருவன்
தண்ணந் துழாய் என்னும் மாலை கொண்டு
சூட்டத் தணியும்; பிலம்பன்தன்னைப்
பண் அழியப் பலதேவன் வென்ற
பாண்டிவடத்து என்னை உய்த்திடுமின். 623

கற்றினம் மேய்க்கிலும் மேய்க்கப் பெற்றான்,
காடு வாழ் சாதியும் ஆகப் பெற்றான்,
பற்றி உரலிடை யாப்பும் உண்டான்,
பாவிகாள்! உங்களுக்கு ஏச்சுக் கொலோ?
கற்றன பேசி வசவு உணாதே,
காலிகள் உய்ய மழை தடுத்துக்
கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
கோவர்த்தனத்து என்னை உய்த்திடுமின். 624





அழகான கையிலே சக்கரத்தை ஏந்திய கண்ணனை அன்றி மற்றையோர் முகத்தில் விழியேன் என்று கூறுவது போலக் கச்சால் மறைக்கப் பெற்றுக் கண் மூடியுள்ள என் மார்பகங்கள், சிறிய மனிதர்களைப் பார்த்து வெட்கப்படும். தாய்மார்களே! இவற்றை நீங்களே காணுங்கள். கோவிந்தனை விட்டு மற்றவர் வீட்டுவாசல் போகா. ஆகவே என்னுடைய இங்குள்ள வாழ்வைத் தவிர்த்து, யமுனை நதிக்கரைக்கு இட்டுச் செல்லுங்கள். 620

தாய் மார்களே! என்னுடைய இந்த நோயை எப்படிப் பட்டவர்களாலும் தெரிந்து கொள்ள முடியாது. துயரம் கொள்ளாமல் நீங்கள் என்னை, காளிங்கன் தங்கிய சுனைக் கடம்ப மர உச்சி ஏறிப் பாம்பின் தலையில் நடனம் செய்த இடத்தே, அதன் கரைக்கு அழைத்துச் செல்லுங்கள். நீலக்கடல் நிறப்பெருமான் தன் கைகளால் என்னைத் தடவினால் நோய் போகும்; இதுவே கை மேலே பயன்தரும் வழி ஆகும். 621

கார்காலத்து மேகமும் கருவிளை, காயா, தாமரை ஆகிய பூக்களும் வந்து, இருடீகேசனிடத்தே நீ போ' என்று கட்டாயப் படுத்துகின்றன. கண்ணன் பசு மேய்த்து, வேர்த்துப் பசியாலே வயிறு தளர்ந்து, 'உணவு உண்ணும் நேரம் இது' என்று முனிவர் மனைவிமாரை எதிர்பார்த்திருந்த 'பக்தவிலோசனம்' என்னும் இடத்துக்கு என்னைக் கொண்டு சேருங்கள். 622

மானம் கெட்டவளாய், என் உடல் நிறம் மாற, மனம் தளர்ச்சி யடைய, வாய் வெளுத்து, உணவு வெறுத்து, உள் மெலிந்து போனேன். இவை நீங்க வேண்டுமானால், கடல் வண்ணனின் திருத் துழாய் மாலையைக் கொண்டு வந்து சூட்டுங்கள்; அதனால் நோய் தணியும்; முடியாதாகில், பலதேவன் பிரலம்பாசுரனை எலும்புகள் உடையக்கொன்ற இடமாகிய பாண்டீரம் என்னும் ஆலமரத்தடிக்கு என்னைக் கொண்டு சேருங்கள். 623

கண்ணன் கன்று மேய்ப்பதையே தொழிலாகக் கொண்டான்; காட்டிலே தங்கும் இடையர்கள் சாதியில் பிறந்தான். வெண்ணெயைத் திருடும்பொழுது பிடிபட்டு உரலில் கட்டவும் பட்டான். எளிமையின் எல்லையான இச்செயல்கள், பாவிகளான உங்களால் பழிக்கும்படி ஆயிற்றே! கற்றவற்றைப் பேசி, என்னிடம் வசை வாங்கிக் கொள்ளாமல், பசு மேய்த்து கண்ணன் குடையாகப் பிடித்த கோவர்த்தன மலைக்கு என்னைக் கொண்டு சேருங்கள். 624

கூட்டில் இருந்து கிளி எப்போதும்
கோவிந்தா! கோவிந்தா! என்று அழைக்கும்;
ஊட்டக் கொடாது செறுப்பனாகில்
உலகுஅளந்தான் என்று உயரக் கூவும்;
நாட்டில் தலைப்பழி எய்தி உங்கள்
நன்மை இழந்து தலையிடாதே,
சூட்டு உயர் மாடங்கள் சூழ்ந்துதோன்றும்
துவராபதிக்கு என்னை உய்த்திடுமின். 625

மன்னு மதுரை தொடக்கமாக
வண் துவராபதிதன் அளவும்
தன்னைத் தமர் உய்த்துப் பெய்ய வேண்டித்
தாழ்குழலாள் துணிந்த துணிவை,
பொன் இயல் மாடம் பொலிந்து தோன்றும்
புதுவையர்கோன் விட்டுசித்தன் கோதை
இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை
ஏத்தவல்லார்க்கு இடம் வைகுந்தமே. 626

## கண்ணன் அணிந்த ஆடை முதலியவற்றால் வாட்டத்தைத் தணிக்க வேண்டுதல்

கண்ணன் என்னும் கருந்தெய்வம்
காட்சிப் பழகிக் கிடப்பேனைப்
புண்ணிற் புளிப் பெய்தாற் போலப்
புறம் நின்று அழகு பேசாதே,
பெண்ணின் வருத்தம் அறியாத
பெருமான் அரையில் பீதக
வண்ண ஆடை கொண்டு என்னை
வாட்டம் தணிய வீசீரே. 627

பால்ஆலிலையில் துயில் கொண்ட
பரமன் வலைப்பட்டு இருந்தேனை
வேலால் துன்னம் பெய்தாற்போல்
வேண்டிற்று எல்லாம் பேசாதே,
கோலால் நிரைமேய்த்து ஆயனாய்க்
குடந்தைக் கிடந்த குடம்ஆடி
நீலார் தண்ணந் துழாய் கொண்டு என்
நெறி மென் குழல்மேல் சூட்டீரே. 628





நான் வளர்த்த கிளி எப்பொழுதும் கூட்டிலிருந்து கொண்டு ‘கோவிந்தா’ ‘கோவிந்தா!’ என்று கூவுகிறது. உணவு ஊட்டாது என் கோபத்தைக் காட்டினேன் ஆகில் ‘உலகளந்தானே’ என்று ஓங்கிக் கூவும். இப்பெயர்களோ என் விரகத்தை அதிகப் படுத்தும். நாட்டில் பழியை அடைந்து உங்களுடைய பெயரையும் கெடுத்து, முகம் காட்ட முடியாமல் நிற்கலாகாது. ஆகவே மாடங்கள் உயர்ந்து தோன்றும் துவாரகைக்கு என்னைக் கொண்டு சேருங்கள். 625

பொன்மாடங்கள் விளங்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் கோன் விஷ்ணுசித்தர் மகள் கோதை, தாழ்ந்த கூந்தலை உடையவள். மதுரை தொடக்கமாக, துவாரகைவரை கூறப்பட்ட தலங்களுக்குத் தன்னை உறவினர் கொண்டு சேர்க்க வேண்டுமாறு ஆண்டாள் கூறிய இந்த இசைப்பாடலை ஓதுபவர்கள் வைகுந்தத்தை வாழும் இடமாகப் பெறுவார்கள். 626

## கண்ணன் அணிந்த ஆடை முதலியவற்றால் வாட்டத்தைத் தணிக்க வேண்டுதல்

கண்ணன் என்னும் கறுத்த தெய்வத்துடன் பழகிய காட்சிகளை நினைத்து உயிர்வாழ விரும்பினால் அது விரகவேதனையை அதிகமாக்குகிறது. தாய்மார்களே! நீங்கள் வேறாக நின்று கொண்டு புண்ணிலே புளிச்சாற்றை ஊற்றுவதைப்போல், நன்மைகளைப் பேசுவதாக அறிவுரை செய்ய வேண்டாம். இதற்குப் பரிகாரம், பெண்ணின் வருத்தம் அறியாத கண்ணனின் அரையில் சாத்திய பீதக ஆடை கொண்டு, என் வாட்டம் தீரும் படி வீசுவதே ஆகும். ஆகவே அவன் பீதாம்பரத்தை என் மேல் வீசுங்கள். 627

பால்பாயும் தளிரான ஆலிலையிலே கண்வளர்ந்த திருமாலின் வலையிலே அகப்பட்டுள்ள என்னை வேலாயுதம் கொண்டு துளைப்பது போல உங்களுக்குத் தோன்றும் படியெல்லாம் பேசித் துன்புறுத்தாதீர்கள். இடைப்பிள்ளையாய்க் கையில் கோல் பிடித்துப் பசுக்கூட்டங்களை மேய்த்த, திருக்குடந்தையில் பள்ளி கொண்டருளிய குடக்கூத்தன் கண்ணனுடைய, குளிர்ந்த திருத்துழாய் கொண்டு, மென்மையான என் கூந்தலில் சூட்டுங்கள். 628

கஞ்சைக் காய்ந்த கருவில்லி
கடைக்கண் என்னும் சிறைக்கோலால்
நெஞ்சு ஊடுருவ வேவுண்டு
நிலையும் தளர்ந்து நைவேனை
அஞ்சேல் என்னான்; அவன் ஒருவன்
அவன் மார்வு அணிந்த வனமாலை
வஞ்சியாதே தருமாகில்
மார்விற் கொணர்ந்து புரட்டீரே. 629

ஆரே உலகத்து ஆற்றுவார்?
ஆயர்பாடி கவர்ந்து உண்ணும்
காரேறு உழக்க உழக்குண்டு
தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை
ஆராவமுதம் அனையான் தன்
அமுத வாயில் ஊறிய
நீர்தான் கொணர்ந்து புலராமே
பருக்கி இளைப்பை நீக்கீரே. 630

அழிலும் தொழிலும் உருக் காட்டான்;
அஞ்சேல் என்னான்; அவன் ஒருவன்
தழுவி முழுசிப் புகுந்து என்னைச்
சுற்றிச் சுழன்று போகானால்;
தழையின் பொழில்வாய் நிரைப் பின்னே
நெடுமால் ஊதி வருகின்ற
குழலின் தொளைவாய் நீர் கொண்டு
குளிர முகத்துத் தடவீரே. 631

நடை ஒன்று இல்லா உலகத்து
நந்தகோபன் மகன் என்னும்
கொடிய கடிய திருமாலால்
குளப்புக்கூறு கொளப்பட்டு
புடையும் பெயரகில்லேன் நான்;
போழ்க்கன் மிதித்த அடிப்பாட்டில்
பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள்
போகா உயிர் என் உடம்பையே. 632

வெற்றிக் கருளக் கொடியான்தன்
மீமீது ஆடா உலகத்து
வெற்ற வெறிதே பெற்ற தாய்
வேம்பே ஆக வளர்த்தாளே;
குற்றம் அற்ற முலைதன்னைக்
குமரன் கோலப் பணைத்தோளோடு
அற்ற குற்றம் அவை தீர
அணைய அமுக்கிக் கட்டீரே. 633





*கம்சனைக் கொன்ற, வில்லை ஒத்த புருவமுடைய கண்ணனின் கடைக்கண்ணாகிற சிறகுடைய அம்பாலே, என் இதயம் முழுவதும் வெந்து போய் நிலை தளர்ந்தேன். இவ்வாறு வருந்தும் என்னைப் பார்த்துப் "பயப்படாதே" என்று கூறாத அப்பெருமான் தான் அணிந்த வனமாலையை, வஞ்சியாமல் தந்தால், நீங்கள் அதைக் கொண்டு வந்து என்மார்பில் போட்டு, நெஞ்சுவெப்பம் போகுமாறு புரட்டுங்கள்.* **629**

*ஆய்ப்பாடி அனைத்தையும் தன் தீம்பால் கவர்ந்து, அனுபவிக்கும் கறுத்த காளையான கண்ணன், என் மனத்தைக் கவர்ந்து துன்புறுத்துவதால் நலிவுற்றுத் தளர்ந்து நொந்தேன். இவ்வுலகில் எனக்குத் தேறுதல் கூற யாருமில்லையே! தாய்மார்களே! ஆரா அமுதமான கண்ணன் திருவாயில் ஊறிக்கிடக்கும், அமுத நீரைக் கொண்டு வந்து நான் பருகும்படி செய்து, என் தளர்ச்சியை நீக்கப் பாருங்கள்.* **630**

*நான் அழுதாலும், அவனைத் தொழுதாலும், கண்ணன் தன் உருவத்தை எனக்குக் காட்டவில்லை. உருவைக் காட்டாவிடிலும், 'பயப்படாதே' என்று கூடக் கூறவில்லை; இந்த ஒப்பற்ற தீம்பன் என்னுள் புகுந்து, நெருக்கி அணைத்து, சுற்றிலும் வளைத்துக் கொண்டு, போகாமல் இருக்கிறானே! பீலிக்குடைக்கீழ் பசுக்களின் பின்னே சென்ற, காதல் மிகுந்த கண்ணன் ஊதி வரும் புல்லாங் குழலின் துளைகளில் ஊறும் நீரைக்கொண்டு வந்து என் முகத்தில் தடவுங்கள்* **631**

*உலக மரியாதையோ குலைந்துவிட்டது. நந்தகோபன் மகன் என்று பெயர் பெற்ற, இரக்கமற்ற தன்னலம் பேணும் திருமாலால் நான் வஞ்சிக்கப் பட்டேன். கண்ணன் என்னும் காளை தன் கால் குளம்பாலே மிதித்து மிதித்துப் பிளவுபட்ட அபலையான நான், இங்குமங்கும் அசையவும் வலிமை இல்லாமல் போனேன். தீம்பனான கண்ணன் திருவடி பட்ட இடத்தின் பாத தூளியையாவது கொண்டு வந்து, உயிர் போகா என் உடம்பில் பூசுங்கள்.* **632**

*கருடனை வெற்றிக்கொடியாகக் கொண்ட திருமால் ஆட்சியை மீற இயலாத இவ்வுலகில், தாயான யசோதை, கண்ணனைப் பெற்று, வேப்பங்காய் போலே, கசக்கும்படி, வீணாக வளர்த்தாளே! அந்தத்தீம்பனை அன்றி வேறு ஒருவனை விரும்பும் குற்றமில்லாத என் மார்புகளைக் குமரனான அவன் அழகிய தோள்களுடன் சேரத்தழுவுமாறு, செய்து, அற்றுத்தீர்ந்த குற்றம் போகும் படி செய்யுங்கள்.* **633**

உள்ளே உருகி நைவேனை
உளளோ இலளோ என்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்
கோவர்த்தனனைக் கண்டக்கால்,
கொள்ளும் பயன் ஒன்று இல்லாத
கொங்கைதன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டு அவன் மார்வில்
எறிந்து என் அழலைத் தீர்வேனே. 634

கொம்மை முலைகள் இடர் தீரக்
கோவிந்தற்கு ஓர் குற்றேவல்
இம்மைப் பிறவி செய்யாதே
இனிப் போய்ச் செய்யும் தவம்தான் என்?
செம்மை உடைய திருமார்வில்
சேர்த்தானேலும், ஒரு ஞான்று
மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி
விடைதான் தருமேல் மிக நன்றே. 635

அல்லல் விளைத்த பெருமானை ஆயர்பாடிக்கு அணிவிளக்கை
வில்லி புதுவைநகர் நம்பி விட்டுசித்தன் வியன் கோதை
வில்லைத் தொலைத்த புருவத்தாள் உற்று மிக விரும்பும்
சொல்லைத் துதிக்க வல்லார்கள் துன்பக் கடலுள் துவளாரே. 636

### விருந்தாவனத்தில் கண்ணனைக் கண்டது கூறல்

பட்டி மேய்ந்து ஓர் காரேறு பலதேவற்கு ஓர் கீழ்க்கன்றாய்
இட்டீறு இட்டு விளையாடி இங்கே போதக் கண்டீரே?
இட்டமான பசுக்களை இனிது மறித்து நீர் ஊட்டி
விட்டுக் கொண்டு விளையாட விருந்தாவனத்தே கண்டோமே. 637

அனுங்க என்னைப் பிரிவு செய்து ஆயர்பாடி கவர்ந்து உண்ணும்
குணுங்கு நாறிக் குட்டேற்றைக் கோவர்த்தனனைக் கண்டீரே?
கணங்களோடு மின் மேகம் கலந்தாற் போல, வனமாலை
மினுங்க நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே. 638

மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை
ஏலாப் பொய்கள் உரைப்பானை இங்கே போதக் கண்டீரே?
மேலால் பரந்த வெயில்காப்பான் வினதைசிறுவன் சிறகுஎன்னும்
மேலாப்பின் கீழ் வருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 639





பிரிவால் நான் உள்ளுக்குள்ளே உருகி நைந்தேன்; 'இவள் இருக்கிறாளா? இல்லையா?' என்று விசாரிக்காமல் அலட்சியம் செய்யும் அவனிடம் நான் என்னை இழந்து விட்டேன். பெண்களிடத்தில் குறும்பு செய்யும் கோவர்த்தனனைக் கண்டால், என் முலைகளை வேருடன் பறித்து அவன் மார்பில் வீசி என் துயரத்தைப் போக்கிக் கொள்வேன். 634

பருத்து வளர்ந்த என் முலைகளின் துன்பம் போக, அந்தக் கோவிந்தனுக்கு அந்தரங்கத் தொண்டை இப்பிறவியில் செய்யாமல், அதன் பின் கிடைக்கும் பரமபதத்தில் என்ன தவம் வேண்டிக் கிடக்கிறது? இவ்வுடம்புடன் அணைய விரும்பும் என்னை, அவன் செம்மையான திருமார்பில் தழுவிக்கொண்டால் நல்லது. அன்றி, ஒருநாளாவது என் முகம் பார்த்து உண்மை பேசி, வேண்டாம் என்றாலும் மிக நன்றே. 635

ஸ்ரீ வில்லிபுத்தூர் நம்பி விஷ்ணு சித்தரின் மகளான கோதை வில்லையும் தோற்கடிக்கும் புருவம் உடையவள். தீம்பனாய் ஆய்ப்பாடியின் அணிவிளக்காகத் திகழ்ந்த கண்ணனைக் காதல் செய்து ஆற்றாமையுடன் அருளிய ஆண்டாளின் பாசுரங்களை ஓதுபவர்கள் துன்பக்கடலில் தத்தளியார்கள். 636

### விருந்தாவனத்தில் கண்ணனைக் கண்டது கூறல்

பலராமனுக்கு ஒப்பற்ற தம்பியாய்க் காவலைக் கடந்து திரியும் கறுத்த காளையான கண்ணன் மகிழ்ச்சியுடன் விளையாடி வருவதைக் கண்டீர்களா? பசுக்களை விருப்பத்துடன் பெயர் கூறி அழைத்து நீர் ஊட்டி, மேய்த்து விளையாடுவதை நாங்கள் விருந்தாவனத்தில் கண்டு வணங்கினோம். 637

என்னைப் பிரிந்து வருந்தச் செய்த கண்ணன் ஆய்ப்பாடியைக் குறும்பால் கவர்ந்து திளைத்தவன். வெண்ணெய் நாற்றமுடைய காளை போன்ற கோவர்த்தனனை நீங்கள் கண்டீர்களா? மின்னலும் மேகமும் கலந்தாற் போல் உடம்பில் வனமாலை விளங்குபவனைத் தோழர்கள் நடுவே விருந்தாவனத்தில் விளையாடக் கண்டோம். 638

பெண்கள் பால் மோஹமே வடிவுகொண்டு பிறந்ததோ என்னும் படியான அன்பையே காட்டும் மணவாளனாய், பொருத்தமில்லாத பொய்கள் கூறும் கண்ணனை இங்கே போகக் கண்டீரோ? மேலே பரவும் வெய்யில் படாமல் தடுக்கும். வினதை புதல்வன் கருடன் சிறகின் கீழ் எழுந்தருளும் பெருமானை விருந்தாவனத்தே கண்டோம். 639

கார்த் தண் கமலக் கண் என்னும் நெடுங்கயிறு படுத்தி என்னை
ஈர்த்துக் கொண்டு விளையாடும் ஈசன்தன்னைக் கண்டீரே?
போர்த்த முத்தின் குப்பாயப் புகர் மால் யானைக் கன்றேபோல்
வேர்த்து நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே. 640

மாதவன் என் மணியினை வலையிற் பிழைத்த பன்றிபோல்
ஏதும் ஒன்றும் கொளத் தாரா ஈசன்தன்னைக் கண்டீரே?
பீதகஆடை உடை தாழ, பெருங் கார்மேகக் கன்றே போல்,
வீதி ஆர வருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 641

தருமம் அறியாக் குறும்பனைத்தன் கைச் சார்ங்கம் அதுவேபோல்
புருவ வட்டம் அழகிய பொருத்தம் இலியைக் கண்டீரே?
உருவு கரிதாய் முகம் செய்தாய் உதயப் பருப்பதத்தின்மேல்
விரியும் கதிரே போல்வானை விருந்தாவனத்தே கண்டோமே. 642

பொருத்தம் உடைய நம்பியைப் புறம்போல் உள்ளும் கரியானைக்
கருத்தைப் பிழைத்து நின்ற அக் கரு மா முகிலைக்கண்டீரே?
அருத்தித் தாராகணங்களால் ஆரப் பெருகு வானம் போல்,
விருத்தம் பெரிதாய் வருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 643

வெளிய சங்கு ஒன்று உடையானைப் பீதகஆடை உடையானை
அளி நன்கு உடைய திருமாலை ஆழியானைக் கண்டீரே?
களி வண்டு எங்கும் கலந்தாற் போல் கமழ் பூங்குழல்கள் தடந்தோள் மேல்
மிளிர நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே. 644

நாட்டைப் படை என்று அயன் முதலாத் தந்த நளிர் மாமலர் உந்தி
வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன்தன்னைக் கண்டீரே?
காட்டை நாடித் தேனுகனும் களிறும் புள்ளும் உடன மடிய
வேட்டையாடி வருவானை விருந்தாவனத்தே கண்டோமே. 645

பருந்தாள்களிற்றுக்கு அருள்செய்த பரமன்தன்னைப் பாரின்மேல்
விருந்தாவனத்தே கண்டமை விட்டுசித்தன் கோதை சொல்
மருந்தாம் என்று தம் மனத்தே வைத்துக் கொண்டு வாழ்வார்கள்
பெருந்தாள் உடைய பிரான் அடிக்கீழ்ப் பிரியாது என்றும் இருப்பாரே. 646

**நாச்சியார் திருமொழி முற்றிற்று.**





*கறுத்த மேகத்தில் பூத்த தாமரை போன்ற கண்களாகிய கயிற்றில் கட்டி என்னை இழுத்துப் போகும் இறைவனைக் கண்டீர்களா? முத்துச்சட்டையைப் போர்த்தவனாய் ஒளி மிகுந்த பெரிய யானைக் குட்டி போல் வேர்வையுடன் விளையாடும் கண்ணனை விருந்தாவனத்தே கண்டோம்.* 640

*எனக்கு மணி போன்றவன் மாதவன்; வலையிலிருந்து தப்பி ஓடும் பன்றி போல், ஒருவர்க்கும் எட்டாமல், தான் எதுவும் கொடுக்காமல் எல்லாம் தன்னுடையதாய்க் கொள்ளும் இறைவனைக் கண்டீரோ? பீதாம்பரம் தாழக்கறுத்த மேகக்குட்டி போல் வீதியிலே வருபவனை விருந்தாவனத்தில் கண்டோம்.* 641

*இரக்கம் என்பதை அறியாதவனாய், தனது கைச் சார்ங்க வில்லைப் போன்ற புருவ வட்டங்களாலே அழகு பெற்றவனாய், என்னுடன் பொருந்தாத கண்ணனைக் கண்டீரோ? உதயகிரியில் விரிகின்ற சூரியன்போல், கறுத்த மேனியில் செம்மையான முகம் பெற்ற கண்ணனை விருந்தாவனத்தில் கண்டோம்.* 642

*பொருத்தமுடைய தலைவனாய், உடல் கறுப்பே போல், உள்ளமும் கறுத்து, நம் கருத்தைத் தப்பி நிற்கிற கறுத்த மேகம் போன்ற கண்ணனைக் கண்டீரோ? நற்பலன்களை விரும்புகிறவர்கள் வேண்டும் நட்சத்திர, கிரகக்கூட்டம் உள்ள வானம் போலே, தோழர்கள் கூட்டத்துடன் வருபவனை விருந்தாவனத்தில் கண்டோம்.* 643

*வெளுத்த பாஞ்சசன்னியசங்கும், அருள் தரும் சக்கரமும் உடையவனாய்ப் பீதாம்பரம் அணிந்தவனான திருமாலைக் கண்டீரோ? மது மாந்திக்களிக்கும் வண்டுகள் கலந்தாற்போல், எங்கும் திருக்குழல்கற்றைகள் தோள்கள் மேல்மிளிர, விளையாடி வரும் கண்ணனைப் பிருந்தாவனத்தில் கண்டோம்.* 644

*உலகுகளைப் படைப்பதற்காகப் பிரமன் முதலானவரைப் படைத்துக் குளிர்ந்த தாமரை மலரைக் கொப்பூழில் வீடாக உண்டாக்கிப் படைத்தல் காத்தல் முதலியவற்றை விளையாட்டாகக் கொண்ட விமலனைக் கண்டீரோ? தேனுகன், குவலயாபீடம், பகாசுரன் ஆகியோரைக் கொன்றவன், காட்டில் சென்று வேட்டை ஆடிவருவதை விருந்தாவனத்தே கண்டோம்.* 645

*பருத்த கால்களைப் பெற்ற கஜேந்திரனுக்கு அருள் செய்த பரமனான திருமாலை இவ்வுலகில், ஸ்ரீ பிருந்தாவனத்திலே கண்டதைப் பெரியாழ்வார் திருமகள் ஆண்டாள் பாசுரங்களாக அருளினாள். இவற்றைப் பிறவி நோய்க்கு மருந்தாகக் கொண்டு, பயின்று வாழ்பவர் திருமாலின் திருவடிகளில் பொருந்தி என்றும் பிரியாமல் இருப்பார்கள்.* 646

**நாச்சியார் திருமொழி முற்றிற்று**

ஸ்ரீ:

# குலசேகரப் பெருமாள் அருளிய பெருமாள் திருமொழி

## ஸ்ரீரங்கநாதனைக் காண விரும்புதல்

இருள்இரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணி பணம் ஆயிரங்கள் ஆர்ந்த
அரவுஅரசப் பெருஞ் சோதி அனந்தன் என்னும்
அணி விளங்கும் உயர் வெள்ளை அணையை மேவித்
திருவரங்கப் பெரு நகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக் கையால் அடி வருடப் பள்ளிகொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே! 647

வாய்ஓர் ஈரைஞ்ஞூறு துதங்கள் ஆர்ந்த
வளை உடம்பின் அழல் நாகம் உமிழ்ந்த செந்தீ
வீயாத மலர்ச் சென்னி விதானமே போல்
மேன்மேலும் மிக எங்கும் பரந்ததன் கீழ்
காயாம்பூ மலர்ப் பிறங்கல் அன்ன மாலை,
கடிஅரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
மாயோனை மணத்தூணே பற்றி நின்று என்
வாயார என்றுகொலோ வாழ்த்தும் நாளே! 648

எம்மாண்பின் அயன் நான்கு நாவினாலும்
எடுத்து ஏத்தி ஈரிரண்டு முகமும் கொண்டு
எம்மாடும் எழிற்கண்கள் எட்டினோடும்
தொழுது ஏத்தி இனிது இறைஞ்ச நின்ற செம்பொன்
அம்மான்தன் மலர்க் கமலக் கொப்பூழ் தோன்ற
அணி அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
அம்மான்தன் அடியிணைக் கீழ் அலர்கள் இட்டு அங்கு
அடியவரோடு என்றுகொலோ அணுகும் நாளே! 649

மாவினை வாய் பிளந்து உகந்த மாலை, வேலை
வண்ணனை, என் கண்ணனை, வன் குன்றம் ஏந்தி
ஆவினை அன்று உயக் கொண்ட ஆயர்ஏற்றை,
அமரர்கள் தந் தலைவனை, அந்தமிழ் இன்பப்
பாவினை, அவ் வடமொழியை, பற்றுஅற்றார்கள்
பயில் அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
கோவினை, நாஉற வழுத்தி என்தன் கைகள்
கொய்ம்மலர் தூய் என்றுகொலோ கூப்பும் நாளே! 650



ஸ்ரீ:

# குலசேகரப் பெருமாள் அருளிய பெருமாள் திருமொழி

## ஸ்ரீரங்கநாதனைக் காண விரும்புதல்

இருளைச் சிதறச்செய்யும் ஒளியுடைய மணிகள் விளங்கும் நெற்றியையும் இணைத்திருவடி நிலைகளான ஆயிரம் படங்களையும் உடைய ஆதிசேஷன் நாகங்களுக்கு அரசன் ஆவான். அருஞ்சோதியாய் விளங்கும் அழகான இவ்வனந்தனை வெள்ளைப் படுக்கையாகக் கொண்டு பெரிய பெருமாள் திருவரங்கத்தில் கண் வளர்கிறார். அலைக்கரங்களால் காவிரி அடிவருட, நீலமணி போன்ற ஒப்பற்ற அழகுடன் விளங்கும் அவரைக் கண்களால் கண்டு வணங்கி மகிழும் நாள் எந்நாளோ? 647

துதிக்கின்ற ஆயிரம் வாய்களுடைய வெண்மையான ஆதிசேஷன் கக்கும் சிவந்ததீ, மேலும் மேலும் எங்கும் பரந்து பூ மாறாத திருமுடி உடைய பெரிய பெருமாளுக்கு மேற்கட்டியாக விளங்குகிறது. அதன் கீழ் காயாம்பூ மாலை போல விளங்கும் திருமால் அனந்தனையே படுக்கையாகக் கொண்டு கண் வளர்கிறான். மதிள் சூழ்ந்த திருவரங்கத்தில் இவ்வாறு காட்சி தரும் மாயோனை, நான் அங்குச் சென்று திருமணத்தூண்களைப் பற்றி நின்று என் வாயாரத்துதிக்கும் நாள் என்று வரும்? 648

அரங்கனை, எல்லாப் பெருமைகளும் உடைய பிரமன் தன் நான்கு நாக்குகளால் துதித்து நான்கு முகங்களின் எட்டுக்கண்களால் கண்டு, கை கூப்பி வணங்குகிறான். சிவந்த பொன் போல் ஒளி திகழும் நம்பெருமாள் திருவரங்கத்தில் தன் கொப்பூழில் தாமரைப் பூத்தோன்ற, ஆதிசேஷனைப் படுக்கையாய்க் கொண்டுள்ளார். இவர் இணைத் திருவடிகளில் மலரிட்டு அடியார்களுடன் கூடி வணங்கும் நாள் என்றோ? 649

என் கண்ணன் குதிரை வடிவில் வந்த கேசியின் வாயைக் கிழித்தான்; அடியார்களிடம் மயக்கும் பேரன்புடையவன். கடல் நிறத்தவன் ஆயர்களுக்கு அரசனாய் அன்று, மலையைத் தூக்கிப்பசுக்களைக் காப்பாற்றினான். அவன் நித்திய சூரிகளின் தலைவன்; அழகிய தமிழில் உள்ள அருளிச் செயலைப் போல் இனியவன்; வட மொழி வடிவானவன். உலகப்பற்று இல்லாத அடியவர் வாழும் திருவரங்கத்தில் ஆதிசேஷன் மேல்கண் வளரும் அரங்கநாதனை நாத்தழும்பேறத் துதித்துக்கைகளால் மலர் தூவி வணங்கும் நாள் என்றோ? 650

இணையில்லா இன்னிசை யாழ் கெழுமி இன்பத்
தும்புருவும் நாரதனும் இறைஞ்சி ஏத்த,
துணையில்லாத் தொல் மறை நூல்தோத்திரத்தால்
தொல் மலர்க்கண் அயன் வணங்கி ஓவாது ஏத்த,
மணிமாட மாளிகைகள் மல்கு செல்வ
மதில்அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
மணிவண்ணன் அம்மானைக் கண்டுகொண்டு என்
மலர்ச் சென்னி என்றுகொலோ வணங்கும் நாளே! 651

அளிமலர்மேல் அயன் அரன் இந்திரனோடு ஏனை
அமரர்கள்தம் குழுவும் அரம்பையரும் மற்றும்
தெளிமதி சேர் முனிவர்கள்தம் குழுவும் உந்தித்
திசை திசையில் மலர் தூவிச் சென்று சேரும்
களிமலர் சேர் பொழில் அரங்கத்து உரகம் ஏறிக்
கண்வளரும் கடல்வண்ணர் கமலக் கண்ணும்
ஒளிமதி சேர் திருமுகமும் கண்டுகொண்டு என்
உள்ளம்மிக என்றுகொலோ உருகும் நாளே! 652

மறம்திகழும் மனம் ஒழித்து வஞ்சம் மாற்றி
வன் புலன்கள் அடக்கி இடப் பாரத் துன்பம்
துறந்து இரு முப்பொழுது ஏத்தி எல்லை இல்லாத்
தொல் நெறிக்கண் நிலைநின்ற தொண்டரான
அறம்திகழும் மனத்தவர்தம் கதியை, பொன்னி
அணி அரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
நிறம்திகழும் மாயோனை, கண்டு என் கண்கள்
நீர்மல்க என்றுகொலோ நிற்கும் நாளே! 653

கோல்ஆர்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற் சங்கம்
கொலையாழி கொடுந்தண்டு கொற்ற ஒள் வாள்
கால்ஆர்ந்த கதிக் கருடன் என்னும் வென்றிக்
கடும்பறவை இவை அனைத்தும் புறஞ் சூழ் காப்ப,
சேல்ஆர்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
மாலோனைக் கண்டு இன்பக் கலவி எய்தி
வல்வினையேன் என்றுகொலோ வாழும் நாளே! 654

தூராத மனக்காதல் தொண்டர் தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆராத மனக் களிப்போடு அழுத கண்ணீர்
மழை சோர நினைந்து உருகி ஏத்தி நாளும்
சீர்ஆர்ந்த முழவு ஓசை பரவை காட்டும்
திருவரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
போர்ஆழி அம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்றுகொலோ புரளும் நாளே! 655





பாட்டால் ஆனந்தம் அளிக்கும் தும்புருவும் நாரதரும் ஒப்பற்ற இனிய இசையை உடைய வீணையை மீட்டி அரங்கனைத்துதிப்பார்கள். கொப்பூழ்த் தாமரையில் உள்ள பிரமனோ, தொன்மையான வேதங்களால் துதி செய்வான். மணி மாட மாளிகைகளும் செல்வமும் நிறைந்த மதிள் சூழ்ந்த திருவரங்கத்தில் அனந்தன் மீது பள்ளி கொண்டுள்ள மணிவண்ணனான நம் பெருமாளைக் கண்டு, பூச்சூடிய என்தலை வணங்கும் நாள் என்றோ? 651

வண்டு அமரும் தாமரை மேல் உள்ள பிரமனும், சிவனும் இந்திரனுடன் தேவர்களும், அரம்பையர்களும் தெளிந்த ஞானமுடைய முனிவர்களும் நெருக்கிக் கொண்டு திசையெல்லாம் பூக்களைத் தூவி அரங்கனை வழிபடவருவர். தேன் மலர்ச் சோலைகள் உள்ள ஸ்ரீரங்கத்தில் பாம்பின் மீது கண்வளரும் கடல் நிறப் பெருமானின் தாமரைக் கண்களையும் சந்திரன் போன்ற முகத்தையும் பார்த்து வணங்கி, என் மனம் உருகும் நாள் என்றோ? 652

ஸ்ரீவைஷ்ணவ அடியார்கள், கொலை, சினம், கொடுமை எண்ணங்களை நீக்கியவராய், பொய்யில்லாமல் ஐந்து இந்திரியங் களையும் அடக்கிப் பழைய வினைகளை நீக்கி, ஐந்து காலங்களிலும் திருமாலை வழிபடுவார்கள். எல்லையற்ற பழைய வரம்பிலிருந்து வழுவாத இவர்களுக்கு அரங்கனே கதி ஆவான்; இரக்கம் நிறைந்த மனத்தவரான இவர்களுக்குப் புகலிடமான பெருமான், காவிரி சூழும் அரங்கத்தில் பாம்பணையில் பள்ளி கொண்டுள்ளான். அழகு மிகுந்த இந்த மாயோனைக் கண்டு என் கண்கள் கண்ணீர் சொரிந்து வணங்கி நிற்கும் நாள் என்றோ? 653

அம்புகளுடன் கூடிய சார்ங்க வில்லும், வளைந்த சங்கும், அழிப்பதில் வல்ல சக்கரமும், அச்சுறுத்தும் கதையும் வெற்றி விளங்கும் நாந்தகவாளும், காற்றினும் வேகமாகப் போகும் கருடனும் பெரிய பெருமாளைச் சுற்றிச் சூழ்ந்து பாதுகாக்கிறார்கள். மீன் வயல்களும் சோலைகளும் சூழ்ந்த திருவரங்கத்தில் பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமாலை, மகாபாவியான நான், கண்டு, மிகவும் மகிழ்ந்து, உய்வு பெறும் நாள் என்றோ? 654

திருவரங்கன் சந்நிதியில், பக்தி மிகுந்த அடியார்கள் ஒன்று கூடி, குறையில்லாப் பேரன்பு மனத்தால், பகவானின் குணங்களை எண்ணி, ஆராத களிப்புடன் பாடித்துதிப்பார்கள். அவர்களின் ஆனந்தக் கண்ணீர், மழைபோலப் பெருகி ஓடும். தினமும் அங்கு, எழும் வாத்தியங்களின் ஓசை கடல் ஒலி போல் கேட்கும். அனந்தாழ்வான் மீது பள்ளி கொள்ளும், சக்கரத்தை ஏந்திய சுவாமியைக் கண்டு வணங்கித் துள்ளி, பூமியில் புரளும் நாள் என்றோ? 655

வன்பெரு வானகம் உய்ய, அமரர் உய்ய,
மண் உய்ய, மண் உலகில் மனிசர் உய்ய,
துன்பம் மிகு துயர் அகல அயர்வு ஒன்று இல்லாச்
சுகம்வளர அகம் மகிழும் தொண்டர் வாழ,
அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும்
அணிஅரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள்
இன்பமிகு பெருங் குழுவு கண்டு யானும்
இசைந்து உடனே என்றுகொலோ இருக்கும் நாளே! 656

திடர்விளங்கு கரைப் பொன்னி நடுவுபாட்டுத்
திருவரங்கத்து அரவணையிற் பள்ளிகொள்ளும்
கடல்விளங்கு கருமேனி அம்மான்தன்னைக்
கண்ணாரக் கண்டு உகக்கும் காதல்தன்னால்
குடைவிளங்கு விறல் தானைக் கொற்ற ஒள் வாள்
கூடலர்கோன் கொடைக் குலசேகரன் சொற் செய்த
நடைவிளங்கு தமிழ் மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ் நாரணன் அடிக்கீழ் நண்ணுவாரே. 657

அரங்கன் அடியாரின் அடிமைத்திறத்தில் ஈடுபடுதல்

தேட்டு அருந் திறல் தேனினைத் தென்
அரங்கனைத் திருமாது வாழ்
வாட்டம் இல் வனமாலை மார்வனை
வாழ்த்தி மால் கொள் சிந்தையராய்
ஆட்டம் மேவி அலந்து அழைத்து அயர்வு
எய்தும் மெய்யடியார்கள்தம்
ஈட்டம் கண்டிடக் கூடுமேல், அது
காணும் கண் பயன் ஆவதே. 658

தோடுஉலா மலர் மங்கை தோளிணை
தோய்ந்ததும் சுடர் வாளியால்
நீடுமா மரம் செற்றதும் நிரை
மேய்த்ததும் இவையே நினைந்து
ஆடிப்பாடி அரங்க! ஓ! என்று
அழைக்கும் தொண்டர் அடிப்பொடி
ஆடநாம் பெறில், கங்கை நீர் குடைந்து
ஆடும் வேட்கை என் ஆவதே? 659





பெருமையுடைய வானுலகங்கள், தேவர்கள் பூவுலகம், மனிதர்கள், ஆகியோர் உய்யவும், துயரைத்தரும் பாவங்கள் நீங்கவும், துக்கம் கலவாத சுகம் பெருகவும், மனத்திலே பக்தி மிகுந்த ஸ்ரீவைஷ்ணவத் தொண்டர் வாழவும், அன்புடன் தென்திசையைப் பார்த்தவாறு நம்பெருமாள் பள்ளி கொண்டுள்ளார். இந்த அரங்கன் திருமுற்றத்தில், ஆனந்தம் நிரம்பிய அடியார்கள் கூட்டத்தைக்கண்டு அடியேனும் கூடி, வணங்கும் நாள் என்றோ? 656

திட்டுகள் விளங்கும் கரை உடைய காவிரியின் நடுவே திருவரங்கத்தில் பாம்பின் மீது பள்ளிகொண்ட கடல் நிறத்த பெருமானைக் கண் ஆரப் பார்த்து மகிழவேண்டும் என்னும் ஆசையால், குலசேகரர் இப்பாசுரங்களை அருளினார். கொற்றக் குடை, படை, வாள் முதலியவற்றுடன் பேரரசராய், மதுரையை ஆண்ட கொடையிற் சிறந்த குலசேகரர் அருளிய தமிழ்நடை சிறந்த இப்பத்துப் பாசுரங்களைப் பயில்பவர் நலமுடைய நாராயணன் திருவடி அடைவார்கள். 657

அரங்கன் அடியாரின் அடிமைத்திறத்தில் ஈடுபடுதல்

திருவரங்கன், சுயமுயற்சியால் தேடுபவர்களுக்கு அருமை யானவன்; அடியார்களுக்கோ தன்னையும் கொடுத்துத் தன்னை அனுபவிப்பதற்கு ஈடான பலத்தையும் கொடுக்கும் தேன் போன்றவன். திருமகளும் வன மாலையும் தங்கும் மார்புடைய இத்திருமாலை மங்களா சாசனம் செய்து அன்பில் திளைத்து ஆடி, நாமங்களைக் கூறி மெய்ம்மறக்கும் அடியார்களின் குழாங்களைக் காணப்பெற்றால் அதுவே கண்பெற்ற பயன் ஆகும். 658

தொண்டர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் பெரிய பெருமாள் திருமுன்பு நின்று பக்தி மிகுதியாலே ஆடிப்பாடுவர்; இதழ் கூடிய தாமரையில் வாழும் திருமகளின் தோளை அணைத்ததையும் புகர் அம்பாலே மராமரங்கள் ஏழினையும் துளைத்ததையும் பசு மேய்த்ததையும் எண்ணி, ‘அரங்கா! அரங்கா!’ என்று அழைப்பார்கள். இவ்வடியார்களின் பாத தூளியில் நாம் ஆடினால், கங்கையில் நீராடும் ஆசை எதற்கு? 659

ஏறுஅடர்த்ததும் ஏனமாய் நிலம்
கீண்டதும் முன் இராமனாய்
மாறுஅடர்த்ததும் மண் அளந்ததும்
சொல்லிப் பாடி வண் பொன்னிப் பேர்
ஆறுபோல் வரும் கண்ண நீர் கொண்டு
அரங்கன் கோயில் திருமுற்றம்
சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ்
சேறு என் சென்னிக்கு அணிவனே. 660

தோய்த்த தண் தயிர் வெண்ணெய் பாலுடன்
உண்டலும் உடன்று ஆய்ச்சி கண்டு
ஆர்த்த தோள் உடை எம்பிரான் என்
அரங்கனுக்கு அடியார்களாய்
நாத்தழும்ப எழ நாரணா! என்று
அழைத்து மெய் தழும்பத் தொழுது
ஏத்தி இன்ப உறும் தொண்டர் சேவடி
ஏத்தி வாழ்த்தும் என் நெஞ்சமே. 661

பொய்சிலைக் குரல் ஏற்று எருத்தம்
இறுத்துப் போர் அரவு ஈர்த்த கோன்
செய்சிலைச் சுடர் சூழ் ஒளித் திண்ண
மா மதில் தென் அரங்கனாம்
மெய்சிலைக் கருமேகம் ஒன்று தம்
நெஞ்சில் நின்று திகழப் போய்
மெய்சிலிர்ப்பவர் தம்மையே நினைந்து
என் மனம் மெய் சிலிர்க்குமே. 662

ஆதிஅந்தம் அனந்தம் அற்புதம்
ஆன வானவர் தம்பிரான்
பாதமா மலர் சூடும் பத்தி
இலாத பாவிகள் உய்ந்திடத்
தீதில் நன்னெறி காட்டி எங்கும்
திரிந்து அரங்கன் எம்மானுக்கே
காதல்செய் தொண்டர்க்கு எப் பிறப்பிலும்
காதல் செய்யும் என் நெஞ்சமே. 663

கார்இனம் புரை மேனி நற் கதிர்
முத்த வெண்ணகைச் செய்ய வாய்
ஆரமார்வன் அரங்கன் என்னும்
அரும் பெருஞ்சுடர் ஒன்றினைச்
சேரும் நெஞ்சினர் ஆகிச் சேர்ந்து
கசிந்து இழிந்த கண்ணீர்களால்
வாரநிற்பவர் தாளிணைக்கு ஒரு
வாரம் ஆகும் என் நெஞ்சமே. 664





ஏழு எருதுகளைக் கொன்றதும் வராஹமாய்ப் பூமியைத் தூக்கியதும் இராமனாக அவதாரம் செய்து இராவணனைக் கொன்றதும் பூமியை அளந்ததும் ஆகிய திருமாலின் செயல்களைச் சொல்லிப்பாடிப்பக்தி மிகுதியால், காவிரி வெள்ளம் போல் கண்ணீர் சொரிந்து அரங்கன் கோவில் முற்றத்தைச் சேறு ஆக்கும் அடியார்களின் திருவடிச்சேற்றை என் தலையிலே சூடுவேன். 660

தோய்க்கப்பட்ட தயிர், வெண்ணெய், பால் ஆகியவற்றை ஒரே நேரத்தில் திருடி உண்ட கண்ணனை, யசோதை கண்டு கோபித்து அவன் கைகளைக் கட்டினாள். இத்தகைய என் சுவாமியான அரங்கனின் அடியார்கள் நாத்தழும்பேற, ‘நாராயணா!’ என்றழைத்து உடம்பு தழும்பேறத் தொழுது இன்புறுவர். இவர்களின் திருவடிகளை என் நெஞ்சம் துதி செய்யும். 661

கண்ணபிரான், கோபத்துடன் முழங்கிய ஏழு காளைகளின் கழுத்துக்களை முறித்தான்; சீறி எழுந்த காளியன் என்னும் பாம்பின் செருக்கை அடக்கினான். ஒளி பொருந்திய கல் மதிள் சூழ்ந்த திருவரங்கத்தே, இக்கண்ணனே பெரிய பெருமாளாக எழுந்தருளி உள்ளான். வில்லுடன் கூடிய மேகம் போன்ற மேனி உடையவனைத் தம் நெஞ்சில் தியானித்து மயிர்க்கூச் செறியும் அடியார்களை எண்ணி நான் மெய் சிலிர்ப்பேன். 662

நித்திய சூரிகளின் தலைவரான அரங்கனே உலக காரணன்; பிரளயத்திலும் நிலைப்பவன்; கணக்கற்று வியாபிப்பவன்; ஆச்சரிய மானவன். இத்தகைய எம்பெருமானின் பாத தாமரைகளைத் தலையில் சூடும் பக்தி இல்லாத பாவிகளும் உய்வு பெறும்படி, ஸ்ரீ வைஷ்ணவ அடியார்கள் தீமையற்ற நல்வழிகளைக் காட்டுவர். இத்தொண்டர்களுக்கு எல்லாப் பிறவிகளிலும் அடிமை செய்ய என் மனம் ஆசைப்படும். 663

மேகக்கூட்டம் போன்ற மேனியையும் ஒளியுள்ள முத்துப் போன்ற பற்களையும் சிவந்த வாயையும் முத்துமாலை தவழும் மார்பையும் உடைய அரங்கனாகிற அரும் பெரும் சுடரை வழிபடும் அடியார்கள், தங்கள் பக்திப் பெருக்காலே உருகிக் கரைந்து கண்ணீரைப் பொழிவார்கள். இத்தகையோரின் இணைத்திருவடி களுக்கே என் நெஞ்சம் அன்பு செய்யும். 664

மாலை உற்ற கடற் கிடந்தவன்
வண்டு கிண்டு நறுந்துழாய்
மாலை உற்ற வரைப் பெருந் திரு-
மார்வனை மலர்க் கண்ணனை
மாலை உற்று எழுந்து ஆடிப் பாடித்
திரிந்து அரங்கன் எம்மானுக்கே
மாலை உற்றிடும் தொண்டர் வாழ்வுக்கு
மாலை உற்றது என் நெஞ்சமே. 665

மொய்த்துக் கண் பனி சோர மெய்கள்
சிலிர்ப்ப ஏங்கி இளைத்து நின்று
எய்த்துக் கும்பிடு நட்டம் இட்டு எழுந்து
ஆடிப் பாடி இறைஞ்சி என்
அத்தன் அச்சன் அரங்கனுக்கு அடி-
யார்கள் ஆகி அவனுக்கே
பித்தராம் அவர் பித்தர் அல்லர்கள்;
மற்றையார் முற்றும் பித்தரே. 666

அல்லி மா மலர் மங்கை நாதன்
அரங்கன் மெய்யடியார்கள்தம்
எல்லை இல் அடிமைத் திறத்தினில்
என்றும் மேவு மனத்தனாம்
கொல்லிகாவலன் கூடல் நாயகன்
கோழிக்கோன் குலசேகரன்
சொல்லின் இன்தமிழ் மாலை வல்லவர்
தொண்டர் தொண்டர்கள் ஆவரே. 667

## அரங்கன் அடியாராய் உலகத்தாரொடும் பொருந்தாமை

மெய் இல் வாழ்க்கையை மெய் எனக் கொள்ளும் இவ்
வையம் தன்னொடும் கூடுவது இல்லை யான்;
ஐயனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்;
மையல் கொண்டொழிந்தேன் என்தன் மாலுக்கே. 668

நூலின் நேர் இடையார் திறத்தே நிற்கும்
ஞாலம் தன்னொடும் கூடுவது இல்லை யான்;
ஆலியா, அழையா, அரங்கா! என்று
மால் எழுந்தொழிந்தேன் என்தன் மாலுக்கே. 669





செந்தாமரைக் கண்ணன், வண்டுகள் குடையும் திருத்துழாய் மாலையை அணிந்த, மலைபோலும் மார்புடையவன்; அவன் மேனியைத் தொடுவதால் மகிழ்ந்து அலைவீசும் கடலில், பள்ளி கொண்டவன்; இவனே திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ள சுவாமி ஆவான். இந்த அரங்கனிடத்தே அன்பு கொண்டு ஆடிப் பாடித்திரியும் அடியார்களிடம் என் மனம் பித்துப் பிடித்துத் திரிகிறது. ஸ்ரீ வைஷ்ணவர்களின் வாழ்வுக்கே என் மனம் அன்பு கொண்டுள்ளது. 665

பக்தி மிகுதியால் மழை போல் ஆனந்தக் கண்ணீர் பொழிய, உடம்பு மயிர்க்கூச்செறிய, பகவானை எண்ணி, ஏங்கித் தளர்ந்து, நிலை கலங்கிக் கும்பிட்டு, நடனம் ஆடி வணங்கி, என் தந்தையும் தலைவனுமான அரங்கனுக்கு அடிமை ஆகுவோர், பெரிய பெருமாளிடம் பக்திப்பித்துப் பிடித்தவர் ஆவர். பைத்தியக்காரர்கள் அல்லர். இம்மாதிரிப் பக்தி இல்லாத மற்றவர்களே பைத்தியம் பிடித்தவர். 666

தாமரைப் பூவில் தங்கும் திருமகள் நாயகனான அரங்கனுடைய உண்மையான அடியார்களின் எல்லை அற்ற கைங்கர்யத்திலே, குலசேகரர் என்றும் பொருந்தும் மனம் உடையவர். கொல்லி நகர், உறையூர், மதுரை ஆகிய மூன்றுக்கும் அரசரான குலசேகரர் அருளிய இத்தமிழ் மாலையைப் பயில்பவர் அடியார்க்கு அடியார்கள் ஆவார். 667

## அரங்கன் அடியாராய் உலகத்தாரொடும் பொருந்தாமை

நிலையில்லா இவ்வுலக வாழ்க்கையை நிலையானதாக எண்ணும் உலகத்தாருடன் நான் சேரமாட்டேன். ‘எக்காரணமுமற்ற என் நிலையான, உறவினனே! அரங்கனே!’ என்று அழைக்கிறேன். அவன் என்பக்கம் அன்பு பூண்டதைக் கண்டு நானும் அவனுக்கு அடிமை ஆனேன். 668

நூல் போன்ற மெல்லிய இடை உடைய மாதர்களிடத்தே ஈடுபடும் உலகத்தவர்களுடன் நான் சேரமாட்டேன். பக்தி மேலீட்டால் ஆடி, ‘அரங்கா!’ என்று பெரிய பெருமாள் திருநாமத்தைச் சொல்லி, அழைக்கிறேன். அவன் என்னிடம் கொண்டுள்ள மோகத்தைப் போலவே நானும் அவனிடத்தே மையல் கொண்டுள்ளேன். 669

மாரனார் வரி வெஞ் சிலைக்கு ஆட்செய்யும்
பாரினாரொடும் கூடுவது இல்லை யான்;
ஆரமார்வன் அரங்கன் அனந்தன் நல்
நாரணன் நரகாந்தகன் பித்தனே. 670

உண்டியே உடையே உகந்து ஓடும் இம்
மண்டலத்தொடும் கூடுவது இல்லை யான்;
அண்டவாணன் அரங்கன் வன் பேய் முலை
உண்ட வாயன்தன் உன்மத்தன் காண்மினே. 671

தீதில் நன்னெறி நிற்க, அல்லாது செய்
நீதியாரொடும் கூடுவது இல்லை யான்;
ஆதி ஆயன் அரங்கன் அந் தாமரைப்
பேதை மா மணவாளன்தன் பித்தனே. 672

எம் பரத்தர் அல்லாரொடும் கூடலன்;
உம்பர் வாழ்வை ஒன்றாக் கருதிலன்;
தம்பிரான் அமரர்க்கு அரங்க நகர்
எம்பிரானுக்கு எழுமையும் பித்தனே. 673

எத்திறத்திலும் யாரொடும் கூடும் அச்
சித்தந்தன்னைத் தவிர்த்தனன் செங்கண் மால்;
அத்தனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்;
பித்தனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே. 674

பேயரே எனக்கு யாவரும்; யானும் ஓர்
பேயனே எவர்க்கும்; இது பேசி என்!
ஆயனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்;
பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே. 675

அங்கைஆழி அரங்கன் அடியிணை
தங்கு சிந்தைத் தனிப் பெரும் பித்தனாய்க்
கொங்கர்கோன் குலசேகரன் சொன்ன சொல்
இங்கு வல்லவர்க்கு ஏதம் ஒன்று இல்லையே. 676





*மன்மதனுடைய கொடிய வில்லால் பிணிக்கப்படும் இவ்வுலகத்தவருடன் நான் சேரமாட்டேன். முத்துமாலை அணிந்த அரங்கன் அளவிட்டு அறிய முடியாதவன்; ஆத்மாக்களுக்கு உடையவனாய், அடியார்களைக் கை விடாத அவனிடம் நான் பித்தேறி விட்டேன்.* 670

*உணவையும் உடையையும் ஆசைப்பட்டு ஓடும் இவ்வுலகத்தவருடன் நான் கூட மாட்டேன். அண்டத்துத் தேவர்களுக்குத் தலைவனாயும் பூதனைப்பேயின் முலையை உயிருடன் உண்டவனாயும் உள்ள அரங்கனிடத்தே பித்துப்பிடித்தவன் ஆகிவிட்டேன்.* 671

*தீமையுடன் கலவாத நல்ல வழி இருக்க, தாழ்ந்தவற்றையே விரும்புவர்களுடன் நான் கூடமாட்டேன். உலகங்களுக்கு ஆதியான காரணன், கண்ணனாய் அவதரித்து, தாமரையில் தங்கும் திருமகள் நாதனவன். இந்த அரங்கனிடத்தே நான் பித்துக் கொண்டேன்.* 672

*என்னைப்போல அடிமை செய்யாதாருடன் நான் கூடேன். தேவர்களின் செல்வ வாழ்க்கையைப் பொருட்படுத்தேன். நித்திய சூரிகள் தலைவனான நம்பெருமாளிடத்தில் என்றும் பித்தேறினேன்.* 673

*பாகவதர் அல்லாதாருடன் சேர்ந்து விரும்பியவற்றை அடைய எண்ணும் தாழ்ந்த சிந்தனை வராதபடி, செங்கண்மால் என்னைத் தவிர்த்து அருளினான். 'என் தலைவனே! அரங்கா!' என்று அழைத்து, என்னை ஆளும் நம் பெருமாளுக்கே பித்தன் ஆனேன்.* 674

*நிலை இல்லாத போகங்களை விரும்பும் உலகத்தார் மேலான உறுதிப்பொருளை விரும்பும் எனக்குப் பைத்தியக்காரர்களே! நானும் அவர்களுக்குப் பேயனாகவே தோன்றுகிறேன். இதைப்பேசிப் பயன் இல்லை. 'இடையனாய் அவதரித்த கண்ணா! அரங்கா!' என்று அழைத்து, எம் பிரானுக்கு நான் பித்தன் ஆனேன்.* 675

*அழகிய கையில் சக்கரம் ஏந்திய அழகிய மணவாளனின் திருவடிகளில் தன் சிந்தையைத் தங்க வைத்த பக்தியில் பித்தேறிய குலசேகரரின் இப்பாட்டுகளைப் பயில்பவர். இவ்வுலகில் இடையூறு எதுவுமின்றி இறைவனிடத்தே பக்தி செய்வார்கள்.* 676

## திருவேங்கடமலையில் பிறக்க விரும்புதல்

ஊன்ஏறு செல்வத்து உடற்பிறவி யான்வேண்டேன்,
ஆனேறு ஏழ் வென்றான் அடிமைத் திறம் அல்லால்;
கூன்ஏறு சங்கம் இடத்தான் தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே. 677

ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற் சூழ
வான்ஆளும் செல்வமும் மண்அரசும் யான் வேண்டேன்;
தேன் ஆர் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே. 678

பின்இட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகல் அரிய வைகுந்த நீள் வாசல்,
மின்வட்டச் சுடர்ஆழி வேங்கடக்கோன் தான் உமிழும்
பொன்வட்டில் பிடித்து உடனே புகப் பெறுவேன் ஆவேனே. 679

ஒண்பவள வேலை உலவு தண் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்கு,
பண்பகரும் வண்டினங்கள் பண் பாடும் வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்கும் திரு உடையேன் ஆவேனே. 680

கம்பமத யானைக் கழுத்தகத்தின்மேல் இருந்து
இன்பு அமரும் செல்வமும் இவ் அரசும் யான் வேண்டேன்;
எம்பெருமான் ஈசன் எழில் வேங்கட மலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவம் உடையேன் ஆவேனே. 681

மின்அனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலொடும் ஆடல் அவை ஆதரியேன்;
தென்னனென வண்டினங்கள் பண் பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடு ஆம் அருந்தவத்தேன் ஆவேனே. 682

வான்ஆளும் மா மதி போல் வெண் குடைக்கீழ் மன்னவர்தம்
கோன்ஆகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வு அறியேன்;
தேன்ஆர் பூஞ்சோலைத் திருவேங்கட மலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்து உடையேன் ஆவேனே. 683





## திருவேங்கடமலையில் பிறக்க விரும்புதல்

நப்பின்னைப் பிராட்டியை அடைய, ஏழு எருதுகளை வென்ற பகவானுக்கு அடிமைப் படுதலை விரும்புவதன்றி தசை அதிகரித்து உடம்பு வளர்கிற செல்வமுடைய மனிதப் பிறவியை நான் வேண்டேன். வளைந்த சங்கை இடக்கையில் பெற்ற திருமாலின் திருவேங்கட மலையில், திருக்கோனேரியில் நாரையாகப் பிறக்கப் பெறுவேன். 677

கெடாத இளமை உடைய அரம்பையர் சூழ, மேல் உலகை ஆளும் செல்வத்தையும் இவ்வுலகில் அரசாட்சியையும் நான் வேண்டேன். தேனுடைய பூஞ்சோலைகள் உள்ள திருவேங்கட மலைச் சுனையில் மீனாகவாவது பிறக்கும் பேறு உடையவன் ஆவேன். 678

பின்னலான சடைபெற்ற சிவனும் பிரமனும் இந்திரனும் நெருக்கிக் கொண்டு புகுவதற்கரிய பூவுலக வைகுண்டமான வேங்கடத்தில், வளைந்த மின்னல் போன்ற சக்கரம் கொண்ட திருவேங்கடத்தான், வாய் நீர் உமிழ்கின்ற தங்க வட்டிலைப் பிடித்துக் கொண்டு உள்ளே புகும் பேறு பெறக் கடவேன். 679

ஒளியுள்ள பவளங்களை அலைகள் கொண்டு வரும் திருப் பாற்கடலில் துயிலும் மாயவனான திருமாலின் இரண்டு திருவடி களை வணங்குதற்கு வண்டினம் பாட்டுப்பாடும் திருமலையிலே செண்பக மரமாய் நிற்கும் பாக்கியம் உடையவன் ஆவேன். 680

நடுக்கத்தை உண்டாக்கும் மதயானையின் கழுத்தில் அமர்ந்து போகங்களைத் தரும் செல்வத்தை அனுபவிப்பதையும், அதற்கான அரசாட்சியையும் நான் விரும்பேன். எம்பெருமானான சர்வேச்வரனுடைய திருமலையில் பயனற்ற புதராக இருக்கும் தவம் பெற்றவன் ஆவேன். 681

மின்னலை ஒத்த நுட்பமான இடைபெற்ற உருப்பசியும் மேனகையும் போன்றவர்களின் ஆடல்பாடலை நான் ஆதரியேன். வண்டுகள் தெனதென எனப்பாடும் வேங்கடமலையில் ஒப்பற்ற மலைச்சிகரமாக ஆகும் தவத்தை உடையவன் ஆவேன். 682

வானத்தை ஆளும் முழுச்சந்திரனைப் போலக் கொற்றக் குடைக்குக் கீழே மன்னர்களுக்கும் மன்னனாகிக் கொண்டாடத் தக்க செல்வத்தை நான் ஒரு பொருளாக எண்ணேன். தேன் உள்ள பூஞ்சோலைத் திருமலையில், ஒரு காட்டாறாகப் பாயும் கருத்தை உடையவன் ஆவேன். 683

பிறை ஏறு சடையானும் பிரமனும் இந்திரனும்
முறையாய பெரு வேள்விக் குறை முடிப்பான் மறை ஆனான்;
வெறியார் தண் சோலைத் திருவேங்கட மலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலை உடையேன் ஆவேனே. 684

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே. 685

உம்பர் உலகு ஆண்டு ஒருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலை அல்குல் பெற்றாலும் ஆதரியேன்;
செம்பவள வாயான் திருவேங்கடம் என்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே. 686

மன்னிய தண் சாரல் வட வேங்கடத்தான் தன்
பொன் இயலும் சேவடிகள் காண்பான் புரிந்து இறைஞ்சிக்
கொல் நவிலும் கூர்வேற் குலசேகரன் சொன்ன
பன்னிய நூல் தமிழ்வல்லார் பாங்காய பத்தர்களே. 687

## வித்துவக் கோட்டம்மானிடம் சரணாகதி அடைதல்

தருதுயரம் தடாயேல் உன் சரண் அல்லால் சரண் இல்லை;
விரை குழுவும் மலர்ப் பொழில் சூழ் வித்துவக்கோட்டு அம்மானே!
அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்று அவள்தன்
அருள் நினைந்தே அழும் குழவி; அதுவே போன்று இருந்தேனே. 688

கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்
கொண்டானை அல்லால் அறியாக் குலமகள் போல்,
விண் தோய் மதில் புடை சூழ் வித்துவக்கோட்டு அம்மா! நீ
கொண்டாளாயாகிலும் உன் குரைகழலே கூறுவனே. 689

மீன்நோக்கும் நீள் வயல் சூழ் வித்துவக்கோட்டு அம்மா! என்-
பால்நோக்காயாகிலும் உன் பற்று அல்லால் பற்று இலேன்;
தானநோக்காது எத்துயரம் செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழும் குடி போன்று இருந்தேனே. 690





வேதமே வடிவான எம்பெருமான், பிறைச்சந்திரனைச் சூடிய சிவன், பிரமன், இந்திரன் ஆகியோர் முறை அறிந்து செய்யும் வேள்வியின் பயனைக் கொடுப்பான். இந்த எம்பெருமானின், மணம் வீசும் சோலை உள்ள திருமலையில் நான், அடியார்களின் பாத தூளி படும் பாதையாகும் நிலையை அடைவேன். 684

பாவ பலனான கொடிய பிறவிப் பிணியின் வினைகளைத் தீர்க்கும் திருமாலே! எல்லை காண முடியாத நெடியோனே! திருவேங்கடவா! உன் கோவில் வாசலில், பயனை எதிர்பாராத அடியாரும், பயனை எதிர்பார்க்கும் தேவர்களும் அரம்பையரும், கூடி நடந்து, ஏறும் வாயிற்படியாய்க்கிடந்து, உன் பவள வாயைக் காண்பேன். 685

மேல் உலகங்களை கொற்றக் குடைக்கீழ் இருந்து ஆண்டு. ஊர்வசியின் அழகிய பொன்னாடை அணிந்த இடையை அடையப் பெற்றாலும் அதை விரும்பேன். சிவந்த பவள வாயுடைய என் சுவாமியின் திருவேங்கடம் என்னும் பொன்மலையில் எதாவது ஒரு பொருளாகக் கடவேன். 686

பகைவர்களை வெல்லும் வேலை உடைய குலசேகரர், மாறாத குளிர்ச்சி உள்ள வட வேங்கடத்தில் உள்ள பகவானின் பொன் போன்ற திருவடிகளைக் கண்டு வணங்க ஆசை கொண்டு, அருளிய இத்தமிழ்ப் பாசுரங்களைக் கற்றுணர்பவர்கள் பாங்குடைய பக்தர்கள் ஆவர். 687

## வித்துவக் கோட்டம்மானிடம் சரணாகதி அடைதல்

மணம் மிகுந்த மலர்ச் சோலைகள் சூழ்ந்த வித்துவக் கோட்டுப் பெருமானே! நீயே தரும் ஸம்ஸாரத்துயரத்தை, நீயே போக்காவிட்டால் உன் திருவடிகளை அன்றி வேறு கதி இல்லை. பெற்ற தாய், மிகுந்த கோபத்தால் குழந்தையைத் தள்ளினாலும் அவள் அருளையே மறு படியும் எண்ணி அழும் சிறிய குழந்தையை நான் ஒத்துள்ளேன். 688

வானைத்தொடும் மதிள் சூழ்ந்த திருவித்துவக்கோட்டு எம்பெருமானே! காண்பவர்கள் இகழும் படி கணவன் தீங்கு செய்தாலும் கொண்ட அவனை அன்றி வேறு அறியாத குலமாதே போல் சரணம் அடைகிறேன். நீ என்னை அடிமைகொண்டு காக்காவிடிலும், ஒலிக்கும் கழல் உள்ள உன் அடியில் அடைக்கலம் புகுந்தேன். 689

கடலே வற்றினும், மீன்கள் புகலிடமாகக் கொள்ளும் பரந்த வயல்கள் சூழ்ந்த திருவித்துவக் கோட்டில் உள்ளவனே! அடியேனை நீ பாரா விடினும் உன்னைச் சரணமாகப் பற்றுவதன்றி வேறில்லை. மாலை அணிந்த அரசன் குடிகளைக் காவாமல் துன்பம் செய்தாலும், அவன் செங்கோலையே நோக்கும் குடிமக்களை ஒத்துள்ளேன். 690

வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல் நோயாளன் போல், மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக்கோட்டு அம்மா! நீ,
ஆளா உனது அருளே பார்ப்பன் அடியேனே. 691

வெங்கண்திண்களிறு அடர்த்தாய்! வித்துக்கோட்டுஅம்மானே!
எங்குப் போய் உய்கேன்? உன் இணையடியே அடைய அல்லால்
எங்கும் போய்க் கரை காணாது எறிகடல்வாய் மீண்டு ஏயும்
வங்கத்தின் கூம்பு ஏறும் மாப் பறவை போன்றேனே. 692

செந்தழலே வந்து அழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரம் சேர் வெங்கதிரோற்கு அல்லால் அலராவால்;
வெந்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டு அம்மா! உன்
அந்தமில் சீர்க்கு அல்லால் அகம் குழைய மாட்டேனே 693

எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்து எழுந்த மா முகிலே பார்த்திருக்கும்; மற்று அவைபோல்
மெய்த் துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டு அம்மா! என்
சித்தம் மிக உன்பாலே வைப்பன் அடியேனே. 694

தொக்கு இலங்கி யாறெல்லாம் பரந்து ஓடித் தொடுகடலே
புக்கு அன்றிப் புறம்நிற்க மாட்டாத; மற்று அவை போல்,
மிக்கு இலங்கு முகில்நிறத்தாய்! வித்துக்கோட்டு அம்மா! உன்
புக்கு இலங்கு சீர் அல்லால் புக்கிலன் காண், புண்ணியனே! 695

நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான்
தன்னையே தான் வேண்டும் செல்வம்போல், மாயத்தால்
மின்னையே சேர் திகிரி வித்துவக்கோட்டு அம்மானே;
நின்னையே தான் வேண்டி நிற்பன் அடியேனே. 696

வித்துவக்கோட்டு அம்மா! நீ வேண்டாயே ஆயிடினும்
மற்று ஆரும் பற்று இலேன் என்று அவனைத் தாள் நயந்து
கொற்ற வேல்தானைக் குலசேகரன் சொன்ன
நற்றமிழ் பத்தும் வல்லார் நண்ணார் நரகமே. 697





வைத்தியன் கத்தியால் அறுத்துச் சூடு போட்டு ரணசிகிச்சை செய்தாலும் அவனிடம் நீங்காத அன்புடன் நம்பிக்கை வைக்கும் நோயாளியைப் போல, உன் மாயையால் உண்டான உலகத் தொடர்பாலே துன்பம் ஏற்பட்டாலும் அடியேன் உன் கைங் கர்யத்துக்கான அருளையே நோக்குவேன். 691

கொடிய கண்ணுடைய, வலிய, குவலயாபீடம் யானையைக் கொன்ற வித்துவக் கோட்டம்மானே! உன் இணைத் திருவடிகளையே புகல், அன்றி எங்குப் போய் உய்வு பெறுவேன்? அலைகள் வீசும் கடல் நடுவே எல்லா இடங்களிலும் போய்க் கரையைக் காணாமல் திரும்பி வந்து கப்பலின் கொடி மரத்தில் ஏறும் பறவையைப் போன்றுள்ளேன். 692

செந்தாமரை அருகே சிவந்த நெருப்பு வந்தாலும், அது, வானில் உள்ள சூரியன் கிரணங்களைக் கண்ட பிறகே மலரும். வித்துவக் கோட்டம்மா! அனுபவித்தே கழிய வேண்டிய என் பாவங்களை நீ தொலைக்காவிட்டாலும், உன் எல்லையற்ற குணங்களுக்கல்லது மற்றவற்றில் நான் மனம் உருகேன். 693

வித்துவக் கோட்டம்மா! எத்தனைதான் ஆகாயமேகங்கள் மழை பெய்யாவிடினும், பசுமையான பயிர்கள் கருமேகங்களையே எதிர் பார்த்திருக்கும். அவை போல, ஸம்ஸாரத்தில் நான் படும் துன்பங் களை நீ போக்காவிடினும் என் மனம் உன்னிடமே இருக்கும். 694

வெள்ளமாக ஓடும் ஆறுகள் பரந்து கடலையே அடையுமன்றி வேறிடம் போகா, வித்துவக் கோட்டம்மா! மேக நிறப்புண்ணியனே! நானும் ஆறுகள் போலவே என் மனம் புகுந்த உன் குணங்களன்றி வேறு எதிலும் ஈடுபடேன். 695

மின்னலைப் போன்ற சக்கரம் ஏந்திய வித்துவக் கோட்டம்மா! உன்னை விரும்பிச் செல்வம் விரும்பாதவனை, நீண்ட செல்வம் தானாகவே வந்து சேருதல் போல், என்னை நீ புறக்கணித்தாலும் உன்னையே அடைய, வேண்டுவேன். 696

“வித்துவக் கோட்டம்மா! நீ என்னை வேண்டாம் என்றாலும், வேறு யாரிடமும் அடைக்கலம் புகேன்.” என்று முறையிட்டு அந்த எம்பெருமான் திருவடிகளையே விரும்பிய, வெற்றி வேலாயுதம் கொண்ட குலசேகரர் அருளிய இத்தமிழ் பாசுரங்கள் பத்தையும் கற்பவர், நரகம் புகமாட்டார். 697

## ஆய்ச்சியர் கண்ணனை ஊடி உரைத்தல்

ஏர் மலர்ப் பூங்குழல் ஆயர் மாதர்
எனைப் பலர் உள்ள இவ் ஊரில் உன்தன்
மார்வு தழுவுதற்கு ஆசையின்மை
அறிந்தறிந்தே உன்தன் பொய்யைக் கேட்டு,
கூர் மழை போல் பனிக் கூதல் எய்திக்
கூசி நடுங்கி யமுனை யாற்றில்
வார் மணற் குன்றில் புலர நின்றேன்
வாசுதேவா! உன் வரவு பார்த்தே. 698

கெண்டை ஒண் கண் மடவாள் ஒருத்தி
கீழை அகத்துத் தயிர் கடையக்
கண்டு, ஒல்லை நானும் கடைவன் என்று
கள்ளவிழியை விழித்துப் புக்கு,
வண்டு அமர் பூங்குழல் தாழ்ந்து உலாவ,
வாள்முகம் வேர்ப்ப, செவ்வாய் துடிப்ப,
தண் தயிர் நீ கடைந்திட்ட வண்ணம்
தாமோதரா! மெய் அறிவன் நானே. 699

கருமலர்க் கூந்தல் ஒருத்திதன்னைக்
கடைக்கணித்து, ஆங்கே ஒருத்திதன்பால்
மருவி மனம் வைத்து, மற்றொருத்திக்கு
உரைத்து, ஒரு பேதைக்குப் பொய் குறித்து,
புரிகுழல் மங்கை ஒருத்திதன்னைப்
புணர்தி: அவளுக்கும் மெய்யன் அல்லை.
மருது இறுத்தாய்! உன் வளர்த்தியூடே
வளர்கின்றதால் உன்தன் மாயை தானே. 700

தாய்முலைப் பாலில் அமுதிக்கத்
தவழ்ந்து தளர்நடையிட்டுச் சென்று
பேய்முலை வாய்வைத்து நஞ்சை உண்டு
பித்தன் என்றே பிறர் ஏச நின்றாய்;
ஆய்மிகு காதலோடு யான் இருப்ப,
யான் விட வந்த என் தூதியோடே
நீ மிகு போகத்தை நன்கு உகந்தாய்;
அதுவும் உன் கோரம்புக்கு ஏற்கும் அன்றே. 701





## ஆய்ச்சியர் கண்ணனை ஊடி உரைத்தல்

வாசுதேவா! மணம் மிகுந்த பூக்களைச் சூடிய இடைப் பெண்கள் பலர் வாழும் இவ்வூரில் நான் உன் மார்பைத் தழுவ ஆசைகொள்ள வில்லை என்றாலும் நீ பொய்வார்த்தை கூறி என்னை ஏமாற்றுகிறாயே! மழை பெய்தது போலப் பனி கொட்டுகிற காலத்தில் குளிரில் அகப்பட்டு, நடுங்கியவாறு மணல் மேடு உள்ள யமுனை ஆற்றங்கரையில் உன் வரவை எதிர் பார்த்துப் பொழுது விடியும் அளவும் இரவெல்லாம் நின்றேனே! 698

தாமோதரா! கீழ வீட்டில் கயல் மீனை ஒத்த கண்ணழகுடைய பெண் தயிர் கடைவதைப் பார்த்து 'நானும் விரைவில் கடைவேன்' என்று கூறிக் கள்ளத்தனமாக விழித்தபடி அவளிடத்தே போய், நீ தயிர் கடைந்ததை நான் அறிவேன். நீ தயிர் கடைந்த பொழுது, வண்டமர்ந்த பூக்கள் சூடிய உன் தலைமயிர்தாழ்ந்து அசைய, முகத்தில் வியர்வை அரும்ப, சிவந்த வாய்துடித்த அழகைக் கண்டு மனம் இழந்தேனே! 699

மருதமரங்களை முறித்த கண்ணா! கறுத்த தலையில் பூச்சூடிய ஒரு பெண்ணை நீ கடைக்கண்ணால் பார்த்தாய்; ஆயினும் இன்னொருத்தியிடம் சென்று மனம் கலந்தாய்; இரண்டு பெண்களையும் உதறிவிட்டு, வேறு ஒருத்தியிடம் 'உன் அடிமை நான்' என்று பேசினாய். பேதைப்பெண் ஒருத்தியிடம் வருவதாகப் பொய் சொல்லி, அழகிய கூந்தலுடைய மற்றொரு பெண்ணுடன் கலந்தாய் அவளுக்காவது நீ உண்மையனா? ஐயோ! 700

யசோதைத்தாயிடம் அமுதம் போன்ற பால் இருக்க அவளிடம் பால் அருந்தாமல், தளிர் நடையில் தவழ்ந்து போய் பேய் வடிவில் வந்த பூதனையின் நஞ்சு கலந்த முலைப்பால் அருந்தி பித்தன் என்று பிறர் பேசும்படி நின்றாய். நான் உன்னிடம் மிகுந்த காதலுடன் இருக்கவும், நீ நான் உன்னிடம் அனுப்பிய வேலைக்காரியுடன் இன்பத்தை உகந்தாய். உன் தீமைக்கு இது தகுதியான செயலே ஆகும். 701

மின்னொத்த நுண்ணிடையாளைக் கொண்டு
வீங்கு இருள்வாய் என்தன் வீதியூடே
பொன்னொத்த ஆடை குக்கூடலிட்டுப்
போகின்ற போது, நான் கண்டு நின்றேன்;
கண்ணுற்றவளை நீ கண்ணாலிட்டுக்
கை விளிக்கின்றதும் கண்டே நின்றேன்;
என்னுக்கு அவளை விட்டு இங்கு வந்தாய்?
இன்னம் அங்கே நட, நம்பி! நீயே. 702

மற் பொரு தோள் உடை வாசுதேவா!
வல்வினையேன் துயில் கொண்டவாறே
இற்றை இரவிடை ஏமத்து என்னை
இன்னணைமேல் இட்டு அகன்று நீ போய்,
அற்றை இரவும் ஓர் பிற்றை நாளும்
அரிவையரோடும் அணைந்து வந்தாய்;
எற்றுக்கு நீ என் மருங்கில் வந்தாய்?
எம்பெருமான்! நீ எழுந்தருளே. 703

பையரவின் அணைப் பள்ளியினாய்!
பண்டையோம் அல்லோம் நாம்; நீ உகக்கும்
மையரி ஒண் கண்ணினாரும் அல்லோம்;
வைகி எம் சேரி வரவு ஒழி நீ.
செய்ய உடையும் திருமுகமும்
செங்கனிவாயும் குழலும் கண்டு
பொய் ஒரு நாள் பட்டதே அமையும்;
புள்ளுவம் பேசாதே போகு, நம்பீ! 704

என்னை வருக எனக் குறித்திட்டு,
இனமலர் முல்லையின் பந்தர்நீழல்
மன்னி அவளைப் புணரப் புக்கு,
மற்று என்னைக் கண்டு உழறா நெகிழ்ந்தாய்;
பொன்னிற ஆடையைக் கையில் தாங்கிப்
பொய்அச்சம் காட்டி நீ போதியேலும்,
இன்னம் என் கையகத்து ஈங்கு ஒரு நாள்
வருதியேல், என் சினம் தீர்வன் நானே. 705

மங்கலநல் வனமாலை மார்வில்
இலங்க, மயில்தழைப் பீலி சூடி,
பொங்குஇள ஆடை அரையிற் சாத்தி,
பூங்கொத்துக் காதிற் புணரப் பெய்து,
கொங்குநறுங் குழலார்களோடு
குழைந்து குழல் இனிது ஊதி வந்தாய்;
எங்களுக்கே ஒருநாள் வந்து ஊத
உன் குழலின் இசை போதராதே? 706





*கண்ணா! நீ மின்னல் போன்ற நுட்பமான இடையுடைய ஒரு பெண்ணை அணைத்தவாறு கும்மிருட்டிலே பொன்னாடையை முட்டாக்கிட்டுக்கொண்டு என் தெரு வழியாகப் போவதை நான் பார்த்தேன். உன் கண்ணிற்பட்ட இன்னொரு பெண்ணிடம் கண் சாடை செய்து கையால் அழைப்பதையும் கண்டேன். அப் பெண்ணைவிட்டு என்னிடம் எதற்காக நீ வந்தாய்? நம்பீ! இனியும் அங்கேயே போவாய்.* 702

*மல்லருடன் போரிட்ட தோளுடைய வாசுதேவா! கொடிய வினை செய்த நான் தூங்கிய பின் இரவு நடுச்சாமத்தே என்னைப் படுக்கையில் விட்டு, நீ அகன்று போய் அன்றிரவும் மறு நாளும் பெண்களுடன் கலந்து வந்தாய். இப்படிச் செய்த நீ என் பக்கம் எதற்கு வருகிறாய்? எம்பெருமானே! நீ என்னைவிட்டுப் போ.* 703

*படங்கள் கொண்ட ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டவனே! உன் வஞ்சனைக்கு அகப்பட்ட நாங்கள் முன்பு போல் இல்லை. நீ விரும்பும் மைக்கண்களுடைய பெண்கள் அல்லோம். நீ எங்களிடம் வர வேண்டாம். உன் அழகிய ஆடை, சிவந்த கோவைப் பழம் ஒத்தவாய், மயிர்முடி, ஆகியவற்றால் மயங்கிய நாங்கள் உன் பொய்ப் பேச்சை உண்மை என நம்பி ஒரு நாள்பட்டது போதும். வஞ்சகம் பேசாமல் இங்கிருந்து போ.* 704

*என்னை வா என்று ஒரு தனியிடம் குறிப்பிட்டுக்கூறி, வராமல், முல்லைப் பூப் பந்தல் நிழலிலே கிடந்தவளைக் கூடுவதற்குச் சென்றாய். என்னைப் பார்த்த உடன் கலங்கி, நகர்ந்து, பீதாம் பரத்தைக் கையில் தூக்கியவாறு பயந்தவன் போல நடித்து நீ தப்பிப்போனாய். இனி, இங்கு என் அகம் ஒரு நாள் ஆகில் வருவாய் அல்லவா? அப்பொழுது உன் மீதுள்ள என் கோபத்தைத் தீர்த்துக் கொள்கிறேன்.* 705

*மங்கல நல் வனமாலை மார்பில் விளங்க, தழைத்த மயில் பீலிகளை முடியிலே சூடிக்கொண்டு, திருவரையில் மெல்லிய ஆடை உடுத்தியவனாய் பூங்கொத்துக்களைக் காதில் பொருத்தமாக அணிந்து, மணம் வீசும் கூந்தலுடைய பெண்களுடன் குழைந்தவாறு புல்லாங்குழல் ஊதியபடி நீ நடந்து வந்தாய். ஒரு நாளாவது எங்களுக்காகக் குழல் ஊத வரமுடியாது போலும்! உன் குழலிசை எங்களுக்குப் பொருந்தாதோ?* 706

அல்லி மலர்த் திருமங்கை கேள்வன்
தன்னை நயந்து இள ஆய்ச்சிமார்கள்
எல்லிப் பொழுதினில் ஏமத்து ஊடி
எள்கி உரைத்த உரையதனைக்
கொல்லி நகர்க்கு இறை கூடற்கோமான்
குலசேகரன் இன்னிசையில் மேவிச்
சொல்லிய இன் தமிழ் மாலை பத்தும்
சொல்ல வல்லார்க்கு இல்லை துன்பந் தானே. 707

## கண்ணன் விளையாட்டைக்காணப் பெறாத தேவகி புலம்பல்

ஆலை நீள் கரும்பு அன்னவன் தாலோ!
அம்புயத் தடங் கண்ணினன் தாலோ!
வேலை நீர் நிறத்து அன்னவன் தாலோ!
வேழப் போதகம் அன்னவன் தாலோ!
ஏல வார் குழல் என்மகன் தாலோ!
என்று என்று உன்னை என் வாயிடை நிறையத்
தால் ஒலித்திடும் திருவினை இல்லாத்
தாயரிற் கடை ஆயின தாயே. 708

வடிக் கொள் அஞ்சனம் எழுது செம் மலர்க்கண்
மருவி மேல் இனிது ஒன்றினை நோக்கி,
முடக்கிச் சேவடி மலர்ச் சிறு கருந்தாள்
பொலியும் நீர்முகிற் குழவியே போல,
அடக்கியாரச் செஞ் சிறு விரல் அனைத்தும்
அங்கையோடு அணைந்து, ஆனையிற் கிடந்த
கிடக்கை கண்டிடப் பெற்றிலன், அந்தோ!
கேசவா! கெடுவேன், கெடுவேனே! 709

முந்தை நன்முறை அன்பு உடை மகளிர்
முறை முறை தந் தம் குறங்கிடை இருத்தி,
எந்தையே! என்தன் குலப் பெருஞ் சுடரே!
எழு முகிற் கணத்து எழில் கவர் ஏறே!
உந்தை யாவன் என்று உரைப்ப, நின் செங்கேழ்
விரலினும் கடைக்கண்ணினும் காட்ட,
நந்தன் பெற்றனன்; நல்வினை யில்லா
நங்கள்கோன் வாசுதேவன் பெற்றிலனே. 710





*தாமரைப் பூவில் தங்கும் திருமகள் நாதனை இளமையான இடைப் பெண்கள் ஆசைப்பட்டு இரவின் நடுச் சாமத்திலே ஊடிப் பேசியவற்றைக் கொல்லி, கூடல் நகர்களுக்கு அரசரான குலசேகரர் இசையிலே அருளிய தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் பயில்பவர்க்குத் துன்பம் இல்லை.* 707

## கண்ணன் விளையாட்டைக்காணப் பெறாத தேவகி புலம்பல்

*“ஆலையில் இடுவதற் கேற்றபடி நீண்டு வளர்ந்த கரும்பு போன்று இனிய கண்ணா! தாலேலோ! தாமரைப் பூக்கண்ணுடையாய் தாலேலோ! கடல் நிறம் உடையவனே தாலேலோ! யானைக் குட்டி போன்றவா தாலேலோ! மணம் வீசும் நீண்ட தலை மயிருடைய என் மகனே தாலேலோ” என்றெல்லாம் பல தடவைகள் என் வாய் நிறையப் பாடி உன்னைத் தாலாட்டும் பாக்கியம் எனக்கில்லையே! உலகத்துத் தாய்மார்களில் கடையவளாகி நிற்கிறேனே!* 708

*கேசவா! அழகாக மை தீட்டப்பட்ட உன் செந்தாமரைக் கண்களால் தொட்டில் மேற்கட்டியில் தொங்கும் விளையாட்டுப் பொருளைப் பார்ப்பாய்; கறுத்த புறந்தாளுடன் கூடிய செந்தாமரைப் பாதத்தை முடக்கிக் கொள்வாய். நீருண்ட கருமேகம் போன்ற நீ, உன் அழகிய சிறு விரல்களை உள்ளங்கையுடன் அடங்கும்படி மடித்துக் கொண்டு யானைக்குட்டி போலப் பள்ளி கொண்ட அழகை அனுபவிக்கப் பெறாத பாவியானேன்! ஐயோ!* 709

*கண்ணா! பண்டைக்காலம் தொட்டே நல்ல உறவுடைய பெண்கள் அன்பு மீதூறத் தத்தம் தொடைகளில் உன்னை முறைப் படி வைத்துக் கொள்வார்கள். “என் அப்பா! எங்கள் குல விளக்கே! ஏழு வகை மேகங்களின் அழகை ஒரு சேரக் கொண்ட சிங்கமே! உன் அப்பா எங்கே என்று காட்டு” என்று கேட்டதும், நீ உன் சிவந்த விரல்களால் சுட்டிக் கடைக் கண்ணால் நோக்கி, நந்த கோபரைக் காட்டுவாயே! ஐயோ! அப்பாக்கியத்தை நல்வினை இல்லாத வசுதேவர் பெறவில்லையே!* 710

களிநிலா எழில் மதிபுரை முகமும்,
கண்ணனே! திண்கை மார்வும், திண்தோளும்,
தளிர்மலர்க் கருங் குழற் பிறையதுவும்,
தடங்கொள் தாமரைக் கண்களும் பொலிந்த
இளமைஇன்பத்தை இன்று என்தன் கண்ணால்
பருகுவேற்கு இவள் தாய்என நினைந்த
அளவில் பிள்ளைமை - இன்பத்தை இழந்த
பாவியேன் எனது ஆவி நில்லாதே. 711

மருவும்நின் திருநெற்றியிற் சுட்டி
அசைதர, மணிவாயிடை முத்தம்
தருதலும், உன்தன் தாதையைப் போலும்
வடிவு கண்டுகொண்டு உள்ளம் உள் குளிர,
விரலைச் செஞ் சிறுவாயிடைச் சேர்த்து
வெகுளியாய் நின்று உரைக்கும் அவ் உரையும்
திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன்; எல்லாம்
தெய்வ நங்கை யசோதை பெற்றாளே. 712

தண்அந் தாமரைக் கண்ணனே! கண்ணா!
தவழ்ந்து எழுந்து தளர்ந்ததோர் நடையால்
மண்ணிற் செம்பொடி ஆடி வந்து என்தன்
மார்வில் மன்னிடப் பெற்றிலேன்; அந்தோ!
வண்ணச் செஞ்சிறு கைவிரல் அனைத்தும்
வாரி வாய்க்கொண்ட அடிசிலின் மிச்சில்
உண்ணப் பெற்றிலேன்; ஓ! கொடு வினையேன்!
என்னை என் செய்யப் பெற்றது எம் மோயே! 713

குழகனே! என்தன் கோமளப் பிள்ளாய்!
கோவிந்தா! என் குடங்கையில் மன்னி!
ஒழுகுபேர் எழில் இளஞ்சிறு தளிர்போல்
ஒரு கையால் ஒரு முலைமுகம் நெருடா,
மழலை மென்னகை இடையிடை அருளா,
வாயிலே முலை இருக்க, என் முகத்தே
எழில்கொள் நின் திருக் கண்ணிணை நோக்கந்
தன்னையும் இழந்தேன், இழந்தேனே! 714

முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டு உண்ணும்
முகிழ் இளஞ் சிறுத் தாமரைக் கையும்,
எழில்கொள் தாம்பு கொண்டு அடிப்பதற்கு எள்கு
நிலையும், வெண் தயிர் தோய்ந்த செவ்வாயும்,
அழுகையும், அஞ்சி நோக்கும் அந் நோக்கும்,
அணிகொள் செஞ் சிறுவாய் நெளிப்பதுவும்,
தொழுகையும்; இவை கண்ட அசோதை
தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே. 715





கண்ணா! களிப் பூட்டும் முழுச்சந்திரனை ஒத்தமுகம், திண்மையான கைகள், தோள்கள், மார்பு ஆகியவற்றுடன் கூடிய உன் அழகைப் பார்க்கிறேன். தளிர்களுடன் பூச் சூடிய கறுத்த தலைமயிருக்குக் கீழே உன் நெற்றிப் புருவம் மூன்றாம் பிறையைப் போல உள்ளது. தாமரைக் கண்கள் பெற்ற அழகுக் குமரன் ஆக, இன்று உன்னைக் கண்டு மகிழ்கிறேன். ஆயினும், தாயை மட்டுமே தெரிந்து கொள்ளும் கைக் குழந்தைப் பருவத்தின் பிள்ளைமை இன்பத்தை இழந்தேன். இப்பாவியேனுக்கு, அவ்விழப்பின் நினைவால் உயிர் நிற்கவில்லை. 711

உன் திருநெற்றியில் விளங்கும் சுட்டி அசைய, அழகிய வாயால் நீ முத்தம் கொடுப்பதும், உன் வடிவில், உன் தந்தையின் அழகைக் கண்டு மனம் குளிரப் பெறுவதும் ஆகிய பேறுகளை நான்பெறவில்லை. சிவந்த உன் வாயில் விரல்களைச் சேர்த்துக் கோபமாகப் பேசும் உன் மழலைச் சொற்களைக் கேட்கப் பெறவில்லை. இப் பாக்கியங்களைத் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே! 712

குளிர்ந்த தாமரைப் பூக்கண்களை உடைய கண்ணனே! நீ, தவழ்ந்து, எழுந்து, தடுமாற்றத் தளர் நடையில், செம் மண்ணில் விளையாடி வந்து, என் மார்பில் அப்புழுதியுடன் தழுவப் பெறும் பாக்கியத்தை இழந்தேனே! அந்தோ! சிறிய உன் அழகான விரல்களால் வாரி உண்ட, எச்சில் சாதத்தை நான் சாப்பிடக் கொடுத்து வைக்கவில்லையே! என் தாய் எதற்காக, என்னைப் பெற்றாள்? ஐயோ! 713

கொஞ்சிப் பேசும் என் அழகான கோவிந்தனே! உன்னை என் கையில் ஏந்திப் பாலூட்டும் நேரத்தே, அழகொழுகும் உன் இளஞ்சிறு தளிர்க்கை ஒன்றால் ஒரு முலைக்காம்பை நெருடியவாறு, மற்றொன்றிலே வாய் வைத்து, நடுநடுவே, உன்னிரண்டு அழகுக் கண்களால் என் முகம் பார்த்துப் புன்னகை செய்வாய் அன்றோ! இந்த அழகிய இன்பத்தை நான் இழந்துவிட்டேனே! 714

குடத்திலுள்ள வெண்ணெயை அளைந்து தொட்டுத் தொட்டுச் சாப்பிடும் இளந்தளிர்த் தாமரைப் பூப் போன்ற கைகளும், அழகிய தாம்புக் கயிற்றால் அடிப்பதற்கு முன்னே பயந்து நிற்கும் நிலையும், வெளுத்ததயிர் தோய்ந்த சிவந்த வாயும், அழுகை நடிப்பும், பயந்ததே போன்ற பார்வையும், அழகிய சிவந்த உதட்டை நெளிப்பதுவும், முடிவில் கையால் தொழுவதும் ஆகிய கண்ணனின் செயல்களைக் கண்ட யசோதை எல்லை இல்லாத குழந்தை அனுபவத்தில் முடிவையே கண்டாள். 715

குன்றினால் குடை கவித்ததும், கோலக்
குரவை கோத்ததுவும், குடமாட்டும்,
கன்றினால் விளவு எறிந்ததும், காலால்
காளியன் தலை மிதித்ததும், முதலா
வென்றி சேர் பிள்ளை நல் விளையாட்டம்
அனைத்திலும் அங்கு என் உள்ளம் உள்குளிர,
ஒன்றும் கண்டிடப் பெற்றிலேன்; அடியேன்,
காணுமாறு இனி உண்டெனில், அருளே. 716

வஞ்சம் ஏவிய நெஞ்சு உடைப் பேய்ச்சி
வரண்டு நார் நரம்பு எழக் கரிந்து உக்க
நஞ்சம் ஆர்தரு சுழிமுலை, அந்தோ!
சுவைத்து நீ அருள்செய்து வளர்ந்தாய்!
கஞ்சன் நாள் கவர் கருமுகில் எந்தாய்!
கடைப்பட்டேன் வறிதே முலை சுமந்து,
தஞ்ச மேல் ஒன்றிலேன் உய்ந்திருந்தேன்;
தக்கதே நல்ல தாயைப் பெற்றாயே! 717

மல்லை மா நகர்க்கு இறையவன்தன்னை
வான் செலுத்தி வந்து ஈங்கு அனை மாயத்து
எல்லையில் பிள்ளை செய்வன காணாத்
தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்
கொல்லி காவலன் மால் அடி முடிமேல்
கோலமாம் குலசேகரன் சொன்ன
நல்லிசைத் தமிழ் மாலை வல்லார்கள்
நண்ணுவார் ஒல்லை நாரணன் உலகே. 718

## இராமனைத் தாலாட்டுதல்

மன்னு புகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே!
தென் இலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்தாய்! செம்பொன்சேர்
கன்னி நன் மா மதில் புடைசூழ் கணபுரத்து என் கருமணியே!
என்னுடைய இன்னமுதே! இராகவனே! தாலேலோ! 719

புண்டரிக மலரதன்மேல் புவனி எல்லாம் படைத்தவனே!
திண் திறலாள் தாடகைதன் உரம் உருவச் சிலை வளைத்தாய்!
கண்டவர்தம் மனம் வழங்கும் கணபுரத்து என் கருமணியே!
என் திசையும் ஆளுடையாய்! இராகவனே! தாலேலோ! 720





மலையைக் குடையாய்த் தூக்கியதும், குரவைக் கூத்து, குடக் கூத்து ஆகியவற்றை அழகாக ஆடியதும், கன்றாய் வந்த அசுரனை விளாங்காயான அசுரன் மீது எறிந்து கொன்றதும், காலால் காளிய நாகத்தின் தலையை உதைத்ததும் ஆகிய பிள்ளை விளையாட்டுகளில் ஒன்றையாவது, மனம் மகிழத் திருவாய்ப் பாடியில் காணும் பேற்றை அடியேன் பெறவில்லை. இனியாவது அவற்றைக் காணும் வழி உண்டானால் அருள வேண்டும். 716

கபட மனத்துடன் வந்த பூதனைப் பேயின் விஷ முலையைச் சுவைத்து, அவள் வரண்டு போம்படி, நார் நரம்புகளைக் கருகச்செய்து வதைத்த கண்ணா! கம்சன் ஆயுளை முடித்த நீல மேக நிறத்தவனே! உனக்குப் பாலூட்டாததால், நான் வீணாக முலையைச் சுமந்து கீழ்ப்பட்டேன். வேறு தஞ்சம் எதுவும் இல்லாத நான் உன்னைக் காண உயிருடன் வாழ்கிறேன். தகுதியான நல்ல தாயை நீ அடைந்து விட்டாய். 717

வளமுடைய மதுரைக்கு அரசனான கம்சனை வானுலகு அனுப்பிவிட்டுப்பின் ஆய்ப்பாடிக்கு வந்து பலவகையான எல்லையற்ற திருவிளையாடல்களைச் செய்த கண்ணன் செயல்களைக் காணப் பெறாத தெய்வத் தேவகியின் புலம்பலைக் கொல்லி அரசர் குலசேகரர் பாடினார். திருமால் திருவடியைத் தம்முடியிற்சூடிய அவர் அருளிய தமிழ்மாலையை ஓதுபவர்கள் சீக்கிரம் பரம பதம் அடைவார்கள். 718

## இராமனைத் தாலாட்டுதல்

நிலைத்த புகழுடைய கோசலையின் அழகியவயிற்றில் அவதரித்தவனே! தென்திசை இலங்கை அரசன் இராவணனின் பத்துத்தலைகளையும் அம்புகளால் சிதறச்செய்தவனே! செம்மையான தங்கத்தால் ஆன அழிவற்ற மதிள்களால் சூழப்பட்ட திருக்கண்ணபுரப் பெருமானே! என் கண்மணி போன்றவனே! என் இனிய அமுதே! ஸ்ரீ ராமா! உன்னைத் தாலாட்டுகிறேன். 719

கொப்பூழில் தாமரைப் பூவில் பிரமனை உண்டாக்கி, அவன் மூலம் உலகங்களைப் படைத்தவனே! பலம் பொருந்திய தாடகையின் மார்பை ஊடுருவிச் செல்லும்படி வில்லை வளைத்து அம்பு எய்தவனே! வணங்குபவர் தம் மனம் இழந்து, இசையும் படியான அழகுடன், திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளிய நீலமாணிக்கமே! எட்டுதிக்குகளையும் ஆள்பவனே! இராகவா! தாலேலோ. 720

கொங்கு மலி கருங்குழாள் கௌசலைதன் குலமதலாய்!
தங்கு பெரும் புகழ்ச்சனகன் திருமருகா! தாசரதீ!
கங்கையிலும் தீர்த்தமலி கணபுரத்து என் கருமணியே!
எங்கள் குலத்து இன்னமுதே! இராகவனே! தாலேலோ! 721

தாமரைமேல் அயனவனைப் படைத்தவனே! தயரதன்தன்
மாமதலாய்! மைதிலிதன் மணவாளா! வண்டினங்கள்
காமரங்கள் இசைபாடும் கணபுரத்து என் கருமணியே!
ஏமருவும் சிலை வலவா! இராகவனே! தாலேலோ! 722

பார்ஆளும் படர் செல்வம் பரத நம்பிக்கே அருளி,
ஆராஅன்பு இளையவனோடு அருங்கானம் அடைந்தவனே!
சீர்ஆளும் வரை மார்பா! திருக் கண்ணபுரத்து அரசே!
தார்ஆரும் நீண் முடி என் தாசரதீ! தாலேலோ! 723

சுற்றம் எல்லாம் பின் தொடரத் தொல் கானம் அடைந்தவனே!
அற்றவர்கட்கு அருமருந்தே! அயோத்தி நகர்க்கு அதிபதியே!
கற்றவர்கள் தாம் வாழும் கணபுரத்து என் கருமணியே!
சிற்றவைதன் சொற் கொண்ட சீராமா! தாலேலோ! 724

ஆலின்இலைப் பாலகனாய் அன்று உலகம் உண்டவனே!
வாலியைக் கொன்று அரசு இளைய வானரத்துக்கு அளித்தவனே!
காலின்மணி கரை அலைக்கும் கணபுரத்து என் கருமணியே!
ஆலிநகர்க்கு அதிபதியே! அயோத்திமனே! தாலேலோ! 725

மலையதனால் அணை கட்டி மதில்இலங்கை அழித்தவனே!
அலைகடலைக் கடைந்து அமரர்க்குஅமுது அருளிச்செய்தவனே!
கலைவலவர்தாம் வாழும் கணபுரத்து என் கருமணியே!
சிலைவலவா! சேவகனே! சீராமா! தாலேலோ! 726

தளைஅவிழும் நறுங் குஞ்சித் தயரதன்தன் குல மதலாய்!
வளையஒரு சிலையதனால் மதில்இலங்கை அழித்தவனே!
களைகழுநீர் மருங்கு அலரும் கணபுரத்து என் கருமணியே!
இளையவர்கட்கு அருள் உடையாய்! இராகவனே! தாலேலோ! 727





மணம் நிறைந்த கறுத்த கூந்தலை உடைய கோசலையின் குலத்தை வாழ்விக்க வந்தவனே! புகழ் உடைய ஜனக மன்னன் மருகனே! தசரதன் புதல்வனே! கங்கையினும் புண்ணியம் மிகுந்த திருக்கண்ணபுரத்தில் உள்ள என் கருமணியே! எங்கள் குலத்தின் இனிய அமுதே; இராகவா! தாலேலோ. 721

கொப்பூழ்த் தாமரையில் பிரமனைப் படைத்தவனே! தசரதனின் மூத்த புதல்வனே! சீதையின் மணவாளனே! வண்டுகள் கூடிக் காமரம் என்னும் பண்ணைப்பாடும் சிறப்புடைய கண்ண புரத்துக் கருமணியே! எய்வதில் வல்ல சார்ங்க வில்லை ஆளும் வல்லவா! இராகவா! தாலேலோ. 722

உலகத்தாட்சிச் செல்வத்தைப் பரதனுக்குக் கொடுத்தருளி, ஆராத அன்புடைய இலக்குவனுடன் அருமையான காடு அடைந் தவனே! வீரத் திரு ஆளும் மார்புடைய திருக்கண்ணபுரத்தரசே! மாலை சூடிய முடி உடைய தசரத புதல்வனே! இராமா! தாலேலோ. 723

சுற்றத்தார் பின்னேவரப் பழைய காட்டிற்குச் சென்றவனே! அற்றுத் தீர்ந்த அடியார்களுக்கு சிறந்த மருந்தானவனே! அயோத்தி அரசே! கல்வியில் வல்லவர் வாழும் திருக்கண்ணபுர மணியே! சிறியதாய் கைகேயி சொல்லுக்குக் கீழ்ப்படிந்த ஸ்ரீராமனே! தாலேலோ. 724

பிரளய காலத்தில் ஆலந்தளிரில் குழந்தையாய், உலகுகளை வயிற்றில் வைத்துக் காத்தவனே! வாலியை வதம் செய்து அவன் தம்பிக்கு அரசு அளித்தவனே! காற்றடித்து, மணிகளைக் கரையிலே சேர்க்கும் கண்ணபுரத்தில் உள்ளவனே! திருவாலி நகரத் தலைவனே! அயோத்தி அரசே! தாலேலோ. 725

மலைகளால் அணைகட்டி, மதிள்சூழ்ந்த இலங்கை சென்று இராவணனை அழித்தவனே! அலைகளுடைய கடலைக்கடந்து, அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தருளியவனே! கலைஞர்கள் வாழும் கண்ணபுரத்தில் உள்ள என் கருமணியே! வில்வளைக்கும் வீரனான ஸ்ரீராமா! தாலேலோ. 726

கட்டவிழும் மணம் மிகுந்த மயிர் முடியுடைய, தசரத புதல்வனே! ஒப்பற்ற வில்லை வளைத்து அம்பெய்து மதிள் சூழ்ந்த இலங்கையை அழித்தவனே! களைகளாகப் பறிக்கப்பட்டுப் போடப் பட்ட செங்கழு நீர்ப்பூக்கள் சுற்றிலும் மலர்ந்தபடியே காட்சி தரும் திருக்கண்ணபுரத்துக் கருமணியே! தம்பிகளிடத்தே மிகுந்த அன்புடைய இராகவனே! தாலேலோ! 727

தேவரையும் அசுரரையும் திசைகளையும் படைத்தவனே!
யாவரும் வந்து அடிவணங்க, அரங்கநகர்த் துயின்றவனே!
காவிரி நல்நதி பாயும் கணபுரத்து என் கருமணியே!
ஏவரி வெஞ்சிலை வலவா! இராகவனே! தாலேலோ! 728

கன்னிநன் மா மதில் புடைசூழ் கணபுரத்து என் காகுத்தன்
தன்அடிமேல் தாலேலோ என்று உரைத்த தமிழ்மாலை
கொல்நவிலும் வேல் வலவன் குடைக் குலசேகரன் சொன்ன
பன்னியநூல் பத்தும் வல்லார் பாங்காய பத்தர்களே. 729

## தசரதன் புலம்பல்

வன்தாளின்இணை வணங்கி வளநகரம் தொழுது ஏத்த
மன்னன் ஆவான்
நின்றாயை, அரியணை மேல் இருந்தாயை, நெடுங் கானம்
படரப் போகு
என்றாள்: எம் இராமாவோ! உனைப் பயந்த கைகேசி
தன் சொற் கேட்டு
நன்றாக நானிலத்தை ஆள்வித்தேன், நன்மகனே!
உன்னை நானே. 730

வெவ்வாயேன் வெவ்வுரை கேட்டு இருநிலத்தை வேண்டாதே,
விரைந்து வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து மாவொழிந்து
வனமே மேவி,
நெய்வாய வேல் நெடுங்கண் நேரிழையும் இளங்கோவும்
பின்பு போக,
எவ்வாறு நடந்தனை? எம் இராமாவோ! எம்பெருமான்!
என் செய்கேனே! 731

கொல் அணை வேல் வரி நெடுங் கண் கௌசலைதன் குலமதலாய்
குனி வில் ஏந்தும்
மல் அணைந்த வரைத் தோளா! வல் வினையேன் மனம்உருக்கும்
வகையே கற்றாய்!
மெல் அணைமேல் முன் துயின்றாய், இன்னு இனிப்போய்
வியன்கான
மரத்தின் நீழல்
கல் அணைமேல் கண் துயிலக் கற்றனையோ? காகுத்தா?
கரிய கோவே! 732





தேவர்களையும் அசுரர்களையும் திசைகளையும் படைத்தவனே! எல்லோரும் வந்து வணங்கும் படியாய்த் திருவரங்கத்தில் பள்ளி கொண்டவனே! நன்மை புரியும் காவிரி ஆறுபாயும் கண்ணபுரத்துக் கருமணியே! எய்வதில் வல்லவனாய், வில்லை ஆளும் இராகவனே! தாலேலோ! 728

என் இறைவன் காகுத்தனான ஸ்ரீ இராமன் பற்றிக் கோசலை தாலாட்டாகச் சொன்னவற்றை, வேலாயுதம் தாங்கிய வல்லவரும் கொற்றக்குடை உடைய வருமான குலசேகரர், அழியாத மதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரப் பெருமாள் மேல் பாடினார். பரம்பிய இப்பத்துத் தமிழ்ப் பாசுரங்களை ஓதவல்லவர்கள் பாங்குடன் எம்பெருமான் பக்தர்கள் ஆவர். 729

## தசரதன் புலம்பல்

எம்முடைய இராமனே! வளமுடைய அயோத்தி நகர மக்கள் உன்னைத் தொழுது அரசனாகத் திருமுடிசூட வேண்டியதும், ஸ்ரீமந் நாராயணனின் இருதிருவடிகளைத் தொழுது, சிம்மாசனம் ஏறத்தயாராய் இருந்த உன்னிடம், 'நெடிய காடு போ' என்று கைகேயி கூறினாள். நல்ல மகனே! உன்னைப் பெற்ற கைகேயி சொற்கேட்டு, நான் உன்னை உலகாளச் செய்தது எப்படி உள்ளது? மிக நல்லது!! (அதாவது வெட்கக் கேடு) 730

எம் இராமனே! கொடிய வாயுடைய என் சொற்கேட்டு, பூமியை வேண்டாம் என்று சீக்கிரமாகவே, வெற்றியுடைய மை நிறயானையும் தேரையும், குதிரையையும் விட்டுவிட்டுக் காடு அடைந்தாயே! நெய் பூசப்பட்ட வேல் போன்ற கண்ணுடைய சீதையும் இலக்குவனும் பின்வர, கால்நடையாகக் காட்டில் சென்றாயே! எம்பெருமானே! நான் என் செய்கேன்? 731

கொல்லும் வேலாயுதம் போன்ற செவ்வரிபடர்ந்த கண்களை உடைய கோசலாதேவியின் குலம் விளங்க வந்தவனே! வளைந்தவில் ஏந்திய பலமுடைய மலை போன்ற தோள் உடையவனே! பெரும் பாவியான என் மனத்தை அழகால் உருகச் செய்தோனே! காகுத்தனே! கரிய நிறத்தவனே! முன் பெல்லாம் மென்மையான மெத்தையில் படுத்துப் பழக்கமான நீ, இன்று அகன்ற காட்டில் இலையில்லாத மரத்தின் நிழலில் கற்களையே படுக்கையாகக் கொண்டு தூங்கக் கற்றாயா? 732

வா, போகு, வா, இன்னம் வந்து ஒருகால் கண்டுபோ,
மலராள் கூந்தல்
வேய்போலும் எழில்தோளி தன்பொருட்டா விடையோன்தன்
வில்லைச் செற்றாய்!
மா போகு நெடுங் கானம் வல்வினையேன் மனம் உருக்கும்
மகனே! இன்று
நீ போக, என் நெஞ்சம் இரு பிளவாய்ப் போகாதே
நிற்குமாறே! 733

பொருந்தார் கை வேல்நுதிபோல் பரல் பாய, மெல்லடிகள்
குருதி சோர,
விரும்பாத கான் விரும்பி, வெயில் உறைப்ப, வெம் பசிநோய்
கூர, இன்று
பெரும்பாவியேன் மகனே! போகின்றாய், கேகயர்கோன்
மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற் கேட்ட அருவினையேன் என் செய்கேன்!
அந்தோ! யானே. 734

அம்மா! என்று உகந்து அழைக்கும் ஆர்வச்சொல் கேளாதே,
அணி சேர் மார்வம்
என் மார்வத்திடை அழுந்தத் தழுவாதே, முழுசாதே,
மோவாது உச்சி,
கைம்மாவின் நடை அன்ன மென்னடையும் கமலம் போல்
முகமும் காணாது,
எம்மானை என் மகனை இழந்திட்ட இழிதகையேன்
இருக்கின்றேனே! 735

பூ மருவு நறுங்குஞ்சி புன்சடையாப் புனைந்து, பூந்
துகில் சேர் அல்குல்
காமர் எழில் விழல் உடுத்து, கலன் அணியாது, அங்கங்கள்
அழகு மாறி,
ஏ மரு தோள் என் புதல்வன் யான் இன்று செலத்தக்க
வனம் தான் சேர்தல்
தூ மறையீர்! இது தகவோ? சுமந்திரனே! வசிட்டனே!
சொல்லீர் நீரே. 736

பொன் பெற்றார் எழில் வேதப் புதல்வனையும் தம்பியையும்
பூவை போலும்
மின் பற்றா நுண்மருங்குல் மெல்லியல் என் மருகியையும்
வனத்திற் போக்கி,
நின் பற்றா நின் மகன் மேல்பழி விளைத்திட்டு, என்னையும் நீள்
வானில் போக்க,
என் பெற்றாய்? கைகேசி! இரு நிலத்தில் இனிதாக
இருக்கின்றாயே! 737





*இங்கே வா; இனி நீ போகலாம்; மறுபடியும் இங்கே வா. இராமா! மறுபடியும் ஒருமுறை என்னைப் பார்த்து விட்டுப்போ. பூச்சூடிய மூங்கிலை ஒத்த தோளுடைய சீதையைப் பெற, சிவன் வில்லை ஒடித்தாய், பெரும் பாவியான என் மனத்தை உருகச் செய்த மகனே! இன்று நீ யானைகள் திரியும் காட்டிற்குப் போகவும் என் மனம் இரு பிளவாகாமல் இன்னமும் அப்படியே உள்ளதே!* 733

*பகைவர் கையில் பாயும் வேலாயுத நுனி போலப் பரற்கற்கள் காலில் பாயுமே! மெல்லிய பாதங்களிலிருந்து இரத்தம் பெருகக் கொடிய, வெய்யிலில், மிகுந்த பசிநோய் துன்புறுத்தவும், செல்கிறாயே! மகாபாவியான ஏன் மகனே! இன்று நீ விரும்பத்தகாத காட்டிற்கு விருப்பமுடன் போகிறாய். கேகய அரசன் பெற்ற மகளான கைகேயி சொற்கேட்ட அரும்பாவியான, என் வார்த்தையை நீ கேட்டு நடந்தாய்! ஐயோ! நான் என் செய்வேன்!* 734

*'ஐயா!' என்று அழைக்கும் உன் அன்புச் சொல்லைக் கேளாமல் ஆபரணம் அணிந்த உன் மார்பை என் மார்புடன் தழுவாமல், உச்சி முகந்து மகிழாமல், துன்பத்தில் ஆழ்ந்தேனே! யானை போன்ற உன் நடையழகையும் தாமரை போன்ற முகத்தையும் காணாமல் என் மகனை இழந்து விட்டேனே! கீழ்த்தனமான செயல் செய்தும் உயிர் வாழ்கிறேனே!* 735

*தூய்மையான வேதியர்களே! சுமந்திரனே! குரு, வசிஷ்டரே! பூமாறாத திருக்குழலைச் சடையாக்கி, அழகிய பட்டாடை அணியும் அரையில், அதற்குப் பதிலாக, ஆசைப்படத்தகும் தருப்பைக் கயிற்றைக் கட்டி, ஆபரணங்கள் அணியாமல், அங்கங்கள் அழகு, குலைந்து பகைவர் அஞ்சும் தோளுடைய என் மகன், நான் போக வேண்டிய காடு செல்தல் தர்மமோ? தகுமோ? நீங்களே கூறுங்கள்.* 736

*கைகேயீ! கல்விச் செல்வமுடைய வேத விற்பன்னர்களிடம் கற்ற இராமனையும், தம்பி இலக்குவனையும் பூவை போன்ற, மின்னல் இடை உடைய, மென்மையான என் மருமகள் சீதையையும் காடேறவிட்டு, உன் அன்பு மகன் பரதனுக்கு பழி உண்டாக்கிவிட்டு, என்னையும் மேல் உலகம் போகும்படி செய்ததனால், நீ என் பயன் அடைந்தாய்? இவ்வுலகில், இனிதாக, உயிருடன் இருக்கிறாயே!* 737

முன்ஒருநாள் மழுவாளி சிலைவாங்கி அவன்தவத்தை
முற்றும் செற்றாய்;
உன்னையும் உன் அருமையையும் உன்மோயின் வருத்தமும்
ஒன்றாகக் கொள்ளாது
என்னையும் என்மெய்யுரையும் மெய்யாகக் கொண்டுவனம்
புக்களந்தாய்!
நின்னையே மகனாகப் பெறப்பெறுவேன் ஏழ்பிறப்பும்.
நெடுந்தோள் வேந்தே! 738

தேன்நகு மாமலர்க் கூந்தற் கௌசலையும் சுமித்திரையும்
சிந்தை நோவ
கூன் உருவின் கொடுந்தொழுத்தை சொற்கேட்ட கொடியவள்தன்
சொற்கொண்டு, இன்று
கானகமே மிகுவிரும்பி நீதுறந்த வளநகரைத்
துறந்து, நானும்
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்; மனுகுலத்தார்
தங்கள் கோவே! 739

ஏர்ஆர்ந்த கரு நெடுமால் இராமனாய் வனம் புக்க
அதனுக்கு ஆற்றாத்
தார்ஆர்ந்த தடவரைத் தோள் தயரதன் தான் புலம்பிய அப்
புலம்பல்தன்னை
கூர்ஆர்ந்த வேல் வலவன் கோழியர்கோன் குடைக் குல
சேகரன் சொற் செய்த
சீர்ஆர்ந்த தமிழ்மாலை இவை வல்லார் தீ நெறிக்கண்
செல்லார் தாமே. 740

## ஸ்ரீ ராமாயணச் சுருக்கம்

அங்கண் நெடு மதில் புடை சூழ் அயோத்தி என்னும்
அணி நகரத்து உலகு அனைத்தும் விளக்கும் சோதி
வெங் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய்த் தோன்றி
விண் முழுதும் உயக் கொண்ட வீரன்தன்னைச்
செங்கண் நெடுங் கரு முகிலை இராமன்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எங்கள் தனி முதல்வனை எம்பெருமான்தன்னை
என்று கொலோ! கண் குளிரக் காணும் நாளே. 741





முன் ஒரு நாளில் மழு ஏந்திய பரசுராமனின் வில்லை வாங்கி அவன் தவ வலிமையை அழித்தவனே! உன் பெருமையையும் உன்னை மகனாக அடைந்த என் அருமையையும் உன் தாய் கோசலையின் வருத்தத்தையும் பொருட்டாக எண்ணாமல், என் சொல் சத்தியமாக வேண்டும் என்று எண்ணிக் காடு சென்றாயே! என்னப்பா! நீண்ட தோளனே! இனி நான் எடுக்கும் பிறவிகள் தோறும் உன்னையே மகனாய்ப் பெறுவேன். 738

மன்னுகுலத்து அரசனே! தேன் சொட்டும் மலர் சூடிய கோசலையும் சுமித்திரையும் சிந்தையில் வருத்தம் அடைய, கூனியான வேலைக் காரி சொல் கேட்டு நடந்த கொடியவளான கைகேயி ஆணையைக் கொண்டு, நீ காடு சென்றாய். நீ விட்டுச் சென்ற அயோத்தி நகரை நானும் விட்டு, மேல் உலகத்தையே விரும்பிப் போகின்றேன். 739

குணங்கள் நிறைந்த நீல நிறத்திருமால் இராமனாய் அவதரித்துக் காடு சென்ற செயலைத் தாங்காத, வெற்றி மாலை சூடிய தோளுடைய தசரதன் புலம்பிய புலம்பலைக் குலசேகரர் அருளிச் செய்தார். கூர்வேல் தாங்கிய வல்லவரான உறையூர் அரசர் கொற்றக்குடை உடைய, குலசேகரர் அருளிய இத்தமிழ் மாலையைப் பயில்பவர் கெட்ட வழியில் செல்ல மாட்டார்கள். 740

## ஸ்ரீ ராமாயணச் சுருக்கம்

நீண்ட மதிள்கள் சூழ்ந்ததும் அழகான இடங்களுடையதும் ஆன அயோத்தி நகரத்தில், உலகம் முழுவதும் ஒளியுடன் விளங்கும் படியாய் பரஞ்சோதியான ஸ்ரீமந் நாராயணன் சூரிய வம்சத்துக்கு விளக்காக அவதரித்தான். தேவர்கள் வாழ்வு பெற அவதரித்த பெரிய வீரனான இராமன் சிவந்த கண்களை உடைய காளமேகம் போன்றவன். வடிவாலும் செயலாலும் யாவரையும் மகிழ்விக்கும் இராமன் தில்லை நகரிலுள்ள திருச் சித்திரகூடத்தில் எழுந்தருளி உள்ளான். எங்கள் தனி முதலும், தலைவனுமான பெருமானை என் கண்கள் குளிரக் காணப் பெறும் நாள் என்றோ! 741

வந்துஎதிர்ந்த தாடகைதன் உரத்தைக் கீறி
வரு குருதி பொழிதர வன்கணை ஒன்று ஏவி
மந்திரம்கொள் மறை முனிவன் வேள்வி காத்து
வல்லரக்கர் உயிர் உண்ட மைந்தன், காண்மின்:
செந்தளிர்வாய் மலர் நகை சேர் செழுந்தண் சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் ஏத்த
அணிமணி ஆசனத்து இருந்த அம்மான் தானே. 742

செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக்கு ஆகிச்
சினவிடையோன் சிலையிறுத்து, மழுவாள் ஏந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி, வென்றி கொண்டு,
வேல்வேந்தர் பகை தடிந்த வீரன்தன்னைத்
தெவ்வர்அஞ்சு நெடும்புரிசை உயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எவ்வரிவெஞ் சிலைத்தடக்கை இராமன் தன்னை
இறைஞ்சுவார் இணையடியே இறைஞ்சினேனே. 743

தொத்து அலர் பூஞ் சுரிகுழல் கைகேசி சொல்லால்
தொல் நகரம் துறந்து துறைக் கங்கைதன்னைப்
பத்தி உடைக் குகன் கடத்த வனம் போய்ப் புக்கு,
பரதனுக்குப் பாதுகமும் அரசும் ஈந்து,
சித்திரகூடத்து இருந்தான் தன்னை இன்று
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எத்தனையும் கண்குளிரக் காணப் பெற்ற
இருநிலத்தார்க்கு இமையவர் நேர் ஒவ்வார்தாமே. 744

வலி வணக்கு வரை நெடுந்தோள் விராதைக் கொன்று
வண் தமிழ் மா முனி கொடுத்த வரிவில் வாங்கி,
கலை வணக்கு நோக்கு அரக்கி மூக்கை நீக்கி,
கரனோடு தூடணன்தன் உயிரை வாங்கி,
சிலை வணக்கி மான் மறிய எய்தான்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
தலை வணக்கிக் கைகூப்பி ஏத்தவல்லார்
திரிதலால் தவமுடைத்துத் தரணிதானே. 745

தனம் மருவு வைதேகி பிரியல் உற்று,
தளர்வு எய்திச் சடாயுவை வைகுந்தத்து ஏற்றி,
வனம் மருவு கவியரசன் காதல் கொண்டு,
வாலியைக் கொன்று, இலங்கைநகர் அரக்கர்கோமான்
சினம் அடங்க மாருதியாற் சுடுவித்தானைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
இனிது அமர்ந்த அம்மானை இராமன்தன்னை
ஏத்துவார் இணையடியே ஏத்தினேனே. 746





ஸ்ரீராமன் வேதமந்திரங்கள் கைவரப்பெற்ற விசுவாமித்திரர் வேள்வியில் சினத்துடன் எதிர்த்து வந்த தாடகையின் மார்பைப் பிளந்து இரத்தம் பெருகச் செய்து, வலிய அம்பாலே யாகத்தைக் காத்தான். மாரீசன் சுபாகு ஆகியவரின் உயிரையும் கவர்ந்தான். சிவந்த தளிர்கள் நடுவே பூக்கள் மலர்ந்த சோலைகள் உள்ள தில்லை நகர் திருச்சித்திர கூடத்தில் இப்பெருமான் மூவாயிரம் அந்தணர்கள் துதி செய்யச் சிம்மாசனத்தில் வீற்றிருந்தான். 742

செவ்வரி படர்ந்த கறுத்த நீண்ட கண்களைப் பெற்ற சீதையை மணம் செய்ய, இராமபிரான், சினமுடைய காளையை வாகனமாகப் பெற்ற சிவனின் வில்லை ஒடித்தான்; கோடலியை ஏந்தி வந்த பரசுராமனின் பயங்கரவில்லை வளைத்து அவனை வென்று வேல் தாங்கிய அரசர்கள் பகையைத் தொலைத்தான். பகைவர் பயப்படும் படியான உயர்ந்த மதிள் பக்கங்களை உடைய சித்திர கூடத்தில் எழுந் தருளிய இராமனைத்துதிப்பவர் திருவடியையே துதிப்பேன். 743

கொத்தாக மலர்ந்த பூக்கள் சூடிய கூந்தலை உடைய கைகேயின் ஆணையால், ஸ்ரீ இராமன், பழைய அயோத்தி நகரை விட்டுக் கங்கைத் துறை அடைந்து, பக்தி மிகுந்த குகனால் ஆற்றைக் கடந்து வனம் புகுந்து சித்திர கூடத்தில் தங்கியபொழுது, பரதனுக்குப் பாதுகைகளையும் அரசையும் கொடுத்தான். அப்பெருமானே தில்லை நகரத் திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளி உள்ளான். இவனைக் கண்குளிரச் சேவிக்கப் பெற்றவர்களுக்கு நித்திய சூரிகள் சிறிதும் ஒப்பாக மாட்டார்கள். 744

எதிரிகளைத் தோற்கடிக்கும் படியான மலை போன்ற தோள்களைப் பெற்ற விராதனை இராமன் கொன்றான்; தமிழ் முனிவர் அகத்தியர் அளித்தவில்லைப் பெற்றான்; மான் விழிப் பார்வை கொண்ட சூர்ப்பணகை மூக்கை அறுத்துக் கர தூடணர்களைக் கொன்றான்; மாய மானாக வந்தமாரீசனை வதைத்தான். இப் பெருமாளைத் தில்லை நகர்ச்சித்திர கூடத்தில் தலை வணங்கித் துதிக்க வல்லார்களால், இவ்வுலகு தவம் பெற்றது. 745

திருவாக விளங்கும் மனைவி சீதையைப் பிரிந்த இராமன் மனம் தளர்ந்து, சடாயுவைப் பரமபதத்துக்கு அனுப்பி, காட்டில் வாழ்ந்த குரங்கு அரசன் சுக்ரீவனுடன் அன்பு கொண்டு வாலியைக் கொன்று இலங்கை சென்று, அரக்கர் கோமான் இராவணனின் சீற்றம் அடங்க அனுமானால் நகரை எரியச் செய்தான். தில்லை நகர் திருச்சித்திர கூடத்தில் இனிதே எழுந்தருளிய இராமனைத் துதிப்பவர்களின் இணைத்திருவடிகளையே நான் துதி செய்வேன். 746

குரை கடலை அடல் அம்பால் மறுக எய்து,
குலை கட்டி மறுகரையை அதனால் ஏறி,
எரி நெடு வேல் அரக்கரொடும் இலங்கை வேந்தன்
இன்னுயிர் கொண்டு, அவன்தம்பிக்கு அரசும் ஈந்து,
திருமகளோடு இனிது அமர்ந்த செல்வன்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
அரசுஅமர்ந்தான் அடி சூடும் அரசை அல்லால்,
அரசு ஆக எண்ணேன் மற்று அரசு தானே. 747

அம் பொன் நெடு மணிமாட அயோத்தி எய்தி,
அரசு எய்தி, அகத்தியன்வாய்த் தான் முன் கொன்றான்
தன் பெருந்தொல் கதை கேட்டு, மிதிலைச் செல்வி
உலகு உய்யத் திரு வயிறு வாய்த்த மக்கள்
செம் பவளத் திரள்வாய்த் தன் சரிதை கேட்டான்:
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எம்பெருமான் தன்சரிதை செவியால், கண்ணால்,
பருகுவோம்; இன்னமுதம் மதியோம் அன்றே. 748

செறி தவச் சம்புகன்தன்னைச் சென்று கொன்று,
செழு மறையோன் உயிர் மீட்டு, தவத்தோன் ஈந்த
நிறை மணிப் பூண் அணியும் கொண்டு, இலவணன்தன்னைத்
தம்பியால் வான் ஏற்றி, முனிவன் வேண்டத்
திறல் விளங்கும் இலக்குமனைப் பிரிந்தான்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
உறைவானை மறவாத உள்ளந்தன்னை
உடையோம்; மற்று உறுதுயரம் உடையோம் அன்றே. 749

அன்று சராசரங்களை வைகுந்தத்து ஏற்றி,
அடல் அரவப் பகையேறி, அசுரர்தம்மை
வென்று, இலங்குமணி நெடுந்தோள் நான்கும் தோன்ற
விண் முழுதும் எதிர்வரத் தன் தாமம் மேவி,
சென்று இனிது வீற்றிருந்த அம்மான்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
என்றும் நின்றான் அவன் இவனென்று ஏத்தி நாளும்
இறைஞ்சுமினோ எப்பொழுதும், தொண்டீர்! நீரே. 750

தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
திறல் விளங்கு மாருதியோடு அமர்ந்தான்தன்னை
எல்லை இல் சீர்த் தயரதன்தன் மகனாய்த் தோன்றிற்று
அது முதலாத் தன் உலகம் புக்கது ஈறா,
கொல் இயலும் படைத் தானைக் கொற்ற ஒள்வாள்
கோழியர்கோன் குடைக் குலசேகரன் சொற் செய்த
நல் இயல் இன் தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந் திகழ் நாரணன் அடிக்கீழ் நண்ணுவாரே. 751

**பெருமாள் திருமொழி முற்றிற்று.**





ஒலிக்கும் கடலை அம்பினால் கலக்கிய இராமபிரான் அதன் மீது அணைகட்டினான். அந்த அணை வழியாக மறுகரை சென்று நீண்ட வேல் தாங்கிய அரக்கருடன் போரிட்டு, அவர்களின் அரசன் இராவணனைக் கொன்று, தம்பி வீடணனுக்கு அரசாட்சி அளித்தான். திருமகளான சீதையுடன் இராமன் தில்லை நகர் சித்திரகூடத்தில் எழுந்தருளி ஆட்சி செய்கிறான். இவ்வரசனின் திருவடிகளைத் தலையில் சூடும் அரசன்றி வேறு அரசைநான் எண்ணேன். 747

அழகிய பொன்னால் ஆன மாடங்கள் உள்ள அயோத்தி நகருக்கு மீண்டு வந்த இராமபிரான் அரசாட்சியை ஏற்றுக்கொண்டான். தான் கொன்ற இராவணனின் சரிதத்தை அகத்தியர் மூலமாய்க் கேட்டான்; சீதைப் பிராட்டி பெற்ற பிள்ளைகளான குசலவர்கள் வாயால் தன்னுடைய சரிதத்தைக் கேட்டருளினான். இந்த எம் பெருமான் தில்லை நகர்ச்சித்திரகூடத்தில் எழுந்தருளி உள்ளான். பெருமான் கதையைச் செவியால் கேட்டுக் கண்ணால் பார்த்து மகிழ்ந்த நாம், இனித் தேவாமுதத்தைப் பொருளாக மதியோம். 748

தவமுடைய சம்புகனை அவனிடம் சென்று கொன்ற இராமன், அந்தணன் உயிரை மீட்டு அகத்தியனுக்கு அளித்தான். மணி ஆபரணங்களை அணிந்த அவன், வாணாசுரனைத் தம்பி சத்துருக்கனனால் வான் உலகு அனுப்பி, துர்வாசமுனி சாபத்தால் இலக்குவனைப் பிரிந்தான். தில்லை நகர் சித்திர கூடத்தில் எழுந்தருளி உள்ள இராமனை மறவாத உள்ளம் உடைய நாங்கள் துயரங்களை அடையோம். 749

இராமபிரான் தான் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளும் அன்று, அயோத்தி மக்களையும் மற்றைய யாவற்றையும் பரமபதம் ஏற்றினான். பாம்புகளுக்கு எதிரியான கருடன் மீது ஏறி, அசுர இனத்தை வென்று, நான்கு தோள்களுடன் வீரலக்ஷ்மி விளங்கப் பரம பதவாசிகள் எதிர்கொள்ளத் தன் வைகுந்தத்தை அடைந்தான். தில்லை நகர் திருச் சித்திர கூடத்துள் என்றும் நித்தியவாசம் செய்யும் அவனைத் தொண்டர்களே! பல படியாய்த் துதித்து எப்பொழுதும் வணங்குங்கள். 750

தில்லை நகர்திருச்சித்திர கூடத்தில் வீரம் மிகுந்த அனுமனுடன் தங்கிக் காட்சி அளிக்கும் தசரத புதல்வனான இராமன் பிள்ளையாகப் பிறந்தது முதல் தன்னுடைச் சோதிக்குச் சென்றது வரை உள்ள இராமாயணத்தைக் குலசேகரர் பாசுரங்களில் அருளினார். கொல்கிற படை ஆயுதங்களையும் வெற்றியையும் உடைய உறையூர் அரசர், குலசேகரர் அருளிய இவற்றை ஓத வல்லவர்கள் பரமபதம் சென்று நாராயணன் திருவடிக் கீழ் அமரும் பேறு பெறுவார்கள். 751

**பெருமாள் திருமொழி முற்றிற்று.**

ஸ்ரீ:

## திருமழிசைப்பிரான் அருளிச்செய்த

## திருச்சந்த விருத்தம்

பூ நிலாய ஐந்துமாய், புனற்கண் நின்ற நான்குமாய்,
தீ நிலாய மூன்றுமாய், சிறந்த கால் இரண்டுமாய்,
மீ நிலாயது ஒன்றும் ஆகி, வேறு வேறு தன்மையாய்,
நீ நிலாய வண்ணம் நின்னை யார் நினைக்க வல்லரே? 752

ஆறும் ஆறும் ஆறுமாய், ஓர் ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய்,
ஏறு சீர் இரண்டும் மூன்றும் ஏழும் ஆறும் எட்டுமாய்,
வேறு வேறு ஞானம் ஆகி, மெய்யினோடு பொய்யுமாய்,
ஊறொடு ஓசையாய ஐந்தும் ஆய ஆய மாயனே! 753

ஐந்தும் ஐந்தும் ஐந்தும் ஆகி, அல்லவற்று உளாயுமாய்,
ஐந்து மூன்றும் ஒன்றும் ஆகி, நின்ற ஆதிதேவனே!
ஐந்தும் ஐந்தும் ஐந்தும் ஆகி, அந்தரத்து அணைந்து நின்று,
ஐந்தும் ஐந்தும் ஆய நின்னை யாவர் காண வல்லரே? 754

மூன்று முப்பது ஆறினோடு ஓர் ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய்,
மூன்று மூர்த்தி ஆகி, மூன்று மூன்று மூன்று மூன்றுமாய்,
தோன்று சோதி மூன்றுமாய், துளக்கம் இல் விளக்கமாய்,
ஏன்றுஎன் ஆவியுள்புகுந்தது என்கொலோ? எம்ஈசனே? 755

நின்று இயங்கும் ஒன்று அலாஉருக்கள் தோறும் ஆவியாய்
ஒன்றி உள்கலந்து நின்ற நின்ன தன்மை இன்னது என்று
என்றும் யார்க்கும் எண் இறந்த ஆதியாய்! நின் உந்திவாய்
அன்று நான்முகற் பயந்த ஆதிதேவன் அல்லையே? 756

நாகம் ஏந்து மேரு வெற்பை நாகம் ஏந்து மண்ணினை
நாகம் ஏந்தும் ஆக! மாகம் மாகம் ஏந்து வார்புனல்
மாகம் ஏந்து மங்குல் தீ ஓர் வாயு ஐந்து அமைந்து, காத்து,
ஏகம் ஏந்தி நின்ற நீர்மை நின்கணே இயன்றதே. 757



ஸ்ரீ:

## திருமழிசைப்பிரான் அருளிச்செய்த

## திருச்சந்த விருத்தம்

பூமியில் உள்ள ஒலி, ஊறு, தோற்றம், சுவை, நாற்றம் ஆகிய ஐந்தாய் நீரில் ஒலி, ஊறு, தோற்றம் சுவையாய்த் தீயில் ஒலி, ஊறு, நாற்றமாய் வன்மையான காற்றில் ஒலி, ஊறாய், விண்ணில் ஒலியாய், வெவ்வேறு வகைப்பட்ட தேவர். மனிதர், விலங்கு, தாவரம் இவற்றின் ஆத்மாவாய் உள்ள நீ, காரிய காரணப் பொருளாக, முழு முதலாக உள்ளதை யாரால் நினைக்க முடியும்? 752

வேதமோதல் முதலிய ஆறு தொழில்களாகவும் வஸந்தம் முதலிய ஆறுபருவங்களாகவும் ஆக்னேயம் முதலிய ஆறு யாகங்களாகவும் ஐந்து வேள்வித் தீயாயும் ஞான வைராக்கியங்கள் ஆகவும் செல்வம், கைவல்யம், பரம பதம் ஆகவும் விவேகம் முதலிய ஏழாகவும் ஞான, சக்தியாகிய ஆறாகவும் வெவ்வேறு மதங்களாகவும் உண்மையும் பொய்யுமாகித் தன் மாத்திரைகளாகவும் ஆனவன் மாயன் கண்ணனே! 753

பூதங்கள் ஐந்தும், புலன்கள், புலன் தொழில்கள் ஆகப்பத்தும் தன் மாத்திரைகள் ஐந்தும், பிரகிருதி, மகான், அகங்காரம், மனம் ஆகியனவும் ஆகி, இவற்றை ஆள்பவனாய் ஆத்மாவாய் நின்ற ஆதி தேவனே! உபநிடத மயமான ஐந்து சக்திகளுடன் புலன்கள் பத்திலும் புகுந்து, ஒலி முதலிய ஐந்து இன்பங்களாய், அனுபவ இடம், கருவி, அமரர், முனிவர், முக்தர் ஆகிய ஐவராய் நின்ற உன்னை யாரே அறியவல்லார்? 754

வேதங்களுக்குக் காரணமான முப்பத்து மூன்று எழுத்துக்களாகவும் பதினாறு உயிரெழுத்துகளாகவும் 'ள'கர முதலிய ஐந்தாகவும், இருக்கு, யஜுர் ஸாம வேத மூர்த்திகளாகவும் துவாதச மந்திரப் பொருளாகவும் மூன்றெழுத்தான 'ஓம்'கார ஒளியாகவும் அசையாத விளக்கமான 'அ'காரப் பொருளாகவும் உள்ள நீ என் தலைவனாய் மனத்துள் புகுந்தது என்ன நீர்மையோ? 755

நிற்பனவாயும் இயங்குபவையாயும் ஒருபடிப் படாத உடல்களில் ஆத்மாவாய்க் கலந்து நிற்கும் உன் தன்மையை இன்னதென்று எக்காலத்திலும் எத்தகைய ஞானிகளாலும் எண்ண முடியாது. பிரளயத்தில் கொப்பூழில் பிரமனைப் பெற்று, உலக காரணனான ஆதி முதலே! உன்னை யாவர் காண வல்லவர்? 756

ஆதிசேஷனால் தாங்கப் படுபவனே! சுவர்க்கத்தைத் தாங்கும் மேருமலையையும் யானைகள் தாங்கும் பூமியையும் ஆகாய கங்கையையும் மேகத்தையும் வைச்வாநர அக்னியையும் காப்பாற்றி அவற்றிலே பொருந்தி, நீ ஒருவனாகவே இவற்றைத் தாங்கி நிற்கும் தன்மை உன் பக்கலில் மட்டுமே உள்ளது. 757

ஒன்று இரண்டு மூர்த்தியாய், உறக்கமோடு உணர்ச்சியாய்,
ஒன்று இரண்டு காலம் ஆகி, வேலை ஞாலம் ஆயினாய்!
ஒன்று இரண்டு தீயும் ஆகி ஆயன்ஆய மாயனே!
ஒன்று இரண்டு கண்ணினானும் உன்னைஏத்த வல்லனே? 758

ஆதிஆன வானவர்க்கும் அண்டம்ஆய அப்புறத்து
ஆதிஆன வானவர்க்கும் ஆதிஆன ஆதிநீ;
ஆதிஆன வான வாணர் அந்தகாலம் நீ உரைத்தி,
ஆதிஆன காலம் நின்னை யாவர்காண வல்லரே! 759

தாதுஉலாவு கொன்றைமாலை துன்னு செஞ்சடைச் சிவன்
நீதியால் வணங்கு பாத! நின்மலா! நிலாய சீர்
வேதவாணர் கீத வேள்வி நீதியான கேள்வியார்
நீதியால் வணங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே. 760

தன்னுளே திரைத்துஎழும் தரங்க வெண் தடங்கடல்
தன்னுளே திரைத்து எழுந்து அடங்குகின்ற தன்மை போல்,
நின்னுளே பிறந்துஇறந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளே அடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே. 761

சொல்லினால் தொடர்ச்சி நீ, சொலப்படும் பொருளும் நீ,
சொல்லினால் சொலப்படாது தோன்றுகின்ற சோதி நீ;
சொல்லினால் படைக்க நீ படைக்க வந்து தோன்றினார்
சொல்லினால் சுருங்க நின் குணங்கள் சொல்ல வல்லரே? 762

உலகுதன்னை நீபடைத்தி, உள்ஒடுக்கி வைத்தி, மீண்டு
உலகுதன்னுளே பிறத்தி, ஓரிடத்தை அல்லையால்;
உலகு நின்னொடு ஒன்றிநிற்க வேறுநிற்றி; ஆதலால்
உலகில் நின்னை உள்ளசூழல் யாவர் உள்ள வல்லரே? 763

இன்னை என்று சொல்லல் ஆவது இல்லை யாதும், இட்டிடைப்
பின்னை கேள்வன் என்பர்உன் பிணக்கு உணர்ந்த பெற்றியோர்;
பின்னைஆய கோலமோடு பேரும் ஊரும் ஆதியும்
நின்னையார் நினைக்கவல்லர் நீர்மையால் நினைக்கிலே? 764





முக்கியமான விஷ்ணுவாய்த் துணையான பிரமன் உருத்திரனாய், அறியாமைத் தூக்கத்தையும் ஞான விழிப்பையும் நடத்துபவனாய், மூவகைக் கால புருஷனாய், கடல் சூழ் பூமிக்குத் தலைவனாய் மூத்தீயாய்க் கண்ணனாய் அவதரித்த மாயனே! முக்கண்ணனும் உன்னைத் துதிக்க வல்லன் அல்லன். 758

உலகுகளைப் படைத்துக் காத்து அழிக்கும் பிரமன் முதலியோர்க்கும் பூ உலகுக்கும், அப்பாற்பட்ட பரம பதத்துக்கும் நித்திய சூரிகளுக்கும் நீயே தலைவன். ஆதி தேவர்களான பிரமன் சிவனின் முடிவினை நீயே கணக்கிடுபவன். ஆதியான பிரளய காலத்தை நடத்தும் உன்னை யாரால் அறிய முடியும்? 759

மகரந்தக் கொன்றைமாலை சூடிய செஞ்சடைச் சிவன் வேதவிதிகளால் வணங்கும் பாதமுடைய நிர்மலனே! வேதவிதி தவறாமல் ஸாம கானம் பாடி வேள்வி செய்யும் ஆத்ம குணங்கள் நிரம்பிய கேள்விச் செல்வர் உன்னை வேதமுறைப்படி வணங்கும் சீர்மை உன்னிடம் மட்டுமே உள்ளது. 760

தன்னிடமிருந்து கிளர்ந்து எழும் அலைகளை உடைய வெண்மை நிறக்கடல் தனக்குள்ளே அடங்குவதுபோல, உனக்குள்ளே தோன்றி, அழிகிற அசையாதனவும் அசைவதுமான பொருள்கள் எல்லாம் உன்னிடமே ஒடுங்கும். இத்தகையதன்மை உன்னிடமே உள்ளது. 761

புருஷார்த்தங்களைப் பெறுவோர்க்கு நீ வேதச் சொல்லாலே உறவை உண்டாக்கினாய். நீயே வேத, இதிகாச புராணங்களால் பேசப்படுபவன். வேதத்தால் நீ அறியப் படாதவன் ஆனாலும் வெளிப் படும் பரஞ்சோதியும் நீயே. நீ அளித்த வேதத்தால் உலகுகளைப் படைக்கத் தோன்றிய பிரமன் முதலியோர் உன் குணங்களைச் சுருக்கமாகவாவது பேசும் வல்லமை உடையவர்களா? 762

உலகத்தைப் படைக்கும் நீ உன் வயிற்றிலே அதனை ஒடுங்கச் செய் கிறாய். உன் மேன்மையை மறைத்துக் கொண்டு நீ அவதரிக்கிறாய். காரியப் பொருள் என்றோ காரணப் பொருள் என்றோ அடங்காமல் நீ அறிய முடியாதபடி உள்ளாய். உலகம் உன் உடம்பாய் இருந்தும், அசாதாரண மேனியுடன் நீ வேறு படுகிறாய். இவ்வாறு அளவிட முடியாத உன் ஆச்சரியமான தன்மைகளை யாரால் நினைக்க முடியும்? 763

உன்னை இப்படிப் பட்டவன் என்று சொல்ல இயலாது. உன்னைப் பற்றிய வேறுபட்ட விவாதங்களை அறிந்தோர், உன்னை நுண்ணிடை உடைய நப்பின்னை கணவன் என்பர். மனிதரிடையே நீ அவதரித்தாலும், திவ்விய வடிவாலும், நாமத்தாலும், அவதார காரணத்தாலும் வேறுபடுகிறாய், உன் நீர்மைக் குணத்தால், நீ அறிவித்தால் அன்றி, தன் முயற்சியால் யாரும் உன்னை அறியவல்லவர் அல்லர். 764

தூய்மை யோகம் ஆயினாய்! துழாய்அலங்கல் மாலையாய்!
ஆமை ஆகி ஆழ்கடற் துயின்ற ஆதிதேவ! நின்
நாமதேயம் இன்னது என்ன வல்லம் அல்ல; ஆகிலும்
சாம வேத கீதனாய சக்ரபாணி அல்லையே? 765

அங்கம் ஆறும் வேதம் நான்கும் ஆகி நின்று அவற்றுளே
தங்குகின்ற தன்மையாய்! தடங்கடற் பணத்தலை
செங்கண் நாகணைக் கிடந்த செல்வம் மல்கு சீரினாய்!
சங்க வண்ணம் அன்ன மேனி சார்ங்கபாணி அல்லையே! 766

தலைக்கணம் துகள் குழம்புசாதி சோதி தோற்றமாய்
நிலைக்கணங்கள் காண வந்து நிற்றியேலும், நீடு இரும்
கலைக்கணங்கள் சொற்பொருள் கருத்தினால் நினைக்கொணா
மலைக் கணங்கள் போல் உணர்த்தும் மாட்சி நின்தன் மாட்சியே. 767

ஏகமூர்த்தி, மூன்று மூர்த்தி, நாலு மூர்த்தி, நன்மை சேர்
போகமூர்த்தி, புண்ணியத்தின் மூர்த்தி, எண் இல் மூர்த்தியாய்,
நாகமூர்த்தி சயனமாய், நலங்கடற் கிடந்து, மேல்
ஆகமூர்த்தி ஆயவண்ணன் என்கொல்? ஆதிதேவனே! 768

விடத்த வாய் ஓர்ஆயிரம், இராயிரம் கண், வெந்தழல்
விடுத்து, வீழ்வு இலாத போகம் மிக்க சோதி தொக்க சீர்
தொடுத்து, மேல் விதானமாய பௌவநீர் அராவணைப்
படுத்த பாயல் பள்ளிகொள்வது என்கொல் வேலைவண்ணனே! 769

புள்ளது ஆகி வேதம் நான்கும் ஓதினாய், அது அன்றியும்
புள்ளின்வாய் பிளந்து புட் கொடிப் பிடித்த பின்னரும்
புள்ளை ஊர்தி; ஆதலால்; அது என்கொல், மின் கொள் நேமியாய்!
புள்ளின்மெய்ப் பகைக்கடல் கிடத்தல் காதலித்ததே? 770

கூசம்ஒன்றும் இன்றி மாசுணம் படுத்து, வேலைநீர்
பேசநின்ற தேவர் வந்து பாட முன் கிடந்ததும்,
பாசம்நின்ற நீரில் வாழும் ஆமையான கேசவா!
ஏசஅன்று நீ கிடந்தவாறு கூறு தேறவே. 771





ஜீவாத்மாக்களின் தூய்மையை உண்டாக்குபவனே! திருத் துழாய் மாலை அணிந்தவனே! ஆமை வடிவில் பாற்கடலில் கண் வளர்ந்த ஆதி முதல்வனே! உன் திருநாமங்களால் கூறப்படும் குணங் களை விவரிக்கும் வல்லமை எங்களுக்கு இல்லை. சாம வேதத்தால் துதிக்கப்படும் நீ சக்கரத்தைக் கையில் ஏந்தியவன் அன்றோ! 765

நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் வெளிப்படுத்தி அவற்றில் தங்கியவனே! அகன்ற பாற்கடலில் சிவந்த கண்களுடன் படங்களுடை ஆதிசேஷன் மீது பள்ளிகொண்ட சீர்மை உடைய செல்வா! கிருதயுகத்தில் சங்கின்வெண்மை நிறம் கொண்ட நீ, திரேதா யுகத்தில் சார்ங்க வில்லேந்திய இராமனாக வந்தாய். 766

மேலானதேவர்கள், கீழான தாவரங்கள், நடுவுள்ள மனிதர்கள் கூட்டத்துள் சோதி உருவில் அவதரித்துத் தாவரங்களும் அனுபவிக்கும் படி நின்றாயே! உன்னைப் பரந்த வேத வேதாந்தங்களாலும் சொல் பொருள் கருத்தால் எண்ண இயலாது. ஆதலால் உன் மாண்பு, மலைக் கூட்டங்களை விடவும் பெரியதாகும். 767

ஆதிதேவனே! பரவாசுதேவனான நீ ஸங்கர்ஷணன், பிரத்யும் நன், அநிருத்தன் என்னும் மூவராகி உன்னுடன் நால்வராய் வியூக வடிவு கொண்டாய். பிறகு மனிதர்களுக்காக அவதாரம் எடுத்து அருள் செய்தாய். புண்ணிய பலமான நீ எண்ணற்ற மூர்த்திகள் ஆனாய். பாற் கடலில் பள்ளிகொண்ட நீ அடியார்களுக்காக அவர்கள் விரும்பும் விக்கிரகங்களாக வடிவம் கொண்டது என்ன ஆச்சரியம்! 768

கடல் வண்ணா! ஆயிரம் வாய்களும் இரண்டாயிரம் கண் களும் கொண்டு நெருப்பை உமிழும் ஆதிசேஷன், உன்னைப் பிரியாதவ னாய்த், தன் படங்களையே உனக்கு மேற்கட்டியாக அமைத்தான். அவனைப் படுக்கையாகக் கொண்டு பாற்கடலில் திரண்ட அழகே கிடந்தது போலப் பள்ளி கொண்டது தான் என்னே! 769

மின்னும் சக்கரத்தை ஏந்தியவனே! பறவையாய் வந்த பகாசுரன் வாயைக்கிழித்த, நீ, கருடப் பறவையைக் கொடியாகப் பிடித்ததுடன், வாகனமாகவும் கொண்டாய். அன்னப் பறவையாகி, நீ, நான்கு வேதங் களை உபதேசித்தாய். இத்தகைய நீ, பாற்கடலில், கருடனுக்குப் பகையான பாம்பின்மீது படுத்தது என்ன ஆச்சரியம்! 770

கேசவா! வருணபாசம் நிறைந்த கடலில் ஆமையான நீயே, எந் நினைவும் இன்றிப் பாற்கடலில் ஆதிசேஷனைப் படுக்கையாய் விரித்துத் தேவர்கள் துதி செய்யக் கண்வளர்ந்தாயே உன்னை அறியாதார் ஏச, மந்தரமலையை முதுகிலே தாங்கி, நீ ஆமையாய்க் கிடந்த நீர்மைக்கும், பள்ளிகொண்ட மேன்மைக்கும் வாசி அருள வேண்டும். 771

அரங்கனே! தரங்கநீர் கலங்க அன்று, குன்று சூழ்
மரங்கள்தேய, மாநிலம் குலுங்க, மாசுணம் சுலாய்
நெருங்க,நீ கடைந்தபோது, நின்ற சூரர் என் செய்தார்?
குரங்கைஆள் உகந்த எந்தை! கூறு தேற வேறு இதே. 772

பண்டும்இன்றும் மேலுமாய் ஓர் பாலனாகி ஞாலம் ஏழ்
உண்டுமண்டி ஆலிலைத் துயின்ற ஆதிதேவனே!
வண்டுகிண்டு தண் துழாய்அலங்கலாய்! கலந்த சீர்ப்
புண்டரீக பாவை சேரும் மார்ப! பூமிநாதனே! 773

வால்நிறத்து ஓர் சீயமாய் வளைந்த வாள்எயிற்றவன்
ஊன்நிறத்து உகிர்த்தலம் அழுத்தினாய்! உலாய சீர்
நால்நிறத்த வேதநாவர் நல்ல யோகினால் வணங்கு
பால்நிறக் கடல்கிடந்த பற்பநாபன் அல்லையே? 774

கங்கை நீர் பயந்த பாதபங்கயத்து எம் அண்ணலே!
அங்கை ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்தினாய்!
சிங்கமாய தேவதேவ! தேன் உலாவு மென் மலர்
மங்கை மன்னி வாழும் மார்ப! ஆழி மேனி மாயனே! 775

வரத்தினிற் சிரத்தை மிக்க வாள்எயிற்று மற்றவன்
உரத்தினிற் கரத்தை வைத்து உகிர்த்தலத்தை ஊன்றினாய்;
இரத்தி நீ இது என்ன பொய்? இரந்த மண் வயிற்றுளே
கரத்தி உன் கருத்தை யாவர் காண வல்லர்? கண்ணனே! 776

ஆணினோடு பெண்ணும் ஆகி அல்லவோடு நல்லவாய்,
ஊணொடு ஓசை ஊறும் ஆகி, ஒன்று அலாத மாயையாய்,
பூணிபேணும் ஆயன் ஆகி, பொய்யினோடு மெய்யுமாய்,
காணிபேணும் மாணியாய்க் கரந்து சென்ற கள்வனே! 777

விண்கடந்த சோதியாய்! விளங்கு ஞான மூர்த்தியாய்!
பண்கடந்த தேசம் மேவு பாவநாச நாதனே!
எண்கடந்த யோகினோடு இரந்து சென்று மாணியாய்,
மண்கடந்த வண்ணம் நின்னை யார் மதிக்க வல்லரே? 778





அரங்கனே! அக்காலத்தில், மந்தர மலையை நட்டு, மரங்கள் தேய, பூமி குலுங்கி, வாசுகிப் பாம்பைச்சுற்றி, அலைகளுடைய பாற் கடலை நீ கடைந்த பொழுது, கையாலாகாத தேவர்களும் அசுரர்களும் என்ன செய்தார்கள்? வானரர்களை ஆதரித்த ஸ்ரீராமனான நாதனே! இதனை நான் அறியும்படி கூறு. 772

வண்டுகள் கிளரும் திருத்துழாய் மாலையனே! படைப்புக்கு முன்னும் படைப்பிலும் பிரளயத்திலும் ஒரு குழந்தையாய் உலகங்கள் ஏழினையும் உண்டு ஆலந்தளிரில் பள்ளி கொண்ட ஆதி தேவனே! தாமரைப் பூவில் தோன்றிய திருமகளுடன் சேர்ந்த பூமி நாதனே! உன் ஏற்றம்தான் என்னே! 773

வெண்ணிற நரசிம்மமாகத் தோன்றி, வளைந்த பற்களைப் பெற்ற இரணியனுடைய மார்பில் நகங்களை அழுத்திக் கொன்றாய். நான்கு வகை முறைகளிலே வேதம் ஓதுபவர்கள் பக்தியோகம் செய்து வணங்குகிற பத்மநாபா! நீ பாற்கடலில் கிடந்தது தான் என்னே! 774

உன் தாமரைத் திருவடிகளில் கங்கையைப் பிறப்பித்தவனே! அழகிய கைகளில், சங்கு, கதை, வில், வாள் ஏந்திய தலைவா! நரசிம்மப் பிரானே! தேன் ஒழுகும் தாமரையில் தோன்றிய திருமகளை மார்பில் கொண்ட மாயனே! கடல் வண்ணா! உன் அழகுதான் என்னே! 775

கண்ணா! வரம் பெற்று வளர்ந்த, வாளை ஒத்தபற்களுடைய இரணியனின் மார்பில், உன் கை நகங்களை ஊன்றிக் கொன்றாய். எல்லாமுடைய நீ மகாபலியிடம் யாசித்துப் பெற்ற பூமியை வயிற்றில் மறைத்துக் காத்த கருத்தை யார் காண்பார்! 776

ஆண், பெண், அஃறிணைப் பொருள்கள் ஆகி, நன்மை செய்து, சுவை, ஓசை, ஊறு ஆகியவையாய், எங்கும் பரிணமித்து உலக மாயையைச் செய்யும் இறைவா! பசுக்களைக்காக்க நீ இடையனாகப் பிறந்தாயே! பொய்யர்க்குப் பொய்யனாயும் உண்மையோர்க்கு, உண்மையாகவும் உள்ள நீ, வாமனனாய் மறைந்து வந்த கள்வன் அன்றோ! உன்னை யார் அறிய வல்லார்? 777

பல படியான மூலப் பிரகிருதியைத் தாண்டி விளங்கும் சோதியே! இயல்பான ஞான வடிவான ஆத்மாவை உடம்பாக உடையவனே! வேதத்தைக் கடந்த உன் ஒளியாலே பாவங்களை நீக்கும் எல்லாம் வல்லவனே! எண்ணற்ற கல்யாண குணங்களுடைய நீ மகாபலியிடம் பிரமசாரியாக யாசித்து, அளந்து கொண்டதை அளவிட வல்லார் யார்! 778

படைத்த பார் இடந்து, அளந்து, அது உண்டு உமிழ்ந்து, பௌவ நீர்
படைத்து அடைத்து, அதிற் கிடந்து, முன் கடைந்த பெற்றியோய்!
மிடைத்த மாலி மாலிமான் விலங்கு காலன்ஊர் புகப்
படைக்கலம் விடுத்தபல் படைத்தடக்கை மாயனே! 779

பரத்திலும் பரத்தை ஆதி; பௌவ நீர் அணைக் கிடந்து,
உரத்திலும் ஒருத்திதன்னை வைத்துஉகந்து, அது அன்றியும்
நரத்திலும் பிறத்தி; நாத; ஞானமூர்த்தி ஆயினாய்!
ஒருத்தரும் நினாது தன்மை இன்னது என்ன வல்லரே? 780

வானகமும் மண்ணகமும் வெற்பும் ஏழ் கடல்களும்
போனகம் செய்து, ஆலிலைத் துயின்ற புண்டரீகனே!
தேன் அகஞ்செய் தண் நறும் மலர்த் துழாய் நன் மாலையாய்!
கூன்அகம் புகத்தெறித்த கொற்றவில்லி அல்லையே? 781

காலநேமி காலனே! கணக்கு இலாத கீர்த்தியாய்!
ஞாலம் ஏழும் உண்டு பண்டு ஓர் பாலன் ஆய பண்பனே!
வேலைவேவ வில் வளைத்த வெல்சினத்த வீர!நின்
பாலர்ஆய பத்தர்சித்தம் முத்தி செய்யும் மூர்த்தியே! 782

குரக்கினப் படை கொடு, குரை கடலின் மீது போய்,
அரக்கர் அங்கு அரங்க, வெஞ்சரம் துரந்த ஆதி நீ;
இரக்க மண் கொடுத்தவற்கு இரக்கம் ஒன்றும் இன்றியே,
பரக்க வைத்து அளந்து கொண்ட பற்பபாதன் அல்லையே? 783

மின்நிறத்து எயிற்று அரக்கன் வீழ வெஞ்சரம் துரந்து
பின்னவற்கு அருள் புரிந்து அரசுஅளித்த பெற்றியோய்!
நன்னிறத்து ஓர் இன்சொல் ஏழை பின்னை கேள்வ! மன்னு சீர்ப்
பொன் நிறத்த வண்ணன் ஆய புண்டரீகன் அல்லையே? 784

ஆதி ஆதி ஆதி நீ; ஓர் அண்டம் ஆதி; ஆதலால்,
சோதியாத சோதி நீ; அது உண்மையில் விளங்கினாய்;
வேதம் ஆகி வேள்வி ஆகி விண்ணினோடு மண்ணுமாய்
ஆதி ஆகி, ஆயன் ஆய மாயம் என்ன மாயமே? 785





*மாயனே! கடலைப் படைத்த நீ வராஹமாய்ப் பூமியை எடுத்துக் காத்தாய்; உலகளந்தாய்; பூமியை உண்டுபின் உமிழ்ந்தாய். கடல் மீது அணை கட்டினாய்; பாற்கடலில் பள்ளி கொண்டாய். மாலி, சுமாலி இரு வரையும் யமபுரம் செல்லும் படி ஏவின ஆயுதங்களை ஏந்தியவனே!* 779

*என்னிறைவா! மூலப் பிரகிருதிக்கும் மேலான மூவகை ஆத்மாக் களுக்கும் மேம்பட்டவனே! பெரியபிராட்டியை உகந்து மார்பில் ஏற்றாய். பாற்கடலிலே பள்ளி கொண்ட நீயே, மனிதர்கள் நடுவே அவதரித்தாய் ஞான வடிவானவனே! யார் உன் தன்மையை அளவிட வல்லார்?* 780

*வானம், பூமி, ஏழு மலைகள், ஏழு கடல்கள் யாவற்றையும் உண்டு ஓர் ஆலிலையில் பள்ளி கொண்ட தாமரைக் கண்ணா! தேன் மணக்கும் துழாய் மாலை சூடியவனே! கூனியின் உடம்பில் உண்டை வில்லைத் தெறித்த நீ, அரக்கர்களை அழித்த வெற்றி வில்லை ஏந்தியவன் அன்றோ!* 781

*அசுரனான கால நேமிக்கு யமனான உன் புகழ் கணக்கற்றது. முன்பு ஏழு உலகங்களையும் உண்டு ஓர் குழந்தையான பண்பாளனே! கடல் கொதிக்கச் சினத்துடன் வில்லை வளைத்த வெற்றி வீரனே! உன் அடியார்கள் உன்னைத்தவிர வேறு அறியாதபடி செய்யும் ஆச்சரியம் தான் என்னே!* 782

*வானரப் படையுடன் கடல் மீது அணைகட்டிக்கடந்து, இராவணாதிகள் பயப்பட அம்புகளைத் தொடுத்த வீரன் நீயே. மகாபலியிடம் மண்ணை யாசித்த நீ, இருக்க ஓர் அடியும் இல்லாதபடி பரக்க வைத்து அளந்து கொண்ட தாமரைத் திருவடி உடையவன் அன்றோ!* 783

*மின்னல் ஒளிப் பற்களைக் கொண்ட இராவணன் அழியும்படி, கொடிய அம்புகளைத் தொடுத்து,அவன் தம்பி வீடணனுக்கு அரசு அருளியவனே! நன்னிறமும் இன் சொல்லும் கொண்ட நப்பின்னை நாயகனே! பொன்னே போல் உடலழகு கொண்ட தாமரைக் கண்ணன் நீ அன்றோ!* 784

*பொருள், கருவி, செய்பவன் ஆகிய முக்காரணங்களும் நீயே. ஒருபடிப்பட்ட அண்டமும் நீயே. ஆதலால் சோதனை செய்ய வேண்டாத பரஞ்சோதி நீ அன்றோ! நித்தியமான வேதத்தில் ஒளியாகக் கூறப்படும் நீ, வேதமாகவும் வேள்வியால் வழிபடப் படுவனாகவும் பரம பதமாகவும் பூவுலகாகவும் உள்ளாய். ஆதியான நீ இடையனாய் அவதரித்த மாயம் என்னே! என்ன அதிசயம்!!* 785

அம்பு உலாவு மீனும் ஆகி ஆமை ஆகி ஆழியார்
தம்பிரானும் ஆகி மிக்கது, அன்பு மிக்கு; அது அன்றியும்
கொம்பு அராவு நுண்மருங்குல் ஆயர்மாதர் பிள்ளையாய்,
எம்பிரானும் ஆய வண்ணம் என்கொலோ? எம் ஈசனே! 786

ஆடகத்த பூண்முலை யசோதை ஆய்ச்சி பிள்ளையாய்,
சாடு உதைத்து, ஓர் புள்ளது ஆவி கள்ள தாய பேய்மகள்
வீட வைத்த வெய்ய கொங்கை ஐய பால் அமுதுசெய்து,
ஆடகக் கை மாதர் வாய்அமுதம் உண்டது என்கொலோ? 787

காய்த்த நீள் விளங்கனி உதிர்த்து, எதிர்ந்த பூங் குருந்தம்
சாய்த்து, மா பிளந்த கைத் தலத்த கண்ணன் என்பரால்:
ஆய்ச்சி பாலை உண்டு, மண்ணை உண்டு, வெண்ணெய் உண்டு, பின்
பேய்ச்சி பாலை உண்டு, பண்டு ஓர் ஏனம் ஆய வாமனா! 788

கடல் கலந்த வன்கரி மருப்பு ஒசித்து, ஓர் பொய்கைவாய்
விடம் கலந்த பாம்பின் மேல் நடம் பயின்ற நாதனே!
குடம் கலந்த கூத்தன் ஆய கொண்டல்வண்ணா! தண்துழாய்
வடம் கலந்த மாலை மார்ப! காலநேமி காலனே! 789

வெற்பு எடுத்து வேலைநீர் கலக்கினாய்; அது அன்றியும்,
வெற்பு எடுத்து வேலைநீர் வரம்பு கட்டி வேலை சூழ்
வெற்பு எடுத்த இஞ்சி சூழ் இலங்கை கட்டழித்த நீ
வெற்பு எடுத்து மாரி காத்த மேகவண்ணன் அல்லையே? 790

ஆனை காத்து, ஓர் ஆனை கொன்று, அது அன்றி, ஆயர்பிள்ளையாய்
ஆனை மேய்த்தி; ஆனெய் உண்டி; அன்று குன்றம் ஒன்றினால்
ஆனை காத்து, மைஅரிக் கண் மாதரார் திறத்து முன்
ஆனை அன்று சென்று அடர்த்த மாயம் என்ன மாயமே! 791

ஆயன் ஆகி ஆயர்மங்கை வேய தோள் விரும்பினாய்;
ஆய, நின்னை யாவர் வல்லர் அம்பரத்தொடு இம்பராய்?
மாய! மாய மாயை கொல்? அது அன்றி நீ வகுத்தலும்
மாய மாயம் ஆக்கினாய்; உன் மாயம் முற்றும் மாயமே! 792





*எம் ஈசனே! சக்கரத்தாழ்வாருக்குத் தலைவரான நீர், நீரில் வாழும் மீனாவும் ஆமையாகயும் அவதரித்து அன்பு செய்தீர்; அத்துடன் கொம்பு போலவும் பாம்பு போலவும் நுண்ணிய இடைபெற்ற யசோதைக்கு மகனாகப் பிறந்த நீர்மை என்னே! எங்களையும் அடிமைப்படுத்திக் கொண்டதும் என்னே!* 786

*பொன்னாரம் அணிந்த மார்புடைய யசோதையின் பிள்ளையான கண்ணன் சகடாசுரனை உதைத்துக் கொன்றான். குழந்தை கவரும் பறவை போல வந்த கள்ளப்பூதனையின் முலைப்பால் அருந்தி வதைத்தான். பொன் வளையல்கள் அணிந்த இடைப்பெண்கள் வாயமுதம் பருகினான். இவை என்ன ஆச்சரியம்!* 787

*பண்டு பூமியை வயிற்றில் வைத்துக்காப்பாற்றிப் பின் வராஹ அவதாரமும் வாமனாவதாரமும் செய்தவனே! காயுடன் சேர்ந்த விளாம் பழங்களை உதிர்த்துக் குருந்தமரத்தைச் சாய்த்துப்பின் குதிரை வாயைப் பிளந்த கைகளுடைய கண்ணன் என்று ஞானிகள் புகழ்வார்கள். வெண்ணெய் உண்டு, யசோதையின் பாலைப் பருகிய பிறகு பூதனைப் பேயின் முலைப் பால் அருந்திய அதிசயம் தான் என்னே!* 788

*குவலயாபீட மதயானையின் கொம்பை ஒடித்தாய்; மடுவில் விஷம் கக்கிய காளியன் மீது ஆடினாய்; குடக்கூத்தாடிய மேக நிறக்கண்ணனே! வனமாலையுடன் குளிர்ந்த துழாய் மலையும் அணிந்த நீ காலநேமிக்கு யமன் ஆனாயே!* 789

*மந்தர மலையால் கடலைக் கடைந்தாய்; கடலின் மீது மலைகளால் அணைகட்டிக் கடல் சூழ்ந்த திரிகூடமலையிலே கட்டப்பட்ட மதிளுடைய இலங்கை அரணை அழித்தாய். மலை தூக்கி இடையர்களை மழையிலிருந்து காத்த, நீ இன்னொரு மேகம் அன்றோ!* 790

*கஜேந்திரனைக் காத்த நீ, குவலயாபீடம் என்னும் இன்னொரு யானையைக் கொன்றாய். ஆய்க்குலப் பிள்ளையாய்ப் பசுக்களை மேய்த்தாய். பசு நெய்யை உண்ட நீ மலையைத் தூக்கிப் பசுக்களைக் காத்தாய். மைக்கண்ணுடைய நப்பின்னையை அடைய ஏழு எருதுகளைக் கொன்றாய். உன் அதிசயச் செயல்கள் தான் என்னே!* 791

*இடையனாய் அவதரித்த கண்ணா! மூங்கில் போலும் தோளுடைய நப்பின்னையை நீ கைப்பிடித்தாய். தேவர், மனிதர்களில் உன்னை உள்ளபடி காணவல்லார் யார் உண்டு? உன்னுடைய அவதாரம், உலகத்தொடர்புடைய அறியாமையால் அன்று; உன்னுடைய மாயா சக்தியாலேயே நடந்தது. மேலும், ஜீவர்களைப் படைத்த நீ, அவர்களைப் புலன்களால் மாயும்படி செய்து ஸம்ஸாரத்தில் ஒடுக்கினாயே! எல்லாம் உன் மாயமே!* 792

வேறுஇசைந்த செக்கர்மேனி நீறு அணிந்த புன்சடைக்
கீறுதிங்கள் வைத்தவன் கைவைத்தவன் கபால் மிசை
ஊறுசெங் குருதியால் நிறைத்த காரணந்தனை,
ஏறுசென்று அடர்த்த ஈச! பேசு, கூசம் இன்றியே. 793

வெஞ்சினத்த வேழவெண் மருப்பு ஒசித்து, உருத்தமா
கஞ்சனைக் கடிந்து, மண் அளந்துகொண்ட காலனே!
வஞ்சனத்து வந்த பேய்ச்சி ஆவி பாலுள் வாங்கினாய்!
அஞ்சனத்த வண்ணன் ஆய ஆதிதேவன் அல்லையே? 794

பாலின் நீர்மை, செம்பொன் நீர்மை, பாசியின் பசும்புறம்
போலும் நீர்மை, பொற்பு உடைத் தடத்து வண்டு விண்டுஉலாம்
நீல நீர்மை; என்று இவை நிறைந்த காலம் நான்குமாய்,
மாலின் நீர்மை வையகம் மறைத்தது என்ன நீர்மையே? 795

மண்ணுளாய் கொல்? விண்ணுளாய் கொல்? மண்ணுளே மயங்கி நின்று
எண்ணும் எண் அகப்படாய் கொல்? என்ன மாயை! நின் தமர்
கண்ணுளாய் கொல்?சேயை கொல்? அனந்தன்மேல் கிடந்த எம்
புண்ணியா! புனந்துழாய் அலங்கல் அம் புனிதனே! 796

தோடுபெற்ற தண் துழாய் அலங்கல் ஆடு சென்னியாய்!
கோடுபற்றி ஆழி ஏந்தி அஞ்சிறைப் புள் ஊர்தியால்;
நாடுபெற்ற நன்மை நண்ணம் இல்லையேனும், நாயினேன்
வீடுபெற்று, இறப்பொடும் பிறப்பு அறுக்குமா சொலே. 797

காரொடு ஒத்த மேனி நங்கள் கண்ண! விண்ணின் நாதனே!
நீர் இடத்து, அராவணைக் கிடத்தி என்பர்; அன்றியும்
ஓர் இடத்தை அல்லை, எல்லை இல்லை என்பர்; ஆதலால்,
சேர்வுஇடத்தை நாயினேன் தெரிந்து, இறைஞ்சுமா சொலே. 798

குன்றில் நின்று, வான் இருந்து, நீள கடற் கிடந்து, மண்
ஒன்று சென்று, அது ஒன்றை உண்டு, அது ஒன்று இடந்து, பன்றியாய்
நன்று சென்ற நாளவற்றுள் நல்உயிர் படைத்து, அவர்க்கு
அன்று தேவு அமைத்து, அளித்த ஆதிதேவன் அல்லையே? 799





சிவந்த உடம்பில் நீற்றைப் பூசிச் சடையில் சந்திரனைத் தாங்கி விளங்கிய, சிவன், கையில் ஏந்திய கபால ஓட்டில், உன் திருமேனியில் ஊறிய ரத்தத்தை வார்த்து, அவன் சாபம் நீக்கிய காரணம் என்ன? பயமின்றி ஏழு எருதுகளின் மேல் விழுந்து அடக்கிக் கொன்ற ஈசனே! நீயே அருளவேண்டும். 793

வெம்சினம் கொண்ட குவலயா பீடயானையின் வெள்ளைக் கொம்பை ஒடித்தாய்; கம்சனை அழித்தாய்; வஞ்சனைப் பூதனைப் பேயின் பாலைப் பருகிக் கொன்றாய். மூவடியால் உலகை அளந்த திருக்கால்களை உடையவனே! கறுத்த நிறமுடைய நீ அன்றோ ஆதிதேவன்! 794

கிருதயுகத்தில் பகவானின் நிறம் பால்வெண்மை; திரேதா யுகத்தில் பொன் சிவப்பு; துவாபரத்தில் பாசி நிறப்பச்சை; கலியிலோ, அழகான குளத்தில் வண்டுலாவும் நெய்தல் பூவின் கறுப்பு நிறம். இவ்வாறு நான்கு யுகங்களில் நான்கு நிறங்களுடன் விளங்கும் அவன் எளிமையை உலகோர் புறக்கணிப்பது என்ன கொடுமை! 795

துழாய் மாலை சூடிய புனிதனே! உலகத்தவர்க்கு நீமனிதனாக அவதரிக்கிறாய்; பரமபதத்திலோ நித்திய சூரிகள் தலைவன் நீ. உலக மயக்கத்தில் ஆழ்ந்தவர்களுக்கு அகப்படாத நீ, அடியார்கள் கண்முன் வருகிறாய். அல்லாதவர்களுக்கு எட்டாத நீ, ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட புண்ணியன் அன்றோ. உன் மாயைதான் என்னே! 796

இதமுடன் கூடிய துழாய் மாலை அசையும் திருமுடி உடையவனே! சங்கு, சக்கரம் ஏந்திய நீ கருடனை வாகனமாகப் பெற்றவனே! உலகோர்கள் உன்னைக் காணும் பேற்றை இழந்தாலும் நாய் போன்ற அடியேன் உடல் தொடர்பற்றுப் பிறப்பிலா உய்வு பெறும் வழியை நீயே அருள வேண்டும். 797

மேக நிறமேனிக் கண்ணனே! நித்தியசூரிகள் தலைவா! பாற் கடலில் ஆதிசேஷன் மீது நீ பள்ளி கொண்ட சிறப்பை வேதியர்கள் ஓதுவார். ஆயினும் நீ எல்லா இடங்களிலும் உள்ளாய் என்றும் கூறுவர். ஆதலால் நாயினும் தாழ்ந்த அடியேன், சேரும் இடத்தை அறிந்து, வழிபட்டுய்யும் வழியை நீயே அருளிச் செய்ய வேண்டும். 798

திருமலையிலே நின்றாய்; பரமபதத்தில் இருந்தாய்; பாற்கடலில் கிடந்தாய். உலகை அளந்த நீ, பூமியை உண்டாய். வராஹமாய் அதனை எடுத்துக் காத்தாய். நன்றாகக் கழிந்த வராஹகல்பத்தில், மனித உயிர் களைப் படைத்து, அவரவர்களுக்கு ஏற்ப வணங்குவதற்குத் தேவர் களையும் படைத்துக் காத்த ஆதிகாரணன் நீ அன்றோ! 799

கொண்டை கொண்ட கோதை மீது தேன் உலாவு கூனி கூன்
உண்டை கொண்டு அரங்க ஓட்டி உள் மகிழ்ந்த நாதன் ஊர்;
நண்டை உண்டு நாரை பேர, வாளை பாய, நீலமே
அண்டை கொண்டு கெண்டை மேயும் அந் தண் நீர்அரங்கமே. 800

வெண்திரைக் கருங்கடல் சிவந்துவேவ, முன் ஓர் நாள்
திண்திறற் சிலைக்கைவாளி விட்டவீரர் சேரும் ஊர்:
எண் திசைக் கணங்களும் இறைஞ்சிஆடு தீர்த்த நீர்,
வண்டுஇரைத்த சோலைவேலி, மன்னுசீர் அரங்கமே. 801

சரங்களைத் துரந்து வில் வளைத்து, இலங்கை மன்னவன்
சிரங்கள் பத்து அறுத்து உதிர்த்த செல்வர் மன்னு பொன்இடம்;
பரந்துபொன் நிரந்து நுந்தி வந்து அலைக்கும் வார் புனல்
அரங்கம்என்பர் நான்முகத்து அயன் பணிந்த கோயிலே. 802

பொற்றை உற்ற முற்றல் யானை போர் எதிர்ந்து வந்ததைப்
பற்றி உற்று மற்று அதன் மருப்பு ஒசித்த பாகன் ஊர்;
சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்று தண்டர் ஒன்றினர்,
அற்ற பற்றர், சுற்றி வாழும் அந்தண் நீர் அரங்கமே. 803

மோடியோடு இலச்சையாய சாபம் எய்தி, முக்கணான்
கூடுசேனை மக்களோடு கொண்டு மண்டி வெஞ்சமத்து
ஓடவாணன் ஆயிரம் கரங் கழித்த ஆதி மால்
பீடுகோயில், கூடு நீர் அரங்கம் என்ற பேரதே. 804

இலைத்தலைச் சரம் துரந்து இலங்கை கட்டழித்தவன்;
மலைத்தலைப் பிறந்து இழிந்து வந்து நுந்து சந்தனம்
குலைத்து அலைத்து இறுத்து எறிந்த குங்குமக் குழம்பினோடு
அலைத்து ஒழுகு காவிரி அரங்கம் மேய அண்ணலே. 805

மன்னு மா மலர்க் கிழத்தி வைய மங்கை மைந்தனாய்,
பின்னும் ஆயர் பின்னை தோள் மணம் புணர்ந்து, அது அன்றியும்,
உன்ன பாதம் என்ன சிந்தை மன்ன வைத்து நல்கினாய்;
பொன்னி சூழ் அரங்கம் மேய புண்டரீகன் அல்லையே? 806





*வண்டுகள் உலாவும் மாலை சூடிய கொண்டையுடைய கூனியின் முதுகில் வில்லாலே உண்டை எய்த ஸ்ரீ ராமன் எழுந்தருளிய திருவரங்கத்தில், தண்ணீர்க் கரையில், நாரை, நண்டை உண்டு நடக்கும்; வாளை மீன் நாரையைக் கண்டு அஞ்சித் துள்ளும்; கெண்டைகள் பயமற்று ஓடும்.* 800

*வெள்ளை அலைகளுடைய கருங்கடல் மீது, இராமன் சினத்துடன், தன் வலிய கைகளாலே சார்ங்க வில்லை வளைத்து அம்பெய்தான். அவ்வீரர் எழுந்தருளியுள்ள அரங்கத்தில் எண் திசை மக்களும் புண்ணிய நீராடுவர்; வண்டொலிக்கும் சோலைகளுடைய சீர்மை உடையது இவ்வூர்.* 801

*வில் வளைத்து அம்பெய்த இராவணனின் பத்துத் தலைகளை வெட்டி வீழ்த்திய வீரச் செல்வர் ஸ்ரீ ராமர் எழுந்தருளி உள்ள திருவரங்கத்தில் காவிரி ஆறு தன் அலைகளுடன் தங்கத்தைத் தள்ளிக் கொண்டுஓடும். பிரமதேவனும் வந்து வணங்கும் பெருமை உடையது இத் திருவரங்கம் பெரிய கோவில் ஆகும்.* 802

*கற்பாறையிலே நின்ற குவலயா பீட யானையை எதிர்த்துச் சென்று பிடித்துக் கொம்பை ஒடித்துக் கொன்ற ஸ்ரீகிருஷ்ணன் எழுந்தருளி உள்ள அரங்கத்தில், சிறிய பற்கள் போன்ற கணுக்களை உடைய மூங்கிலால் ஆன மூன்று தண்டத்தை உடைய பற்றற்ற துறவிகள் வாழ்வர். நீர்வளம் மிக்கது இத்திருவரங்கம்.* 803

*வெட்கப்படும் படியான சாபம் அடைந்த முக்கண்ணனான சிவன் காளியுடனும் தன் மக்களுடனும் கூடிச் சேனையை அழைத்துக் கொண்டு செய்த போரில், கண்ணன், பாணாசுரனின் ஆயிரம் கைகளைவெட்டி வீழ்த்தினான். இந்த எம்பெருமான் உறைகிற பெரிய கோவில் அரங்கம், அதிக நீர்வளம் உடையது.* 804

*இலை நுனி அம்புகளை ஏவி, இலங்கை அரணை அழித்த ஸ்ரீ ராமன் எழுந்தருளி உள்ள திவ்விய தேசம் திருவரங்கம் ஆகும். மலை முடியிற்பிறந்து, சந்தன மரங்களைத் தள்ளிக் கொண்டு, குங்குமக் கொடிகளை இழுத்தவாறு, அதன் காற்றுடன் ஓடி, அலை வீசி, வரும் காவிரி ஆற்றின் கரையில் அரங்கம் உள்ளது.* 805

*திருவரங்கனே! நீ, தாமரைப்பூவில் தோன்றிய பெரிய பிராட்டியாருக்கும் பூமிப் பிராட்டிக்கும் மணவாளன் ஆவாய். பின்னும் ஆயப்பெண்ணான நப்பின்னை தோள்களைத் தழுவி மணம் செய்து கொண்டாய். உன் பாதங்களை என் இதயத்தில் பிரியாதபடி வைத்து அருள் செய்தாய். காவிரி சூழும் திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ள நீ புண்டரீகன் அன்றோ!* 806

இலங்கை மன்னன் ஐந்தொடு ஐந்து பைந்தலை நிலத்து உக,
கலங்க அன்று சென்று கொன்று, வென்றி கொண்ட வீரனே!
விலங்கு நூலர் வேத நாவர் நீதியான கேள்வியார்
வலங் கொளக் குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே? 807

சங்குதங்கு முன்கை நங்கை கொங்கை தங்கல் உற்றவன்,
அங்கம் மங்க, அன்று சென்று அடர்த்து எறிந்த ஆழியான்;
கொங்கு தங்கு வார் குழல் மடந்தைமார் குடைந்த நீர்
பொங்குதண் குடந்தையுள் கிடந்த புண்டரீகனே. 808

மரம் கெட நடந்து அடர்த்து, மத்த யானை மத்தகத்து
உரம் கெடப் புடைத்து, ஓர் கொம்பு ஒசித்து உகந்த உத்தமா!
துரங்கம் வாய் பிளந்து மண் அளந்த பாத! வேதியர் வரம்கொளக்
குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே? 809

சாலி வேலி தண் வயல் தடங்கிடங்கு பூம்பொழில்
கோல மாடம் நீடு தண் குடந்தை மேய கோவலா!
காலநேமி வக்கரன் கரன் முரன் சிரம் அவை
காலனோடு கூட விற்குனித்த வில்கை வீரனே! 810

செழுங் கொழும் பெரும்பனி பொழிந்திட உயர்ந்த வேய்
விழுந்து உலர்ந்து எழுந்து விண் புடைக்கும் வேங்கடத்துள் நின்று,
எழுந்திருந்து தேன் பொருந்து பூம்பொழில் தழைக் கொழும்
செழுந் தடங் குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே? 811

நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்க ஞாலம் ஏனமாய்
இடந்த மெய் குலுங்கவோ? இலங்கு மால் வரைச் சுரம்
கடந்த கால் பரந்த காவிரிக் கரைக் குடந்தையுள்
கிடந்தவாறு எழுந்திருந்து பேசு; வாழி, கேசனே! 812

கரண்டம் ஆடு பொய்கையுள் கரும் பனைப் பெரும் பழம்
புரண்டு வீழ வாளை பாய் குறுங்குடி நெடுந்தகாய்!
திரண்ட தோள்இரணியன் சினங் கொள் ஆகம் ஒன்றையும்
இரண்டு கூறு செய்து உகந்த சிங்கம் என்பது உன்னையே! 813





அன்று, இலங்கை அரசன் இராவணனின் பத்துத் தலைகளை நிலத்திலே விழும்படி, கொன்று வெற்றி அடைந்த இராமபிரானே! பூணூல் அணிந்த, நீதி மிக்க, வேத விற்பன்னர்கள், வலம் வரும் சிறப்புடன், திருக்குடந்தையிலே கண் வளர்ந்த திருமால் நீயே அன்றோ! 807

முன்கையில் வளையல் அணிந்த சீதா தேவியின் மார்பை ஆசைப்பட்ட இராவணனை, ஸ்ரீராமன், அவனுடல் அழியத் தலையை அறுத்துக் கொன்றான். மணம் வீசும் கூந்தலுடைய பெண்கள் குடைந்து நீராடும் சிறப்புடைய திருக்குடந்தையுள் பள்ளி கொண்ட புண்டரீகன் கடல்நிற ராமனே ஆவான். 808

மருத மரங்கள் சாய்ந்து அழியத் தவழ்ந்தவனே! மதம் கொண்ட குவலயாபீட யானையின் மத்தகத்தில் அடித்துக் கொம்புகளை முறித்து உகந்தவனே! உத்தமனே! குதிரை வாயினைக் கிழித்தவனே! பூமியை அளந்த பாதனே! வேதியர்கள் வரம் பெறும்படி திருக்குடந்தையில் பள்ளி கொண்ட திருமால் நீயே! 809

திருக்குடந்தையில், நெல் வளர்ந்த வயல்களும் அகன்ற அகழ்களும் பூந்தோட்டங்களும் உயர்ந்த மாடங்களும் விளங்குவன. இங்கே எழுந்தருளிய கண்ணனே! கால நேமி, தந்தவக்ரன், கரன், முரன் ஆகியோர் தலைகளை அறுத்து அவர்களை யமன் உலகு அனுப்பிய வில்லாளி நீ அன்றோ! 810

திருவேங்கட மலையில் பனிமழைப்பட்ட மூங்கில்கள் சாய்ந்து, பிறகு, சூரிய வெப்பத்தால் உலர்ந்து எழுந்து ஆகாயத்தைமுட்டும். திருகுடந்தையிலோ, வண்டுகள் உயரக்கிளம்பிக் கீழே வந்து, தங்கும் பூக்கள் மலர்ந்த சோலைகளும் குளங்களும் உண்டு. திருமலையில் நின்ற திருமாலே! நீ திருக்குடந்தையில் பள்ளி கொண்டாயே! 811

கேசவனே! காட்டில் நடந்த உன் திருவடிகளுக்கு நோவு உண்டாயிற்றோ! பூமி நடுங்கிய பொழுது நீ வராஹமாய் அதனைத் தூக்கி எடுத்ததால் உன் உடம்பு குலுங்கியதால் களைப்பாயிற்றோ? மலைகள், காடுகள் வழியாய் ஓடி வருகின்ற காவிரிக் கரையில் திருக் குடந்தைத் தலத்தில் நீ கண் வளரும் காரணம் யாதோ? வாழ்க நீ! 812

திருக்குறுங்குடியில் உள்ள குளத்தில் பெரிய பனம் பழங்கள் உருண்டு விழவும், அதனைக் காக்கைகள் நீராடுவதாக எண்ணி, வாளை மீன்கள் பயந்து பாயும். இத்தகைய தலத்தில் எழுந்தருளி உள்ள பெருமையுடைய பிரானே! பருத்த தோள்களைப் பெற்ற இரணியனின் கோபம் மிகுந்த உடம்பை, இரண்டாக்கிழித்து வதைத்த நரசிம்மப் பெருமான் நீயே அன்றோ! 813

நன்று இருந்து யோக நீதி நண்ணுவார்கள் சிந்தையுள்
சென்று இருந்து, தீவினைகள் தீர்த்த தேவதேவனே!
குன்று இருந்த மாடம் நீடு பாடகத்தும் ஊரகத்தும்
நின்று இருந்து, வெஃகணைக் கிடந்தது என்ன நீர்மையே? 814

நின்றது எந்தை ஊரகத்து, இருந்தது எந்தை பாடகத்து,
அன்று வெஃகணைக் கிடந்தது, என் இலாத முன்னெலாம்;
அன்று நான் பிறந்திலேன்; பிறந்த பின் மறந்திலேன்;
நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே. 815

நிற்பதும் ஓர் வெற்பகத்து; இருப்பும் விண்; கிடப்பதும்
நற்பெருந் திரைக் கடலுள், நான் இலாத முன்னெலாம்;
அற்புதன் அனந்தசயனன் ஆதிபூதன் மாதவன்
நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என் நெஞ்சுளே. 816

இன்று சாதல், நின்று சாதல், அன்றி யாரும் வையகத்து
ஒன்றி நின்று வாழ்தல் இன்மை கண்டும், நீசர் என்கொலோ
அன்று பார் அளந்த பாதபோதை உன்னி வானின்மேல்
சென்று சென்று தேவராய் இருக்கிலாத வண்ணமே? 817

சண்ட மண்டலத்தின் ஊடு சென்று, வீடு பெற்று, மேல்
கண்டு வீடு இலாத காதல்இன்பம் நாளும் எய்துவீர்!
புண்டரீகபாத புண்யகீர்த்தி நும் செவி மடுத்து
உண்டு, நும் உறுவினைத் துயருள் நீங்கி உய்ம்மினோ. 818

முத்திறத்து வாணியத்து இரண்டில் ஒன்றும் நீசர்கள்
மத்தராய் மயங்குகின்றது, இட்டு அதில் இறந்து போந்து;
எத்திறத்தும் உய்வது ஓர் உபாயம் இல்லை, உய்குறில்;
தொத்து இறுத்த தண்துழாய் நன் மாலை வாழ்த்தி வாழ்மினோ. 819

கானிலும் உருப் பொலார் செவிக்கு இனாத கீர்த்தியார்
பேணிலும் வரந்தர மிடுக்கு இலாத தேவரை
ஆணம் என்று அடைந்து வாழும் ஆதர்காள்! எம் ஆதிபால்
பேணி நும் பிறப்பு எனும் பிணக்கு அறுக்ககிற்றிரே. 820





நித்திய சூரிகள் தலைவனே! யோக நெறியாளர்கள் நன்றாக இருக்கையில் அமர்ந்து தியானிக்கும் பொழுது அவர்கள் நெஞ்சிற் புகுந்து பாவங்களைப் போக்குகிறாய். மலை என உயர்ந்த மாடங்கள் உள்ள திருப்பாடகத்தில் நீ நின்றதும், ஊரகத்தில் அமர்ந்ததும் திருவெஃகாவில் பள்ளி கொண்டதும் என்ன நீர்மை அப்பா! 814

நான் பக்தியில் இசையாத காலத்தில் என் தந்தையான பகவான் திருவூரகத்தில் நின்றும், பாடகத்தில் இருந்தும், திருவெஃகாவில் பள்ளி கொண்டும் காட்சி தந்தும், அறிவின்மையால் பிறவாதனாகவே இருந்தேன். அறிவால் நான் பிறந்த பிறகு, அவன், அத்திருப்பதிகள் போலவே என் நெஞ்சில் நின்று, இருந்து, படுத்து அருளினான். 815

பகவான் திருமலையிலே நின்றதும் பரமபதத்தில் இருந்ததும் அலை கடலில் பள்ளி கொண்டதும் நான் முறையறியாது இருந்த காலத்திலே ஆகும். அற்புதனான அந்த சேஷசாயி, உலக காரணன் ஆன ஸ்ரீமந் நாராயணன் அன்றோ! இப்போதோ அவன் என் நெஞ்சில், நின்று, இருந்து, பள்ளி கொள்கிறான். 816

பிரமன் போன்றவரும், பிறந்ததும் இறத்தல், பல்லாண்டு வாழ்ந்து இறத்தல், ஆகிய இரண்டில் ஒன்றுக்கு ஆட்படுவதே அன்றி நிலைத்திருப்பதில்லை. அறிவற்றவர், இதனைக் கண்டும், உலகளந்த திரிவிக்கிரமன் திருவடித் தாமரையைச் சிந்தித்துப் பரமபத வாசியாகும் எண்ணமின்றி வீணாகும் காரணம் ஏனோ? 817

சூரிய மண்டலம் வழியாகப் பரம பதம் அடைந்து, மேலான பக்தியால் கைங்கரிய இன்பம் அடைய விரும்புபவர்களே! நீங்கள் பகவானின் திருவடித் தாமரையே உபாயம் என்று செவிமடுத்து அதனால் நீங்களே ஏற்படுத்திக் கொண்ட பாவ பலனான துயரத்திலிருந்து நீங்கி உய்வடையுங்கள். 818

மூவகைப்பட்ட குணங்களுள், ராஜஸ தாமஸ குணங்களின் பலன்களைப் பெறுவோர் தம் கர்ம முடிவில், அனுபவ உடலை விட்டு, மறுபடி பூமியில் பிறந்து, உடலையே ஆத்மாவாய் எண்ணி மயங்குவர். இவ்வாறு, மயங்கி, உய்யும்வழி அறியாதவர்களே! நீங்கள் திருத்துழாய் மாலை அணிந்த திருமாலின் குணங்களைக் கூறித் துதித்து உய்வுபெறப் பாருங்கள். 819

கண்ணுக்குத் தெரியும் உடல் ஊனங்களையும், காதிற்குக் கசக்கும் இகழ்ச்சிகளையும் உடைய தாழ்ந்த தெய்வங்களை நீங்கள் அரண் என்று அடைந்தாலும், அவர்கள் உங்களுக்கு வரம் தரும் சக்தி அற்றவர்களே ஆவர். அறிவற்றவர்களே! நீங்கள் ஆதி காரியனான திருமாலிடம் பக்தி செலுத்திப் பிறப்பென்னும் புதரை அறுத்துக் கொள்ள வேண்டாமா? 820

குந்தமோடு சூலம் வேல்கள் தோமரங்கள் தண்டு வாள்
பந்தமான தேவர்கள் பரந்து வானகம் உற,
வந்த வாணன் ஈரைஞ்ஞூறு தோள்களைத் துணித்த நாள்
அந்த அந்த ஆகுலம் அமரரே அறிவரே. 821

வண்டு உலாவு கோதை மாதர் காரணத்தினால் வெகுண்டு,
இண்ட வாணன் ஈரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள்,
முண்டன் நீறன் மக்கள் வெப்பு மோடி அங்கி ஓடிடக்
கண்டு நாணி, வாணனுக்கு இரங்கினான் எம் மாயனே. 822

போதில் மங்கை பூதலக் கிழத்தி தேவி; அன்றியும்
போது தங்கு நான்முகன் மகன்; அவன் மகன் சொலில்,
மாது தங்கு கூறன் ஏறது ஊர்தி; என்று வேத நூல்
ஓதுகின்றது உண்மை, அல்லது இல்லை மற்று உரைக்கிலே. 823

மரம் பொதச் சரம் துரந்து, வாலி வீழ முன் ஓர் நாள்
உரம் பொதச் சரம் துரந்த உம்பர்ஆளி எம்பிரான்
வரம் குறிப்பில் வைத்தவர்க்கு அலாது, வானம் ஆளிலும்
நிரம்பு நீடு போகம் எத்திறத்தும் யார்க்கும் இல்லையே. 824

அறிந்து அறிந்து வாமனன் அடியிணை வணங்கினால்,
செறிந்து எழுந்த ஞானமோடு செல்வமும் சிறந்திடும்;
மறிந்து எழுந்த தெண் திரையுள் மன்னு மாலை வாழ்த்தினால்,
பறிந்து எழுந்து தீவினைகள் பற்று அறுதல் பான்மையே. 825

ஒன்றிநின்று, நற்றவம் செய்து ஊழி ஊழிதோறு எலாம்,
நின்றுநின்று அவன் குணங்கள் உள்ளி, உள்ளம் தூயராய்ச்
சென்றுசென்று, தேவதேவர் உம்பர்உம்பர் உம்பராய்
அன்றி,எங்கள் செங்கண்மாலை யாவர்காண வல்லரே? 826

புன்புல வழிஅடைத்து அரக்குஇலச்சினை செய்து,
நன்புல வழிதிறந்து, ஞான நற் சுடர்கொளீஇ,
என்புஇல் எள்கி,நெஞ்சு உருகி, உள்கனிந்து எழுந்தது ஓர்
அன்பில்அன்றி, ஆழியானை யாவர்காண வல்லரே? 827





ஈட்டி, சூலம், வேள்கள், தோமரம், கதை, வாள் ஆகிய ஆயுதங்களின் துணையுடன் போரிட வந்த தேவர்கள் சிதறி ஓடி வானகம் அடையவும், கண்ணன் பாணாசுரனின் ஆயிரம் தோள்களையும் வெட்டித் தள்ளிய பொழுது, சிவன் அடைந்த துன்பத்தைத் தேவர்களும் அறிவார்கள். 821

வண்டுகள் உலாவும் மாலை சூடிய மகள் உஷையின் காரணமாய்ப் போரிட்ட பாணாசுரனின் ஆயிரம் தோள்களையும் கண்ணன் வெட்டிய பொழுது, நீறு பூசிய மொட்டைத் தலையுடைய சிவனும் அவன் புதல்வர்களும் காளியும் அக்னியும் முதுகு காட்டி ஓடினார்கள். வெட்கமுற்ற கண்ணன் தயை புரிந்தான். 822

"தாமரையில் தோன்றிய திருமகளும் பூமிதேவியும் திருமாலின் தேவிமார்கள். அவர் கொப்பூழ்ப்பூவில் உள்ள பிரமன், புதல்வன் ஆவான். காளை வாகனம் உடைய பார்வதி பாகன், பிரமனின் புதல்வன்." என்று வேத நூல் கூறுவது முற்றும் உண்மை. மாறுபட்ட ஆகமக் கருத்துகள் புறம்பான பொய்யுரையே ஆகும். 823

தேவதேவனான ஸ்ரீராமன் முன்பு, மராமரங்கள் ஏழினையும் தொளைத்து, வாலி மார்பின் ஊடு அம்பெய்தான். இந்த எம்பெருமான் திருவுள்ளத்தில் இடம் பெறாதவர் தேவருலகை ஆண்டாலும், யாராகிலும் குறைவில்லாத கைங்கரியப் பேற்றை எப்படியும் அடையமுடியாது. 824

வாமன பகவானின் திருவடிகளே உபாயமும் உறுதிப் பொருளும் என்று அறிந்து வணங்கினால், ஆத்ம ஞானமும் பக்திச் செல்வமும் சேரும். பரந்த அலைகளுடைய பாற்கடலில் பள்ளி கொண்ட திருமாலைத் துதித்தால், ஆத்மாவின் பாவங்கள் வாஸனை உட்படத் தொலைந்து பற்று நீங்கும். 825

பயன் கருதாத்தவத்தில் மனம் ஒன்றிப் பல கல்ப காலங்கள், பகவானின் குணங்களை எண்ணித்தியானித்து, தூய நெஞ்சுடன், பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி நிலைகளை அடைந்தால் அல்ல து, நித்திய சூரிகள் தலைவனான செந்தாமரைக் கண்ணனை யார் காண வல்லார்? 826

தாழ்ந்ததான புலன் வழிச் செல்லும் பாதையை அரக்கு முத்திரையால் அடைத்து, நல்லதான கடவுள் நெறியைத் திறந்து, ஞான விளக்கை ஏற்றி, எலும்பும் நெஞ்சும் உருக, மனம் கனிந்து, பரமபக்தியில் திளைத்தால் அன்றி, சக்கரப் படையுடைய திருமாலை யார் காண வல்லார்? 827

எட்டும் எட்டும் எட்டுமாய், ஓர் ஏழும் ஏழும் ஏழுமாய்,
எட்டும் மூன்றும் ஒன்றும் ஆகி நின்ற ஆதிதேவனை
எட்டின் ஆய பேதமோடு இறைஞ்சி நின்று, அவன் பெயர்
எட்டு எழுத்தும் ஓதுவார்கள் வல்லர் வானம் ஆளவே. 828

சோர்வு இலாத காதலால் தொடக்கு அறா மனத்தராய்,
நீர் அராவணைக் கிடந்த நின்மலன் நலங் கழல்
ஆர்வமோடு இறைஞ்சி நின்று, அவன் பேர் எட்டு எழுத்தும்
வாரம் ஆக ஓதுவார்கள் வல்லர் வானம் ஆளவே. 829

பத்தினோடு பத்துமாய், ஓர் ஏழினோடு ஓர் ஒன்பதாய்,
பத்துநால் திசைக்கண் நின்ற நாடு பெற்ற நன்மையாய்,
பத்தின் ஆய தோற்றமோடு ஓர் ஆற்றல் மிக்க ஆதிபால்
பத்தராம் அவர்க்கு அலாது, முத்தி முற்றல் ஆகுமே. 830

வாசி ஆகி, நேசம் இன்றி வந்து எதிர்ந்த தேனுகன்
நாசம் ஆகி நாள் உலப்ப, நன்மை சேர் பனங்கனிக்கு
வீசி மேல் நிமிர்ந்த தோளின் இல்லை ஆக்கினாய்; கழற்கு
ஆசை ஆம் அவர்க்கு அலால் அமரர் ஆகல் ஆகுமே? 831

கடைந்த பாற்கடல் கிடந்து, காலநேமியைக் கடிந்து,
உடைந்த வாலி தன் தனக்கு உதவ வந்து, இராமனாய்
மிடைந்த ஏழ் மரங்களும் அடங்க எய்து, வேங்கடம்
அடைந்த மால பாதமே அடைந்து நாளும் உய்ம்மினோ. 832

எத்திறத்தும் ஒத்து நின்று உயர்ந்து உயர்ந்த பெற்றியோய்!
முத்திறத்து மூரி நீர் அராவணைத் துயின்ற நின்
பத்து உறுத்த சிந்தையோடு நின்று பாசம் விட்டவர்க்கு
எத்திறத்தும் இன்பம் இங்கும் அங்கும் எங்கும் ஆகுமே. 833

மட்டு உலாவு தண் துழாய்அலங்கலாய்! பொலன் கழல்
விட்டு வீள்வு இலாத போகம் விண்ணில் நண்ணி ஏறினும்,
எட்டினோடு இரண்டு எனும் கயிற்றினால் மனந்தனைக்
கட்டி, வீடு இலாது வைத்த காதல் இன்பம் ஆகுமே. 834





*இருபத்து நான்கு தத்துவங்கள், ஏழு தீவுகள், ஏழு மலைகள், ஏழு கடல்கள், பன்னிரண்டு சூரியர்கள் ஆகிய யாவுமான உலக காரணனான திருமாலை எட்டு அங்கங்களுடன் கூடிய வணக்கத்தால் வழிபட்டு எட்டெழுத்து மந்திரத்தை ஓதுபவர்கள் பரமபதத்தை ஆள, வல்லவர்களே.* 828

*பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட குற்றமற்ற பகவானின் திருவடிகளைப் பக்தியுடன் வணங்கி, அறுபடாத சிந்தையுடன் அவன் திருஎட்டெழுத்தைத் தஞ்சமாகக் கொண்டு ஓதுபவர்கள் பரமபதத்தை ஆள வல்லவர்களே.* 829

*பத்துத்திசைகள், திசை நாயகர்கள், ஏழு சுரங்கள், ஒன்பது சுவைகள், பதினான்கு உலகங்கள் ஆகிய நன்மைகளால் உள்ள பகவான் பத்து அவதாரங்கள் எடுத்தான். இத்தகைய ஆற்றல்மிக்க ஆதி மூர்த்தியிடம் பக்தி கொள்ளாதவர்க்கு முக்தி உண்டோ?* 830

*கழுதை வடிவில் அன்பின்றி எதிர்த்த தேனுகாசுரனைப் பனைமரப் பழங்கள் மீது வீசி, அழித்த கண்ணபிரானே! உன் திருவடிகளில் அன்புடையவர்க்கன்றி மற்றவர்கள் நித்திய சூரிகள் ஆகமுடியுமோ?* 831

*அமுதத்திற்காகக் கடையப் பட்ட பாற்கடலில் பகவான் பள்ளி கொண்டான்; கால நேமியை வென்றான்; வாலியாலே நெஞ்சுடைந்த சுக்ரீவனுக்கு உதவ, இராமனாக வந்து மராமரங்கள் ஏழினையும் அம்பால் துளைத்தான். இந்தத் திருமால் வேங்கடமலையில் எழுந்தருளி உள்ளான். அவன்பாதமே துணை என்று உய்யுங்கள்.* 832

*தேவர், மனிதர், விலங்கு ஆகிய எல்லாப் பிரிவுகளிலும் ஒத்தபடி அவதாரம் செய்தும், உன் மேன்மை குறையாதபடி விளங்கும் பகவானே! மூவகை நீரும் சேரும் பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட உன்னிடத்தே பக்தி மிகுந்து, உலக பாசம் விட்டவர்க்கு, இவ்வுலகிலும், பரமபதத்திலும் எங்கும் இறை இன்பமே கூடும்.* 833

*தேன் துளிர்க்கும் குளிர்ந்த திருத்துழாய் மாலை அணிந்தவனே! எப்பொழுதும் காணத்தகும் உன் திருவடிகளைக் கைவிட்டுப் பரமபதம் அடையும் பேறு கிடைத்தாலும், பக்தி என்னும் கயிற்றால் மனத்தைக் கட்டி, இடையீடில்லாமல், உன் திருவடிகளிலே வைக்கப்படும் பரமபக்தி இன்பத்திற்கு ஈடாகுமோ!* 834

பின் பிறக்க வைத்தனன் கொல்? அன்றி நின்று தன் கழற்கு
அன்பு உறைக்க வைத்த நாள் அறிந்தனன் கொல்? ஆழியான்
தன் திறத்து ஓர் அன்பிலா அறிவு இலாத நாயினேன்
என் திறத்தில் என்கொல் எம்பிரான் குறிப்பில் வைத்ததே? 835

நச்சுஅரா அணைக்கிடந்த நாத! பாதபோதினில்
வைத்த சிந்தை வாங்குவித்து நீங்குவிக்க நீ இனம்
மெய்த்தன் வல்லை; ஆதலால், அறிந்தனன்; நின் மாயமே
உய்த்து, நின் மயக்கினில் மயக்கல் என்னை, மாயனே! 836

சாடு சாடு பாதனே! சலம் கலந்த பொய்கைவாய்
ஆடு அராவின் வன்பிடர் நடம் பயின்ற நாதனே!
கோடு நீடு கைய! செய்ய பாதம் நாளும் உள்ளினால்
வீடனாக மெய்செயாத வண்ணம்என்கொல்? கண்ணனே! 837

நெற்றி பெற்ற கண்ணன் விண்ணின் நாதனோடு போதின்மேல்
நற்றவத்து நாதனோடு மற்றும் உள்ள வானவர்
கற்ற பெற்றியால் வணங்கு பாத! நாத! வேத! நின்
பற்று அலால் ஓர் பற்று மற்றது உற்றிலேன், உரைக்கிலே. 838

வெள்ளைவேலை வெற்புநாட்டி வெள் எயிற்று அராவுஅளாய்
அள்ளலாக்கடைந்த அன்று அருவரைக்கு ஓர்ஆமையாய்,
உள்ள நோய்கள் தீர் மருந்து வானவர்க்கு அளித்த எம்
வள்ளலாரை அன்றி, மற்று ஓர் தெய்வம் நான் மதிப்பனே? 839

பார் மிகுத்த பாரம் முன் ஒழிச்சுவான் அருச்சுனன்
தேர் மிகுத்து மாயம் ஆக்கி நின்று கொன்று வென்றிசேர்
மாரதர்க்கு வான் கொடுத்து, வையம் ஐவர் பாலதாம்
சீர் மிகுத்த நின் அலால் ஓர் தெய்வம் நான் மதிப்பனே? 840

குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்;
நலங்களாய நற்கலைகள் நாலிலும் நவின்றிலேன்;
புலன்கள் ஐந்தும் வென்றிலேன், பொறியிலேன், புனித! நின்
இலங்கு பாதம் அன்றி மற்று ஓர் பற்று இலேன் எம் ஈசனே! 841





எம்பெருமான் அடியேனைப் பின்னும் பிறக்கும்படி திருவுள்ளத்தில் முடிவு செய்தானோ? அல்லது தன் திருவடிகளில் என்னுடைய பக்தி நின்று, மேலாகும்படியான நாள்களை இட்டு வைத்தானோ? சக்கரம் ஏந்திய பகவானிடத்தில் அன்பின்றி, அறிவில்லாத தாழ்ந்த அடியேனிடத்தில் என்ன திருவுள்ளம் கொண்டானோ? 835

நஞ்சைக்கக்கும் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்ட என் நாதனே! உன் திருவடித் தாமரைகளில் வைத்த என் மனத்தை அங்கிருந்து அகலச்செய்து விடாதே! மாயத்தால் எல்லாம் செய்யவல்ல நீ, உன்னைச் சரணடைந்த என்னை உலகமாயையான புலன் வாழ்வில் மயக்கி விடலாகாது. 836

சகடாசுரனை அழித்த பாதங்கள் உடையவனே! விஷம் கலந்த பொய்கையில் காளிய நாகத்தின் பிடரியிலே நடனம் செய்த சுவாமியே! சங்கேந்திய கையுடைய கண்ணனே! உன் சிவந்த திருவடிகளை எப்போதும் துதித்தாலும் பரமபதம் பெறச் செய்யாதது என்ன காரணமோ? 837

நெற்றிக் கண்ணுடைய சிவன், விண்ணுலக வேந்தன் இந்திரன், கொப்பூழ்த்தாமரையில் உள்ள தவத்தினனான பிரமன், மற்றைய தேவர்கள், யாவரும் தத்தம் வழிகளிலே வணங்கும் படியான திருவடிகளை உடையவனே! வேத நாதனே! உன்னை அன்றி எனக்கு வேறு எதுவும் பற்றில்லை, எனக்கூறுவேன். 838

வெண்மை நிறப்பாற் கடலில், வெளுத்த பற்களை உடைய, வாசுகிப் பாம்பைச் சுற்றி, அலைகள் பொங்கக் கடைந்த பொழுது பகவான் ஆமையாக அவதரித்தான். தேவர்களுக்கு, நோய் தீர்க்கும் மருந்தான அமுதத்தையும் திருமகள் அருளையும் கொடுத்த வள்ளலான திருமாலை அன்றி வேறு தெய்வத்தை நான் மதியேன். 839

பூமிப்பாரத்தை ஒழிப்பதற்காக, அர்ஜுனன் தேரோட்டியாகப் போரை நடத்தி மாயங்கள் செய்து, வெற்றி வீரர்களாகச் செருக்குக் கொண்ட துரியோதனாதிகளைக் கொன்று வீரசுவர்க்கம் அடையச் செய்து, பஞ்சபாண்டவர் புகழ் ஓங்கச் செய்த கண்ணனே! உன்னை அன்றி வேறு ஒரு தெய்வத்தை நான் மதிக்கமாட்டேன். 840

ஐந்து இந்திரியங்களின் வலையில் விழுந்த நான், அவற்றை வெல்லவில்லை; நல்ல வேதங்கள் நான்கிலும் ஒன்றும் பயிலவில்லை. நான்கு வகைக் குலங்களில் ஒன்றிலும் பிறக்கப்பெற்றிலேன். புனிதனான என் இறைவனே! உன்னுடைய திருப்பாதங்களை அன்றி, மற்று எந்த உபாயமும் அடியேனுக்கில்லை. 841

பண் உலாவு மென் மொழிப் படைத் தடங்கணாள் பொருட்டு
எண் இலா அரக்கரை நெருப்பினால் நெருக்கினாய்;
கண் அலால் ஓர் கண் இலேன்; கலந்த சுற்றம் மற்று இலேன்;
எண் இலாத மாய! நின்னை என்னுள் நீக்கல் என்றுமே. 842

விடைக் குலங்கள் ஏழ் அடர்த்து வென்றி வேற்கண் மாதரார்
கடிக் கலந்த தோள் புணர்ந்த காலி ஆய! வேலைநீர்
படைத்து அடைத்து அதில் கிடந்து முன் கடைந்த நின்தனக்கு
அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சல் என்ன வேண்டுமே. 843

சுரும்பு அரங்கு தண் துழாய் துதைந்து அலர்ந்த பாதமே
விரும்பி நின்று இறைஞ்சுவேற்கு இரங்கு, அரங்கவாணனே!
கரும்பு இருந்த கட்டியே! கடல் கிடந்த கண்ணனே!
இரும்பு அரங்க வெஞ்சரம் துரந்த வில் இராமனே! 844

ஊனில்மேய ஆவிநீ; உறக்கமோடு உணர்ச்சி நீ;
ஆனில்மேய ஐந்தும்நீ; அவற்றுள் நின்ற தூய்மை நீ;
வானினோடு மண்ணும்நீ; வளங் கடற் பயனும் நீ;
யானும்நீ; அதுஅன்றி எம்பிரானும் நீ; இராமனே! 845

அடக்கு அரும் புலன்கள் ஐந்து அடக்கி ஆசையாம் அவை
தொடக்கு அறுத்து வந்து நின் தொழிற்கண் நின்ற என்னை நீ
விடக் கருதி மெய்செயாது மிக்கு ஓர் ஆசை ஆக்கிலும்,
கடற் கிடந்த நின் அலால் ஓர் கண்ணிலேன், எம் அண்ணலே! 846

வரம்பு இலாத மாய மாய வையம் ஏழும் மெய்ம்மையே
வரம்பு இல் ஊழி ஏத்திலும் வரம்பு இலாத கீர்த்தியாய்!
வரம்பு இலாத பல் பிறப்பு அறுத்து வந்து நின்கழல்
பொருந்துமா திருந்த நீ வரம்செய், புண்டரீகனே! 847

வெய்ய ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்து சீர்க்
கையா! செய்ய போதில் மாது சேரும் மார்ப! நாதனே!
ஐயில் ஆய ஆக்கைநோய் அறுத்து வந்து நின் அடைந்து
உய்வது ஓர் உபாயம் நீ எனக்கு நல்க வேண்டுமே. 848





ஸ்ரீ ராமனே! இசை பொருந்திய பேச்சையும் வாளின் கூர்மை ஒத்த கண்களையும் உடைய சீதைக்காக, எண்ணற்ற அரக்கரை அம்புத் தீ பொழிந்து அழித்தாய். உன்னை அன்றி வேறு வழி இல்லாத அடியேனுக்கு உற்றார் இலர். எண்ணற்ற மாய சக்தி உடைய நீ என்னைவிட்டு அகலல் ஆகாது. 842

அலைகடலைப் படைத்து அதிற் பள்ளி கொண்டு, பின் அக்கடலைக் கடைந்தாய்; அதே கடலில் அணைகட்டி அடைத்தாய். வேல் கண்ணுடைய நப்பின்னையைப் பெற ஏழு காளைகளை அடக்கி வென்றாய். பசுமேய்த்த கண்ணா! உன்னிடம் அடைக்கலம் புகுந்த என்னை, “அஞ்சாதே!” என்று அருள வேண்டும். 843

கரும்பு போலே இனிக்கும் சர்க்கரைக் கட்டி போன்றவனே! பாற்கடலில் பள்ளி கொண்டவனே! கண்ணனே! பகைவர் இரும்பு நெஞ்சில் அம்பெய்த ராமனே! திருவரங்கனே! படிந்து குளிர்ந்து துழாய் மணக்கும் உன் பாதத்தைக் கதி என விரும்பித்துதிக்கும் அடியேனுக்கு நீ அருள் செய்ய வேண்டும். 844

ஸ்ரீ ராமனே! தூக்கமும் விழிப்பும் உன்னால் ஏற்படுவன; வளமான கடலும் அதன் பயனும் உன்னாலேயே. பசுவின் சாணம், மூத்திரம், பால், தயிர், நெய் ஆகியனவும், அவற்றின் தூய்மைத்திறனும் உன்னாலேயே. உடம்பில் உள்ள ஐவகை மூச்சுகளும் வானமும் மண்ணும் உன் ஆட்சிக்குட் பட்டவை. நானும் உன்னாலேயே உள்ளேன். ஆகவே நீ இரங்கி அருளினால் உய்வடைவோம். 845

எம் அண்ணலே! அடக்க முடியாத ஐம்புலன்களை அடக்கி, ஆசையை அடியுடன் அறுத்து உன் கைங்கர்யத்தில் நிலைநின்ற என்னை, நீ விட எண்ணி, ஆசை முதலிய விஷயங்களிலே தள்ளினாலும், பாற்கடலில் பள்ளி கொண்ட உன்னை அன்றி எனக்கு வேறு புகல் இல்லை. 846

முடிவில்லாத மாயையான பிரகிருதி தத்துவம் ஆன புண்டரீகனே! மாயனே! ஏழுலகத்தவரும் உண்மையாகக் கணக்கற்ற கல்பங்கள் துதித்தாலும், எல்லை காண இயலாத கீர்த்தி உடையவனே! எண்ணற்ற பல பிறப்புகளை ஒழித்து வந்து உன் திருவடிகளில் பொருந்தும்படி அடியேனுக்கு நீ அருள் தர வேண்டும். 847

கொடிய சக்கரம், சங்கு, கதை, வில், வாள் ஆகியவற்றை ஏந்தியுள்ள கைகளை உடையவனே! தாமரைச் செல்வி சேரும் மார்பனே! நாதனே! கபமே இயல்பான உடல் நோயை நீக்கி, அடியேன் பரமபதம் வந்து உன் திருவடியில் உய்வு பெறும் வழியை நீ அருள வேண்டும். 848

மறம் துறந்து வஞ்சம் மாற்றி ஐம்புலன்கள் ஆசையும்
துறந்து, நின்கண் ஆசையே தொடர்ந்துநின்ற நாயினேன்;
பிறந்து இறந்து பேர்இடர்ச் சுழிக்கணின்று நீங்குமா
மறந்திடாது மற்று எனக்கு மாய! நல்க வேண்டுமே. 849

காட்டி நான் செய் வல்வினைப் பயன்தனால் மனந்தனை
நாட்டி வைத்து, நல்லஅல்ல செய்ய எண்ணினார் எனக்
கேட்டது அன்றி, என்னது ஆவி, பின்னை கேள்வ! நின்னொடும்
பூட்டி வைத்த என்னை நின்னுள் நீக்கல் பூவை வண்ணனே! 850

பிறப்பினோடு பேர்இடர்ச் சுழிக்கண் நின்றும் நீங்கும் அஃது
இறப்ப வைத்த ஞான நீசரைக் கரைக்கொடு ஏற்றுமா
பெறற்கு அரிய நின்ன பாதபத்தி ஆன பாசனம்
பெறற்கு அரிய மாயனே! எனக்கு நல்க வேண்டுமே. 851

இரந்து உரைப்பது உண்டு, வாழி! ஏம நீர் நிறத்து அமா!
வரம் தரும் திருக்குறிப்பில் வைத்தது ஆகில், மன்னு சீர்
பரந்த சிந்தை ஒன்றிநின்று நின்ன பாதபங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்க வேண்டுமே. 852

விளவு இலாத காதலால் விளங்கு பாதபோதில் வைத்து
உள்ளுவேனது ஊன நோய் ஒழிக்குமா தெழிக்கு நீர்ப்
பள்ளி மாய! பன்றி ஆய வென்றி வீர! குன்றினால்
துள்ளுநீர் வரம்பு செய்த தோன்றல்! ஒன்று சொல்லிடே. 853

திருக் கலந்து சேரும் மார்ப! தேவதேவ தேவனே!
இருக் கலந்த வேத நீதி ஆகி நின்ற நின்மலா!
கருக் கலந்த காளமேக மேனி ஆய! நின் பெயர்
உருக் கலந்து ஒழிவிலாது உரைக்குமாறு உரைசெயே. 854

கடுங் கவந்தன் வக்கரன் கரன் முரன் சிரம் அவை
இடந்து கூறு செய்த பல் படைத் தடக்கை மாயனே!
கிடந்து இருந்து நின்று இயங்கு போதும், நின்ன பொற்கழல்
தொடர்ந்து மீள்வு இலாதது ஓர் தொடர்ச்சி நல்க வேண்டுமே. 855





மாயனே! கொடுமையான கோபம், வஞ்சனை ஆகியவற்றை விட்டு ஐம்புலன் ஆசையை ஒழித்து உன்னிடம் பக்தி கொண்ட நாயினேன், பிறப்பு இறப்புச் சக்கரத்திலிருந்து நீங்கிக் கைங்கர்யம் செய்ய மறவாமல் அருள வேண்டும். 849

நப்பின்னை நாயகனே! பூவைப்பூ நிறத்தோனே! என் ஆத்மாவை உன்னிடம் பிணைத்துவிட்டேன். "யமன் பணியாளர் என் பாவத்தைக் காட்டிப் பலனை அனுபவித்தே தீர வேண்டும் என உணர்த்திய பிறகும் கொடுந்தண்டனை செய்வார்கள்" என்று கேட்டிருப்பதால், நீ என்னை உன்னிடமிருந்து அகற்றலாகாது. 850

உன் அருளால் அன்றி உன்னை அடைய முடியாத மாயனே; பிறப்பு என்னும் துன்பச் சக்கரத்திலிருந்து விடுவிக்கும் தத்துவ நன்மைகளை மறைத்த போலி ஞானிகளையும் கரை ஏற்ற உன் திருவடி பக்தியே உபாயம் ஆகும். இப்பெருந்தனத்தை எனக்கு நீ அருள வேண்டும். 851

எல்லையற்ற கடல் நிற அம்மானே! மங்களம் நிறைக. அடியேன் விண்ணப்பம் ஒன்றுண்டு; அடியேன் ஆத்மாவின் உய்வினைத் தேவரீர் திருவுள்ளம் கொள்ளில், அலைபாயும் அடியேன் மனத்தைத் தேவரீர் பாததாமரையில் பிரிவின்றி ஒன்றும் படி அடியேன் நினைக்க தேவரீர் நினைத்தருள வேண்டும். 852

ஒலிக்கும் கடலில் பள்ளி கொண்ட மாயனே! வராஹாவதாரம் செய்த வெற்றி வீரனே; பொங்கும் கடலில் மலைகளால் அணை கட்டிய அரசனே! அகலாத பக்தியால் உன் திருவடி மலரைத் தியானம் செய்யும் அடியேனின் உடல் தொடர்பான நோயை ஒழிக்கும் காலம் பற்றி ஒரு வார்த்தை அருள வேண்டும். 853

திருமகள் மார்பனே! தேவாதிதேவனே! இருக்குவேதம் முதலியவற்றால் போற்றப்படும் இயல்பான தூயவனே! பொன் கலந்த மேக நிறத்தவனே! கண்ணபிரானே! அடியேன் உன் வடிவழகைத் திருநாமங்களால் துதிக்க அருளுக. 854

கொடிய கவந்தன், கரன், முரன் ஆகியோர்களின் தலைகளை அறுத்தவனே! பலவகை ஆயுதங்களை ஏந்திய மாயோனே! படுத்தல், இருத்தல், நிற்றல் ஆகிய மூவகை இயக்கங்களிலும் அடியேன் உன் திருவடிகளில் இடைவிடாமல் தியானம் செய்யும் நிலையை அருளவேண்டும். 855

மண்ணை உண்டு உமிழ்ந்து, பின் இரந்து கொண்டு அளந்து, மண்
கண்ணுள் அல்லது இல்லை என்று வென்ற காலம் ஆயினாய்!
பண்ணை வென்ற இன்சொல் மங்கை கொங்கை தங்கு பங்கயக்
கண்ண! நின்ன வண்ணம் அல்லது இல்லை எண்ணும் வண்ணமே. 856

கறுத் எதிர்ந்த காலநேமி காலனோடு கூட, அன்று
அறுத்த ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்தினாய்!
தொறுக் கலந்த ஊனம் அஃது ஒழிக்க, அன்று, குன்றம் முன்
பொறுத்த நின் புகழ்க்கு அலால், ஓர் நேசம் இல்லை, நெஞ்சமே! 857

காய் சினத்த காசி மன்னன், வக்கரன், பவுண்டிரன்,
மாசினத்த மாலி, மான் சுமாலி, கேசி, தேனுகன்:
நாசம் உற்று வீழ, நாள் கவர்ந்த நின் கழற்கு அலால்,
நேச பாசம் எத் திறத்தும் வைத்திடேன் எம் ஈசனே! 858

கேடு இல் சீர் வரத்தனாய்க் கெடும் வரத்து அயன் அரன்
நாடினோடு நாட்டம்ஆயிரத்தன் நாடு நண்ணினும்,
வீடது ஆன போகம் எய்தி வீற்றிருந்த போதிலும்,
கூடும் ஆசை அல்லது ஒன்று கொள்வனோ? குறிப்பிலே 859

சுருக்குவாரை இன்றியே சுருங்கினாய், சுருங்கியும்
பெருக்குவாரை இன்றியே பெருக்க மெய்து பெற்றியோய்!
செருக்குவார்கள் தீக்குணங்கள் தீர்த்த தேவதேவன் என்று
இருக்கு வாய் முனிக் கணங்கள் ஏத்த, யானும் ஏத்தினேன். 860

தூயனாயும் அன்றியும், சுரும்பு உலாவு தண் துழாய்
மாய! நின்னை நாயினேன் வணங்கி வாழ்த்தும் ஈதெலாம்
நீயும் நின் குறிப்பினிற் பொறுத்து நல்கு, வேலைநீர்ப்
பாயலோடு பத்தர் சித்தம் மேய வேலை வண்ணனே! 861

வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும், மாறில் போர்
செய்து நின்ன செற்றத் தீயில் வெந்தவர்க்கும், வந்து உனை
எய்தல் ஆகும் என்பர்; ஆதலால், எம் மாய! நாயினேன்
செய்த குற்றம் நற்றமாகவே கொள், ஞாலநாதனே! 862





உன் அருள் இல்லையேல் உலகம் இராதே என்னும் அன்பால் உலகை விழுங்கியும், உமிழ்ந்தும், யாசித்துப்பெற்று அளந்தும் அனைவரையும் வென்ற கால புருஷனே! இசையை வெல்லும் இனிய பேச்சுடைய திருமகள் மார்பு பொருந்தும் தாமரைக் கண்ணா! உன் வடிவழகுக்கு ஈடு உன் அழகு ஒன்றே. 856

சினத்துடன் எதிர்த்த காலநேமியை அன்று யமனுடன் கூடச் செய்த சக்கரத்தையும், சங்கு, கதை, வில் ஆகியவற்றையும் ஏந்தியவனே! பசுக்களின் ஆபத்தை நீக்கி, மலையைத் தூக்கிய உன் பெருங்குணத்துக்கு அன்றி வேறெதிலும் என் நெஞ்சம் ஈடுபடுவதில்லை. 857

என் இறைவா! கோபமுற்ற காசிராஜன், தந்தவக்கிரன், பவுண்டிரகன், மாலி, சுமாலி, கேசி, தேனுகன், ஆகிய கொடியவர்களைக் கொன்று அவர்கள் ஆயுளை முடித்த உன் திருவடிகளுக்கல்லால், வேறு எதிலும் பக்தியாகிய பாசத்தை வைக்கமாட்டேன். 858

அழிவில்லாச் செல்வம் பெற்ற பிரமன் உலகம், அழிக்கும் வரம் பெற்ற சிவன் உலகம், ஆயிரம் கண்ணனான இந்திரன் உலகம், ஆகிய மூவகைச் செல்வங்களை நான் ஒருவனே பெற்றாலும், இவற்றிற்கும் மேலான வீட்டின்பமே அடைந்தாலும் உன்னைப் பிரியாதிருக்கும் ஆசையைத் தவிர வேறு எதனையும் விரும்பேன். 859

செயல்பயன், காலம், ஏவுபவர் ஆகிய காரணங்கள் இன்றி, நீயே வாமனன் ஆனாய், சுருங்கிய நீயே திரிவிக்கிரமனாக வளர்ந்தாய். "செருக்குடைய மகாபலி முதலியோரின் அகங்காரத்தைப் போக்கிய இறைவனே!" என்று இருக்கு வேதப் பகுதிகளும் முனிவர்களும் துதிக்க நானும் துதிக்கிறேன். 860

வண்டுகள் உலாவும் துழாய் மாலை உடைய மாயவனே! பக்தர்கள் இதயத்தில் பள்ளி கொள்ளும் கடல்நிறத்தவனே! நாய் போன்ற அடியேன், உமது தூய்மையை எண்ணி, உலக வாழ்வில் அழுந்திய என் சிறுமையை எண்ணாமல், உம்மை வணங்கி வாழ்த்துகிறேன். இதனைத் திருஉள்ளத்தில் பொறுத்து மன்னிக்க வேண்டும். 861

உன்னை, முடிந்தவரை வைது பழித்த சிசுபாலன் போன்றோரும், உன் சினத்தீயில் வெந்த வாலி முதலானோரும் முடிவில், உன்னை அடைந்தார்கள் என்று முனிவர்கள் கூறுவர். ஆகையால், மாயனான உலகநாதனே! நாயினும் தாழ்ந்த அடியேன் செய்த குற்றத்தைக் குணமாகக் கொண்டருள வேண்டும். 862

மறம் துறந்து வஞ்சம் மாற்றி ஐம்புலன்கள் ஆசையும்
துறந்து, நின்கண் ஆசையே தொடர்ந்துநின்ற நாயினேன்;
பிறந்து இறந்து பேர்இடர்ச் சுழிக்கணின்று நீங்குமா
மறந்திடாது மற்று எனக்கு மாய! நல்க வேண்டுமே. 849

காட்டி நான் செய் வல்வினைப் பயன்தனால் மனந்தனை
நாட்டி வைத்து, நல்லஅல்ல செய்ய எண்ணினார் எனக்
கேட்டது அன்றி, என்னது ஆவி, பின்னை கேள்வ! நின்னொடும்
பூட்டி வைத்த என்னை நின்னுள் நீக்கல் பூவை வண்ணனே! 850

பிறப்பினோடு பேர்இடர்ச் சுழிக்கண் நின்றும் நீங்கும் அஃது
இறப்ப வைத்த ஞான நீசரைக் கரைக்கொடு ஏற்றுமா
பெறற்கு அரிய நின்ன பாதபத்தி ஆன பாசனம்
பெறற்கு அரிய மாயனே! எனக்கு நல்க வேண்டுமே. 851

இரந்து உரைப்பது உண்டு, வாழி! ஏம நீர் நிறத்து அமா!
வரம் தரும் திருக்குறிப்பில் வைத்தது ஆகில், மன்னு சீர்
பரந்த சிந்தை ஒன்றிநின்று நின்ன பாதபங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்க வேண்டுமே. 852

விளவு இலாத காதலால் விளங்கு பாதபோதில் வைத்து
உள்ளுவேனது ஊன நோய் ஒழிக்குமா தெழிக்கு நீர்ப்
பள்ளி மாய! பன்றி ஆய வென்றி வீர! குன்றினால்
துள்ளுநீர் வரம்பு செய்த தோன்றல்! ஒன்று சொல்லிடே. 853

திருக் கலந்து சேரும் மார்ப! தேவதேவ தேவனே!
இருக் கலந்த வேத நீதி ஆகி நின்ற நின்மலா!
கருக் கலந்த காளமேக மேனி ஆய! நின் பெயர்
உருக் கலந்து ஒழிவிலாது உரைக்குமாறு உரைசெயே. 854

கடுங் கவந்தன் வக்கரன் கரன் முரன் சிரம் அவை
இடந்து கூறு செய்த பல் படைத் தடக்கை மாயனே!
கிடந்து இருந்து நின்று இயங்கு போதும், நின்ன பொற்கழல்
தொடர்ந்து மீள்வு இலாதது ஓர் தொடர்ச்சி நல்க வேண்டுமே. 855





மாயனே! கொடுமையான கோபம், வஞ்சனை ஆகியவற்றை விட்டு ஐம்புலன் ஆசையை ஒழித்து உன்னிடம் பக்தி கொண்ட நாயினேன், பிறப்பு இறப்புச் சக்கரத்திலிருந்து நீங்கிக் கைங்கர்யம் செய்ய மறவாமல் அருள வேண்டும். 849

நப்பின்னை நாயகனே! பூவைப்பூ நிறத்தோனே! என் ஆத்மாவை உன்னிடம் பிணைத்துவிட்டேன். "யமன் பணியாளர் என் பாவத்தைக் காட்டிப் பலனை அனுபவித்தே தீர வேண்டும் என உணர்த்திய பிறகும் கொடுந்தண்டனை செய்வார்கள்" என்று கேட்டிருப்பதால், நீ என்னை உன்னிடமிருந்து அகற்றலாகாது. 850

உன் அருளால் அன்றி உன்னை அடைய முடியாத மாயனே; பிறப்பு என்னும் துன்பச் சக்கரத்திலிருந்து விடுவிக்கும் தத்துவ நன்மைகளை மறைத்த போலி ஞானிகளையும் கரை ஏற்ற உன் திருவடி பக்தியே உபாயம் ஆகும். இப்பெருந்தனத்தை எனக்கு நீ அருள வேண்டும். 851

எல்லையற்ற கடல் நிற அம்மானே! மங்களம் நிறைக. அடியேன் விண்ணப்பம் ஒன்றுண்டு; அடியேன் ஆத்மாவின் உய்வினைத் தேவரீர் திருவுள்ளம் கொள்ளில், அலைபாயும் அடியேன் மனத்தைத் தேவரீர் பாததாமரையில் பிரிவின்றி ஒன்றும் படி அடியேன் நினைக்க தேவரீர் நினைத்தருள வேண்டும். 852

ஒலிக்கும் கடலில் பள்ளி கொண்ட மாயனே! வராஹாவதாரம் செய்த வெற்றி வீரனே; பொங்கும் கடலில் மலைகளால் அணை கட்டிய அரசனே! அகலாத பக்தியால் உன் திருவடி மலரைத் தியானம் செய்யும் அடியேனின் உடல் தொடர்பான நோயை ஒழிக்கும் காலம் பற்றி ஒரு வார்த்தை அருள வேண்டும். 853

திருமகள் மார்பனே! தேவாதிதேவனே! இருக்குவேதம் முதலியவற்றால் போற்றப்படும் இயல்பான தூயவனே! பொன் கலந்த மேக நிறத்தவனே! கண்ணபிரானே! அடியேன் உன் வடிவழகைத் திருநாமங்களால் துதிக்க அருளுக. 854

கொடிய கவந்தன், கரன், முரன் ஆகியோர்களின் தலைகளை அறுத்தவனே! பலவகை ஆயுதங்களை ஏந்திய மாயோனே! படுத்தல், இருத்தல், நிற்றல் ஆகிய மூவகை இயக்கங்களிலும் அடியேன் உன் திருவடிகளில் இடைவிடாமல் தியானம் செய்யும் நிலையை அருளவேண்டும். 855

மண்ணை உண்டு உமிழ்ந்து, பின் இரந்து கொண்டு அளந்து, மண்
கண்ணுள் அல்லது இல்லை என்று வென்ற காலம் ஆயினாய்!
பண்ணை வென்ற இன்சொல் மங்கை கொங்கை தங்கு பங்கயக்
கண்ண! நின்ன வண்ணம் அல்லது இல்லை எண்ணும் வண்ணமே. 856

கறுத் எதிர்ந்த காலநேமி காலனோடு கூட, அன்று
அறுத்த ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்தினாய்!
தொறுக் கலந்த ஊனம் அஃது ஒழிக்க, அன்று, குன்றம் முன்
பொறுத்த நின் புகழ்க்கு அலால், ஓர் நேசம் இல்லை, நெஞ்சமே! 857

காய் சினத்த காசி மன்னன், வக்கரன், பவுண்டிரன்,
மாசினத்த மாலி, மான் சுமாலி, கேசி, தேனுகன்:
நாசம் உற்று வீழ, நாள் கவர்ந்த நின் கழற்கு அலால்,
நேச பாசம் எத் திறத்தும் வைத்திடேன் எம் ஈசனே! 858

கேடு இல் சீர் வரத்தனாய்க் கெடும் வரத்து அயன் அரன்
நாடினோடு நாட்டம்ஆயிரத்தன் நாடு நண்ணினும்,
வீடது ஆன போகம் எய்தி வீற்றிருந்த போதிலும்,
கூடும் ஆசை அல்லது ஒன்று கொள்வனோ? குறிப்பிலே 859

சுருக்குவாரை இன்றியே சுருங்கினாய், சுருங்கியும்
பெருக்குவாரை இன்றியே பெருக்க மெய்து பெற்றியோய்!
செருக்குவார்கள் தீக்குணங்கள் தீர்த்த தேவதேவன் என்று
இருக்கு வாய் முனிக் கணங்கள் ஏத்த, யானும் ஏத்தினேன். 860

தூயனாயும் அன்றியும், சுரும்பு உலாவு தண் துழாய்
மாய! நின்னை நாயினேன் வணங்கி வாழ்த்தும் ஈதெலாம்
நீயும் நின் குறிப்பினிற் பொறுத்து நல்கு, வேலைநீர்ப்
பாயலோடு பத்தர் சித்தம் மேய வேலை வண்ணனே! 861

வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும், மாறில் போர்
செய்து நின்ன செற்றத் தீயில் வெந்தவர்க்கும், வந்து உனை
எய்தல் ஆகும் என்பர்; ஆதலால், எம் மாய! நாயினேன்
செய்த குற்றம் நற்றமாகவே கொள், ஞாலநாதனே! 862





*உன் அருள் இல்லையேல் உலகம் இராதே என்னும் அன்பால் உலகை விழுங்கியும், உமிழ்ந்தும், யாசித்துப்பெற்று அளந்தும் அனைவரையும் வென்ற கால புருஷனே! இசையை வெல்லும் இனிய பேச்சுடைய திருமகள் மார்பு பொருந்தும் தாமரைக் கண்ணா! உன் வடிவழகுக்கு ஈடு உன் அழகு ஒன்றே.* 856

*சினத்துடன் எதிர்த்த காலநேமியை அன்று யமனுடன் கூடச் செய்த சக்கரத்தையும், சங்கு, கதை, வில் ஆகியவற்றையும் ஏந்தியவனே! பசுக்களின் ஆபத்தை நீக்கி, மலையைத் தூக்கிய உன் பெருங்குணத்துக்கு அன்றி வேறெதிலும் என் நெஞ்சம் ஈடுபடுவதில்லை.* 857

*என் இறைவா! கோபமுற்ற காசிராஜன், தந்தவக்கிரன், பவுண்டிரகன், மாலி, சுமாலி, கேசி, தேனுகன், ஆகிய கொடியவர்களைக் கொன்று அவர்கள் ஆயுளை முடித்த உன் திருவடிகளுக்கல்லால், வேறு எதிலும் பக்தியாகிய பாசத்தை வைக்கமாட்டேன்.* 858

*அழிவில்லாச் செல்வம் பெற்ற பிரமன் உலகம், அழிக்கும் வரம் பெற்ற சிவன் உலகம், ஆயிரம் கண்ணனான இந்திரன் உலகம், ஆகிய மூவகைச் செல்வங்களை நான் ஒருவனே பெற்றாலும், இவற்றிற்கும் மேலான வீட்டின்பமே அடைந்தாலும் உன்னைப் பிரியாதிருக்கும் ஆசையைத் தவிர வேறு எதனையும் விரும்பேன்.* 859

*செயல்பயன், காலம், ஏவுபவர் ஆகிய காரணங்கள் இன்றி, நீயே வாமனன் ஆனாய், சுருங்கிய நீயே திரிவிக்கிரமனாக வளர்ந்தாய். "செருக்குடைய மகாபலி முதலியோரின் அகங்காரத்தைப் போக்கிய இறைவனே!" என்று இருக்கு வேதப் பகுதிகளும் முனிவர்களும் துதிக்க நானும் துதிக்கிறேன்.* 860

*வண்டுகள் உலாவும் துழாய் மாலை உடைய மாயவனே! பக்தர்கள் இதயத்தில் பள்ளி கொள்ளும் கடல்நிறத்தவனே! நாய் போன்ற அடியேன், உமது தூய்மையை எண்ணி, உலக வாழ்வில் அழுந்திய என் சிறுமையை எண்ணாமல், உம்மை வணங்கி வாழ்த்துகிறேன். இதனைத் திருஉள்ளத்தில் பொறுத்து மன்னிக்க வேண்டும்.* 861

*உன்னை, முடிந்தவரை வைது பழித்த சிசுபாலன் போன்றோரும், உன் சினத்தீயில் வெந்த வாலி முதலானோரும் முடிவில், உன்னை அடைந்தார்கள் என்று முனிவர்கள் கூறுவர். ஆகையால், மாயனான உலகநாதனே! நாயினும் தாழ்ந்த அடியேன் செய்த குற்றத்தைக் குணமாகக் கொண்டருள வேண்டும்.* 862

வாள்கள்ஆகி நாள்கள் செல்ல நோய்மை குன்றி மூப்பு எய்தி
மாளும் நாள் அது:ஆதலால், வணங்கி வாழ்த்து, என் நெஞ்சமே!
ஆளதுஆகும் நன்மை என்று நன்குணர்ந்து, அது அன்றியும்
மீள்வுஇலாத போகம் நல்க வேண்டும் மால பாதமே. 863

சலம்கலந்த செஞ்சடைக் கறுத்த கண்டன் வெண்தலைப்
புலன்கலங்க உண்ட பாதகத்தன் வன் துயர் கெட,
அலங்கல் மார்வில் வாச நீர் கொடுத்தவன் அடுத்த சீர்
நலங்கொள் மாலை நண்ணும் வண்ணம் எண்ணு; வாழி, நெஞ்சமே! 864

ஈனமாய எட்டும் நீக்கி, ஏதம் இன்றி மீதுபோய்
வானம் ஆள வல்லையேல், வணங்கி வாழ்த்து, என் நெஞ்சமே!
ஞானம் ஆகி, ஞாயிறு ஆகி, ஞால முற்றும், ஓர் எயிற்று
ஏனமாய் இடந்தமூர்த்தி எந்தைபாதம் எண்ணியே. 865

அத்தன்ஆகி அன்னை ஆகி, ஆளும் எம் பிரானுமாய்,
ஒத்துஒவ்வாத பல் பிறப்பு ஒழித்து நம்மை ஆட்கொள்வான்,
முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்;
எத்தினால் இடர்க்கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே? 866

மாறுசெய்த வாள்அரக்கன் நாள் உலப்ப, அன்று இலங்கை
நீறுசெய்து, சென்று கொன்று, வென்றி கொண்ட வீரனார்
வேறுசெய்து தம்முள் என்னை வைத்திடாமையால், நமன்
கூறுசெய்து கொண்டு இறந்த குற்றம் எண்ண வல்லனே? 867

அச்சம் நோயொடு அல்லல் பல் பிறப்பு அவாய மூப்பு இவை;
வைத்த சிந்தை, வைத்த ஆக்கை மாற்றி, வானில் ஏற்றுவான்;
அச்சுதன் அனந்த கீர்த்தி; ஆதி அந்தம் இல்லவன்;
நச்சு நாகணைக் கிடந்த நாதன்; வேத கீதனே. 868

சொல்லினும் தொழிற்கணும் தொடக்கு அறாத அன்பினும்
அல்லது நன் பகலினோடும் ஆன மாலை காலையும்
அல்லி நாள்மலர்க் கிழத்தி நாத! பாத போதினைப்
புல்லிஉள்ளம் விளவு இலாது பூண்டு மீண்டது இல்லையே. 869





*என் மனமே! வாள் போலே ஆயுளை அறுக்கும் நாள்கள் கழிந்தன; நோயால் வலிமை குறைந்து மூப்பு அடைந்து இறக்கும் காலமும் வந்தது. ஆகையால் பகவானுக்கு அடிமைப் படுவதே நன்மை என்றுணர்ந்து அவனை வணங்கித் துதிசெய். மீளாத கைங்கர்ய இன்பத்தைத் திருமாலின் திருவடிகளே தருவன.* **863**

*மனமே! கங்கை நீரை ஏந்திய சடையும் நீலக் கழுத்தும் உடைய சிவன், கையில் ஏந்திய வெளுத்த பிரம்ம கபாலத்தில் திருமால் தன் மார்பில் அணிந்த துழாய்மணம் வீசும் நீரை இட்டுப் பாவத்தைப் போக்கிக் காப்பாற்றினான். இப்படிப்பட்ட சீர்மை உடையவனை அடையும் வழியை அவனருளால் நினைப்பாய். நீ வாழ்க.* **864**

*என் நெஞ்சமே! அறிவின்மை, வினைப்பயன், பிரகிருதி வாசனை, சுவை, உடல் தொடர்பு ஆகியனவாயும், மூவகைத் தாபங் களாயும், உள்ள தாழ்வுகளைப்போக்கி, விண் வழியே பரமபதம் ஏற, வராகமாய்ப் பூமியை எடுத்துக் காத்தவனின் திருவடிகளை எண்ணுவாய். ஆத்ம ஞானமாகவும் சூரியனாகவும் அவனே உள்ளான்.* **865**

*ஞானத்தால் ஒன்றுபட்டுப் பிறப்பால் வேறுபடும் நம்முடைய பல ஜன்மங்களைப் போக்கி வீடளிக்கும் முகுந்தன் நம்மை ஆட் கொள்வான். அதற்காக அவன் தாயாய்த் தந்தையாய், ஆள்பவனாய் நம்முள் புகுந்து பொருந்தி விட்டான். ஏழை நெஞ்சே! நீ ஏன் துயரக் கடலில் கிடக்கிறாய்?* **866**

*இராமன் வானரங்களுடன் இலங்கை சென்று இராவணன் ஆயுள் தொலையுமாறு, கொன்று வெற்றி கொண்டான். இப் பெருமான், என்னிடம் வேறு படாது என் உள்ளத்தில் பொருந்திக் கூடி இருப்பதால், என்னுடைய கழிந்த பாவங்களை யமனால் எண்ண முடியாது.* **867**

*எம்பெருமான் என்னுடைய அச்சம், வியாதி, மூப்பு, பிறப்பு ஆகிய மனத்துன்பங்களையும் உடலையும் மாற்றிப் பரமபதத்தில் ஏறச் செய்வான். அளவில்லாப் புகழுடைய அந்த அச்சுதன், முதலும் முடிவும் இல்லாதவன். நஞ்சுடைய ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்டு கண் வளர்ந்தவேத நாயகன் அவனே.* **868**

*மலர்ந்த தாமரையில் தங்கும் திருமகள் கேள்வனே! உன்னுடைய திருவடித் தாமரையில் என்மனம் அணைந்து பிரியாமல், சொல் செயல்களில் தொடர்ச்சி மாறாமல், பக்தியில் நின்று, இரவும் பகலும் காலையிலும் மிகவும் ஈடுபட்டு மீளாதிருக்கிறது.* **869**

பொன்னிசூழ் அரங்கம் மேய பூவைவண்ண! மாய! கேள் :
என்னதுஆவி என்னும் வல்வினையினுட் கொழுந்து எழுந்து
உன்னபாதம் என்ன நின்ற ஒண்சுடர்க் கொழுமலர்
மன்னவந்து பூண்டு வாட்டம் இன்றி எங்கும் நின்றதே. 870

இயக்கு அறாத பல் பிறப்பில் என்னை மாற்றி, இன்று வந்து
உயக்கொள் மேகவண்ணன் நண்ணி என்னிலாய தன்னுளே
மயக்கினான் தன் மன்னு சோதி; ஆதலால், என் ஆவி தான்
இயக்கு எலாம் அறுத்து அறாத இன்ப வீடு பெற்றதே. 871

## திருச்சந்தவிருத்தம் முற்றிற்று.

ஸ்ரீ:

### தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய திருமாலை

காவலிற் புலனை வைத்து, கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து,
நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே;
மூவுலகு உண்டு உமிழ்ந்த முதல்வ! நின் நாமம் கற்ற
ஆவலிப்பு உடைமை கண்டாய், அரங்க மா நகருளானே! 872

பச்சை மா மலை போல் மேனி, பவளவாய், கமலச் செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே! ஆயர் தம் கொழுந்தே! என்னும்
இச் சுவை தவிர, யான் போய் இந்திரலோகம் ஆளும்
அச் சுவை பெறினும் வேண்டேன், அரங்க மா நகருளானே! 873

வேத நூற் பிராயம் நூறு மனிசர் தாம் புகுவரேலும்,
பாதியும் உறங்கிப் போகும்; நின்றதிற் பதினையாண்டு
பேதை பாலகன் அது ஆகும்; பிணி பசி மூப்புத் துன்பம்;
ஆதலால், பிறவி வேண்டேன்; அரங்க மா நகருளானே! 874

மொய்த்த வல்வினையுள் நின்று, மூன்று எழுத்து உடைய பேரால்
கத்திரபந்தும் அன்றே பராங்கதி கண்டு கொண்டான்;
இத்தனை அடியர் ஆனார்க்கு இரங்கும் நம் அரங்கன் ஆய
பித்தனைப் பெற்றும், அந்தோ! பிறவியுள் பிணங்குமாறே. 875





காவிரி சூழும் திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ள பூவைப் பூ நிறமுடைய மாயனே! கேட்டருளுக. அடியேன் ஆத்மாவாகிய பாவக் கூட்டத்தில் எழுந்த உன்னைப் பற்றிய பக்தியாகிய முளை, மென்மையான பூப்போன்ற உன் ஒளித்திருமேனியில் ஈடுபட்டு எவ்வாட்டமும் இன்றி, உன் வடிவழகில் ஊன்றி நின்றது. 870

தொடர்பு விடாத பல பிறவிகளிலிருந்து அடியேனை விடுவிக்க, இன்று மேக நிறத் திருமால், தன்னுடைய நித்தியமான ஜோதியுடன் அடியேன் நெஞ்சில் கலந்து விட்டான். ஆகையால், அடியேன் ஆத்மா இனி, அறியாமை, வினை முதலியவற்றிலிருந்து விடுபட்டு எல்லையற்ற இன்பமயமான வீடு அடைந்தது. 871

## திருச்சந்த விருத்தம் முற்றிற்று

ஸ்ரீ:

### தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய திருமாலை

பிரளயத்தில் எல்லா உலகங்களையும் விழுங்கிப் பின் வெளிப்படுத்திக் காத்த மூல காரணனே! நாங்கள் ஐம்புலன்களைக் காவல் இல்லாதபடி திரியவிட்டும் கூட, உன் திருநாமத்தைக் கற்ற செருக்குச் செல்வத்தாலே, கலி புருஷனை உதறித்தள்ளி நாவலோ நாவல் என்னும் அறை கூவலுடன், யமன், அவன் பணியாளர் தலைகள் மேலே காலடிகளை வைத்துத் திரிகின்றோம். 872

திருவரங்கா! 'பச்சை மலை போன்ற மேனியையும் பவள உதட்டையும் செந்தாமரைக் கண்களையும் கொண்ட அச்சுதா! நித்திய சூரிகள் தலைவா! இடையர்கள் அரசே!' என்று உன் நாமங்களை அழைக்கும் இன்பச் சுவையை விட்டுப் பரமபதத்தை ஆளும் போகம் பெற்றாலும் அதை விரும்ப மாட்டேன். 873

திருவரங்கநாதனே! வேத நூற்படி, மனிதர்கள் நூறாண்டு வாழ்வார் என்றாலும் பாதியான ஐம்பதாண்டுகள் தூக்கத்தில் போய் விடும். மீதமுள்ள ஐம்பது ஆண்டுகளும் குழந்தைப் பருவம், பாலப்பருவம், காமம் கலந்த வாலிபப் பருவம் ஆகியவற்றிலும் வியாதி, பசி. மூப்பு முதலிய துன்பங்களிலும் சென்று விடும். ஆதலால் நான் பிறவியை விரும்பேன். 874

கத்திரபந்து என்பவன், அடர்ந்த, வலிய பாவத்தில் மூழ்கியும், மூன்று எழுத்தான கோவிந்த நாமத்தால் பரமபதம் அடைந்தான். அடியார்களுக்கு இவ்வாறு அருள் புரியும் அழகிய மணவாளனைப் பெற்றும், பிறவியுள் அகப்பட்டு வருந்துவது ஏனோ! ஐயோ! 875

பெண்டிரால் சுகங்கள் உய்ப்பான் பெரியது ஓர் இடும்பை பூண்டு,
உண்டு இராக் கிடக்கும் அப்போது உடலுக்கே கரைந்து நைந்து,
தண் துழாய்மாலை மார்பன் தமர்களாய்ப் பாடி ஆடி
தொண்டு பூண்டு அமுதம் உண்ணாத் தொழும்பர்சோறு உகக்கு மாறே! 876

மறம்சுவர் மதில் எடுத்து மறுமைக்கே வெறுமை பூண்டு,
புறம்சுவர் ஓட்டை மாடம் புரளும் போது அறிய மாட்டீர்;
அறம்சுவர் ஆகி நின்ற அரங்கனார்க்கு ஆட் செய்யாதே,
புறஞ்சுவர்க் கோலஞ் செய்து புள்கௌவுக் கிடக்கின்றீரே. 877

புலைஅறம் ஆகி நின்ற புத்தொடு சமணம் எல்லாம்
கலை அறக் கற்ற மாந்தர் காண்பரோ? கேட்பரோ தாம்?
தலை அறுப்பு உண்டும் சாகேன், சத்தியம், காண்மின் ஐயா!
சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவன் ஆவான். 878

வெறுப்பொடு சமணர் முண்டர் விதி இல் சாக்கியங்கள் நின்பால்
பொறுப்பு அரியனகள் பேசில், போவதே நோயது ஆகி;
குறிப்பு எனக்கு அடையும் ஆகில், கூடுமேல், தலையை ஆங்கே
அறுப்பதே கருமம் கண்டாய், அரங்க மா நகருளானே! 879

மற்றும்ஓர் தெய்வம் உண்டே? மதிஇலா மானிடங்காள்!
உற்றபோது அன்றி நீங்கள் ஒருவன் என்று உணர மாட்டீர்;
அற்றம் மேல் ஒன்று அறியீர்; அவன் அல்லால் தெய்வம் இல்லை;
கற்றினம் மேய்த்த எந்தை கழலிணை பணிமின் நீரே. 880

நாட்டினான் தெய்வம் எங்கும்; நல்லது ஓர் அருள் தன்னாலே
காட்டினான் திருவரங்கம், உய்பவர்க்கு உய்யும் வண்ணம்;
கேட்டிரே நம்பிமீர்காள்! கெருடவாகனனும் நிற்கச்
சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்து இருக்கின்றீரே! 881

ஒரு வில்லால் ஓங்கு முந்நீர் அடைத்து, உலகங்கள் உய்யச்
செருவிலே அரக்கர்கோனைச் செற்ற நம் சேவகனார்
மருவிய பெரிய கோயில் மதில் திருவரங்கம் என்னா,
கருவிலே திரு இலாதீர் காலத்தைக் கழிக்கின்றீரே. 882





*பெண்களால் இன்புற எண்ணிப் பெரிய துன்பங்களை ஏற்பவர்கள் இரவுணவுக்குப் பின் படுக்கும் பொழுது உடல் வாழ்வுக்காகக் கவலை கொள்வர். இத்தாழ்ந்தோர், துழாய்மாலை மார்பனான திருமாலின் அடியாராய் அவன் குணங்களைப் பாடி ஆடித் தொண்டாகிய அமுதம் உண்ணாது சோற்றையே விரும்புவது ஏனோ?* **876**

*பாவத்தையே அரணாக எழுப்பி மேலுலக வாழ்வு பெற முடியாமல், வெளி விஷயங்களாலே அழியும் உடல் தரையில் விழும் காலத்தை அறியமாட்டீர்கள். தர்மமே இயல்பான அரங்கனுக்கு அடிமை செய்யாமல் இவ்வுடம்பை ஒப்பனை செய்து பறவைகள் கொத்தும்படி கிடக்கலாமோ?* **877**

*சாத்திரங்களை நன்கு கற்றுணர்ந்தவர்கள் தாழ்ந்த தர்மமான பௌத்தம் சமணம் ஆகிய மதங்களைக் காண்பார்களா? காதால் கேட்பார்களா? ஐயா! என் தலை அறுக்கப்பட்டாலும் நான் சாக மாட்டேன் என்பது சத்தியம். காரணம் என் எனில், வில்லேந்தி இலங்கையை அழித்த இராமனே, தேவதேவனான பரம்பொருள் ஆவான்.* **878**

*இறைவனை வெறுக்கும் மொட்டை அடித்த சமணரும், கடவுள் பக்தி இல்லாத பௌத்தர்களும் உன்னைப் பற்றிப் பொறுக்க முடியாத இகழ்ச்சிகளைக் கூறினால், அப்படிக் கேட்டதே வியாதியாக இறப்பது சிறந்தது அவ்வாறின்றி எதிர்க்கும் வாய்ப்புக் கூடினால், இகழ்ந்தவன் தலையை அறுப்பதே செய்யத்தக்கதாகும்.* **879**

*உண்மை அறிவில்லாதவர்களே! திருமாலை அன்றி வேறு தெய்வம் உண்டோ? எல்லாம் வல்ல பகவானை, ஆபத்துக் காலத்தன்றி மற்ற நேரத்தில் அறிய மாட்டீர் மேலான வேதப் பொருளை அறியாதவர்களே! அவனை அன்றி அடைக்கலம் அடையத் தகுந்த தெய்வம் இல்லை. பசு மேய்த்த கண்ணன் திருவடிகளைப் பணிந்து பற்றுங்கள்.* **880**

*ஸ்ரீமந் நாராயணனே எங்கும், பல தாழ்ந்த தெய்வங்களை ஏற்படுத்தினான். உய்பவர்களுக்குக் கடைத்தேறும் படி, தன் ஒப்பற்ற அருளாலே, திருவரங்கத்தைக் காட்டினான். பக்திப் பற்றுள்ள நம்பிகளே! கேளுங்கள் கருடனை வாகனமாக உடைய திருமால் இருந்தும், மூதேவியிடத்தே செல்வம் கேட்டு நிற்கிறீர்களே!* **881**

*உலகங்கள் உய்வடையத் தம் வில்லால் கடல்மீது அணை கட்டிப் போரிலே அரக்கர்வேந்தன் இராவணனை அழித்தவர். மதிள் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ளார். கருவிலே இருந்த காலத்தே பகவானின் அருள் பார்வை பெறாதவர்களே! "திருவரங்கம் பெரிய கோவில்" என்று கூறாமல் காலத்தை வீணாகக் கழிக்கலாமோ?* **882**

நமனும் முற்கலனும் பேச, நரகில் நின்றார்கள் கேட்க,
நரகமே சுவர்க்கம் ஆகும் நாமங்கள் உடைய நம்பி;
அவனது ஊர் அரங்கம் என்னாது, அயர்த்து வீழ்ந்து அளிய மாந்தர்
கவலையுள் படுகின்றார்; என்று அதனுக்கே கவல்கின்றேனே. 883

எறியும்நீர் வெறிகொள் வேலை மாநிலத்து உயிர்கள் எல்லாம்
வெறிகொள் பூந்துளவ மாலை விண்ணவர்கோனை ஏத்த
அறிவுஇலா மனிசர் எல்லாம், அரங்கம் என்று அழைப்பராகில்
பொறியில் வாழ் நரகம் எல்லாம் புல் எழுந்து ஒழியும் அன்றே. 884

வண்டினம் முரலும் சோலை, மயிலினம் ஆலும் சோலை,
கொண்டல் மீது அணவும் சோலை, குயிலினம் கூவும் சோலை,
அண்டர்கோன் அமரும் சோலை, அணி திருவரங்கம் என்னா
மிண்டர்பாய்ந்து உண்ணும் சோற்றை விலக்கி நாய்க்கு இடுமின் நீரே. 885

மெய்யர்க்கே மெய்யன் ஆகும், விதி இலா என்னைப் போலப்
பொய்யர்க்கே பொய்யன் ஆகும்; புட்கொடி உடைய கோமான்
உய்ப்போம் உணர்வினார்கட்கு ஒருவன் என்று உணர்ந்தபின்னை
ஐயப்பாடு அறுத்துத் தோன்றும்; அழகன் ஊர் அரங்கம் அன்றே. 886

சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடு இசைந்த காலம்
மாதரார் கயற்கண் என்னும் வலையுள் பட்டு அழுந்துவேனைப்
போதரே என்று சொல்லிப் புந்தியுள் புகுந்து, தன்பால்
ஆதரம் பெருக வைத்த அழகன் ஊர் அரங்கம் அன்றே. 887

விரும்பி நின்று ஏத்த மாட்டேன், விதி இலேன், மதி ஒன்றுஇல்லை;
இரும்புபோல் வலிய நெஞ்சம் இறைஇறை உருகும் வண்ணம்
சுரும்பு அமர் சோலை சூழ்ந்த அரங்க மா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டுகொண்டு, என் கண்ணிணை களிக்குமாறே! 888

இனி திரைத் திவலை மோத எறியும் தண் பரவை மீதே
தனி கிடந்து அரசு செய்யும் தாமரைக் கண்ணன் எம்மான;
கனி இருந்தனைய செவ்வாய்க் கண்ணனைக் கண்ட கண்கள்
பனிஅரும்பு உதிருமாலோ! என் செய்கேன், பாவியேனே? 889





யமனும் முற்கலனும் திருமால் திருநாமப் பெருமைகளைப் பேசவும் நரகத்தோர் கேட்டவுடனே நரகமே சுவர்க்கமாக மாறியது. இத்தகைய நாம மகிமை உடைய பெரிய பெருமானின் ஊரான திருவரங்கத்தைப் பேசாதார் புலன்களாகிய குழியில் விழுந்து கவலைப்படுகிறாரே என்பதற்காக, நான் கவலைப் படுகிறேன். 883

அலை வீசும் மீன் நாற்றக் கடல் சூழ்ந்த உலகத்தவர், மணம் கமழும் துழாய் மாலை சூடிய நித்திய சூரிகள் தலைவனான திருமாலைத் துதிக்கவே பிறந்தவர்கள். இவ்வாறு வழிபடும் ஞானம் இல்லாதவர் 'திருவரங்கம்' என்று கூறினாலே, புலன் வசப்பட்ட நரக வாழ்க்கை புல் முளைத்துப் பாழாகி, உய்வு பிறக்கும் அல்லவா! 884

திருவரங்கத்திலுள்ள சோலைகளில் வண்டினங்கள் ஒலிக்கும்; மயில்கள் ஆடும்; மேகங்கள் மேலே பரவும்; குயில் இனம் கூவும் நித்திய சூரிகள் தலைவனான பெரிய பெருமாள் எழுந்தருளி உள்ள அழகான திருவரங்கத்தை வாயால் உச்சரிக்காத தீயவர், மேல் விழுந்து உண்ணும் சோற்றை, விலக்கி, நாய்க்கு இடுங்கள். 885

கருடக்கொடி பெற்ற இறைவன் பேறில்லா என்னைப் போல, பகவானிடம் வெறுப்பு இல்லாதவர்களுக்குத் தன்னைக் காட்டுவான். இறைவனைத் தவிர்ந்தவற்றில் ஈடுபாடுடையவர்களுக்கு அவன் தன்னைக் காட்டாத பொய்யனே ஆவான். உய்யும் வகை அறிந்த ஞானிகளுக்கோ, இறைவன் உள்ளான் என அறிந்த பிறகு, ஐயங்களைப் போக்கிக் காட்சி தரும் அழகனின் தலம் திருவரங்கம் ஆகும். 886

கடவுளையும் தர்மங்களையும் இல்லை என்று கூறி, இறைவனுக்குரிய ஆத்மாவைத் தன்னதாக எண்ணி, பெண்களின் கயல்மீன் போன்ற கண்வலையிலே அகப்பட்டு முழுகிய அடியேனை, 'இங்கேவா!' என்றழைத்து நெஞ்சில் புகுந்து தன்னிடத்தே அன்பு பெருகச் செய்த அழகனின் தலம் திருவரங்கம் அன்றோ! 887

நான் உன்னை விரும்பித் துதிக்கவில்லை; கையால் வணங்கவும் இல்லை. பகவானைப் பற்றிய ஞானமும் எனக்கில்லை. இத்தகைய என் இரும்பு போன்ற இதயம் சிறிது சிறிதாக உருகும்படி, வண்டமரும் சோலை சூழ்ந்த திருவரங்கத்தே கோயில் கொண்ட பெரிய பெருமாளை என் இரு கண்களும் கண்டுகளிக்கும் விதம் என்னே? 888

இனிமையாக, அலைத்திவலைகள் மோதும், கடல் போன்ற காவிரி மீது, தனியனாய்ப் பள்ளி கொண்டு ஆட்சி செய்யும் தாமரைக் கண்ணன், கொவ்வைப்பழம் போன்ற உதடுகளுடைய கண்ண பெருமான் ஆவான். இப்பெருமானைக் காணும் கண்கள் ஆனந்தக் கண்ணீரை பெருக்குவதால், அவனைக் காண முடியாதபடி, செய்கின்றன. பாவியேன் என் செய்வேன்! 889

குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கிக்
கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு
உடல் எனக்கு உருகுமாலோ! என் செய்கேன் உலகத்தீரே? 890

பாயும் நீர் அரங்கந் தன்னுள் பாம்புஅணைப் பள்ளிகொண்ட
மாயனார் திரு நன் மார்வும் மரகதஉருவும் தோளும்
தூய தாமரைக் கண்களும் துவர்இதழ்ப் பவளவாயும்
ஆய சீர் முடியும் தேகம் அடியரோர்க்கு அகலலாமே? 891

பணிவினால் மனமது ஒன்றிப் பவளவாய் அரங்கனார்க்குத்
துணிவினால் வாழ மாட்டாத் தொல்லை நெஞ்சே! நீ சொல்லாய்
அணியின் ஆர் செம்பொன் ஆய அருவரை அனைய கோயில்
மணி அனார் கிடந்தவாற்றை மனத்தினால் நினைக்கல் ஆமே? 892

பேசிற்றே பேசல் அல்லால், பெருமை ஒன்று உணரல் ஆகாது;
ஆசற்றார் தங்கட்கு அல்லால், அறியல் ஆவானும் அல்லன்;
மாசற்றார் மனத்துளானை வணங்கி நாம் இருப்பது அல்லால்,
பேசத்தான் ஆவது உண்டோ? பேதை நெஞ்சே! நீ சொல்லாய். 893

கங்கையிற் புனிதம் ஆய காவிரி நடுவுபாட்டுப்
பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கந் தன்னுள்
எங்கள் மால் இறைவன் ஈசன் கிடந்தது ஓர் கிடக்கைகண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன்? ஏழையேன், ஏழையேனே! 894

வெள்ளநீர் பரந்து பாயும் விரி பொழில் அரங்கந் தன்னுள்
கள்வனார் கிடந்தவாறும் கமல நன் முகமும் கண்டும்
உள்ளமே! வலியை போலும்! ஒருவன் என்று உணர மாட்டாய்;
கள்ளமே காதல் செய்து உன் கள்ளத்தே கழிக்கின்றாயே! 895

குளித்து மூன்று அனலை ஓம்பும் குறிகொள் அந்தண மைதன்னை
ஒளித்திட்டேன், என்கண் இல்லை; நின்கணும் பத்தன் அல்லேன்;
களிப்பதுஎன் கொண்டு? நம்பீ! கடல்வண்ணா! கதறுகின்றேன்;
அளித்து எனக்கு அருள்செய், கண்டாய், அரங்கமா நகருளானே. 896





உலகத்தவர்களே! கடல்நிறக் கடவுளான என் தந்தை, மேற்கில் தலை வைத்துக் கிழக்கே பாதம் நீட்டி, வடக்கே தன்பின்னழகைக் காட்டித் தெற்குத் திசை இலங்கையை நோக்கி ஆதிசேடன் மேல் பள்ளி கொண்டுள்ள அழகைக் கண்டு என் உடல் உருகுகிறது. ஐயோ! என் செய்வேன்! 890

காவிரி பாயும் திருவரங்கத்தில் பாம்புப் படுக்கையிலே கண் வளரும் மாயனான நம் பெருமாளின், திருமகள் சேர்ந்த மார்பும், தோளும், தூய தாமரைக் கண்களும், மரகத மேனியும், சிவந்த உதடுகளும், மேன்மை கூடிய திருமுடியும், இவற்றின் ஒளியும் அடியவர்களால் விலக்கத் தகுந்தவையே அல்ல. 891

பவள உதடுடைய திருவரங்கனிடத்தே பணிவாக மனம் ஒன்றித் துணிவுடன் வாழ முடியாத தொல்லை கொடுக்கும் நெஞ்சமே! அழகுடன் பொன்னால் செய்யப்பட்ட மேருமலையை ஒத்த கோயிலிலே, நீலமணி போன்ற பெரிய பெருமாள் கண் வளரும் அழகை மனத்தால் அளவிடலாகுமோ? நீ சொல். 892

அறிவில்லா மனமே! வேதமும் வேதியர்களும் பேசியபடி கொள்வ தன்றி, பகவான் மேன்மையை ஒரு படியும் உணர முடியாது. உபாயங்களை நம்பும் குற்றமில்லாதவர்களுக்கு அன்றி அறிய முடியாதவன். பயன்களைக் கைவிட்ட தூயவர் மனத்தே தங்கும் பெருமானை நாம் வணங்குவது அல்லால், அவன் பெருமைகளைப் பேச முடியுமோ? 893

தாழ்ந்த நான், கங்கையை விடவும் தூய்மையான காவிரி நடுவில் நீர் பொங்கிப் பரந்து பாயும் சோலைகளை உடைய திருவரங்கத்தில், எங்கள் திருமாலான இறைவன் பள்ளி கொண் டதைக் கண்டும் அக்கோலத்தை மறந்து, எவ்வாறு வாழ்வேன்? இறை உணர்வில் செயலின்றித் திகைக்கிறேன். 894

நெஞ்சமே! வெள்ளப் பெருக்காய்க் காவிரி பரந்து பாயும் சோலைகள் உள்ள திருவரங்கத்தில், இதயத்தைக் கவர்ந்த மணவாளன், பள்ளி கொண்ட படியையும், தாமரை முகத்தையும், கண்டு வணங்கிய பிறகும், நீ வன்மையாகவா இருக்கிறாய்? அவன் ஒப்பற்றவன் என்று நீ அறிய மாட்டாயோ? பொய்யன்பு கொண்டு கள்ளமாய்க் காலம் கழியாதே. 895

அரங்க நகரப்பனே! நான், நீராடி முத்தீ வளர்த்து மந்திரங்கள் குறையாமல், செய்யும் பிராமணத்தன்மையை, விட்டு விட்டேன்; ஆத்ம ஞானமும் இல்லை. உன்னிடத்தே பக்தியும் இல்லை. நம்பீ! நான் எதனால் களிப்படைய முடியும்? கடல் வண்ணா! கதறுகிறேன்; எனக்குத் தகுதி தந்து நீ அருள் புரிய வேண்டும். 896

போதெல்லாம் போது கொண்டு உன் பொன்னடி புனைய மாட்டேன்;
தீதிலா மொழிகள் கொண்டு உன் திருக்குணம் செப்ப மாட்டேன்;
காதலால் நெஞ்சம் அன்பு கலந்திலேன்; அது தன்னாலே
ஏதிலேன் அரங்கர்க்கு; எல்லே! என் செய்வான் தோன்றினேனே? 897

If I proceed in the right direction, even I am slow, one day I can reach goal

குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத் தாம் புரண்டிட்டுஓடித்
தரங்கநீர் அடைக்கல் உற்ற சலம் இலா அணிலும் போலேன்;
மரங்கள் போல் வலிய நெஞ்ச வஞ்சனேன், நெஞ்சு தன்னால்
அரங்கனார்க்கு ஆட் செய்யாதே அளியத்தேன் அயர்க்கின்றேனே. 898

உம்பரால் அறியல் ஆகா ஒளியுளார், ஆனைக்கு ஆகிச்
செம் புலால் உண்டு வாழும் முதலைமேல் சீறி வந்தார்;
நம் பரம் ஆயது உண்டே? நாய்களோம் சிறுமை ஓரா
எம்பிராற்கு ஆட் செய்யாதே என் செய்வான் தோன்றினேனே? 899

ஊர் இலேன், காணி இல்லை, உறவு மற்று ஒருவர் இல்லை;
பாரில் நின் பாத மூலம் பற்றிலேன்; பரம மூர்த்தி!
காரொளி வண்ணனே! என் கண்ணனே! கதறுகின்றேன்;
ஆர் உளர்? களைகண் அம்மா! அரங்க மா நகருளானே! 900

மனத்தில் ஓர் தூய்மை இல்லை, வாயில் ஓர் இன்சொல் இல்லை;
சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன்; வாளா
புனத்துழாய் மாலையானே! பொன்னி சூழ் திருவரங்கா!
எனக்கு இனிக் கதி என் சொல்லாய்? என்னை ஆளுடைய கோவே! 901

தவத்துளார் தம்மில் அல்லேன்; தனம் படைத்தாரில் அல்லேன்;
உவர்த்த நீர் போல என்தன் உற்றவர்க்கு ஒன்றும் அல்லேன்;
துவர்த்த செவ்வாயினார்க்கே துவக்கு அறத் துரிசன் ஆனேன்;
அவத்தமே பிறவி தந்தாய், அரங்க மா நகருளானே! 902

ஆர்த்து வண்டு அலம்பும் சோலை அணி திரு அரங்கந்தன்னுள்
கார்த் திரள் அனைய மேனிக் கண்ணனே! உன்னைக் காணும்
மார்க்கம் ஒன்றும் அறியமாட்டா மனிசரில் துரிசனாய
மூர்க்கனேன் வந்து நின்றேன்; மூர்க்கனேன், மூர்க்கனேனே. 903





நான் எல்லாப் பொழுதுகளிலும் பூக்களை உன் திருவடிகளில் இடவில்லை. குற்றமில்லாச் சொற்களால் உன் குணங்களைத் துதிக்கவில்லை. பக்தி அன்பால் உன்னுடன் இதயம் கலக்கவில்லை. அரங்கனே! உன்னிடம் ஈடுபடாத நான் எதற்காகப் பிறந்தேன்? 897

குரங்குகள் மலைகளைத் தூக்கி வரக் கபடம் இல்லா அணில்கள் நீரில் குளித்துப் பின் மணலில் புரண்டு அதனை உதிர்த்துக் கடலைத் தூர்ப்பதில் ஈடுபட்டன. நான் இந்த அணில்கள் போல் இல்லை. மரம் போன்ற கடின இதயம் உடைய வஞ்சனேன், அரங்கனுக்கு நெஞ்சார அடிமை செய்யாது வீணானேனே! 898

பிரமன் முதலிய தேவர்களாலும் அறியப்படாத ஒளி வடிவான திருமால் யானைக்காக, புலால் உண்ணும் முதலையைச் சினந்து தண்டித்தான். இவ்வாறு காப்பாற்றும் பகவான் இருக்க, நமக்குக் காக்கும் பாரம் இல்லையே! நாயினும் தாழ்ந்த நான் குற்றம் உணராது, பெருமானுக்கு அடிமை செய்யாமல் இருக்க ஏன் பிறந்தேன்? 899

பகவானின் திவ்விய தேசத்தில் பிறந்து பல்லாண்டு பாடும் காணியாட்சி நான் பெறவில்லை; பந்துக்களும் மற்றவரும் எனக்கில்லை. உன் திருவடி அன்றி வேறு அடைக்கலம் இல்லை. பரம்பொருளே! கார்மேக நிறத்த கண்ணனே! உன்னை நான் கதறி அழைக்கிறேன். அரங்கநாதா! உன்னை அன்றிக் காப்பவர் யாருண்டு? 900

நிலத்தில் வளரும் துழாய் மாலை உடையவனே! காவிரி சூழும் திருவரங்கத்தில் உள்ளவனே! என்னை ஆண்ட இறைவா! என் மனத்தில் ,தூய்மை இல்லை; வாயில் இனிய பேச்சில்லை. வீணாக, சினம் கொண்டு, பகைமை பாராட்டி, நெருப்புக்கக்கும் பேச்சுடைய எனக்கு, இனி என்ன கதி? அருள் செய்ய வேண்டும். 901

அரங்கநாதா! அடியேன் தவமுடையாருடன் சேரவில்லை; செல்வனும் அல்ல. என் உறவினர்க்கு உதவி புரியா, உப்புத்தண்ணீர் போன்றவன் சிவந்த உதடுகளை உடைய பெண்களுக்கும் வேண்டாதவன் ஆகிக் கள்ளன் ஆனேன். இப்படிப்பட்ட எனக்குப் பிறவியை ஏன் வீணாகத் தந்தாய்? 902

வண்டொலிக்கும் சோலை சூழ்ந்த திருவரங்கத்தில் கண் வளரும் மேக நிறக்கண்ணனே! உன்னைப் பெறும் வழி அறியாத மனிதர்களில், கழிசடைக் கள்ளனாய், மூடனாய் உள்ள நான் வந்து நின்றேன். என்னே! என் கொடுந்தன்மை! 903

மெய்எல்லாம் போக விட்டு, விரிகுழலாரிற் பட்டுப்
பொய் எல்லாம் பொதிந்து கொண்ட போழ்க்கனேன் வந்து நின்றேன்;
ஐயனே! அரங்கனே! உன் அருள் என்னும் ஆசை தன்னால்
பொய்யனேன் வந்து நின்றேன்; பொய்யனேன், பொய்யனேனே. 904

உள்ளத்தே உறையும் மாலை உள்ளுவான் உணர்வு ஒன்று இல்லாக்
கள்ளத்தேன் நானும் தொண்டாய்த் தொண்டுக்கே கோலம் பூண்டு
உள்ளுவார் உள்ளிற்று எல்லாம் உடன் இருந்து அறிதி என்று
வெள்கிப்போய் என்னுள்ளே நான் விலவு அறச்சிரித்திட்டேன். 905

தாவிஅன்று உலகம் எல்லாம் தலைவிளாக்கொண்ட எந்தாய்!
சேவியேன் உன்னை அல்லால் சிக்கெனச் செங்கண் மாலே !
ஆவியே! அமுதே! என்தன் ஆருயிர் அனைய எந்தாய்
பாவியேன் உன்னை அல்லால்; பாவியேன், பாவியேனே. 906

மழைக்கு அன்று வரை முன் ஏந்தும் மைந்தனே! மதுர ஆறே!
உழைக்கன்றே போல நோக்கம் உடையவர் வலையுள் பட்டு
உழைக்கின்றேற்கு , என்னை நோக்காது ஒழிவதே! உன்னை யன்றே
அழைக்கின்றேன், ஆதிமூர்த்தி! அரங்க மா நகருளானே. 907

தெளிவிலாக் கலங்கள் நீர் சூழ் திருவரங்கத்துள் ஓங்கும்
ஒளியுளார் தாமே யன்றே தந்தையும் தாயும் ஆவார்
எளியது ஓர் அருளும் அன்றே என் திறத்து? எம்பிரானார்
அளியன் நம் பையல் என்னார், அம்மவோ! கொடியவாறே! 908

மேம்பொருள் போக விட்டு, மெய்ம்மையை மிக உணர்ந்து,
ஆம்பரிசு அறிந்து கொண்டு, ஐம்புலன் அகத்து அடக்கிக்
காம்புஅறத் தலை சிரைத்து, உன் கடைத்தலை இருந்து வாழும்
சோம்பரை உகத்தி போலும் சூழ் புனல் அரங்கத்தானே! 909

அடிமையிற் குடிமை இல்லா அயல் சதுப்பேதிமாரில்
குடிமையில் கடைமை பட்ட குக்கரில் பிறப்பரேலும்,
முடியினில் துளபம் வைத்தாய்! மொய் கழற்கு அன்பு செய்யும்
அடியரை உகத்தி போலும்; அரங்க மா நகருளானே! 910





திருவரங்கனே! ஐயனே! நான் உண்மைகளை எல்லாம் கைவிட்டு விரித்த கூந்தலுடைய பெண்கள் வசப்பட்டுப் பொய்களை நிறைத்துக் கொண்டு, போக்கிடமில்லாமல் உம் அருளுக்கு ஆசைப்படுகிறேன். இவ்வாறு உம்மிடம் வந்துள்ள நான், உள்ளம், உரை, செயலால் பொய்யனாகவே நிற்கிறேன். 904

இதயத்தில் வாழும் திருமாலைத் தியானிக்கும் ஞானம் சிறிதும் இல்லாத கள்ளனாகிய நான், உனக்கு அடிமைப் படுவது போலத் தொண்டுக்கு வேஷம் பூண்டதை எண்ணி வெட்கப்படுகிறேன். எண்ணுபவர்கள் கருத்துடன் கூடவே இருந்து அறிபவன் நீ என்பதால் உன்னை விட்டு விலகி, விலா எலும்பு புடைக்கச் சிரித்தேன். 905

அன்று உலகங்களைக் கடந்து உன் திருவடிகளை யாவர் தலைகளிலும் வைத்த, என் இறைவா! செங்கண்மாலே! அமுதே! என் ஆத்மாவுக்கு மருந்தானவனே! உன்னை அன்றி வேறு யாரையும் வணங்கேன். பாவியாகிய நான், உன்னைச் சிக்கெனப் பிடித்தேன். பிறரை நினையேன். 906

மழையைத் தடுப்பதற்கு அன்று மலை ஏந்திய வீரனே! இனிமையான ஆறு போன்றவனே! மான்குட்டியின் கண்ணை ஒத்த விழி உடைய பெண்கள் வலையில் அகப்பட்டுத் துடிக்கும் என்னை நோக்காமல் இருப்பதோ? ஆதி காரணன் ஆகிய அரங்க நகரானே! காப்பாற்றும் உன்னை அன்றோ அழைக்கிறேன். 907

தெளிவில்லாமல் கலங்கிய நீருடைய காவிரியால் சூழப்படும் அரங்கத்தில் ஓங்கி விளங்கும் பெரிய பெருமாளே எனக்குத் தாயும் தந்தையும் ஆவார். என்னிடத்தில் அருள் செய்யலாகாதா? 'என்னுடைய பையன் இவன்' என்று எம்பிரான் கூறுவரா? இவர் திருவுள்ளம் மிகக் கொடியதாய் இருக்கிறதே! 908

காவிரி சூழும் திருவரங்கத்தில் எழுந்தருளியவனே! மேலானவை போலத் தோன்றும் உலக விஷயங்களை வேருடன் களைந்து, ஆத்மாவை உணர்ந்து, ஆகும் பரிசு கைங்கர்யம் என்று தேறி, ஐம்புலன்களையும் தன் உணர்வு இன்றி அடக்கிப் பற்று அகலும்படி தலைச்சுமைகளை நீக்கி, உன் வாசலில், வாழும், தன்முனைப்பற்ற பக்தர்களை நீ உகப்பாய் அன்றோ! 909

திருமுடியில் துழாய் மாலை சூடிய திருவரங்கா! உன் கைங்கர்யத்தில் ஆர்வம் இல்லாது, மாறுபட்ட நால் வேதப் பயிற்சி உடைய அந்தணரை விடவும், உன் திருவடிகளில் அன்புபூண்டு, அடிமை செய்யும் கீழ்க்குடியில் பிறந்த சண்டாளர் இடத்தே தான், நீ விருப்பம் கொண்டுள்ளாய். 910

திருமறுமார்வ! நின்னைச் சிந்தையுள் திகழ வைத்து
மருவிய மனத்தர் ஆகில், மா நிலத்து உயிர்கள் எல்லாம்
வெருவு உறக் கொன்று சுட்டிட்டு ஈட்டிய வினையரேலும்
அருவினைப் பயன துய்யார்; அரங்க மா நகருளானே! 911

வானுளார் அறியல் ஆகா வானவா என்பர் ஆகில்,
தேனுலாம் துளப மாலைச் சென்னியாய் என்பர் ஆகில்,
ஊனம் ஆயினகள் செய்யும் செய்யும் ஊனகாரகர்களேலும்
போனகம் செய்த சேடம் தருவரேல், புனிதம் அன்றே. 912

பழுது இலா ஒழுகல் ஆற்றுப் பல சதுப்பேதிமார்கள்!
இழிகுலத்தவர்களேலும் எம் அடியார்கள் ஆகில்,
தொழுமின் நீர், கொடுமின், கொண்மின், என்று நின்னோடும் ஒக்க
வழிபட அருளினாய் போல்; மதில்திருவரங்கத்தானே! 913

அமர ஓர் அங்கம் ஆறும் வேதம் ஓர் நான்கும் ஓதித்
தமர்களில் தலைவராய சாதி அந்தணர்களேலும்
நுமர்களைப் பழிப்பர் ஆகில், நொடிப்பது ஓர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்; அரங்க மா நகருளானே! 914

பெண் உலாம் சடையினானும் பிரமனும் உன்னைக் காண்பான்
எண் இலா ஊழி ஊழி தவம் செய்தார் வெள்கி நிற்ப,
விண் உளார் வியப்ப வந்து ஆனைக்கு அன்று அருளை ஈந்த
கண்ணறா! உன்னை என்னோ? களைகணாக் கருதுமாறே! 915

வளஎழும் தவள மாட மதுரை மாநகரந் தன்னுள்
கவளமால் யானை கொன்ற கண்ணனை அரங்கமாலைத்
துளவத் தொண்டு ஆய தொல் சீர்த் தொண்டரடிப் பொடி சொல்
இளையபுன் கவிதையேலும் எம்பிராற்கு இனியவாறே! 916

**திருமாலை முற்றிற்று.**





திருமகள் தங்கும் மார்புடைய திருவரங்கா! உலகிலுள்ள பிராணிகள் அஞ்சும்படி கொலை செய்து தீக்கொளுத்தும் பாவிகள் ஆனாலும் உன்னைச் சிந்தையிற் கொண்டு நீயே உபாயம் என்று நம்புபவர்களாகில் அவர்கள் தங்கள் பாவ பலனை அடைய மாட்டார்கள். 911

தாழ்ந்த செயல்களைச் செய்பவர் ஆயினும் செய்விப்பவர்களாயினும் பகவானை, "தேவர்களும் அறியாத பரமபத நாதனே! தேன் சொட்டும் துழாய் மாலை சூடிய முடியானே!' என்று துதிக்கும் அடியார்கள் ஆனால் அவர்கள் அமுது செய்து பின் தரும் மீதமானது புனிதமே ஆகும். 912

மதிள் சூழ்திருவரங்கா! நீ வேதியர்களிடம், "வழிவழியாய் நான்கு வேதங்களைப் பயின்று ஒழுகுபவர்களே! எனக்கு அடிமைப் பட்டவர், இழிந்த குலத்தவர்களாயினும், அடியார்களாகையால் தொழுங்கள். நீங்கள் அவர்களுடன் ஞான விசேஷங்களைக் கொடுத்தும் கொண்டும் பரிமாறுங்கள்" என்று கூறி, உனக்குச் சமமாக வழிபட அருளினாய் அன்றோ! 913

அரங்க நாதா! நான்கு வேதங்களையும் ஆறங்கங்களையும் அமர்ந்து ஓதிய தலைமை உடைய அந்தணர்கள் ஆனாலும் உமது அடியார்களைப் பழித்தால், நொடிப் பொழுதிலே, அவ்வந்தணர்களே புலையர்கள் ஆவார். 914

கங்கையைத் தலையில் ஏந்திய சிவனும் பிரமனும் உன்னைக் காண எண்ணற்ற ஊழிகள் தவம் செய்து காணாமல் வெட்கித் தலை கவிழ்வார். நீ, நித்திய சூரிகள் வியக்க, யானையை முதலையிடமிருந்து காத்தாய். அருள் செய்வதில் கண்ணற்ற உன்னைத் தஞ்சமாக எண்ணுவது எவ்வாறோ! 915

வெண்ணிற மாடங்கள் உள்ள வளமான மதுரை நகரில், கவளம் உண்டு பருத்த குவலயாபீட யானையை வதம் செய்த கண்ணனே ஸ்ரீரங்க நாதனாக எழுந்தருளினான். துழாய்த் தொண்டு செய்த தொண்டரடிப்பொடி ஆழ்வார் அப்பெரிய பெருமாளை இப்பாசுரங்களில் துதித்தார். இவை எளிய, சிறிய கவிதைகள் ஆனாலும் அப்பெருமாளுக்கு இனிமையாகவே இருக்கும். 916

**திருமாலை முற்றிற்று.**

ஸ்ரீ:

## தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய திருப்பள்ளி எழுச்சி

கதிரவன் குணதிசைச் சிகரம் வந்து அணைந்தான்;
கனை இருள் அகன்றது காலை அம் பொழுதாய்;
மது விரிந்து ஒழுகின மா மலர் எல்லாம்;
வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி
எதிர்திசை நிறைந்தனர்; இவரொடும் புகுந்த
இருங் களிற்று ஈட்டமும் பிடியொடு முரசும்
அதிர்தலில் அலைகடல் போன்றுளது எங்கும்;
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே. 917

கொழுங்கொடி முல்லையின் கொழு மலர் அணவிக்
கூர்ந்தது குணதிசை மாருதம், இதுவோ!
எழுந்தன மலர் அணைப் பள்ளிகொள் அன்னம்
ஈன்பனி நனைந்த தம் இருஞ் சிறகு உதறி;
விழுங்கிய முதலையின் பிலம் புரை பேழ்வாய்
வெள் எயிறு உற, அதன் விடத்தினுக்கு அனுங்கி
அழுங்கிய ஆனையின் அருந்துயர் கெடுத்த
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே. 918

சுடர்ஒளி பரந்தன சூழ் திசை எல்லாம்;
துன்னிய தாரகை மின்னொளி சுருங்கிப்
படர் ஒளி பசுத்தனன் பனி மதி, இவனோ!
பாயிருள் அகன்றது, பைம் பொழிற் கமுகின்
மடலிடைக் கீறி வண் பாளைகள் நாற,
வைகறை கூர்ந்து மாருதம், இதுவோ
அடல்ஒளி திகழ் திகிரி அம் தடக்கை
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே. 919

மேட்டு இள மேதிகள் தளை விடும் ஆயர்கள்
வேய்ங்குழல் ஓசையும் விடை மணிக் குரலும்
ஈட்டிய இசை திசை பரந்தன; வயலுள்
இரிந்தன சுரும்பினம்; இலங்கையர் குலத்தை
வாட்டிய வரிசிலை வானவர் ஏறே!
மா முனி வேள்வியைக் காத்து அவபிரதம்
ஆட்டிய அடு திறல் அயோத்தி எம் அரசே!
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே. 920



ஸ்ரீ:

## தொண்டரடிப்பொடி ஆழ்வார் அருளிய திருப்பள்ளி எழுச்சி

திருவரங்கா! சூரியன் கிழக்கு மலை உச்சியில் தோன்றி விட்டான்; அடர்ந்த இருள் அகன்றது. அதிகாலைப் பொழுதிலே பூக்கள் மலர்ந்து தேன் துளிர்க்கிறது. தேவர்களும் அரசர்களும் நெருங்கியவாறு உன்னை வணங்க நிறைந்து நிற்கின்றனர். அவர்களுடைய ஆண்யானைகளும் பெண்யானைகளும் பிளிறவும் முரசொலியும் சேர்ந்து அலைகடல் போல் ஓசை எங்கும் பரவுகிறது. எனவே நீ திருப்பள்ளி நீங்கி எழுந்திருப்பாயாக. 917

கிழக்குக் காற்று கொழுத்து வளர்ந்த முல்லைக் கொடியில் மலர்ந்த பூக்களைத் தழுவியவாறு வீசுகிறது. பூப்படுக்கையில் உறங்கிய அன்னங்கள் பனியில் நனைந்த இறக்கைகளை உதறியவாறு எழுகின்றன. தன்னுடைய காலைக் கடித்து விழுங்கிய முதலையின் குகை போன்ற வாய்ப்பற்களின் விஷத்தால் வருந்திய யானையின் துன்பத்தைப் போக்கிய திருவரங்கா! நீ பள்ளி எழுந்திரு. 918

திக்குகளிலெல்லாம் சூரிய ஒளி பரந்து விட்டது; நெருங்கிய விண்மீன்களின் ஒளி குறைந்ததும் அன்றி, ஒளி வீசிய சந்திரனும் மங்குகிறான். பரந்த இருட்டும் விலகி விட்டது. பசுஞ்சோலைக் கமுக மரங்களின் பாளைகளைக் கீறியவாறு விடியற்காலக் காற்று, மணத்துடன் வீசுகிறது. வன்மையும் ஒளியும் கூடிய சக்கரத்தாழ் வானைக் கையில் தாங்கிய அரங்கா! நீ பள்ளி எழுந்திரு. 919

வளர்ச்சியும் இளமையும் கூடிய எருமைகளை அவிழ்த்து விடும் இடையர்களின் புல்லாங்குழல் இசையும் காளைகளின் கழுத்தில் கட்டப்பட்ட மணி ஓசையும் ஒன்று பட்டுத் திசைகளில் பரவுகின்றன. வயல்களில் வண்டுக் கூட்டங்கள் ரீங்காரம் செய்தபடி வெளிக் கிளம்புகின்றன. இலங்கை, அரக்கர்களை அழித்த வில்லுடையவனே! நித்திய சூரிகள் தலைவனே! கோசிக முனியின் வேள்வியைக் காத்து, முடிவில் மேற்கொள்ளும் நீராட்டம் நிறைவேற்றிய, அயோத்தி அரசனே! திருவரங்கனே! நீ பள்ளி எழுந்திரு. 920

புலம்பின புட்களும் பூம் பொழில்களின் வாய்;
போயிற்றுக் கங்குல்; புகுந்தது புலரி;
கலந்தது குணதிசைக் கனைகடல் அரவம்;
களி வண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த
அலங்கல் அம் தொடையல் கொண்டு அடியிணை பணிவான்
அமரர்கள் புகுந்தனர்; ஆதலில், அம்மா!
இலங்கையர்கோன் வழிபாடு செய் கோயில்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே. 921

இரவியர் மணி நெடுந் தேரொடும், இவரோ!
இறையவர் பதினொரு விடையரும், இவரோ!
மருவிய மயிலினன் அறுமுகன், இவனோ!
மருதரும் வசுக்களும் வந்து வந்து ஈண்டி
புரவியொடு ஆடலும் பாடலும் தேரும்
குமரதண்டம் புகுந்து ஈண்டிய வெள்ளம்
அருவரை அனைய நின் கோயில் முன், இவரோ!
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே. 922

அந்தரத்து அமரர்கள் கூட்டங்கள், இவையோ
அருந்தவ முனிவரும் மருதரும், இவரோ!
இந்திரன் ஆனையும் தானும் வந்து, இவரோ!
எம்பெருமான்! உன் கோயிலின் வாசல்
சுந்தரர் நெருக்க, விச்சாதரர் நூக்க,
இயக்கரும் மயங்கினர்; திருவடி தொழுவான்
அந்தரம் பார் இடம் இல்லை, மற்று இதுவோ!
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே. 923

வம்பவிழ் வானவர் வாயுறை வழங்க,
மாநிதி கபிலை ஒண் கண்ணாடி முதலா
எம்பெருமான் படிமக்கலம் காண்டற்கு
ஏற்பன ஆயின கொண்டு, நன் முனிவர்
தும்புரு நாரதர் புகுந்தனர்; இவரோ!
தோன்றினன் இரவியும் துலங்கு ஒளி பரப்பி;
அம்பர தலத்தினின்று அகல்கின்றது இருள் போய்;
அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாயே. 924

ஏதம் இல் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ் குழல் முழவமோடு இசை திசை கெழுமி
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
கந்தருவர் அவர் கங்குலுள் எல்லாம்;
மாதவர் வானவர் சாரணர் இயக்கர்
சித்தரும் மயங்கினர் திருவடி தொழுவான்;
ஆதலில், அவர்க்கு நாள்ஓலக்கம் அருள,
அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே. 925





பூஞ்சோலைப் பறவைகள் ஒலி எழுப்புகின்றன; இரவு போய்க் காலை ஆயிற்று. கீழ்க்கடல் ஓசை பரவுகிறது. வண்டொலிக்கும் பலவகைப் பூக்களால் தொடுக்கப்பட்ட கதம்ப மாலைகளுடன் தேவர்கள் உன் திருவடிகளில் வணங்க வந்தனர். இலங்கை மன்னன் வீடணன் வழிபடும் திருவரங்கத்தில் எழுந்தருளி உள்ளவனே! நீ பள்ளி எழுந்திரு. 921

அழகிய பெரிய தேர்களில் வரும் பன்னிரண்டு சூரியர்கள் இவர்களோ, பதினொரு உருத்திரர்கள் இவர்களோ, மயிலேறி வரும் ஆறுமுகன் இவனோ, என்னும்படி இக்கூட்டத்தினர் மருத்துக்களுடனும், எட்டு வசுக்களுடனும் கூடி நெருங்கி வருகின்றனர். குதிரைகள் ஓசையும், தேரொலியும், பாட்டும், ஆட்டமுமாய் மல்கிற்று. இத்தேவர்கள் கூட்டம் மலைபோல் உயர்ந்த உன் கோயில் முன் நிற்கிறது. ஆகவே திருவரங்கா! நீ பள்ளி எழுந்திரு. 922

எம்பெருமானே! உன் கோவில் வாசலில் தேவர்களும், முனிவர்களும், மருத கணங்களும் இந்திரனும் ஐராவதமும் வந்து நிற்கின்றனர். உன் திருவடிகளைத் தொழுவதற்காகக் கந்தர்வர்களும், வித்தியாதரர்களும் நெருக்கித் தள்ள, இயக்கர்கள் மயங்கி நிற்கின்றனர். ஆதலால், மண் முதல் விண் வரை எங்குமே கூட்டமே. திருவரங்கா! நீ பள்ளி எழுந்திரு. 923

வாச்னை நிரம்பிய தேவர்கள் அருகம்புல், சங்கநிதி, பதுமநிதி ஆகியவற்றை உமக்களிக்கக் காமதேனுவுடன் வந்துள்ளனர். எம் பெருமானே! ஒளிக் கண்ணாடி முதலான திருவாராதனப் பொருள்களுடன் முனிவர்கள் வந்தனர். தும்புருவும் நாரதரும் வந்துவிட்டனர். சூரிய ஒளி பரவியதால் ஆகாயத்தில் இருள் விலகிவிட்டது. திருவரங்கா! நீ பள்ளி எழுந்திரு. 924

கின்னரர், கருடர், கந்தர்வர் ஆகிய மூவகையினரும் குற்றமில்லாப் பறை, எக்கம், மத்தளம், வீணை, புல்லாங்குழல் முதலிய இசைக் கருவிகளுடன் பாடினர். இரவெல்லாம், முனிவர், தேவர், சாரணர், இயக்கர், சித்தர் முதலியோர் உம்மை வணங்க, நெருக்கத்தில் கூடி நின்று தளர்ந்தனர். ஆதலால் அவர்களுக்குக் காட்சி கொடுப்பதற்கு எழுந்தருள வேண்டும். அரங்கா பள்ளி எழுந்திரு. 925

கடிமலர்க் கமலங்கள் மலர்ந்தன, இவையோ!
கதிரவன் கனைகடல் முளைத்தனன், இவனோ.
துடியிடையார் சுரி குழல் பிழிந்து உதறித்
துகில் உடுத்து ஏறினர், சூழ் புனல் அரங்கா!
தொடை ஒத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி என்னும்
அடியனை அளியன் என்று அருளி உன் அடியார்க்கு
ஆட்படுத்தாய்! பள்ளி எழுந்தருளாயே. 926

## திருப்பள்ளி எழுச்சி முற்றிற்று.

ஸ்ரீ:

### திருப்பாணாழ்வார் அருளிச் செய்த அமலனாதிபிரான்

அமலன் ஆதிபிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதி வானவன்
நீள் மதில் அரங்கத்து அம்மான் திருக்
கமல பாதம், வந்து என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே. 927

உவந்த உள்ளத்தனாய் உலகம் அளந்து அண்டம் உற
நிவந்த நீள் முடியன் அன்று நேர்ந்த நிசாசரரைக்
கவர்ந்த வெங்கணைக் காகுத்தன் கடி-
யார் பொழில் அரங்கத்து அம்மான் அரைச்
சிவந்த ஆடையின் மேல், சென்றது ஆம் என சிந்தனையே! 928

மந்தி பாய் வட வேங்கட மா மலை வானவர்கள்
சந்தி செய்ய நின்றான் அரங்கத்து அரவின் அணையான்
அந்தி போல் நிறத்து ஆடையும் அதன்-
மேல் அயனைப் படைத்தது ஓர் எழில்
உந்தி மேலது அன்றோ! அடியேன் உள்ளத்து இன்னுயிரே! 929

சதுர மா மதில் சூழ் இலங்கைக்கு இறைவன் தலை பத்து
உதிர ஓட்டி ஓர் வெங்கணை உய்த்தவன் ஓதவண்ணன்
மதுர மா வண்டு பாட மா மயில்
ஆடு அரங்கத்து அம்மான் திரு வயிற்று
உதர பந்தம். என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே! 930





காவிரி சூழும் திருவரங்கனே! வாசனைத் தாமரைகள் மலர்ந்தன; சூரியன் கடல் மேலே உதயமானான். பெண்கள் நீராடிக் கூந்தலைப் பிழிந்து, ஆடை உடுத்திக் கரை ஏறினர். துழாய் மாலையும் பூக்குடலையும் விளங்கும் தோளை உடைய அடியவன் தொண்டர் அடிப்பொடிக்கு அருள் செய்யத் தேவரீர் துயில் எழுந்து, உன் அடியார்களுக்கு ஆட்படுத்த வேண்டும். 926

## திருப்பள்ளி எழுச்சி முற்றிற்று.

ஸ்ரீ:

### திருப்பாணாழ்வார் அருளிச் செய்த அமலனாதிபிரான்

நித்திய சூரிகள் தலைவனான உலக காரணன் மணம் வீசும் சோலைத் திருவேங்கடத்தில் எழுந்தருளி உள்ளான்; மிகத் தூய்மையன் ஆன அவன் என்னை அடியார்க்கு அடிமை ஆக்கிய ஒளி வடிவினன். எனக்கு அருளுவதே தன் பேறாகக் கொள்ளும் பரம பதநாதன் நீதி உடையவன். மதிள் சூழ்ந்த திருவரங்கத்தில் உள்ள அப்பெருமானின் திருவடித் தாமரைகள் என் கண்ணுக்கு இலக்காயின; ஆயினும் அவை பழைய நிலையிலே உள்ளன. 927

உலகங்களை அளந்து அண்டங்களை வியாபித்த நீண்ட கிரீடம் அணிந்த திருமால் என்னை ஆட்கொண்டு மனம் மகிழ்ந்தான். அன்று எதிர்த்த அரக்கர்கள் உயிரைக் கொடிய அம்புகளால் பறித்த காகுத்தனே மணம் மிக்க சோலைத் திருவரங்கத்தில் உள்ள என் சுவாமி ஆவான். அவன் திருவரையில் உள்ள சிவந்த பீதாம்பரத்தின் மேல் என் சிந்தனை சென்றது. 928

மந்திகள் மரங்களில் பாயும் வட திருவேங்கடமலையில் நித்திய சூரிகள் வழிபட நின்ற திருமால் திருவரங்கத்தில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டான். அவ்வரங்கனின் செவ்வானம் ஒத்த பீதாம்பரமும் அதன்மேலே பிரமனைப் படைத்த கொப்பூழும் அன்றோ அடியேன் உள்ளத்தில் ஊன்றிய உயிர் ஆயின! 929

சதுர வடிவ மதிள் சூழ்ந்த இலங்கைக்கு அரசன் இராவணனை, ஸ்ரீராமன் தன் ஒப்பற்ற அம்பால் தலைகள் பத்தும் உதிரும்படி கொன்றான். கடல் நிறமுடைய இராமபிரான் எழுந்தருளிய திருவரங்கத்தில் வண்டொலியும் மயில் நடனமும் திகழ்வன. இப்பெரிய பெருமாளின் வயிற்றில் கட்டப்பட்ட 'உதரபந்தம்' என்னும் ஆபரணம் என் நெஞ்சில் நிலை பெற்று உலவுகின்றது. 930

பாரம்ஆய பழவினை பற்றுஅறுத்து என்னைத் தன்
வாரம்ஆக்கி வைத்தான்; வைத்தது அன்றி என் உள்புகுந்தான்;
கோர மாதவம் செய்தனன் கொல்?
அறியேன் அரங்கத்து அம்மான் திரு
ஆர மார்வு அது அன்றோ! அடியேனை ஆட்கொண்டதே! 931

துண்ட வெண்பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டுவாழ் பொழில்சூழ் அரங்கநகர் மேய அப்பன்
அண்டரண்ட பகிரண்டத்து ஒரு
மாநிலம் எழுமால் வரைமுற்றும்
உண்டகண்டம் கண்டீர்! அடியேனை உய்யக் கொண்டதே! 932

கையின் ஆர்சுரி சங்குஅனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் துளப விரையார் கமழ்நீள் முடிஎம்
ஐயனார் அணி அரங்கனார் அர-
வின் அணைமிசை மேய மாயனார்
செய்யவாய், ஐயோ! என்னைச் சிந்தை கவர்ந்ததுவே! 933

பரியன் ஆகி வந்துஅவுணன் உடல்கீண்ட அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத்து அமலன் முகத்துக்
கரிய ஆகிப் புடை பரந்து
மிளிர்ந்து செவ்வரி ஓடி நீண்டஅப்
பெரியஆய கண்கள், என்னைப் பேதைமை செய்தனவே! 934

ஆலமா மரத்தின் இலைமேல் ஒரு பாலகனாய்
ஞாலம் ஏழும் உண்டான் அரங்கத்து அரவின் அணையான்
கோலமா மணிஆரமும் முத்துத்
தாமமும் முடிவு இல்லது ஓர்எழில்
நீலமேனி ஐயோ! நிறைகொண்டது என் நெஞ்சினையே! 935

கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணிஅரங்கன் என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்று ஒன்றினைக் காணாவே. 936

## அமலனாதிபிரான் முற்றிற்று.





சுமையான என் பழைய வினைகளை அடியோடு போக்கி என்னைத் தனதாக்கிக் கொண்ட திருமால் என் இதயத்துள் புகுந்தான். அவனருள் பெற அடியேன் என்ன தவம் செய்தேனோ? அறியேன். திருவரங்கத்தில் பள்ளி கொண்ட மணவாளனின் முத்துமாலையும் திருமகளும் திகழும் மார்பன்றோ அடியேனை அடிமை கொண்டது! 931

பிறைச் சந்திரனைச் சூடிய சிவனின் துயர் நீக்கிய திருமால் வண்டுகள் வாழும் சோலை சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளினான். உலகத்துயிர்களையும் புற அண்டங்களையும் ஏழுமலைகளையும் முற்றிலுமாய் உண்டு காப்பாற்றிய பெரிய பெருமாளின் திருக்கழுத்தன்றோ அடியேனை உய்வித்தது! 932

வரிச்சங்கையும் நெருப்புக் கக்கும் சக்கரத்தையு ் கைகளில் ஏந்திய திருமால் மலை போன்ற மேனியுடன், மணம் உடைய துழாய் மாலையைத் திருமுடியில் சூடியுள்ளான். இந்த அரங்க நாதன் ஆதிசேடன் மீது கண்வளரும் ஆச்சரியம் தான் என்னே! ஐயோ, அவனுடைய பவள உதடுகள் என் சிந்தையைக் கவர்ந்தனவே! 933

பருத்த உடல் கொண்ட இரணியனின் உடலைக் கிழித்து வதைத்த திருமால், தேவர்களாலும் அறிய இயலா ஆதி காரணன் திருவரங்கத்தில் கண் வளரும் பரிசுத்தனான பெரிய பெருமாளின் திருமுகத்தில் கறுத்தகன்று, ஒளியுடன் செவ்வரி படர்ந்து நீண்டு பெரியதாய் உள்ள கண்கள் என்னை உருக்கித் தன்னிடத்தே ஈடுபடுத்தின. 934

ஆலிலையில் குழந்தையாய், ஏழுலகங்களையும் உண்டு காத்த திருமாலே, திருவரங்கத்தில் ஆதிசேடன் மீது கண் வளர்ந்தான். இந்த நம்பெருமாள் அணிந்துள்ள மணி ஆரமும் முத்து மாலையும் எல்லை இல்லா அழகுடன் நீல மேனியில் விளங்குகின்றன. ஐயோ! இவை என் நெஞ்சைக் கவர்ந்து என் கம்பீரத்தை அழித்து விட்டன. 935

இடையர் தலைவனான கண்ணன் நீருண்ட மேக நிறத்தவன்; வெண்ணெய் திருடி உண்ட தன் திருப்பவள வாயால் என் இதயத்தைக் கவர்ந்தவன்; உலகங்களுக்கும் உயிர்களுக்கும் தலைவனாய், அழகிய திருவரங்கத்தில் கண் வளர்கிறான். அமுதம் போன்ற இப்பெரிய பெருமாளைக் கண்டு வணங்கிய என் கண்கள் இனி வேறெதனையும் காண மாட்டா. 936

## அமலனாதி பிரான் முற்றிற்று

ஸ்ரீ:

## மதுரகவி ஆழ்வார் அருளிய கண்ணி நுண் சிறுத்தாம்பு

கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டு உண்ணப்
பண்ணிய பெருமாயன் என்அப்பனில்,
நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமுதுஊறும் என்நாவுக்கே. 937

நாவினால் நவிற்று இன்பம் எய்தினேன்,
மேவினேன் அவன் பொன்னடி, மெய்ம்மையே;
தேவு மற்று அறியேன்; குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே. 938

திரிதந்து ஆகிலும் தேவபிரான் உடைக்
கரிய கோலத் திருவுருக் காண்பன்நான்;
பெரிய வண்குருகூர் நகர் நம்பிக்கு ஆள்
உரியனாய் அடியேன் பெற்ற நன்மையே. 939

நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்
புன்மை ஆகக் கருதுவர்; ஆதலின்,
அன்னையாய் அத்தனாய் என்னை ஆண்டிடும்
தன்மையான் சடகோபன் என் நம்பியே. 940

நம்பினேன் பிறர் நன்பொருள்தன்னையும்,
நம்பினேன் மடவாரையும், முன்எலாம்;
செம்பொன் மாடத் திருக் குருகூர் நம்பிக்கு
அன்பனாய் அடியேன் சதிர்த்தேன், இன்றே. 941

இன்று தொட்டும் எழுமையும் எம்பிரான்
நின்று தன்புகழ் ஏத்த அருளினான்;
குன்ற மாடத் திருக் குருகூர் நம்பி
என்றும் என்னை இகழ்வு இலன், காண்மினே. 942



ஸ்ரீ:

## மதுரகவி ஆழ்வார் அருளிய கண்ணி நுண் சிறுத்தாம்பு

பல முடிச்சுகளை உடைய சிறிய குறுங்கயிற்றால் யசோதை தன்னைக் கட்டும் படி செய்து கொண்ட ஆச்சரிய சக்தி உடைய என் தந்தையான கண்ணனை விட்டு, தென்குருகூர்த் தலைவர் நம்மாழ்வாரைக் கிட்டி, அவர் நாமம் சொன்னால், தாழ்ந்த என் நாவுக்கே மிக இனித்து அமுதம் ஊறும். 937

நம்மாழ்வார் திருப்பெயரை நாவால் பல தடவைகள் துதித்து, இறை இன்பச் சுவையை அடைந்தேன். அந்த ஆசாரியன் பொன்னடிகளையே துணையாக நான் பொருந்தியது முற்றிலும் உண்மையே. திருக்குருகூர் நம்பியை அன்றி வேறு தெய்வம் அறியேன். அவர் பாடல்களை இனிய இசையுடன் எங்கும் பாடித் திரிவேன். 938

ஆழ்வாரை விட்டு மீளும்படி ஏற்படில், நித்திய சூரிகள் தலைவனான திருமாலின் நீல நிற அழகு வடிவத்தை நான் காண்பேன். ஏனெனில் அது ஆழ்வார் உகந்ததே. வேறு எவர்க்கும் ஆட்படாமல் பெருமையும் கொடையும் உடைய ஆழ்வார்க்கே, நான் அடிமைப்பட்டதால், பகவானை அடையும் நன்மையான பேற்றைப் பெற்றேன். 939

நல்ல குணம் மிக்க நான்கு வேதங்களில் வல்ல வேதியர்கள் அடியேனைத் தாழ்வின் வடிவமாக கருதுகிறார்கள். ஆதலால், தாயும் தந்தையுமாய் என்னை ஆளும் சடகோபரை நான் குணம் நிறைந்த என் தலைவராகக் கொண்டேன். 940

'அடியேன்' என்னும் வணக்கத்தை இன்று பெற்ற நான், முன்பெல்லாம் பிறர் பொருள்களுக்கு ஆசைப்பட்டேன்; பிற மாதர்களை நம்பினேன். இப்பொழுதோ, செம்பொன்னால் செய்யப்பட்ட மாடங்களை உடைய திருக்குருகூர்த் தலைவரான நம்மாழ்வாருக்குப் பக்தன் ஆனேன்; அதனால் சாமர்த்தியம் பெற்றேன். 941

இன்று முதல் ஏழேழு பிறவிகளிலும் ஆச்சாரிய பக்தி நிலைக்கப் பெற்று ஆழ்வாருடைய திருப்புகழைத் துதிக்கும்படி அவரே அருள் செய்தார். குன்றுகள் போல் மாடங்கள் உயர்ந்த திருக்குருகூர்த் தலைவரான அவர் எக்காலத்தும் என்னிடத்தில் இகழ்ச்சி இன்றி ஆதரவு செய்வார். அனுபவத்தில் இதனைக் காண்பீர். 942

கண்டுகொண்டு என்னைக் காரிமாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றி அருளினான்;
எண்திசையும் அறிய இயம்புகேன்
ஒண்தமிழ்ச் சடகோபன் அருளையே. 943

அருள் கொண்டாடும் அடியவர் இன்புற
அருளினான் அவ் அரு மறையின் பொருள்;
அருள்கொண்டு ஆயிரம் இன் தமிழ் பாடினான்;
அருள் கண்டீர் இவ் உலகினில் மிக்கதே. 944

மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள்
நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்;
தக்க சீர்ச் சடகோபன் என் நம்பிக்கு ஆட்-
புக்க காதல் அடிமைப் பயன் அன்றே. 945

பயன் அன்று ஆகிலும் பாங்கு அலர் ஆகிலும்
செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்
குயில் நின்று ஆர் பொழில் சூழ் குருகூர் நம்பி;
முயல்கின்றேன் உன்தன் மொய் கழற்கு அன்பையே. 946

அன்பன் தன்னை அடைந்தவர்கட்கு எல்லாம்
அன்பன் தென் குருகூர் நகர் நம்பிக்கு
அன்பனாய் மதுரகவி சொன்ன சொல்
நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே. 947

"கண்ணிநுண் சிறுத்தாம்பு" முற்றிற்று.

முதலாயிரம் முற்றிற்று.





*காரியார் புதல்வரான நம்மாழ்வார் என்னிடம் பேரன்பு காட்டி, நான் கொண்ட பழைய கொடிய வினைகளை அழியும்படி செய்தார். ஆதலால், ஒள்ளிய தமிழ்க் கவிதைகளைப் பாடிய அந்த ஆழ்வாரின் அருளையே, திசை எட்டும் அறியும்படி புகழ்ந்து பேசுவேன்.* 943

*பகவானின் அருளைக் கொண்டாடும் அடியார்கள் இன்புறும்படி நம்மாழ்வார், அருமையான வேதத்தின் உள்ளார்ந்த பொருளை, இனிய தமிழிலே திருவாய் மொழியாக அருளிச் செய்தார். இவ்வுலகில் இத்தகைய அருள் ஒன்று மட்டுமே மிகவும் பெரியது.* 944

*சிறந்த வேதியர்களால் பயிலப்படும் வேதப்பொருளை நிலைத்து நிற்கும்படி, ஆழ்வார் 'திருவாய்மொழி'ப் பிரபந்தம் பாடி என் இதயத்தில் அதனை நிலை நிறுத்தினார். தக்க குணங்களை உடைய சடகோபருக்கு அடிமை செய்யும் ஆசை பிறந்து விட்டது. அவர் திருவடிகளில் ஏற்பட்ட பக்தியின் பயன் கைங்கர்யம் செய்வதே ஆகும்.* 945

*மற்றவர் திருந்துவதால் தமக்குப் பயன் இல்லை ஆயினும், அவர்கள் திருந்தப் பாங்கில்லாதவர் ஆனாலும் நம்மாழ்வார் தம் செய்கையாலே நன்றாகத் திருத்தி அவர்களை ஆட்கொள்வார். குயில்கள் கூவும் சோலைகள் சூழ்ந்த குருகூரிலே எழுந்தருளிய நம்பியே! உம் திருவடிகளிற் பக்தி உண்டாவதற்கே அடியேன் முயல்கின்றேன்.* 946

*பகவான் தன் அடியார்களிடத்தே தனிப்பட்ட அன்பு காட்டுகிறான். தென்குருகூர் நம்பியான நம்மாழ்வார் இப்பகவானுக்கு அடிமைப்பட்ட பாகவதர்களிடத்தே பக்தி கொண்டார். மதுர கவியார், பகவானிடத்தும் பாகவதரிடத்தும் பக்தி கொண்ட நம்மாழ்வாரை ஆச்சாரியராகக் கொண்டார். இந்த ஆச்சாரிய பக்தியின் விளைவால் அவர் அருளிய இப்பிரபந்தத்தை, நம்பிப் பயில்பவர், பரமபதத்தை வாழிடமாகப் பெறுவார்கள்.* 947

"கண்ணிநுண் சிறுத்தாம்பு" முற்றிற்று.

முதலாயிரம் முற்றிற்று.

ஸ்ரீ:

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

## முதலாயிரம்

## நூல் : 1

## பாடல் முதற்குறிப்பு அகராதி